உ

கடவுள் துணை

தெய்வப்புலமைத்

திருவள்ளுவநாயனார்

அருளிச்செய்த

# திருக்குறள்

# மூலமும்

மதுரைத் தமிழ்ச்சங்க

வித்துவான்

மு.ரா. அருணாசலங்

கவிராயர்

எழுதிய

# தெளிபொருள்

# வசனமும்.






மதுரை

ஸ்ரீமீனலோசனி

அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பெற்றன.

1930.

இதன் விலை]  [ரூ.

2—8—0.

## உரிமையுரை.

---

எந்தக்காலத்திலும் எல்லாச் சாதியாருக்கும் எல்லா மதத்தாருக்கும் பொதுவாய் விளங்கும் முழுமுதற் கடவுளாகிய பரம்பொருளொன்றேபோலத் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாருளிச்செய்த திருக்குறள் மேற்குறித்த எல்லாருக்கும் பொதுவாய் விளங்கும் ஒரு நூலென்பது யாவருமறிந்த விஷயம்; இந்நூற் பொருள்களை யறிந்துகொள்ளுமாறு உரையாசிரியர் பதின்மர் உரை யெழுதிவைத்தனர். ஆயினும், அவ்வுரைகளெல்லாம் தமிழ்வளஞ் சுருங்கிய இக்காலத்துப் பலநூல்களைக் கற்று நுணுகி யாராய்ச்சிசெய்யும் பெரியாருக்கே பொருள்விளங்கத் தக்கவைகளாயிருத்தலால் அங்ஙனம் ஆராய்ச்சி செய்யும் வலிமையில்லாருக்கும் மற்றை நூல்களைக் கல்லாத சாமானியர்களுக்கும் இலேசாகப் பொருள் விளங்குமாறு யானெழுதிய திருக்குறளின் தெளிபொருள் வசன நூலை

மதுரையில் நான்காந் தமிழ்ச்சங்கந்தாபித்த ஸ்ரீமாந் பொ. பாண்டித்துரைத் தேவரவர்களைப்போலவும், முத்தமிழையும் வளர்த்து முன்னிருந்த பாண்டி மன்னர்களைப்போலவும், செந்தமிழணங்கை நான்காந்தமிழ்ச் சங்கத்தில்

காரியதரிசியாயிருந்து வளர்த்து வருகின்ற வரும், அரிய பெரிய தமிழ் நூல்களை யாராய்ந்த பெரிய கலைவாணருக்கு ஆயிரக்கணக்கான பொருள்களை வள்ளல்களைப்போல உள்ளன்புடனுதவுபவருமாகிய உபர்தர நீதிமன்றவாதி (Advocate) பிரமஸ்ரீ டி. வி. ஸ்ரீநிவாஸ ஐயங்காரவர்களுடைய அருமை பெருமைகளைப் பலவருடங்களாகப் பழகிப் பலவழிகளாலறிந்து உரிமையுரை யாக்கிவைத்தேன். அவர்கள் அன்பினிதிக்கம் அங்கீகரித்துக் கொள்வார்களாக. சுபம்! சுபம்! சுபம்!

இங்ஙனம்,
மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,
மூ. ரா. அருணாசலக் கவிராயர்.




மு. ரா. அருணாசலக் கவிராயர்.

# FOREWORD.

The Tirukkural of Tiruvalluvar is one of the ancient works in Tamil literature. It has been quoted even by classic writers and has no less than ten commentaries of which Parimelalagar's has been held to be the best. The Tirukural is also consided to be a sacred work by a certain section of the orthodox Hindus. It is for them the "Dravida Veda." And the author Tiruvalluvar is actu- ally wor'shipped in a shirine in Mylapore, a suburb of Madras.

The sacred Kural, again, is a world-famed work. It has been translated into about twenty languages. Dr. G. U.

Pope did it in English many years ago.

For some years past people have been evincing an unusual interest in the study of the Kural. Consequently aid-books have been appearing in large numbers. One of the earliest such books was a prose rendering of the work with a clear paraphrase of the renowned commentary of Parimelalagar by Mr. M. R. Arunachala Kavirayar of Madura. I thought this was defective in that the text was not inserted. He now publishes a second edition of it in a much improved form. We find in it the text, clear prose version of it and paraphrase of the commentary aforesaid, and additional notes with occasional illustrative quotations. I venture to think that this improved edition of Mr. Kavirayar's book brings the terse work of Tiruvalluvar and the terser commentary within easy reach of the

masses. I need hardly add that it will form an excellent *vade mecum* for our boys and girls in schools and colleges.

Tinnanur, 30—11—1929. } **S. Anavaratavinayakam Pillai,** M. A., L. T.

# FOREWORD.

This new book, which contains a clear exposition in easy and intelligible prose of the thought-packed and condensed couplets of the world-known Tamil classic and the garland of Tiruvalluvar, is almost the last and delicious fruit of the life-long literary labours of the renowned Maha- Vidhvan Arunachala Kavirayar of the Madura Tamil Sangam. In this treatise the octogenarian Tamil Scholar of the Sethur Samsthanam, who is

also the surviving eldest member of the trio of hereditary poetic fraternity, has very closely followed the first-published and therefore most popular Pari-mel-alakar's exegesis aud commentary on the universal and immortal moral code in Tamil verse. In it he has also offered the precious treasure of the saner, truer and wiser interpretations of a few difficult kurals by the keen-witted critic of Cholavandan, the famous Arasan-Shanmuganar, whom the gods loved and snatched away too early as worthy of their comraderie and companionship

The ripe scholarship of our poet-expositor has provided apt illustrations for many an allusive distich and cited parallel lines and extracts from many classical poems, puranas and ithihasas. The simple, sweet and charming style of this rare volume, which is the unfailing characteri- stic

of this master of prose, and which is the envy of many an erudite Tamil pandit, is a strong recommendation for its wide popularity; and it is hoped that in these days when the school master is abroad, thanks to the increasing educational aid of the benign Government and to the labours of love of several foreign and indigenous philanthropists, every cottager as well as every citizen in Tamilaham will go in for a copy of this lucid Kural exposition and exegesis as every English-knowing man gets a copy of



Shakespeare's works, and as every Christian whatever his nationality takes a copy of the Bible for himself and family, the way for its inevitable and cordial acceptance having been cleared up by the numerous cheap editions and reprints of the bare Kural Text, which sell in thousands every year.

Karpaham.
Munnirpallam,
13th December 1929

M. S. Purnalingam Pillai,
B. A., L. T.,
Retired Professor of English.

# பதிப்புரை.

இந்நிலவுலகத்திலுள்ள பலதேசத்தாரும், சாதியாரும், சமயத்தாரும் தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாரால் அருளிச்செய்யப்பட்ட தமிழ்வேதமாகிய திருக்குறள் நூலைத் தங்கள் தங்கள் பாஷையில் மொழி பெயர்த்துவைத்துப் படிப்பதுபோல வேறெந்தப் பாஷையிலுமுள்ள நூல்களையும் அவ்வாறு படித்தாரென்று காணவுங் கேட்கவுமில்லையென்பது ஒருவரேனும் ஆட்சேபஞ் செய்யாமல் எல்லாருமொப்புக்கொண்ட விஷயமாம். இதற்குக்காரணம் என்னவென்றால், ஒவ்வொரு சாதியாரும் தங்கள் தங்கள் சமயத்துக்கு

உரிமையுடையனவாகக் கைக்கொண்ட நூல்கள் கூறும் விதிவிலக்குகளுள் ஒன்றை யொன்று மறுத்துக் கலகத்துக் கிடமுண்டாக்குதல்போலல்லாமல் எல்லாச் சாதியாரும் சமயத்தாருஞ் சண்டையில்லாமல் சம்மதித்து ஒத்துக்கொள்ளும் விதிவிலக்குகளே திருக்குறள் நூல் கூறுதலென்க.

இத்தகைய நூலினருமை பெருமையெல்லாம் வெள்ளிடை மலைபோல் வெளிப்பட்டு நிற்றலால், ஒருவர்க்கொருவர் சொல்லியறிவிக்க வேண்டுவதில்லை. "வேண்டுவார் வேண்டுவதே யீவான் கண்டாய்" என்ற வேதவாக்கியத்துக் கிணங்க, நுண்ணறிவாளர் எண்ணிய எண்ணிய பொருளெல்லாமீயும் வள்ளற்றன்மையுடைமையால் இந்நூலுக்கு உரையாசிரியர் *தருமர் முதலிய பதின்மர் உரையெழுதுவாராயினர். இப்பதின்மருரையுள்ளும் பரிமேலழகருரையே சிறந்து வழங்கப்பெற்றது. ஆயினும், தமிழிலக்கிய இலக்கணங்களைக் கற்பார் சுருங்கிய தற்காலத்தில் திருக்குறள் மூலத்தையும் உரையையும் படித்துப் பொருள் காணமாட்டாமல் மிகப்பெரும்பாலார் அநாதரவு செய்துவந்தனர்; அதுகண்டு பரிதாபமுற்று எளிய நடையில் திருக்குறட் கருத்து அடங்கிய ஒரு

வசனப் புத்தகமிருந் தால் †அவரெல்லாருக்கும் பயன்படுமென்றெண்ணி, என்னறிவிற்

*தருமர் முதலிய பதின்மராவார்-தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிதி, பரிமேலழகர், திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர்.

†அவர்-மூலத்தையும் உரையையும் படித்துப் பொருள் காணமாட்டாத பெரும்பாலார்.



கெட்டி யமட்டும் பொருள்விளங்கும்படி யெழுதி யச்சிட்டு வெளிப் படுத்தினேன். இரண்டு மூன்று வருடங்களுக்குள் புத்தகங்களெல் லாஞ் செலவாய்விட்டதால் நான்செய்த இந்த வேலை நல்ல வேலை யென்று மனமகிழ்ச்சியுற்றிருந்தேன். அதன்பின் இற்றைக்குப் பத்து வருடங்கட்குமுன் தீர்த்த யாத்திரையாக வந்திருந்த திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடாலயம் ஸ்ரீ சிவசண்முகதேசிக சுவாமிகள் தென்காசிச் சிவாலயத்தில் ஆயிரக்கணக்காகச் சனத்தொகை சேர ஒருபெரிய கூட்டங்கூட்டித் திருக்குறள்

முப்பாலிலுமுள்ள *நாற் பொருளையும் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் நெடுநேரம் எல்லாரிருதயமுங் கழிபெருங்காதல்கூர அற்புதமாகப் பிரசங்கஞ்செய்தனர்.

அப்பிரசங்கத்தை ஆதியே நடந்தமாகக் கேட்ட அநேகரெழுந்து 'திருக்குறள் மூலத்தையும் உரையையும் படித்தால் இவ்வளவு தெளிவாக எங்களுக்குப் பொருள் விளங்கவில்லை. சுவாமிகள் அருமைப் பிரசங்கத்தால் எல்லாந் தெளிவாகத் தெரிந்துகொண்டோம்' என்று மனமகிழ்ச்சியோடு சொல்லி வணங்கினர். அப்பொழுதருகிருந்த என்னைப் பார்த்து, சுவாமிகள் 'திருக்குறளின் ஒவ்வோரதிகாரத்தினுஞ் சிற்சில குறளைப்பொறுக்கி, சற்றேறக்குறைய ஐந்நூறு குறளுக்கு மேற்போகாமல் திரட்டி, தெளிபொருள் வசனமெழுதி, 'திருக்குறள் திரட்டும் தெள்ளிபொருள் வசனமும் எனப் பெயரிட்டு, அச்சிற்பதிப்பித்து வெளிப்படுத்துக' என்று கட்டளையிட்டனர். அக்கட்டளை, திருக்குறளிலே யீடுபட்டிருக்கிற எனக்குப் ''பழைய வழக் கமும் பால், பண்டிதன்

சொன்னதும்பால்'' என்ற பழமொழிக்குப் பொருத்தமாக இருந்ததனால் மதுரைக்கு வந்து, திருக்குறள் மூலத் தையும் உரையையும் நன்றாக ஆராய்ச்சிசெய்து, கற்பார்மிகையென்று மலையாமைப் பொருட்டு, வேண்டிய அளவு திருக்குறளைத் திரட்டித் தெளிபொருள் வசனமும் அவ்வாறே யெழுதி, மாறுபடுங் கருத் துடைய மதவாதிகளுஞ் சாத்திரவாதிகளுமாக எத்தனைபேரிருந்து கேட்டாலும் வாதஞ்செய்தற்கிடமில்லாமல் எந்த விஷயத்தையுஞ் சந்தேகமறப் பிரசங்கஞ்செய்யும் ஆற்றல்மிகுந்த, மேற்குறித்த ஸ்ரீ சிவசண்முக தேசிக சுவாமிகளுக்கனுப்பினேன். அவர்கள் சிரமம் பாராட்டாது ஒரு முறை பார்வையிட்டுக் கல்லார் நெஞ்சமுங்

---

* நாற்பொருள்-அறம், பொருள், இன்பம், வீடு,



காமுறும்படி முகவு ரையொன்று வரைந்துகொடுத்து,'விரைந்து பதிப்பித்து வெளியிடுக'

என்று ஆஞ்ஞை அளித்து, நிருபம் விடுத்தார்கள். அதன்மேலச்சிற் பதிப்பிக்க முயன்றுகொண்டிருக்கும்போது என் சரீரம் என்னைவிட்டுப் பிரியுமோ என்னும்படியான வியாதித்துன்ப முற்றதனால், அம்முயற்சியை நிறுத்தி, மதுரைப் புதுமண்டபம் பி. நா. சி. புத்தகக்கடை ஏஜண்டு மகா-ா-ா-ஸ்ரீ மு. கிருஷ்ணபிள்ளை யவர்கள் உதவியைக்கொண்டு, அச்சிற் பதிப்பித்துப் புத்தகம் வெளி வரச்செய்தேன் . அப்புத்தகத்தை வாங்கிப் படித்தார் பலருள்ளே கற்றூரிற் சிறந்த நண்பர் சிலர், 'இப்புத்தகம் எல்லாருஞ் சுலபமாகப் பொருள் காண்பதற்கிடஞயிருத்தலால், திருக்குறள் முழுமைக்குமே யிவ்வாறு தெளிபொருள் வசனமெழுதி வெளிப்படுத்தினல் லோ கோபகாரமாயிருக்கும் என்று நிருபவாயிலாகத் தெரிவித்தனர்,

இவ்விதம் நிகழ்ந்து சில வருடங்கள் கழிந்த பின்னர், சாமி தரிசனத்தின்பொருட்டும், சரீராரோக்கியத்தின் பொருட்டும் திருப் பரங்குன்ற நகரவாசியாக நான் வதிந்திருக்கும்போது, அவ்விடத் தில் போலீஸ் சப் இன்ஸ்பெக்டராயிருக்கிற திருவாளர் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் 'நீங்கள் இந்த வேலையைக் காலம்

தாழ்க்காமல் செய்யுங்கள் செய்யுங்கள்' என்று பலமுறை பரிந்து வற்புறுத்தினர்; அது அயர்ந்துகிடக்கின்ற *ஊர்தியை யடித்தெழுப்புதல் போலிருந்த தனால் மனவெழுச்சிகொண்டு திருக்குறள் மூலத்தையும் பரிமேலழகர் உரையையுங் திரும்பத்திரும்பப் பலமுறை படித்து மூலத்துக்கும் உரைக்கும் விரோதமில்லாமலும், சாமானியர்க்குச் சந்தேகமில்லாமலும், எல்லாம் வல்ல இறைவன் திருவருளால், தெளிபொருள் வசனமெழுதி, யானெழுதிய கருத்துக்குப் பொருத்தமாக உயர்ந்தோர் செய்யுள் வழக்கினும், உலகவழக்கினும் உதாரணமெடுத்துக் காட்டித் திருக்குறள் மூலத்தோடு அச்சிடடுக் கற்றறிந்த பெரியார்முன் வெளி வந்து உலாவச்செய்தேன்.

அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு

---

* ஊர்தி-எருது.

பதிப்புரை.

என்று நாயனாருளிச்செய்ததை நோக்குங்கால், அரிய நூல்களைக் கல்லாமையும், ஆசறுமையுமுடைய என்னுடைய வசனங்களில் சொற் குற்றம், பொருட்குற்றங் காணுதல் மிக எளியதாகும். ஆனாலும், அறிவுடையார் அவைகளைப் பொறுத்துத் திருத்தவேண்டி யவற்றைத் திருத்தியும், புதுக்கவேண்டியவற்றைப் புதுக்கியும் எனக்குத் தெரி விப்பாராயின் அத்திருத்தங் களையும் புதுக்குதல்களையும், உபயோகப் படுத்தி இந்நூலை இன்னு மொருமுறை அச்சிற்பதிப்பித்து வெளிப் படுத்தச் சித்தமாயிருக்கின்றேன். சுபம் ! சுபம்! சுபம்!

திருவள்ளுவநாயனார் திருவடி வாழ்க.

இங்ஙனம்,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான் மூ. ரா. அருணாசலக்கவிராயர், திருப்பரங்குன்றம்.

# முகவுரை.

———

பூவெனச் சிறப்பித்துச் சொல்லப்படும் மலரில்

வதியுங்கடவுளால் படைக்கப்பட்டு நிலவும் இவ்வுலகில், மக்களாகப்பிறந்தார் ஏனையபிறப் பினை அடைந்துள்ள உயிர்க்குள்ள அறிவினும் மேம்பட்ட அறிவினை யுடையவராவார். அவருள்ளும், விளக்கிடாத ஒருவர்மிகுந்த அறிவினை யுடையராகவும், மற்றொருவர் குறைந்த அறிவுடையராகவும் இயற்கை யின் இருத்தல்கண் கூடு. (பிரத்தியக்ஷம்) செயற்கையானும் அறிவுவளர் கின்றது. இயற்கை செயற்கைகளால் அறிவுமிகுந்தார் அது குறை ந் தார்க்குத் தம் அறிவைத்தந்து, அறிவானுண்டாம் இன்பத்திருத் தலே இவ்வுயர் மக்கட் பிறப்பெய்தியதின் நலன் ஆம். அங்ஙனம் தம் காலத்திலுள்ளார்க்கும், தம் தேயத்தினர்க்கும், தம்மரபினர்க்கும், தம்சமயத்தினர்க்கும் செய்பவரினும் எக்காலத்தினர்க்கும், எத்தேயத் தினர்க்கும், எம்மரபினர்க்கும், எச்சமயத்தினர்க்கும் அறிவைத்தந் தின்பத் திருத்துபவர் மேல் என்பதை மறுப்பார் ஒருவரும் இரார். அங்ஙனம் செய்தார்யார் எனின், மற்றையர்களைக் கூறும் பொழுதெல் லாம் வாதம் எழும். திருவள்ளுவரைக் கூறுங்கால் ஆம் ஆம் ஆம் என முக்காலும் எவரும் அறைந்து மகிழ்ந்து, உடன்படுவர். ‘அங்ஙனம் உடன்பட அவ்வள்ளுவர் என்செய்தார்’ என வினவுவார் மிகச்சிலர். அவர்

செய்தநூல் திருக்குறள் என்பதும், அத்திருக்குறள் கொண்டு எவர்க்கும் அறிவைவளர்த்து, இன்பத்திலிருத்துகின்றார் என்பதும் பெரும்பாலார் அறிவார். திருவள்ளுவர் பின்வந்த எப்புலவரும், அவர் திருக்குறளினிருந்து சொல்லும் பொருளும் எடுத்தாள்வரெனின், அந்நூற்பெருமையை விரிப்பது மிகையாகும். அத்திருக் குறள், பன்மொழிகளினும் மொழி பெயர்க்கப்பட்டிருப்பது ஏனைய மொழிப்புலவர் அதன்கட்கொண்ட ஆர்வத்தை விளக்குகின்றது.

ஏனைய மொழியறிஞரும் இத்தமிழ்த் திருக்குறளைத் தங்கள் மொழியில் யாத்து அறிந்தும், அறிவித்தும் இன்பம் பெறுவரெனின், தமிழகத்துள்ளார் அதனைக்கற்றுப் பொருளறிந்து, அது தரும் அறிவைத் தம்மறிவாக்கொண்டு, இன்புறல் வேண்டுவது இன்றியமையாததொன்றன்றோ? அங்ஙனமே அறிந்து இன்புறக்



கருதுபவர்கள் பலதரத்தினராக இருத்தல் இயற்கையே. நூலையும், அதற்குரிய உரையையும் நுனித்தாய்ந்துகொள்வார்சிலரே. இக் காலத்தில்

முயற்சி சிறிதாகவும், பலன்மிகுதியாகவும் இருத்தலிலே கருத்துடையார் மலிந்திருக்கின்றனர். அவரும் இந்நூலின் பயன் கொள்ளல் வேண்டுமெனக்கருதி, இந்நூலைபபலர் பலவாறு அச்சிட்டு உதவியிருக்கின்றனர். அச்சிட்டுதவிய உபகாரிகளுள் நம் நண்பர் திருவாளர் மு. ரா. அருணாசலக் கவிராயரவர்களே முன் வந்து நிற்றற்குரிய சீர்த்தியர். இவர்கள் பரிமேலழகருரையுடன் அச்சிட் டுதவினர். அஃதேயன்றி, வசனப்படுத்தி அச்சிட்டு உதவினர், அதுவுமல்லாது திருக்குறளின் ஒவ்வொரு அதிகாரத்தினின்றும் திரட்டி வசனமும் எழுதி அச்சிட்டு உதவினர். இப்போதோ "திருக்குறள் மூலமும் தெளிபொருள்வசனமும்" என அச்சிட்டு உதவுகின்றனர். இவர்களது கல்வித்திறமையும், உபகரிக்கும் ஆற்ற லும் இற்று இற்றெனத் தனித்தனிக் கூறவேண்டா. இவர்கள் பரம் பரையே தொன்றுதொட்ட கவிராயர் பரம்பரை. இவர் மட்டும் அன்று. இவர் உடன்பிறந்தாரிருவரும் செந்தமிழுலகறிந்த சீர்த்திப் புலவர்கள். இவர்கள் பல்பழைய நூலாராய்ச்சியுடையார். செய்யுளி யற்றும் திறமையும், வசனம எழுதும் வன்மையும்

பகுத்துணரும் புலவர்கள் பாராட்டற்பாலன. இப்போறிஞர் வெளிப் படுத்தும் “திருக்குறள்மூலமும் தெளிபொருள் வசனமும்” என்னும் நூலைப் படித்துப் பார்த்தோம். நன்றாக எழுதப்பட்டிருக்கிறது.

இந்த வசனத்தைப் படிப்போர், திருக்குறளாசிரியர் கருத்தைத் தெளிவாக அறிந்து, உணர்ந்து, இன்புறுவர் என்பது உறுதி. தமிழ்மக்கள் அனைவரும் இந்நூலைப்பெற்றுப் படித்துத் தமதில்லத்தில் வைத்துப பூசித்தற்குரியர் என்பது நம் கருத்து. இந்நூல் நல்ல காகிதத்தில் கண்கவர் வனப்பினதாக

I I

அச்சிடப்பட்டிருக்கிறது. 10

முகவுரை.

இப்புலவர் பெருந்தகை, இன்னும் பலஆண்டு சரீர சௌக்கியத்துட னிருந்து, தமிழகத்திற்கு இதன்முன்பு போன்றே, இதன்பின்பும் பலநூல் வசனமெழுதியும், உரைகண்டும், குறிப்புவரைந்தும், அச் சிட்டும், உபகரித்து நன்றிருக்க எல்லாம்வல்ல

சிவகுருநாதன் திருவடிக் கமலங்களைச் சிந்திக்கின்றோம்.

சிவசண்முக மெய்ஞ்ஞான தேசிகன் றிருவடி வாழ்க.

| | |
|---|---|
| திருக்கோவலூராதீனம் ஞானியார் மடாலயம். சுக்கிலஹு விருச்சிகரவி. 3 | இங்ஙனம் சிவசண்முக ஞானியார், சந்நிதிவீதி, திருப்பாதிரிப்புலியூர். |

# அபிப்பிராயங்கள்.

சென்னை மகாமகோபாத்தியாயர் பிரமஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் எழுதியது.

தமிழ்வேதமென்று பாராட்டப்பெறும் திருக்குறளுக்குச்சமானமான நீதிநூல் வேறு எந்தப்பாஷையிலும் இல்லையென்பது யாவரும் அறிந்த விஷயம். எந்தச் சமயத்தாரும் ஒப்பக்கூறும் மெய்ப்பொருளை விளக்குவது இது; இந்நாட்டுப்

பெரியோரால‌ன்றிப் பிறநாட்டு அறிஞர்களாலும் பொன்னேபோற் போற்றிப் புகழ்ந்துரைக்கப் பெற்றுள் ளது. இதன்பால் உள்ள பாக்களின் சொற்களையும் கருத்துகளையும் இடையிடையே அமைத்தமைத்துப் பழைய தமிழ்ப்பெருங் கவிஞர் பலர் தம்முடைய நூல்களை அழகுபெற இயற்றி முடித்திருத்தலே இதன் பெருமையை நன்கு விளக்கும்.

சில நூல்களுக்கு ஒருவர் அல்லது இருவர் உரைஎழுதுவதுண்டு. இதற்குமட்டும் பதின்மர் உரை யெழுதியுள்ளார்கள். இதனை வசன நடையாகப் பலர் எழுதியிருக்கிறார்கள். சிலர் பழைய உரைகளைத் தழுவி உரையெழுதிப் பதிப்பித்தும் இருக்கிறார்கள்.

பாண்டிவளநாட்டில் முகவூரென்னும் ஊரில் பரம்பரையாகத் தமிழை நன்குகற்றுப் புகழ்பெற்று விளங்கிய இராமசாமிக் கவிராய ரவர்களுடைய மூத்தகுமாரரும், திருவாவடுதுறை யாதீனத்திற் சிறந்து விளங்கிய ஸ்ரீநமசிவாய தேசிகரவர்களிடம் முறையே பல நூல்களையும் கேட்டவரும், தமிழ்க்காப்பியங்களையும் பலதமிழ்ப் பிரபந்தங்களையும் இயற்றியவரும், பலநூல்களுக்கு அரிய குறிப்புரைகள்

எழுதிப்பதிப்பித்து வெளிப்படுத்திஉபகரித்தவரும், தமிழ்ச்சுவையை அறிந்து இன்புறும் இயற்கையை யுடையவரும், சிவபத்திச் செல்வம் வாய்ந்தவருமான மகா-ா-ா-ஸ்ரீ மு. ரா. அருணாசலக் கவிராயரவர்கள் இப்போது திருக்குறளுக்குத் தெளிபொருள் வசனமொன்றெழுதி இன்றியமையாத குறிப்புக்களுடன் பதிப்பித்து வெளியிட்டிருக்கி



றார்கள். அவர்களுடைய ஆராய்ச்சியின் பயனாகவுள்ள அரிய விஷயங் கள் பலவற்றை இதில் யாவரும் காணலாம். அறம் முதலியவற் றின் பாகுபாடுகளை யாவரும் வருத்தமின்றி உணர்ந்து இன்புறுவதற்கு இப்பதிப்பு மிக்க சாதனமாகும்.

கலாசாலைகளில் மாணாக்கர்களுக்கு மத போதனையும் நீதி போத னையும் இன்றியமையாதனவென்று கூறப்படும் இக்காலத்தில் இ ந்நூ ல் பாடபுத்தகமாக வைத்தற்கு ஏற்றதாகும். ஆதலால், தமிழபிமானி கள் யாவரும் இதனை ஆதரித்துக் கவிராயரவர்களுக்கு ஊக்கமளிப் பார்களென்று நம்புகிறேன்.

---

மதுரைத் தமிழ்ச்சங்கம் தலைமைத் தமிழாசிரியரும்,
செந்தமிழ்ப் பத்திராதிபருமாகிய பிரமஸ்ரீ, திரு. நாராயணையங்காரவர்கள் எழுதியது.

---

தமிழ்மொழிக் கண்ணே தலை சிறந்து விளங்கும் நூல்கள் இரண்டு. அவை ஒல்காப்பெருமைத் தொல்காப்பியமும், தெய்வப் புலவரது திருக்குறள் நூலுமேயாம். ஒன்று இலக்கணங்களின் வரிசையில் முன்னிற்பதுபோல மற்றொன்று இலக்கியங்களின் வரிசையில் முன்னிற்பது. ஒருவர் இருவரானன்றி ஆசிரியர் பலரான் உரையிடப்பட்ட அருமை இவ்விரு நூல்கட்குமே உரியதாம். இது நிற்க.

திருக்குறளுக்குப் பரிமேலழகரையுள்ளிட்டார் பதின்மர் உரையியற்றினரென்ப. அவர் உரைகளிலெல்லாம் பரிமேலழகர் உரை சாலச் சிறந்ததாகலின் இன்றுகாறும் நின்று நிலவுவதாயிற்று. ஆயினும், "நந்தாவுரையை யெழுதவிலவ்வாறு"* என்றமைக்கேற்பத் திருக்குறளின் பொருட்பொலிவுகள் அனைத்தும்

ஒருவரான் இத் துணைய என்று வரையறுத் துணர்த் தும் இயல்பினவல்ல. அதனானே அஃது எல்லையின்றி விரிந்து நவிலுந்தொறும் நயம்பெறத் தோன்றி அறிஞர்காதற்கு அமைவிருந்தாகின்றது.

* வெங்கைக்கோவை.



அன்றியும் முற்காலத்தனவும் பிற்காலத்தனவுமான நூல்களிலும் உரைகளிலும் திருக்குறளின் சொற்பொருட்டொடர்களைப் பொன்போற் போற்றி ஆளாத ஆசிரியர் எவருமே இல்லை. "சமயக் கணக்கர் மதி வழி கூறாது, உலகியல் கூறிப் பொருளிது வென்ற"§ இதன் பொது நோக்குடைமையை எத்திறத்தினரும் நன்குமதிக்கின்றனர். இக்காரணத்தானே இஃது உலகின்கண் உள்ள பல வேறு பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.

இங்ஙனம் விரிந்து பரவுதலுற்றதாயினும் நம் தமிழ் மக்களாற் போதிய அளவு இத்திருக்குறள் பயிலப்பெறாத குறை இன்னமும் நீங்கியபாடில்லை. "நதியின் பிழையன்று நறும்புனலின்மை"† என்றாங்

து அது நூலின் குறையன்று; நம்மவர் குறையே என்பது வெட்டவெளிச்சத்தை விளக்கின்றது. இதனை ஓதியுணரும் உரிமையை இழந்தவர் தமிழ் மக்கள் என்னுந் தகுதியும் இழந்தவராவர் என்றால் அது மிகையாகாது.

ஆகலின் இக்குறையினை நீக்கவேண்டி எத்துணையோ பல திருக்குறட் பதிப்புக்கள் இதுகாறும் வெளிவந்துள்ளன. அவை யாவும் ஒவ்வோரளவிற் பயன் தருவனவே. ஆயினும் எத்தகைய அறிவினர்க்கும் இந்நூற்பொருளை எளிதாகப் புகட்டவேண்டுமென்னும் நன்னோக்கத்துடன், ஆசிரியர் ஸ்ரீ மு. ரா. அருணாசலக் கவிராயரவர்களால் 'திருக்குறள் மூலமும் தெளிபொருள் வசனமும்' என்னும் இப் புத்துரைப் பதிப்பு இதுபொழுது வெளியிடப் பெறுகின்றது.

கவிராயரவர்கள் தமிழ்மொழி வளர்ச்சியிற் றளராத முயற்சியுடன் பன்னெடு நாட்களாக உழைத்து வருதல் பலரும் அறிந்ததே யாம். பழந்தமிழ் நூல்களைப் பரிசோதித்தும் உரை வகுத்தும் தாமே நூலியற்றியும் அவர்கள் இதுவரை ஐம்பதின் மேற்பட்ட புத்தகங்களை அச்சிட்டு உதவியிருக்கின்றனர். அவற்றுள், திருக்குறளினையே இதற்கு முன்னரும் மூன்று முறையாகப் பதித்திருக்கிறார்கள். 'ஒன்று திருக்குறட்

பரிமேலழகருரை' யாகும். மற்றொன்று 'திருக் குறள் வசனம்' என்னும் பெயர்கொண்டது. பின்னரும் ஒன்று 'திருக்குறள் திரட்டும் தெளிபொருள் வசனமும்' என்ற பெயரால்

§ கல்லாடம். † கம்பர்.



வெளிவந்தது. அவைகளின் வேறாய் இப்பொழுது வெளியிடப் பெறுவது நான்காவதொன்றாம். இதனானே இவ்வாசிரியருக்குத் திருக்குறளின்கண் ணுள்ள ஆர்வமுடைமை இனிது விளங்கும். நிற்க.

இப்பதிப்பின்கண் ஆயிரத்து முந்நூற்றுமுப்பது அருங்குறள்களுக்கும் ஆசிரியர் பரிமேலழகரை அடியொற்றி உரை வரையப்பட்டுள்ளது. உரைப்பகுதிகள் தெளிவான நடைதழுவிச் செல்லுகின்றன. ஆகலின் பரிமேலழகருரையிற் பயிலப்புகுவார்க்கு இஃது உறுதுணையாய் உதவுமென்பதில் ஐயமில்லை. திருவள்ளுவமாலையும் தெளிபொருள் வசனத்தோடு சேர்க்கப்பட்டு இப்புத்தக முழுமையும் நல்ல காகிதத்தில் மனம் கவரும் வண்ணம் அழகாக அச்சிடப்பட்டிருக்கிறது. கவிராயரவர்களது

இப்பேருதவிக்குக் கைம்மாறு பிறிதில்லை; தமிழுலகம் இதனைப்படித்துப் பயன் கொள்ளலே அமையும்.

---

## சேது ஸம்ஸ்தான வித்வான் பிரமஸ்ரீ
## ரா. இராகவையங்காரவர்களெழுதியது.

---

சிறந்த செந்தமிழ்ப் புலவராகிய ஸ்ரீமான் மு. ரா. அருணாசலக் கவிராயரவர்கள் திருக்குறளுக்குப் பரிமேலழகருரையைத் தழுவி எழுதியுள்ள தெளிபொருள் வசனத்தைப் பார்த்தேன். தமிழிலோப் புயர்வற்று விளங்கும் பெருநூலாகிய திருக்குறளை யாவரும் எளிதிற் கற்றுணர்ந்து கொள்ள இது பெருந்துணை யாகுமென்று நம்புகின்றேன். மாணக்கர்கள் பரிமேலழகருரையைத் தெளிதற்கு முன்னர் இந்நூல் வசனநடையைப் படித்துக்கொண்டால் அவ்வுரை எளிதில் நன்கு விளங்குவதாகும். இவ்வசனநூல் ஆங்கிலகலாசாலை மாணக்கர்களுக்கு இன்றியமையாத தொன்றாகும். திருக்குறளிற் பொதிந்துள்ள அருமையாய நுண்ணிய

கருத்துக்களை இந்நூலாசிரியர் எளிதா யுணரும்வண்ணம் விளக்கிச் செல்கின்ற வசனநயம் எல்லாராலும்

.    .    .

.

பாராட்டத்தக்கது.

## அபிப்பிராயங்கள். 1

5

## தென்காசித்தாலூகா, வெள்ளகால் ஆங்கிலதமிழ் வித்துவான்

ராவ் சாகிபுப்பட்டம் பெற்ற ஸ்ரீமாந்

## வெ. ப. சுப்பிரமணிய முதலியாரவர்கள் எழுதியது.

அன்புள்ள ஐயா!

———

தாங்களனுப்பிய நிருபமும் திருக்குறள் மூலத்தோடுள்ள தெளி பொருள் வசனமுங்கிடைத்தன. தெரிந்தெடுத்த சில குறள்களுக்குத் தெளிவும் எளிதுமான வசனநடையெழுதித் தாங்கள் வெளியிட்ட 'திருக்குறள் திரட்டு' என்னும் புத்தகத்தை முற்றும் பார்வையிட்டிருக் கிறேன். அதற்கு முன் தாங்கள் மூலத்தைச் சேர்க்காமல் வெளியிட்ட திருக்குறள் வசனப்புத்தகத்தை ஆங்காங்கே பார்வையிட்டிருக் கின்றேன்.

இப்போது வெளியிட்டிருக்கிற 'திருக்குறள் மூலமும் தெளி பொருள் வசனமும்' என்றபுத்தகத்தில் இடையிட்டு இடையிட்டுப் பல பகுதிகள் பார்வையிட்டேன். யான் பார்த்தவரை இந்த உரை (வசனம்) மூலத்தின்கருத்தையும் ஆசிரியர் பரிமேலழகருரையையும் தழுவி யெழுதியதாய், மிகவும் எளிதும் தெளிவும் இனிமையுமான நடையோடு கூடியதாய், முற்றும் இலக்கிய இலக்கண அமைதிகள் பொருந்தியதாயுள்ள தென்று தெரிந்தேன். இப்புத்தகம் சாதாரண மாகத் தமிழ் வாசிக்கத்தெரிந்தவ ரொவ்வொருவரும் வருத்தமில்லா மற் படித்து அருத்தமறிந்து பயனடையத்தக்கதா யிருக்கின்றது. இது பள்ளிக்கூடங்களில் சிறு வகுப்புகளுக்கும் பாடமாக வைத்தற் கேற்றதாயிருக்கின்ற தென்பதை இதைப் பார்வையிடுவார் யாவருந் தெரிந்துகொள்வார்.

---

சென்னை தமிழ் லேக்ஸிகன் கமிட்டி எடிட்டர் அண்டு மெம்பர்

போர்டு ஆப் ஸ்டடீஸ் ஸ்ரீமாந்.

## எஸ். வையாபுரியா பிள்ளை பி. எ., பி. எல். அவர்கள்

## எழுதியது.

---

தற்காலத்தில் தமிழகத்தை யலங்கரிக்கின்ற பண்டிதசிகாமணி களுள் ஒருவராகிய திருவாளர். மு. ரா. அருணசலக் கவிராயரவர் களை மாணவருலகம் நன்கறியும். நெடுங்காலமாகத் தாம் கற்றகல்வி யையும் செய்துவந்த தமிழாராய்ச்சியையும் தமிழ்மக்களுக்குப பயன்

படச்செய்யவேண்டுமென்ற கருத்துடன் சிறந்தநூல்கள் பலவற்றைக் கவிராயரவர்கள் இயற்றி யளித்திருக்கின்றார்கள். யாவராலும் போற்றத்தகும் பெருநூல்கள் சிலவற்றை உரையுடன் செவ்விதாக வெளியிட்டிருக்கின்றார்கள். சில அரியநூல்களைத் தமிழ்மக்களனைவரும் எளிதின் உணரவேண்டும் என்ற நன்னோக்குடன் மெய்வைத்த வேத விளக்காகிய தெய்வத்திருக்குறளுக்கு இப்பொழுது தெளிபொருள் வசனமொன்றியற்றி மூலத்துடன் பதிப்பித்திருக்கின்றார்கள்.

இத்தெளிபொருள் வசனம் சில வருடங்கட்கு முன்னர் முதன் முதலாக எழுதி வெளியிடப்பெற்று திருக்குறளைக் கற்கப்புகும் மாணவர்க்குப் பிரவேசநூலாகப் பயன்பட்டு இதன் ஆசிரியருக்கு இத் துணை காலமாக நற்புகழ்விளைத்து வந்திருக்கின்றது. இந்நூலால் எய்தும்பயன் பலவகையானும் மிக வேண்டும் என்னும் கருத்துடன் மூலத்தினையும் உடன்சேர்த்து வேறுபல உரைக் கூறுபாடுகளையும் எழுதி இப்பொழுது உபகரித்திருப்பது பெரிதும் பாராட்டத்தக்கது.

'தமிழுணர்கின்றனியுயிர்' எனச் சொல்லத்தகுவது திருக்குறட் பெருநூல். இந்நூலிற்கு

ஒப்புயர்வற்ற உரையொன்றிருப்பினும் நூலினையும் உரையினையுங் கற்றுவருவார் தொகைமிகச் சுருங்கியதே யாகும். இதற்கு முக்கியகாரணம் பரிமேலழகாது உரை கற்றற்கு எளிதாயிராமையே யாம். தமிழ் மொழியிலுள்ள இலக்கண இலக்கியங்களையும் வடமொழியிலுள்ள மனு, அர்த்தசாஸ்திர முதலியவற்றையும் நன்கு கற்றார்க்கே உரையின் நயம் விள்ளுவதாகும். உரைகாரரின் கருத்துக்களைச் செவ்வனே விளக்கி உரையிற்றரப்பட்டுள்ள மேற்கோள்களை வேண்டுமளவு தெளிவுபெறச்செய்து எளிய நடையில் இயலும் உரையொன்று திருக்குறளுக்கு அத்தியாவசியகமாம். இவ்வகையுரையொன்றே மாணவருலகில் வள்ளுவர் ஈட்டிவைத்துள்ள செல்வத்தைப் பயன்பெறச் செய்யவல்லது கவிராயரவர்கள் வெளியிட்டிருக்கும் தெளிபொருள் வசனம் இம்முறையால் நோக்குமிடத்துப் பெரிதும் போற்றத்தகுவதொரு நூலென்பது எனது அபிப்பிராயம்

தெள்ளுபரிமேலழகர் செய்தவுரையை விளக்கிச்செல்வதோடு கவிராயரவர்களது 'தெளிபொருள் வசனம்' அமைந்து விடவில்லை யென்பது பாராட்டிக் கூறத்தக்கது. பல இடங்களில் பிறநூல் மேற்

கோள்களாலும் சொற்பொருளாராய்ச்சிகளாலும் அமையத்திற்கேற்ற புராண சரித்திரங்களாலும் ஆசிரியரவர்கள் பொருளை விளக்கமுறச் செய்திருக்கின்றார்கள். தற்காலத்துள்ள அறிஞர்கள் செய்துவரும் ஆராய்ச்சிக் குறிப்புக்களை அங்கங்கே தந்து தமது கருத்து இன்னதென்பதனை நன்கு காட்டியிருக்கின்றார்கள். சிலகாலத்துக்கு முன்பு நூதனமாகக் கண்டெடுக்கப்பட்ட சில அரிய பாடபேதங்களை உரிய இடங்களிற் கொடுத்து அவற்றின் நயங்களை விளக்கியிருக்கின்றார்கள்.

இங்ஙனம் பல வகையாலும் கவிராயரவர்களது தெளிபொருள் வசனம் மாணவர்களுக்குப் பெரிதும் பயன்படக் கூடியதாயிருக்கின்றது. தமிழ் மாணவருலகு இவ்வெளியீட்டினாற் பயன்பெற்றுக் கல்வி நலந்துய்க்கும் முயற்சியை நிச்சயமாய் மேற்கொள்ளும் என நம்புகின்றேன். இவ்வுரைநூல் போன்ற பலநூல்களையும் வெளியிட்டு உதவும் வண்ணம் கவிராயரவர்களை யூக்குதல் நமது பெருங் கடமைகளிலொன்றாகும்.

பசுமலையில் வசிக்கும் உயர்தர

நீதிமன்றவாதி

## ஸ்ரீமாந். ச. சோமசுந்தர

## பாரதியாரவர்களெழுதியது.

சேற்றூர்ச் சம்ஸ்தான பண்டிதரும் மதுரைத் தமிழ்ச்சங்கவித்துவர் ஹும்ஒருவர் திருவாளர் மு. ரா. அருணசலக்கவிராயர் அவர்களை அறியாதார் தமிழறியாதாராவர். இவர்கள் எழுமையும் ஏமாப்புடைய புலவர் பரம்பரையினர். சிவப்பிரகாசர், கருணைப்பிரகாசர் வேலையர் போன்றிக்காலத் தமிழுலகில் விளங்கிய கவிராஜ சகோதரர் மூவருள்ளே, காலஞ்சென்ற கந்தசாமிக் கவிராயருக்கும் சுப்பிரமணியக் கவிராயருக்கும் முன் பிறந்து சிறந்த முதல்வர். இப்புலவர் இனிய எளிய ஆசு கவிகளை நிறைய விரைவில் பொழியவல்ல கவிமேகம், முருகப்பிரானிடம் முறுகிய அன்புடையவர். அதனால் திருப்பரங்குன்றத்தில் நிரந்தரவாசியாகி, நாளும் வள்ளி மணாளனைத் தெள்ளுதமிழ்க் கவிகள்எருத்தி, அன்பு முதிரின்ப வெறியாட்டியாக வாழ்ந்து வருகின்றவர். எண்பதைத் தாண்டடுத்த வயதுடைய

இப்புலவர் தளராது செய்துவரும் தமிழ்த்தொண்டிற்குத் தமிழகம் மிகவும் கடமைப் பட்டுள்ளது.

III



இன்னும் இனிய புதிய கவிநிதியம் நிதமியற்றும் தமிழ்த்தெய்வ வழியிட்டோடமையாமல், இப்பெரியார் பல அரிய பழைய நூல்களும் பண்டிதர்க்குமட்டுமின்றிப் படிப்பவர்களனைவருக்கும் பயன் படுமாறு எளிய இனிய சுவை நடையில் உரை எழுதி வெளியிட்டுத் தமிழறிவைத் தமிழகத்தில் பெருக்கி வளர்த்துவரும் நன்முயற்சி மேற்கொண்டுழைத்து வருகின்றனர். அரிய பெரிய தமிழ் நூல்களுள்ளே என்று மிறவாமல் நின்று நிலவித் தமிழையும் சிறப்பிக்கும் சிறப்புடையது திருக்குறள் என்பது யாவருமறிந்ததாகும்; அதற்குச் செய்யப்பட்டுள்ள பத்துரைகளுள்ளும் பரிமேலழகரின் பொருளுரை மிகவும் பாராட்டப்படுவதாகும்.

எனினும், இறுகிய அரிய நடைத் திட்பத்தால் மிளிரும் அவ்வுரை மதிநுட்பம் நூலோடுடைய தமிழ் வாணர் மட்டு மடுத்துச் சுவைக்கு மலைத்தேனுவதால், அவ்வுயர்வுரை வளத்தைக் காமுறும் கல்வி முடவரும் அதை எளிதில் பெற்று அருந்துமாறு, இவர்கள் அதன் அருமை நீக்கி, அத்தேனை இனிமையொடு எளிமைப்பண்டமாக்கி வழங்கி, தமிழகத்தில் மலிவித்து உபகரித்துள்ளார்கள். இவர்கள் எழுதியுதவிய தெளிபொருள் வசனம் குணமும் மணமும் குன்றாமல் சேர்க்கப்பெற்று, மலர்தேடி மலையேறி வருந்தாமல் எளிதில் யாரும் கொண்டருந்தித் திளைக்கத்திகழும் தண்ணறுந்தனித்தேனாய் விளங்குகின்றது. வள்ளுவர் குறட்பாக்களின் நுண்ணிய கருத்துக்களைப் பொழிந்து, பரிமேலழகியார் அரிய பொருள் வளத்திற்குழைத்து, தன் அரிய குறிப்புரைகளாம் அனுப் பாணங்களிலிழைத்து, காய்ச்சிய பொன் வெம்மையின்றி யிறுகாமல் நெகிழ்ந்தோடும் நீர்மைத்தாய் ஒழுகும் தன் ஒளிருமினிய தமிழ் நடையாம் வள்ளத்தில் நிறைத்துத் தந்துதவிய இப்புலவருக்குப் பல்லாண்டு கூறுவதன்றித் தமிழர் பிறிது கைம்மாறு கருதற்கில்லை.

உடல் வருத்தம் பொருட் செலவுகளைப் பொருட்படுத்தாமல் தமிழ்த்தொண்டொன்றே இலக்காகக் கொண்டு ஓயாதுழைத்துவரும் இப்பெரியார், அறிவே போல் வயதும் முதிர்ந்தவர், உலகப் பொருள் வளம் முதிரப்பெறாத வர், இபபுலவர் இயற்றியுள்ள பல பிரபந்தங்களை யும், முக்கியமாக இக்குறள் தெளிபொருள் வசனத்தையும் மாணாக்கர் பயின்று பயனடையுமாறு கலாசாலை அதிபர்களும் *அத்தியக்ஷகரும்

* அத்தியக்ஷகர்-மேல்விசாரணை செய்வோர.



பள்ளி வகுப்புக்களில் போதபாடப் புத்தகங்களாக்குவரேல் இப் புலவர் செய்யும் விலையுற்ற பேருபகாரப் பெருந் தொண்டிற் கொரு சிறிது தமது பெருங் கடப்பாட்டைச் செய்ததாகும், நிதமெழுந்து வதங்கி யழியும் மணமற்ற மலராத முடைநாறும் காளான் களஞ்சியமான நவினங்களைப் பாடமாக்கி, இளைஞருக்குப் புல்லறிவும் நவீனத மெழுதும் பல கல்லாத புதுவருக்கு நன் னிதியும் பெருக்கி வரும்

வழக்கத்தை ஒழித்துக் கல்வியிலாகா அதிகாரிகள் இத்தகைய திருவளர்க்கும் அறிவு நூல்களை மாணுக்கர்களுக்குப் போதிக்கச் செய்வாராயின் தமிழும் தமிழகமும் வளம் பெற்று வளர்வதாகும்; தமிழணங்கும் புத்திளமை புனைந்து மிளிர்வாள்.

எண்பஃதாண்டு அடுக்க இருந்த இவர் இன்னும் பல்லாண்டிருந்து தமிழ்த் தொண்டியற்றிப் புகழ் பெருக்கி வாழ்ந்திடுக. பண்பல்லார் பலர் தீமையாழ்ந்திடுக. தமிழ் மக்கள் புத்தறிவும் புது வளமும் நிதம் பெருகப் பெற்றிடுக. தமிழகம் முன்னிலையினிலும் உயர்ந்தோங்கி நாகரிக உலகினிலே நடுவிளக்காய், எந்நாளும் இலகிடுக.

---

மகிபாலன்பட்டி, பண்டிதமணி

ஸ்ரீமாந். மு. கதிரேசன்

செட்டியாரவர்களெழுதியது.

---

தமிழ்ப்புலவர் திலகமாகிய திருவாளர் மு. ரா. அருணசலக்கவி ராயரவர்கள் வெளியிட்டிருக்கும்

'திருக்குறள்மூலமும் தெளிபொருள் வசனமும்' என்னும் புத்தகப்பிரதி வரப்பெற்றுப் படித்து, இன்புற்றேன். புலவர் பெருமானாகிய திருவள்ளுவ தேவர் அறமுதலிய உறு திப்பொருள்களைக் கவிச்சுவை பொதுள ஆக்கியளித்த திருக்குறளின் பெருமை இவ்வுலகம் அறிந்தது. தமிழ்த்தலைமணி நூலாகிய குற ளூற்கு உரைகண்டார் பலருள் நூற்பெருமைக்கு ஏற்ற முறையில் திட்பநுட்பஞ் செறியச் செப்பனிட்டு உ ரைநடையிற் பல் வகைச்சுவை களு ந் ததும்பப் புலவர் விருந்தாக மிளிரச் செய்தவர் பரிமேலழக ரரவர். இவருரை, நூலாசிரியரின் நுண்ணிய கருத்துக்களைத் துரு வித்துருவிக்கண்டு அவரெ ண்ணி யமைத்த பொருள் வளங்களை விளக்கமாக வெளிப்படுத்தி நிற்பதெனினும், அவ்வுரைப் பொருள் 20

அபிப்பிராயங்கள்,

இலக்கிய இலக்கணங்களை நிரம்பக் கற்ற புலவர்கள் உய்த்துணர்ந்து துய்த்தற்குரியதேயன்றி மற்றையோர் உணர்ந்து கோடற்கரியதாகும். அவ்வுரை நடையிற் புகுதற்கு ஆற்றலில்லாத தமிழ் வேட்கையாளர் அப்பொருளை விரும்பியும் அடைதற்கியலாதவராவர். இந்நிலையில் உரை

நடையை எளிதாக்கி அவ்வரும்பொருளை யாவரும் உளங் கொளச் செய்தல் சிறந்த உபகாரம் ஆகுமென்பது கூறவேண்டா. இப்பேருபகாரச் செயலைச் செய்தற்கு முன் வந்தவர்கள் பரம்பரைத் தமிழ்ச் செல்வக் குடியிற் பிறந்து புலமை நிரம்பப் பெற்றுச் செய்யு ளியற்றல், வசனம் எழுதல் என்னும் இருதிறனும் ஒருங்கமைந்த திருவாளர் மு. ரா. அருணசலக் கவிராயரவர்களே யாவர். இவர்கள் பரிமேலழகர் உரைக்கருத்தை அழகும் இனிமையும் எளிமையும் வாய்ந்த தமிழ்ச் சொற்களால் விளக்கியிருத்தலும், உரிய இடங்களில் குறட் கருத்தைப் புலப்படுத்தும் புதிய வரலாறுகளையும் திருக் குறட்குப் பின்னெழுந்த நூல்களில் உள்ள கருத்தொற்றுமைச் செய் யுட்களையும் எடுத்துக்காட்டி விளக்கிச் செல்லுதலும் மிக்க இன்பம் செய்கின்றன. நுண்மாணுழைபுல மிக்கவரும், புகழுடலைப் பற்றி நிற்பவரும் ஆகிய அரசஞ் சண்முகனர் சில குறள்களுக்குக் கூறிய பொருள்களையும் ஆங்காங்குக் குறிப்பிட்டிருத்தல், காலப் புதுமை பற்றி அறிவுடையாரைப் பொருட்படுத்தாதிருத்தல் நன்றன்றென் னும் உயர் குணம். திரு. கவிராயரவர்கள் பால் அமைந்திருத்தலைப் புலப்படுத்தி மகிழ்விப்பதாகும். பெரும் புலமை மிக்காரால் அரிதின் உணர்ந்து இன்புறத்தக்க வள்ளுவர்

பரிமேலழகர் அருங்கருத்துக் களைச் சிறிது தமிழ்ப் பயிற்சியுடையாரும் எளிதின் உணர்ந்து இன் புறும் வண்ணம் திரு. கவிராயரவர்கள் வெளியிட்ட தெளிபொருள் வசனம் தன் பெயர்க்கேற்ப நிலவுதலைக்கண்டு மிக்க இன்பம் உறுகின் றேன். யாண்டு முதிர்ச்சியால் பூதவுடற்கு நேர்ந்த தளர்ச்சியைப் பொருட்படுத்தாமல் தம் அறிவின் பயனை இன்னோரன்ன உயர் நெறியில் தமிழுலகுக்கு உபகரித்து வரும் திரு. கவிராயரவர்களின் புகழொளி, இத்தமிழ் நிலவரைப் பெங்கணும் விளக்கமுறு மென்பதொருதலை.(நிச்சயம்)கற்றுத்துறை போய பெரும் புலவர்க்கும்,சிறிது தமிழ்க்கல்வி யுடையார்க்கும், மாணாக்கர்களுக்கும் மிக உபயோகமான முறையில் இவ்வுரை அமைந்துள்ளது. அரிய பொருளை எளிய உரை



1

நடையில் அமைத்துத் தரும் திறன் கவிராயரவர்கட்குச் சிறு பருவந்தொட்டு இயல்பின் அமைந்த தொன்றாகும்.

இச்சிறந்த வெளியீட்டைத் தமிழ் நிலத்துள்ள தமிழன்பர்க ளெல்லாரும் வரவேற்றுப் படித்து இன்புறுதலே இதனாக்கி யோர்க்கு

அவர்கள் செய்யுங் கைம்மாறுகும். இது நாளடைவில் தமிழ் மாணுக்கர்களின் சிறந்த பயிற்சிப் பாட புத்தகமாக அமைந்து விளங் குமென்று நம்புகின்றேன். நம் தமிழ் நாட்டுப் பல்கலைக் கழகத்தார் இவ்வெளியீட்டின் பயனைக் கல்லூரி மாணவர்கள் துய்க்க வேண்டு வன செய்வாராயின் செய்தவராவர். அவர் உளங்கொளத் திருவருள் துணை செய்க.

இப்பேருதவிப் பெருந் தகையாகிய திரு. கவிராயரவர்கள் முது மையில் இளமைபெற்று அறிவுச் செல்வத்தை இன்னும் பல்லாற்றானும் உலகுக்குதவிப் பல்லாண்டு வாழ முன்னிற்பதாக.

இறைவன் திருவருள்



# திருவள்ளுவ நாயனார் சரித்திரம்.

---

இச்சரித்திரம் ஆதாரமில்லாமல் முன்னுக்குப்பின் விரோதமாகவும் யுத்திக்குப் பொருத்தமில்லாமல் ஒருவர்க்கொருவர் கூட்டியுங் குறைத்தும் குளறுபடையாகவும் நாடோடிகள் சொல்லுஞ் சொல்லை நம்பிச் சிற்சிலர் அச்சிற் பதிப்பித்த புத்தகங்களில் வெளிவந்துலாவக் கண்ட கற்றறிந்த பெரியாரொருவரும் ஒரு சிறிதும் நம்புவதில்லை. இதனாலன்றோ அச்சாபீசுவந்த ஆரம்பத்தில் திருத்தணிகை ஸ்ரீவிசாகப்பெருமாளையரவர்களும், யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீ ஆறுமுக நாவல ரவர்களும் அச்சிட்ட திருக்குறளுரைப் புத்தகத்தில் திருவள்ளுவ நாயனார் சரித்திரத்தை யெழுதிப் பதிப்பித்தார்களில்லை? இச்சரித்திரத்தை நூலாராய்ச்சி செய்து தக்க ஆதாரத்துடன் தருக்க சுத்தியாகச் சொல்லுவாரொருவர் வாயில் நின்றுங் கேட்கவேண்டுமென்றெண்ணிச் சென்னைச்

சருவகலாசாலைச் சங்கத் தலைவர்கள் விரும்பியபடி 1929ம் வருடம் மார்ச்சுமாதம் 1 1வ பச்சையப்பன் கலாசாலையில், மதுரைக்கடுத்த பசுமலை வாசியாயிருக்கும் உயர்தர நீதிமன்ற வாதி ஸ்ரீ ச. சோமசுந்தர பாரதியாரவர்கள் நன்னூல்களா இய பன்னூல்களிற் பழகித் தெரிந்தெடுத்துத் தம்மனத்தில் சேமித்து வைத்திருந்த நாயனார் சரித்திரத்தை அதி பிரபலநூற் பிரமாணங்கள் காட்டி"சொல்லுக சொல்லைப் பிறிதோர் சொலச்சொல்லை, வெல்லுஞ் சொல் லின்மை யறிந்து" என்னுந் திருக்குறட் கிணங்க "வேட்ப மொழிவதாஞ்சொல்" என்றவாறு பிரசங்கித்தனர். அப்பிரசங்கங் கேட்ட சபைத்தலைவரிற் சிறந்தார் பலருள்ளுஞ் சிறந்த மகா மகோ பாத்தியாயர் பிரமஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்கள் முதலியோரனை வரும் இன்புற்று உடன்பாடு கூறி, "இதுதான் திருவள்ளுவர் உண்மைச் சரித்திர"மென்று சந்தோஷித்து ஆமோதித்தார்கள்.

பிறகு மதுரைத் தமிழ்ச் சங்க காரியதரிசியாகிய, ஆங்கிலமுந் தமிழும் அமைவரக் கற்ற உயர்தர நீதிமன்றவாதி, பிரமஸ்ரீ ஸ்ரீநிவா சையங்காரவர்கள் மகா மகோபாத்தியாயர் பிரமஸ்ரீ

உ. வே. சாமிநா தையரவர்களுடன் கலந்து பேசித்"தாமின் புறுவ துலகின் புறக்கண்டு, தாமுறுவர் கற்றறிந் தார்" என்ற திருக்குறளுக்கொப்ப இவ்வுண்மைச்



சரித்திரத்தைத் தமிழுலகங் கண்டறியு மாறு புத்தக வாயிலாக மதுரைத் தமிழ்ச்சங்கம் 53-வது பிரசுரமாக வெளிப்படுத்தினர்.

அப்புத்தகத்தை நான் வாங்கிப் படிக்குந்தோறும் "ஆயுந் தொறுந் தொறுமின்பந்தருங்கல்வி" என்றதற்கிலக்கியமாக ஒவ்வொரு விஷயமும் எல்லையில்லா இன்பத்தைச் செய்ததோடு இலைமறைகாய் போலிருந்த நாயனாரது உண்மைச் சரித்திரத்தைக் கண்டெடுத்து நம்மனோர்க்குதவுமாறு பண்டைக் காலத்துத் தமிழ் நூல் பலவற்றை ஆராய்ச்சி செய்த. பாரதியாரவர்களிருதயம் "ஆய்ந்து சிவந்தது பாவாண ர் நெஞ்சம்" என்றபடி என்னபாடு பட்டதோவென் றிரங்கு தலையுஞ் செய்வித்தது. இனி, பாரதியாரவர்கள்

கண்டெடுத்துக் காட் டிய நாயனாது உண்மைச் சரித்திர முழுவதும் இங்கெழுதப் புகுந் தால் விரியுமாதலால் சுருக்கமாக எழுதிக் காட்டுகின்றேன்.

அஃதாவது:—திருவள்ளுவநாஞர் அருந்தமிழ் வேளிர் குடியிற் றிருவவதாரஞ் செய்து, *மாதாநுபங்கி யென்னுங் கற்பரசியாரை மணம் புரிந்து, இல்லற தருமத்தை வழுவாது நடத்தி, மதுரா நகரத் தில் வசித்துப் பழைய பாண்டி மன்னவருக்கு †உள்படு கருமத் தலை வராய் அக்கருமஞ் செய்வாருக்கு ஏற்பட்ட வள்ளுவரென்னும் பட்டப் பெயரைப் பெற்று, மூன்றுந் தமிழ்ச் சங்கத்தின் முற்காலத்தே அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருஷார்த்தம் நான்கையும் எல்லாச் சாதியாரும் சமயத்தாரும் ஒப்புக்கொள்ளும்படி அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பாலென்னு முப்பாலுளடக்கித் திருக்குற ளென்னு ந் தமிழ் வேதத்தைப் பாடியுதவியவள்ளற்றன்மைவாய்ந்த ஒரு பெரியாரென்பதே. இத்தகைய பெரியாராகிய நாயனாரைத் தாழ்ந்த புலைக்குடிச் சாதியிற் பிறந்தாரென்றும், ஏலேலசிங்கனென்னும் ஒருவணிகனுற் சீவித்திருந்தாரென்றும், மதுரைச்

சங்கத்தை யழித்து விட்டாரென்றும், முதிலாப்பூரிற் பிறந்தாரென்றும், இவைகளுக்கிணங்க இன்னுஞ் சில விஷயங்களும் பொருத்திக் கூறுங் கதைகள் பலவும் பொருந்தா என்பது புலப்பட "எப்பொருள் யார் யார்வாய்க் கேட்

* மாதாநுபங்கி-தாயைநிகராகக்கொண்டு நடக்கும் ஒழுங்கினையுடை யவள். †உள்படு கருமத்தலைவர்-அரசாது அரண்மனைக்குள் வேண்டிய காரியங் களைச்செய்யும் அதிகாரத்தில் முதன்மை பெற்றவர்.



பினும் அப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்னும் பொருந் ளிதுதானென்று சொல்லும்படி உலகத்தார் கூறும் பொய்யையும் மெய்யையும் சுருதியுத்தி யநுபவங்களால் அலசித் தெளிந்து பொய் யைப் புறம்போக்கி, மெய்யை யகமாக்கி, இராசநீதி தவறுதவண்ணம் உயர்தர நீதிமன்றத்தில் வாதிக்கும் உத்தியோக சிரமத்தோடு பழந் தமிழ் நூல்கள் பலவற்றிலுந் துருவி (தேடி) யெடுத்து நாயனருண் மைச் சரித்திரத்தைப் பசுமரத்தாணி யறைந்தாற்போல நிலைநிறுத்திக் காட்டிய நம் பாரதியாரவர்களுக்குத் தமிழ் மக்கள்

யாவரும் நன்றி பாராட்டுங் கடப்பாடுடையவர்களாதல் ஒருதலை. (நிச்சயம்) இச்சரித் திரம் விரிவாகத் தெரியவேண்டுவோர் மேற் குறித்த செந்தமிழ் 53வது பிரசுரப் புத்தகத்தை வாங்கிப் படித்தால் நன்றாக விளங்கும். சுபம், சுபம், சுபம்.

இங்ஙனம்,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்
மு. ரா. அருணாசலக்கவிராயர்,
திருப்பரங்குன்றம்.



# திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.



# பாயிரம்.

## முதலாம் அதிகாரம்—கடவுள் வாழ்த்து.

அஃதாவது,
நூல்செய்யும் புலவன் அந்நூல் இடையூறில்லாமல் முடிதற்குத் தான் வழிபடு கடவுளையாவது நூலுக்கு ஏற்புடைய கடவுளையாவது வாழ்த்துதல். இவவிரண்டில் இங்கே கூறிய வாழ்த்து, இந்நூல் எல்லாச் சமயத்துக்கும் ஒத்துநின்ற நீதிநூலாதலால் அதற்கேற்ப, எல்லாச் சமயத்தையும் உள்ளடக்கிநின்ற முழுமுதற்கடவுள் வாழ்த்து என்பதாம்.

க. அகர முதல எழுத்தெல்லா மாதி

*பகவன் முதற்றே யுலகு.

(1)

(இ-ள் தெளிபொருள் வசனம்) எல்லா எழுத்துக்களும் ஒலிவடிவிலும் அவ்வொலிவடிவைக்காட்டுதற்கு அடையாளமாக எழுதப்பட்ட வரிவடிவிலும், அகரத்தை முதலாக உடையன. அதுபோல எல்லா உலகங்களும் தாம் தோன்றுதற்கு இடமாகிய கடவுளைத் தமக்கு முதலாக

உடையன என்பதாம்.

இதனால் பிரவஞ்ச மெல்லாவற்றையும் தன்னிடத்திலிருந்து உண்டாக்கு கிறவன் எவனோ அவனே முதற்கடவுளென அவனது இலக்கணங் கூறப் பட்டதென்று கண்டுகொள்க. அம்முதற்கடவுள், பிரவஞ்சம் போலத் தோன்றி அழிதல் இல்லாமல் அநாதியாயுள்ளவனாவான்.

அநாதியென்பது- தனக்கு முதலாக ஒன்றில்லாதது.

உ. கற்றதனா லாய பயனென்கொல்
வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்.
(2)

(இ-ம்) மேற்கூறிய மெய்யறிவினையுடைய கடவுளி து நல்ல திருவடி
களை வணங்காரானால் நூல்களைப் படித்ததனாலே
யாதொரு பிரயோசனமு
மில்லை யென்பதாம். எனவே, படித்ததற்குப்
பிரயோசனம் கடவுளது

---

* பகமென்பது-ஐசுவரியம், வீரியம், புகழ், திரு,
ஞானம், வைராக்கியம்
இவ்வாறுக்கும் பொதுப்பெயராதலால், இந்த ஆறு

குணங்களையுமுடைய கடவுளைப் பகவன் என்றார்.

உ

# திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

திருவடிகளை வணங்கவேண்டுமென்பதும் வணங்காராஜல் கற்றிருந்துங் கல்லா தவரே யாவரென்பதுங் கண்டுகொள்க.



மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(இ-ம்) அன்பால் நினைப்பவரது இருதய
(3) விரைந்து சென்ற கடவுளது பெருமையுடைய

தாமரை மலரினிடத்து ல்லா உலகத்துக்கு
திருவடிகளைச் சேர்ந்தவர் திருப்பர் என்பதாம்.

மேலாகிய மோக்ஷ உலகத்தில் எந்தக் காலத்தும் வாழ்ந்
இவர்தாம் பிறவித்துன்ப மற்றவர்.

௪. வேண்டுதல்வேண் டாமை யிலானடி
சேர்ந்தார்க்
கியாண்டும் இடும்பை யில.
(4)

(இ-ள்) எந்தப் பொருளையும் விரும்புதலும் வெறுத்தலும் இல்லாத கடவுளது திருவடிகளைச் சேர்ந்தவருக்கு எந்தக் காலத்திலும் தம்மைப்பற்றி
வருவதும், பிறவுயிர்களைப்பற்றி வருவதும், தெய்வத்தைப்பற்றி வருவதும் ஆகிய மூவகைப் பிறவித்துன்பமும் இல்லை யென்பதாம். துன்பங்களெல்லாம் இம் மூன்றுளடங்குதலால் பிறவித்துன்பம் மூவகையென்பதாயிற்று. விருப்பு வெறுப்பு இல்லாத கடவுளடியைச்சேர்ந்தவருக்கு அவ்விரண்டு மில்லா
மையால் அக்கடவுள்போலத் தாமும் பிறவித்துன்ப
பாக நன்கு விளங்குதல் கண்டுகொள்க.

மடையாரென்பது குறிப்

தம்மைப்பற்றி வருதல்:—தாம் செய்யுஞ் செய்கையால் வரும் மூதலியவைகள். பிற உயிர்களைப்பற்றி வருதல்—மனிதர், விலங்கு,

நோய்

பறவை

முதலியவற்றால் வருங்கேடுகள். தெய்வத்தைப்பற்றி வருதல்—காற்று,

மின்னல், இடிகளால் வரும் ஆபத்துக்கள்.
மழை,

ரு. இருள்சேரிருவினையுஞ் சேரா
விறைவன்
(ஓ) பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.
(5)

(இ-ம்) இறைவனது மெய்யாகிய புகழை யெப்பொழுதுஞ் சொல்லினவரிடத்து மயக்கத்தைப் பற்றிவரும், நல்வினையுந் தீவினையுமாகிய இரண்டும் உண்டாகமாட்டா என்பதாம். மயக்கம்-மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் இல்லையென்றல். நல்வினையும் பிறவிக்குக் காரணமாதலால் தீவினை
யோடு சேர்த்து எண்ணப்பட்டது. இக்கருத்தால் "வினைப்போக மேயொருதேகங்கண்டாய்" என்று பொதுவாக ஒரு பெரியார் கூறினர். (பட்டினத்தார். பொது-5)

நல்வினை-புண்ணியம். தீவினை-பாவம்.

வினைகளெல்லாம்-இவ்விரண்டு ளவள் அடங்கும்.
மெய்யாகியபுகழ்-கடவுட்குணங்கள் முழுதும் அமைந்த புகழ்.

முதலாம் அதிகாரம்—கடவுள் வாழ்த்து. ஙி

௬. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ
ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.
(6)

(இ-ம்) மெய், வாய், கண், மூக்கு, செவி
யென்று சொல்லப்பட்ட ஐந்து இந்திரியங்களை
வழியாகக்கொண்டு செல்கின்ற ஐந்து ஆசையினையும்
அறுத்தவனாகிய கடவுளது மெய்யாகிய வழியினிடத்துத்
தவறாமல் நின்றவர்
பிறவித்துன்ப மில்லாமல் எந்தக் காலத்தும் ஒரு
தன்மையராய் வாழ்ந்திருப்பர்
என்பதாம். மெய்யாகியவழி-கடவுளாற் சொல்லப்பட்ட
சொல்லிய முறை.
வேதாகமங்களிற்

௭. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்
ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது.
(7)

(இ-ம்) எந்த விதத்தாலுந் தனக்கு
ஒப்பில்லாதவனாகிய கடவுளது
திருவடியைச் சேர்ந்தவருக்கல்லாமல் சேராதவருக்கு
மனத்தினிடத்து உண்
டாகுந் துன்பங்களைப் போக்கமுடியாது என்பதாம்.
எனவே, தாள்சேரா

தவர் மேற்கூறிய பிறவித்துன்பத்துள் அழுந்துவரென்பது கண்டுகொள்க.

துன்பங்களாவன—பிறவிக்கேதுவாகிய காமம், கோபம், மயக்கத்தால் வரும் துன்பங்கள்.

அ. அறவாழி யந்தணன் றாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்த லரிது. (8)

(இ-ம்) தருமக்கடலாகிய அழகிய குளிர்ச்சியுடைய கடவுளது திருவடி யாகிய தெப்பத்தைச் சேர்ந்தவர்க்கல்லாமல் சேராதவருக்கு மற்றைப் பொரு ளும் இன்பமுமாகிய கடலைக்கடந்து மோக்ஷமாகிய கரையைச் சேரமுடியாது என்பதாம். இதனால், அறப்பற்றும் பொருட்பற்றும் இன்பப்பற்றும் விட்ட வரே மோக்ஷமடைவரென்பது தெளிவாகக் கண்டுகொள்க. இக் கருத்துப் பற்றியே "இம்மூன்றும் விட்டதே பேரின்ப வீடு" என்று ஔவையாரருளிச் செய்தனர். தெப்பம்-கப்பல் அல்லது மரக்கலம்.

௯. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

(இ-ம்) தங்கள் தங்களுக்குரிய உணர்ச்சியைக் கொள்ளாத மெய், வாய்,
கண், மூக்கு, செவிகள் பயன்படமாட்டாவாம். அதுபோல, எட்டுக்குணங்
களையுடைய இறைவனது சீபாதங்களை வணங்காத தலையும் ஒருவனுக்கு
யாதொரு நன்மையையும் தரமாட்டாது என்பதாம். தலையாலாகிய நன்மை
இறைவன் சீபாதங்களை வணங்கல் என்பதாயிற்று. ஆதலால் "தலையே நீ



வணங்காய்" என்றார் பெரியார். (தேவாரம் திருநா. திரு அங்கமாலை.) வணங்காத தலை நன்மையைத்தரமாட்டாதென்றால் இனம்பற்றி, வாழ்த்தாத நா முதலானவும் நன்மையைத்தரமாட்டா எனக் கண்டு கொள்க. உணர்ச்சி- அறிவு. மெய்யறிவு - தொடுதலை யறிதல். வாயறிவு-சுவையறிதல். கண்ணறிவு-பொருள்களையறிதல். மூக்கறிவு-வாசனையறிதல். செவியறிவு-ஓசை யறிதல்.

எட்டுக்குணங்கள்:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கை யுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களி னீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை.

௧0. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்.
(10)

(இ-ம்) எல்லாம் வல்ல இறைவனது திருவடி யென்னும் தெப்பத்தைச் சேர்ந்தவர் காரணகாரியத் தொடர்ச்சியால் வரும் சனனமாகிய பெரிய கடலைக் கடப்பர். அவ்விதஞ் சேராதவர், கடக்கமாட்டாதவராய் அப் பெரிய கடலுக்குள்ளே யழுந்தி வருந்துவரென்பதாம். காரணகாரியத் தொடர்ச்சி யாவது, ஆசையறாமையால் அவரவர்செய்த கன்மத்துக்கேற்பச் சரீரமும் அச் சரீரத்தில் நின்று செய்யுங் கன்மத்தால் மீட்டும் வேறொரு சரீரமும் மாறி மாறி வருதல். தெப்பம்-தோணி அல்லது மரக்கலம்.

---

## உ-ஆம் அதி.—வான்சிறப்பு.

அஃதாவது மேற்கூறிய கடவுளது ஆணையால் உலகமும், அதற்குறுதி யாகிய அறம் பொருள் இன்பங்களும் நடத்தற்குக் காரணமாகிய மழையின் சிறப்புக் கூறுதல்.

௧. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.
(11)

(இ-ம்) மழை இடைவிடாமற் பெய்துநிற்க, உலகத்திலுள்ள உயிர்கள் நிலைபெற்று வருதலால் அம்மழைதான் உயிர்களுக்கு அமிழ்தமென்று ஆராயும் தன்மையுடையதென்பதாம். நிலைபெற்று வருதலாவது-பிறப்பு இடையறுமையால் எக்காலத்தும் உயிர்கள் உடம்பொடு கொணப்பட்டுவருதலாம். இடை விடாமல் நிற்றலாவது-பெய்யவேண்டியகாலத்திற் றவறுதுபெய்தல். அமிழ்த முண்டார் மரணமடையாது நிலைபெற்றிருத்நலால், உலகத்தை நிலைநிறுத்து கின்ற மழையை அமிழ்தமென்று கூறிய நுட்பங் கண்டுகொள்க. அமிழ்ந முண்டார் மரணமடையா திருத்தலை, அதனையுண்ட தேவர் அமரரென்று பெயர்பெற்றிருத் தலா லறி ந்துகொள்க. அமரர்-மரணமில்லா திருப்பவர்.

## உ-ஆம் அதி.—வான்சிறப்பு.

ரு.

உ, துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.
(12)

(இ-ம்) உண்பவர்களுக்கு நல்ல உணவுப்பொருள்களை உண்டாக்கி அப் பொருள்களை உண்பவர்களுக்குத் தானும் உணவாயிருப்பதும் மழையே என்பதாம். தானும் உணவாயிருந்தல்-தண்ணீராயுண்ணப்படுதல்.

சிறப்புடைமை பற்றி உயர்திணைப் பொருள்மேல்வைத்துச் சொன்னாராதலால் அஃறிணைப் பொருள்களுக்கு மழை பிரயோசனமாய்க் காக்கவல்லதென்று கண்டுகொள்க.

௩. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி. (13)

(இ-ம்) மழையானது, வேண்டுங்காலத்துப் பெய்யாதிருந்தால் கடலாற் சூழப்பட்ட பெரிய உலகத்தில் பசிப்பிணி நிலையாக நின்று எல்லா உயிர்களையும் வருத்துமென்பதாம். இவ்விதம் வருந்துதல் இக்காலத்தில் அதிகமாக இருக்கின்றது. இதற்குக் காரணம்-இக்காலத்தில் பாவமே அதிகமாக மலிதலாம். பாவமாவது-நீதிநூல்கள் விதித்த காரியங்களைச் செய்யாதிருத்தலும், விலக்கிய காரியங்களைச் செய்தலுமாம்.

௪. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால். (14)

(இ-ம்) எல்லாலமும் வருதற்கேதுவாகிய மேகத்தினது பயனாகிய மழைவளங் குறைந்த இடத்து உழவர்கள் ஏரினால் உழுதலைச் செய்யமாட்டார் என்பதாம். ஆகவே, உயிர்கள் உணவில்லாமல் வருந்துமென்பதும், அவ்வுணவுக்குக் காரணம் மழையென்பதுங் கண்டுகொள்க.

ரு. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை.

(15)

(இ-ம்) உலகத்தில் வாழ்கின்றவரைப் பெய்யாமலிருந்து கெடுத்து விடுவதும், அப்படிக் கெட்டவருக்குத் துணையாயிருந்து வேண்டுங் காலத்துப் பெய்து வாழச்செய்வதும் ஆகிய எல்லா வல்லமையையும் உடையது மழையே என்பதாம். இறைவன் செயலாகிய இவ்வல்லமையுடைமையால் இம் மழை போல உயிர்க் குறுதி செய்வது வேறொன்றில்லை என்பது கருத்து.

சா. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

(16)

(இ-ம்) மேகத்தினின்றும் மழைத்துளி பூமியில் விழுதலில்லாவிட்டால் பசிய புல்லினது தலையையுங் காணமுடியாதென்பதாம். ஓரறிவுடைய புல்லை



யும் காணமுடியாதென்றால் மற்றை ஆறறிவுடைய மனிதர் எப்படிப் பிழைக்க

முடியும். மனிதரை ஐயறிவுடையா ரென்பர் சிலர், முற்றக்கற்ற பேரறிவிற் சிறந்த பெரியார் ஆறறிவுடையாரென்றே சொல்வர். "மக்கள் தாமே யாறறி வுடையர்" (தொல்காப்பியம் பொருளதிகாரம் மரபியல் ௩௩)

எ. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின். (17)

(இ-ம்) தன்னிடத்திலுள்ள நீரை முகந்து திரும்பவும் தன்னிடத்தில் மேகமானது பெய்யாவிட்டால் அளவிடப்படாத கடலுந் தன்னியல்பு குறையப்பட்டு நிற்கு மென்பதாம். தன்னியல்பு குறைதலாவது, நீர்வாழுமுயிர்கள் பிறவாமையும், * முத்து முதலியவைகள் உண்டாகாமையுமாம். மழைக்கு மூலமாகிய கடலே தன் வளங்குறையுமானால் வேறெந்தப்பொருள்கள் மழையில்லாமல் வளம் நிறையும். இதனால், எல்லாவளமும் மழையினாலே தான் உண்டாகுமென்பது கருத்து.

அ. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு. (18)

(இ-ம்) தேவர்களுக்கும் இவ்வுலகத்தில் மனிதராற் செய்யப்படும் திரு
விழாவும் பூசையும் மழை பெய்யாவிட்டால் நடக்கமாட்டா என்பதாம்.

திருவிழா-விசேட பூசை. பூசை-நித்திய பூசை.

௧௯. தானந் தவமிரண்டும் தங்கா வியனுலகம்

வானம் வழங்கா தெனின். (19)

(இ-ம்) விரிந்த இவ்வுலகத்தில் மழைபெய்யாவிட்டால் தானமும் தவ
மூமாகிய இரண்டு தருமங்களும் உண்டாவன இல்லை என்பதாம். தானமா
வது-நல்வழியால் வந்த பொருளை நல்லவர்களுக்குக் கொடுத்தல் முதலியவை.

தவமாவது-மனம் பஞ்சேந்திரியங்களின் வழியே தீயகாரியத்திற் செல்லா
திருக்கும் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்குதல் முதலாயின. தானம்
இல்லறத்தார்க் குரியது. தவம்-துறவறத்தார்க் குரியது.

௨௦. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்

வானின் றமையா தொழுக்கு. (20)

* முந்து முதலியவை-முத்தும் பவளமும். பிற... முத்துக்கு வைகாசி

ஞாயிற்றுச் சோதியிற் பெய்யுமழை ? . கரு. பவ... துக்கு ஐப்பசிப் பூசத்

இலை பெய்யும் மழையே கரு. இ... வாறு பரிபா...ல் ...ள் கூறுகின்றது.

---

## ௩-ஆம் அதி.—நீத்தார்பெருமை. ௨

(இ-ம்) எப்படிப்பட்ட மேன்மையுடையவருக்கும் நீரில்லாமல் உலக இன்பம் உண்டாகமாட்டாது. அதுபோல, அந்நீரை எவ்விடத்தும் எந்தக்காலத்தும் இடையறாமல் ஒழுகச்செய்யும் ஒழுக்கும் மேகமில்லாமல் அமையாதென்பதாம். இக்கருத்து நோக்கியே ' 'மழையின்றி மாநிலத்தார்க்கில்லை'' என்றார் பெரியார். (சங்கமருவிய நூற்செய்யுள்) ஒழுக்கு-ஒழுகுதற்செயல்.

---

## ௩-ம்
## அதி.—நீத்தார் பெருமை.

அஃதாவது-மேற்கூறிய அறமுதலிய பொருள்களை உலகத்துக்கு உள்ளவாறு தெரிவிப்பவர் முற்றத்துறந்த முனிவராகிய நீத்தாராதலால் அவரது பெருமையைக்

கூறுதல்.

க. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு. (21)

(இ-ம்) தங்கள் தங்களுக்குரிய வருண ஆச்சிரமங்களின் ஒழுக்கத்தில் தவறாது நின்று, நித்தியமின்னது அநித்தியமின்னதென் றறிந்து யானென்னும் அகப்பற்றையும், எனதென்னும் புறப்பற்றையும் விட்ட முனிவரது பெருமையை, சிறந்த பொருள்கள் பலவற்றுள்ளும் சிறந்ததென்று எல்லா மதத்தினும் அந்தந்த மதநூல்களை உணர்ந்த பெரியோர் துணிவு விரும்புமென்பதாம். வருணம் - குலம். ஆச்சிரமம்-நிலை. நித்தியம்-என்றுமுள்ளது, அநித்தியம்-தோன்றியழிவது.

உ. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று. (22)

(இ-ம்) மேற்கூறிய இருவகைப்பற்றையும் விட்ட முனிவரது பெருமையை அளவுபடுத்திச் சொல்லப்புகுந்தால், இந்த

உலகத்தில் பிறந்திறந்த
வரை யெண்ணிக்கொண்டாற்போலும் என்பதாம்.
பிறந்திறந்தவரைக் கணக்
கிட்டுச்சொல்ல முடியாமைபோலவே முனிவரது
பெருமையையும் கணக்கிட்
டுச் சொல்ல முடியாதென்பஃது கருத்து.

௩. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை பிறங்கிற் றுலகு.

(23)

(இ-ம்) பிறவித்துன்பப் பகுப்பையும் மோக்ஷ
இன்பப்பகுப்பையும்
ஆராய்ந்தறிந்து, அப்பிறவித் துன்பத்தைக் கெடுத்தற்குக்
கருவியாக இப்பிறப் பினிடத்துத் துறவறத்தை
க்கைக்கொண்ட முனிவரது பெருமையே உலகத்தி
லுயர்ந்த தென்பதாம். முனிவரது பெருமையே
உயர்ந்த தென்றதனல்
மற்றைப் பெருமையெல்லாம் தாழ்ந்ததென்பது
சொல்லாமலே விளங்கும்.

அ திருக்குறள் மூலமும், தெளிபொருள்

வசனமும்.

௪. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங்
காப்பான்

வரனென்னும் வைப்பிற்கோர் வித்து. (24)

(இ-ம்) மெய், வாய், கண், மூக்கு, செவியென்கிற ஐந்து யானைகளையும் அவைகளுக்குரிய விஷயங்களிற் செல்லவொட்டாமல் அறிவென்கிற அங்குசத்தால் தடுப்பவன், மேலாகிய மோக்ஷ நிலத்திலே தோன்றுதற்கு ஒப்பற்ற விதையாவன் என்பதாம். எனவே, இவன் பிறவிப்பிணியை ஒழித்துவிடுவ னென்பதாயிற்று. அங்குசம் - யானையை அடக்குந்தோட்டி, விஷயங்கள்- பரிசம், இரசம், உருவம், வாசனை, சத்தம் என்னும் ஐந்து.

ரு. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமான்
இந்திரனே சாலுங் கரி. (25)

(இ-ம்) ஐம்புலன்களாகிய விஷயங்களிற் செல்லுகின்ற ஐந்து ஆசை யையும் அடக்கிய முனிவரது வலிமைக்கு, விரிந்த விண்ணுலகத்தாருக்கு அரசனாகிய இந்திரனே போதுமான சாட்சியாவன் என்பதாம். எப்படியென்றால், மேற்கூறிய ஐந்து ஆசைகளையும் அடக்கமாட்டாமல் கௌதம முனிவரது பத்தினியாகிய அகலிகையைத் தன் வலிமையினாலே சென்று பலவந்தமாய் வியபிசாரஞ்செய்து அம்முனிவராலே சாபமெய்தியதனாலென்க. இச் சரித்திரத்தைப் பல

புராணங்களிற்காணலாம். முனிவராற் சாபம்பெற்றோர் பல ரிருக்க இந்திரனைச் சாக்ஷியாகக் கூறியதென்னவென்றால், அவனிடத்திற் சாபமும் அநுக்கிரகமும் ஒன்றாயிருந்தல்பற்றியென்க. ஒன்றாயிருத்தலாவது- சாபத்தாலாகிய ஆயிரம் இழிந்த உறுப்பும் உயர்ந்த உறுப்பாயிருத்தல். இதனை,

"விண்கு லாவிய விண்ணவ ராயினும்
பெண்கள் காமம் பிடித்தவ ருய்வரோ
புண்க ளாகிப் புரந்தரன் மெய்யெலாம்

கண்க ளானது காமத்தி னலன்றே."

என்னும் செய்யுளாற் கண்டுகொள்க.
(திருக்குற்றாலப்புராணம் மந்தமாருதச் சருக்கம் 56.)
விஷயங்கள்-மேலை வசனத்திற் காண்க.

௬. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்க லாதார்.

(26)

(இ-ம்) உயர்ந்தவர் மற்றொருவராற் செய்யமுடியாத காரியங்களைச் செய்து முடிப்பர். தாழ்ந்தவர் அப்படிச் செய்து முடிக்கமாட்டாரென்பதாம். மற்றொருவராற் செய்யமுடியாத காரியம்-மெய், வாய், கண், மூக்கு, செவிக

ளின்வழியே மனத்தைப் போகவொட்டாமல் அடக்கல் முதலாயின.



எ. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. (27)

(இ-ம்) உருசியும், பிரகாசமும், பரிசமும், சத்தமும், மணமும் என்ற, தன்மாத்திரைகளாகிய ஐந்தினது கூறுபாட்டை அறிவானது அறிவினிடத்தேயே உலகம் இன்னதென்று தெரியப்பட்டதென்பதாம். ஐந்தின் கூறுபாடாவன:மேற்கூறிய ஐந்தினின்றுந் தோன்றிய தூல பூதங்கள் ஐந்தும், அவைகளின் பகுப்பாகிய ஞானேந்திரியங்கள் ஐந்தும், கன்மேந்திரியங்கள் ஐந்துமாம். இவற்றின் விரிவைச் சித்தாந்த சாத்திரம் வல்லார்வாய்க் கேட்டுத் தெரிந்துகொள்க. இங்கே எழுதப் புகுந்தால் மிகவும் விரியும். எழுதினாலும், இவவிஷயங்கள் தத்துவ உணர்ச்சி

புடையார்க்கே நன்கு விளங்கும். அவரே நீத்தாரெனப்படுவர்.

அ. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும். (28)

(இ-ம்) நிறைந்த சொல்லையுடைய துறந்தவரது பெருமையை, இந்நில உலகத்தினிடத்து அவர் ஆணையாகச் சொல்லிய மந்திரங்களே பிரத்தியட்ச மாகக் காட்டுமென்பதாம். மந்திரங்கள் சனத்தாலறிவித்தல். நிறைந்த சொல் காட்டுதலாவது - அதனதன் பிரயோ[illegible] - சோர்வுபடாத சொல். அஃதாவது குணத்தாலாவது, கோபத்தாலாவது கூறிய சொற்கள் தவறாதுபலித்துவிடு[illegible] லாம். இதுபற்றியே "சொற்சோர்வு படேல்" என்றார் ஔவையாரும். (கொன்றைவேந்தன்) இதை இக் காலத்தவர் ஆத்திசூடி என்று அச்சி[illegible] டிருக்கின்றனர்.

குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

(29)

ஸிய
(இ-ள்) மெய்யுணர்ச்சியும், துறவும், ஒன்றினும் ஆசையில்லாமையு முதலிய நற்குணங்களாகிய மலையின் உச்சியிலேறித் தடுமாறாமல் நின்ற முனிவரது கோபம் நிற்குமளவு கணப்பொழுதாயினும், அக்கோபம் செய்யப்பட்டாரால் அதைத் தடுக்க முடியாதென்பதாம். இதனால், பெரியோருக்குக் கோபம் வரும்படி நடந்துகொள்ளலாகாதென்பது கருத்து. அப்பெரியாரது கோபம் கணப்பொழுதுதான் நிற்குமென்பதை (மூதுரை) "நீர்கிழிய வெய்த வடுப்போல மாறுமே, சீரொழுகு சான்றோர் சினம்" என்னும் ஔவையார் திருவாக்காலும் உணர்க. உச்சி-முடிவிடம். தடுமாறுதல்-மேற்கூறிய மூன்றினும் வழுவுதல்.

திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௩௦ . அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

(30) (இ-ம்) எல்லா உயிர்களிடத்தும் செவ்வையாகிய குளிர்ந்த அன்பு வைத்து நடப்பதால் அந்தணரென்று சொல்லப்படுவோர் துறவறத்தில் நிற்ப வரேயாவர் என்பதாம். அந்தணர்-அழகிய குளிர்ந்த குணமுடைய ரெனவே அக்குணமில்லாதவர் அந்தணராகாரெனத் தெளிவாகத் தெரிந்துகொள்க. இவரது இருதயத்திலே கடவுள் சாந்நித்தியராயிருப்பர். ஆதலால் ''அரியானை அந்தணர்தஞ் சிந்தையானை'' என்றார் பெரியார். (தேவாரம்)

---

# 4-ஆம்
## அதி—அறன்வலியுறுத்தல்.

அஃதாவது, அம் முனிவரால் கூறப்பட்ட அறமுதலிய மூன்றனுள் மற்றைப் பொருளும் இன்பமும்போல் அல்லாமல் அறனானது இம்மை, மறுமை, வீடு என்னும் மூன்றனையுங் கொடுத்தலால், அவ

விரண்டைப்பார்க்கி னும் வலிமையுடையதெனக் கூறுதல். இம்மை-இம்மைப்பயன். மறுமை-மறுமைப்பயன்.

௩. சிறப்பீனுஞ் செல்வமும் மீனும் அறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

(31)

(இ-ள்) மக்களுயிர்க்குத் தருமமானது, மோக்ஷத்தையுங் கொடுக்கும், இந்திரன் வாழ்க்கை முதலாகிய செல்வத்தையுங் கொடுக்கும். ஆதலால், அத்தருமத்தின் மேம்பட்ட ஆக்கம் வேறு எது இருக்கின்றது? ஒன்றுமில்லை என்பதாம். ஆதலால், இச் சிறப்பு நோக்கி னூலாரம்பத்திலே "அறஞ்செய விரும்பு" என்றார் ஒளவையாரும். (கொன்றைவேந்தன்) சிறப்பு-மோக்ஷம். இஃது ஆகுபெயர்ப் பொருள். ஆக்கம்-உயர்வு.

௨. அறத்தினூஉங் கர்க்கமு மில்லை யதனை மறத்தலி னூங்கில்லை கேடு.

(32)

(இ-ம்) ஒருவனுக்குத் தருமஞ் செய்வதைப் பார்க்கினும் மேற்பட்ட நன்மையும், அத் தருமத்தைச் செய்யாமல் மறப்பதைப் பார்க்கினும் மேற்பட்ட கேடும் இல்லை என்பதாம். இக் கருத்து நோக்கியே "அறமே மறங் கண் முழுதழிக்கும், அறமே கடவுள் உலகேற்றும்" என்றார் ஆசிரியர் சிவஞான முனிவர். (காஞ்சிப்புராணம், புராண வரலாறு

செ-14.)

சாகும்

அதி.—அறன்வலியுறுத்தல். கக

ந. ஒல்லும் வகையா னறவினை யோவாதே

செல்லும்வா யெல்லாம் செயல். (33)

(இ-ம்) தரு மமாகிய செய்கையை அவரவர்களுக்குக் கூடியமட்டும் நடக்கும் இடத்தால் எல்லாம் இடைவிடாமல் ஒவ்வொருவரும் செய்யவேண்டும் என்பதாம். கூடியமட்டும் என்றது இல்லறம் பொருளளவிற்குத் தக்கபடியும், துறவறம் சரீர பலத்துக்குத் தக்கபடியும் செய்தல்.

நடக்கும் இடமா
வன:—மனம் வாக்குக் காயங்கள். இம் மூன்றாலும் செய்தலாவன:—மனத்
தால் நல்ல நினைப்பும், வாக்கால் நல்ல சொல்லும், காயத்தால் நல்ல செயலும
செய்தல். காயம்-சரீரம். கூடியமட்டுமாவது அறஞ்செய்யவேண்டு மென்றது
அதனது அருமைபற்றியென் க.

ச. மனத்துக்கண் மாசில ளாதல் லனைத்தறன்
ஆகுல நீர பிற.

(34)

(இ-ம்) மேற் சொல்லியபடி தருமஞ்செய்பவன் தன் மனத்தினிடத்
துக் குற்றமில்லாதவனாக இருக்கவேண்டும். அவ்வளவே தருமமாவது: அக்
குற்றமுள்ளவன் சொல்லும் செயலுமாகிய தருமங்கள் தன்னையெல்லாரும்
புகழும்படி செய்யும் ஆரவார குணமுடையன அல்லாமல் தருமமென்று சொல்
லப்படா என்பதாம். இதனால், மனம்

பரிசுத்தப்படாதவன் செய்யுந் தருமங்
களாற் பயனில்லை யென்பது கருத்து. குற்றம்-தீயவை
சிந்தித்தல்.

ரு. அழுக்கா றவாவெகுளி யின்னுச்சொல்
நான்கும்

இழுக்கா இயன்ற தறம்.
(35)

(இ-ம்) பிறருக்கு வரும் செல்வமுதலிய
பெருக்கத்தைக் கண்டு பொறா
மையடைதலும், இந்திரியங்களின் வழியே செல்லுகின்ற
ஆசையும், அவ்வா
சை காரணமாகப் பிறர்மேலுண்டாகும் கோபமும்,
அக்கோபம் பற்றி வரும்
கொடிய சொல்லுமாகிய இந் நான்கினையும் நீக்கி
இடையறாது செய்யப்படுஞ்
செயலே தருமமென்று சொல்லப்படுவது என்பதாம்.
எனவே, இந் நான்
கொடு கலந்து செய்யுஞ் செயல் தருமமாகாதென்பது
கண்டுகொள்க. இந்தி
ரியம்-மெய், வாய், கண், மூக்கு, செவி.

சு. அன்றறிவா மென்னா தறஞ்செய்க மற்றது
பொன்றுங்காற் பொன்றாத் துணை.

(இ-ம்) நாம் இப்பொழுது இளமைப் பருவத்தையுடையா யிருக்கின்
றோம். முதுமைப் பருவம் வந்து மாணமடையும்
காலத்து வேண்டிய தரு

## ௬௨ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

மத்தைச் செய்வோமென்று நினையாமல் ஒவ்வொருவரும் தினந்தோறும் இயன்றமட்டும் அத்தருமத்தைச் செய்யவேண்டும். அப்படிச் செய்வது, இந்த உடம்பைவிட்டு உயிர் பிரியுங் காலத்து அவ்வுயிர்க்கு அழிவில்லாத துணை யாகும் என்பதாம். அஃதாவது, இந்த உடலோடிருந்து செய்த தருமம் மற்றோருடலெடுக்கும்போது தன் கூடவே வந்திருந்து மேலும்மேலும் விருத்தியடைந்து நல்வழிக் கேதுவாகு மென்பதாம். இந்த உடல் இவ்வளவு காலமிருக்குமென் றறியக்கூடாமையால் 'அன்றறிவா மென்னு' தென்று நாய னார் அருளிச்செய்தனர்.

ஏ. அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

(37)

(இ-ம்) தருமத்தின் பயன் இதுவென்று சாத்திரப் பிரமாணங்களால் நாம் சொல்லவேண்டுவதில்லை. பல்லக்குச் சுமப்பவனிடத்திலும், அதிலேறிச் செல்பவனிடத்திலும், பிரத்தியட்சப் பிரமாணத்தாலே அறிந்து கொள்ளலா மென்பதாம். எப்படியென்றால், பல்லக்குச் சுமப்பவனும் அதிலேறிச் செல்பவனும் மனிதனே யானாலும் ஏறிச் செல்பவன் புண்ணியம் செய்தவனென்றும் சுமப்பவன் அப் புண்ணியஞ் செய்யாதவனென்றும் அறிதலாமென்க.

அ.

வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(38)

(இ-ம்) ஒருவன் தருமஞ்செய்யாத நாளென்று எண்ணுதற் கிடமில்லாமல் தினந்தோறும் செய்து வருவானானால், அச் செயலானது அவன் இனி மேல்

வேறொரு சரீரத்தை யெடுக்கு நாள் வரும்வழியை யடைத்துவிடும் கல் லாகும் என்பதாம். எனவே, இவன் பிறவிப்பிணியை யொழித்துவிடுவனென் பதாயிற்று. வீழ்நாள் படாமை வேண்டுமென்னுங் கருத்தால் "பேசாதநாளெல் லாம் பிறவாநாளே" என்றார் பிறரும். (தேவாரம், பெரும்பற்றப் புலியூர்ப் பதிகம் 1.)

௩௯. அறத்தான் வருவதே இன்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில.
(39)

(இ-ம்) இல்லறத்தோடு பொருந்தி வருவதே இன்பமாகும். அதனோடு பொருந்தாமல் வருவனவெல்லாம் அப்பொழுது இன்பம் போலக் காணப்பட்டாலும் துன்பத்தி னிடத்தன வாகும். அதுவுமல்லாமல் புகழும் உடையன வல்ல வென்பதாம். இல்லறத்தோடு பொருந்தி வருமின்பம்-தன் மனைவியோ டிருந்து அனுபவித்தலால் வருஞ்சுகம், அதனோடு பொருந்தாமல் வருவன;

## ௫-ஆம் அதி.—இல்வாழ்க்கை.

௪௰

பிறன் மனைவியை விரும்புதல் முதலாகிய பாவங்கள். இதனால் அறத்தொடு கூடிய செயல்களுக்கே இன்பமும் புகழு முண்டாமென்பது பெறப்பட்டது.

> ௪௦. செயற்பால தோரும் அறனே யொருவற்
> குயற்பால தோரும் பழி.

(40)

(இ-ம்) ஒருவனுக்குச் செய்யத்தக்கது தருமமாகிய நல்வினையேயாம். நீங்கத்தக்கது பாவமாகிய தீவினையேயாம் என்பதாம். ஆகவே, நூல்கள்விதித் தவற்றைச் செய்தல் தருமமென்பதும் விலக்கியவற்றை நீங்குதல் பாவமென்பதும் கண்டுகொள்க.

பாயிரம் முற்றிற்று.

# இல்லறவியல்.

## 5-ஆம் அதி—இல்வாழ்க்கை.

அஃதாவது இல்லறத்துக்குரிய மனைவியோடு கூடி வாழ்தலின் சிறப்பு.

> க. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கும்
> நல்லாற்றி னின்ற துணை.

(41)

(இ-ம்) இல்லறத்தோடு கூடி வாழ்பவனென்று சொல்லப்படுவான், துறவறத்தின் தன்மையுடைய பிரமசாரியும், வானப்பிரத்தனும், சந்நியாசியு மாகிய மூவருக்கும் அவரவர்களுடைய நல்லொழுக்க வழிகளில் நிலைபெற்று நின்ற துணையாவா னென்பதாம். பிரமசாரி குருவினிடத்தே விவாகஞ்செய்யும் வரை நூல்களை ஓதி விரதங் காக்கிறவன். வானப்பிரத்தன், காட்டினிடத்தே சென்று தன் மனைவி வழிபாடு செய்யத் தவஞ்செய்கிறவன். சந்நியாசி, எல்லாப் பற்றுகளையும், சுகத்தையும் விட்டவன். துணையாவதெப்படி யென்றால், மேற்சொல்லப்பட்ட மூவருக்கும் பசி, நோய், குளிர் முதலியவற்றால் இடையூறு வாராமல் உணவு, ஆடை, மருந்து முதலியவை கொடுத்து அவரவர் ஒழுக்கங்கள் தவறாமல் நடக்கச் செய்தல்.

உ. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கும்
இறந்தார்க்கும்
இல்வாழ்வா னென்பான் துணை.

(42)

(இ-ம்) பொருளிருந்தும் அதைவிட்டு நீங்கிய முனிவருக்கும், பொருளில்லாமல் தரித்திரப்பட்டவருக்கும், ஒருவருமில்லாமல் வந்து மரணமடைந்

தவருக்கும் உணவு முதலிய பொருள்கள் கொடுத்தலாலும், நீர்க்கடன்,முதலா
னவைகள் செய்து நல்ல கதியை யடைவித்தலாலும் இல்வாழ்வானென்று
சொல்லப்படுவோனே துணையாவான் என்பதாம்.

௩. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்பல் தலை. (43)

(இ-ம்) பிதிரரும், தேவரும், விருந்தினரும், சுற்றத்தாரும், தானு
மென்று சொல்லப்பட்ட ஐந்திடத்துஞ் செய்யப்படுகின்ற தரும வழியை வழு
வாமற் செய்தல் இல்வாழ்வானுக்குச் சிறப்புடைய தரும மென்பதாம். ஆதலால்,இல்வாழ்வான் தன்னுடைய வரவுப் பொருளை ஐந்துபங்கிட்டுத் தானொரு பங்கை யநுபவிக்க வேண்டுமென்பதாயிற்று. ஐந்து பங்கும் அரசனுக்குக்

தொடக்கவேண்டிய ஒரு பங்கு போக மீந்தவைகளே.
இந்த முறை பற்றியே
அரசன் ஆறிலொரு கடமை கொண்டு
உலகத்தையாளுதல் கண்டுகொள்க,
"ஆறிலொன்று கொற்றவர் கடமைகொள்ள" என்றார்
பிறரும். (திருவிளையாடற் புராணம், நாட்டுப்படலம் 28)
பிதிராவார்-படைப்புக்காலத்துப் பிரம
னாற் படைக்கப்பட்ட கடவுட் சாதியார். அவரிருப்பிடந்
தென்றிசை யாதலால்
பிதிரரைத் தென்புலத்தாரென்றது கண்டுகொள்க.
மேற்கூறிய ஐந்தினுள் [illegible] செய்வதும்
தருமமோவென்றால், தானிருந்தே மற்றைத் தருமங்கள்
செய்ய வேண்டுதலால் அதுவும் தருமமா மென்க.

௪.

பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

(44)
(இ-ம்) பாவத்துக்குப் பயப்பட்டு நல்வழியிற்
சம்பாதித்த பொருளை முன்னே மூன்று வசனங்களிற்
சொல்லப்பட்ட பதினொருவருள் தன்னை யொழித்துப்
பத்துப் பேர்களுக்கும் பங்கிட்டுக் கொடுத்துத் தான்
உண்ணுதலை யொருவன் வாழ்க்கையுடையதானால் அவனது

சந்ததி எந்தக்காலத்தும் குறைதலில்லை யென்பதாம். எனவே, பாவத்தால் வந்த பொருளை யொருவன் பங்கிட்டுக் கொடுத்து உண்டானாயினும் தருமமானது பொருளுடையானையும் பாவமானது தன்னையுமடையப் புத்திரப்பே றில்லாமற் போய்விடுமென்பதாயிற்று.

ரு. அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
பண்பும் பயனு மது.
(45)

(இ-ம்) ஒருவனுடைய இல்வாழ்க்கையானது தன் மனையாளிடத்துச் செய்யத்தகு மன்பினையும், பிறர்க்குப் பங்கிட்டுக்கொடுத்தலாகிய தருமத்தையு



முடையதானால் அவ்வுடைமை, அவ் இல்வாழ்க்கைக்குக் குணமும் பிரயோச னமுமாம் என்பதாம். மனையாளுக்குங் கணவனுக்கும் மனவொற்றுமையில்லாவிட்டால் இல்லறம் நடவாதாகையால் அன்புடைமையானது குணமும், அற னுடைமையானது பிரயோசனமும் என்று கண்டுகொள்க.

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

(46)

(இ-ம்) ஒருவன் இல்லற வாழ்க்கையைத் தரும
வானுகில் மனைவி மக்களை விட்டு வனத்திலே சென்று

வழியிலே செலுத்து யும் பயன்
தவஞ்செய்து அடை மென்பது

எது இருக்கிறதென்பதாம்.. இங்கே எல்லாப் பயனும் அடையலா
கருத்து. தரும வழியாவது-பழி பாவத்துக்குப் பயந்து நல்வழி

யால் சம்பாதித்த பொருளை முன் சொன்னபடி
அன்புடைமையுமாமென்பதாம்.

பங்கிட்டுக் கொடுத்தலும்

(எ)

இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

(47)

(இ-ம்) இல்லற வாழ்க்கையிலே நின்று அதற்குரிய இயற்கையோடு கூடி வாழ்பவன் ஐம்புல இன்பங்களை விட்டுத் தவஞ்செய்ய முயற்சிசெய்வா ரெல்லாருள்ளும் உயர்ந்தவனவா னென்பதாம். இயற்கை-இதன் முந்திய விஷ ணங்களிற் கூறிய செயல்கள். ஐம்புல இன்பம்-மாதரிடத்து மெய், வாய், கண், மூக்கு, செவிகளா லனுபவிக்குமின்பம்.

அ.

ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

(48)

(இ-ம்) தவஞ்செய்கின்ற முனிவரையும், பசி, நோய் முதலிய துன்பத்தை நீக்கித் தங்கள் தங்கள் வழியிலே செலுத்தித் தானுந் தன்னுடைய தருமத்தினின்றுந்

தவறாத ஒருவனுடைய இல்வாழ்க்கையானது அத் தவஞ் செய்யும் முனிவரது நிலைமையைப் பார்க்கினும் பொறுத்தலுடைய தென்பதாம். எப்படியென்றால், தவஞ்செய்யும் முனிவர் பொறுக்கமாட்டாத பசி, நோய் முதலிய துன்பத்தை இல்வாழ்வான் நீக்குதலாலென்க.

கூ. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று. (49)

(இ-ம்) இல்லறந் துறவறம் என்னு மிரண்டறங்களுக்குள்ளே நூல்களால் அறமென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே. மற்

க்கூ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்

றைத் துறவறமோ என்றால், பிறரால் நிந்திக்கப்படுங் கூடாவொழுக்க மில்லாதிருந்தால் அதுவும் நன்மையுடைய தென்பதாம். இதனால், ஒழுக்க மில்லாமல் தவவேடத்தாற் பயனில்லை என்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "வேடநெறி நில்லார் வேடம்பூண் டென் பயன்" என்று திருமந் திரங் கூறியது. (இராசதோஷம் 3-ம் பாட்டு) கூடாவொழுக்கம் - பிறமாதர்

போகம்.

௫0. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப் படும். (50)

(இ-ம்) இல்லறத்தோடு கூடிவாழு முறைப்படி இவ்வுலகத்திலே வாழ் பவன் இவ்வுலகத்திலிருப்பவனானாலும் விண்ணுலகத்திலிருக்கும் தேவருள் ஒருவனாக வைத்து மதிக்கப்படுவான் என்பதாம். இதனால், இல்லறத்தை வழுவாது நடத்துகிறவன், பின்னே தேவனாய்ப் பிறப்பானென்பது நிச்சயம். வாழு முறையாவது-மூன்றாவது வசனத்திற் கூறிய தென்புலத்தார் முதலிய ஐந்திடத்துஞ் செய்வன செய்தல்.

---

## 6-ஆம் அதி—வாழ்க்கைத் துணைநலம்.

அஃதாவது மேற்கூறிய இல்வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது நன்மை கூறுதல்.

க. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்

வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.
(51)

(இ-ம்) இல்லறத்திற்குத் தக்க நற்குண நற்செய்கையுடையவளாகித் தன்னை விவாகஞ்செய்து கைக்கொண்ட கணவனது வரவுக்குத் தக்க வாழ்க்கையுடையவள், அவனில்லறத்துக்குத் துணையாவாள் என்பதாம். நற்குணங்களாவன:—துறந்தவரை யுபசரித்தலும், வறியவரிடத்தே அருளுடைமையு முதலான்வையாம்.
நற்செய்கைகளாவன:—வாழ்க்கைக்கு வேண்டும் பொருள்களறிந்து அந்தந்தக் காலத்தில் பின்னுதவியாமாறு காப்பாற்றி வைத்தலும் உணவு சமைத்தல் வல்லமையு முதலியவையாம். வரவுக்குத்தக்க
வாழ்க்கையாவது:—கிடைத்த பொருளுக்குத் தக்கபடி செல்வு செய்தலாம். "வருவாய்க் கியைய வாழ்தலு மறுவில் கற்பின் மனையாள்போல்" என்றார் பிறரும். (விநாயக புராணம் அரசியற்படலம் 20)

## ௬-ஆம் அதி.—வாழ்க்கைத் துணைநலம்.

கள்

௨. மனைமாட் சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்.

(52). (இ-ம்) இல்லறத்துக்குத் தகுந்த நற்குண நற்செய்கைகள் மனையா ளிடத்து இல்லையானால் அவவில்வாழ்க்கை வேறு வகையால் எவ்வளவு பெருமையுடையதாயினும் அப்பெருமை பயன் படுவதில்லை என்பதாம்.

ந. இல்லதெ னில்லவள் மாண்பானு லுள்ளதெ
னில்லவள் மாணுக் கடை.

(53)

(இ-ம்) ஒருவனுக்கு வாய்த்த மனையாள் நற்குண நற்செய்கையுடையவ ளாயிருந்தால் அவனுக்கில்லாத பொரு ளொன்றுமில்லை. அப்படிப்பட்ட குணம் செய்கை யில்லாதவளாயிருந்த இடத்து எல்லாப் பொருள்களு மிருந் தாலும் ஒன்றுமில்லாததேயாம் என்பதாம். எப்படி யென்றால், நற்குண நற்செய்கையோடு கூடிய மனைவியையுடையவன் வறியவனேயானாலும் மனத் திருப்தியோடிருப்பன். அவவிரண்டு மில்லாத மனைவியை யுடையவன். செல்வமிருந்தாலும் அது கொண்டு இல்லறஞ் செய்யமுடியாதாகையால் மனத்திருப்தி இல்லாமல் வருத்தமடைவனென்பதாம். எனவே, இல்வாழ்க்கைக்கு வேண்டுவது மனையாளின் நற்குண நற்செய்கைகளே என்பதாயிற்று.

ச. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். (54)

(இ-ம்) கற்பென்னுங் கலங்கா நிலைமையுண்டாயிருக்கப்பெற்ற மனையாளைப் பார்க்கினும் ஒருவன் பெறுதற்குரிய பொருள்களுள் உயர்வாகிய பொருள்களெவை யிருக்கின்றன. ஒன்றுமில்லை என்பதாம்.

ரு. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை. (55)

(இ-ம்) பிறதெய்வத்தை வணங்காதவளாகித் தன் தெய்வமாகிய கணவனை, நித்திரைவிட் டெழுந்து வணங்குபவள் பெய்யென்று சொல்ல மழை பெய்யும் என்பதாம். இத்திருக்குறள் "காதன் மங்கையர் கற்பினுக் கோர் மழை" என்னும் விவேகசிந்தாமணியிற் கூறிய செய்யுளுக்கு ஆதாரமா மென்க. இஃதன்றியும் கடைச்சங்கப் புலவருள் ஒருவராகிய சீத்தலைச் சாத்தனார் "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்ற அப் பொய்யில் புலவன் பொருளுரை தேராய்" என்று புகழ்ந்து பாராட்டிய

அருமை பெருமையும் உடையது.

௭
க்.அ: திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

இனி, தெய்வந் தொழாளென்றதன் பொருளாவது-சாதாரண காலங்களி லல்லாமல் திருவிழா முதலிய சன நெருக்கமுற்ற காலங்களிற் சென்று தொழாள் என்றே பொருள் கொள்ள வேண்டும் என்பதாம். இதற்குச் சாட் சியாக, காவிரி நதியிலே ஸ்நானஞ் செய்து தனியேசென்ற பார்ப்பனியாகிய மருதி யென்பவளைக் கந்தனென்னும் அரசனுடைய புத்திரன் கண்டு ஆசைப் பட்டு அழைத்தலும், அவள் மனங்கலங்கி இப்பாதகன் இச்சிக்கும்படியாகக் குற்றஞ்செய்தேன். இனி, என் கணவனுக்குப் பணிவிடை செய்யும் யோக்கியதை யில்லா மற் போய்விட்டேனென்று வருந்தி அவ்விடத்திலுள்ள * சதுக்கத்தில் நிற்கும் பூதத்தினிடத்துப்போய், நடந்த விஷயங்களைச் சொல்லி, என் குற்றத்துக்கேற்ற தண்டனைசெய் யென்று நின்றனள். அது கேட்டு, அப்பூதம் இக்குற்றம் உன்னுடைய தல்ல. உன்னை இச்சித்தவனது குற்றமாம். இச் சிறுகுற்றத்தை அவன் பிதாவாகிய கந்தன் விசாரித்து ஏழு நாளுள்ளே தண்டஞ் செய்வான். இது நிற்க. உன்னிடத்திலே வேறொரு குற்ற மிருக்கிறது. அதாவது "தெய்வந்

தொழா''னென்று பொய் யில்லாத புலவராகிய திருவள்ளுவர் கூறிய உண்மைப்பொருளை யறியாது திருவிழாக் காலத்திற்போய்த் தெய்வத்தைத் தொழுதாய்; இதுவே யாகும். ஆதலால் அக்குற்றத்தை நீ இனிச செய்யாதிருந்தால் நீ பெய்யென்று சொன்னவுடனே மழைபெய்யுமென்று கூறியதைக் கண்டுகொள்க. இவையெல்லாம் மணிமேகலை 22-வது சிறைசெய்காதை 40 ஆவது அடி முதல் 79 ஆவது அடிவரை வாசித்தால் நன்கு விளங்கும்.

சு. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண். (56)

(இ-ம்) கற்புத்தவறாமல் தன்னைக் காவல்செய்து தன்னைக் கைப்பிடித்த நாயகனை உணவு முதலியவற்றை யுரியகாலத்தே யுதவிப் பாதுகாத்துத் தன்னிடத்தும் தன்னாயகனிடத்தும் புகழ்நீங்காத விதம் விருந்தினரை யுபசரித்து மேற்கூறிய நற்குண நற்செய்கைகளினும் உறுதி யுடையவளே மனைவியாவள் என்பதாம்.

கற்பு—அந்நியரிடத்துக் காம இச்சையால் மனம் இளகாத நிலை.

எ. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை.

* சதுக்கப்பூதம் - நாற்றெருக்கூடுமிடத்தில் நின்று விசாரித்து அநியாயஞ் செய்தவர்களைப் பாசத்தாற் கட்டிக்கொண்டுபோயுண்ணும் பூதம்.

## ௭-ஆம் அதி.—புதல்வரைப் பெறுதல்.

௬௭

(இ-ம்) பெண்களைக் கணவர், மதில், வாயில்காப்போர் முதலியோரால் காக்கின்ற காவலால் ஒருபயனுமில்லை. அப்பெண்கள், தம் மனத்தை நெகிழ விடாமல் தங்கள் கற்பைக் காக்கின்ற காவலே முதன்மையுடைய காவலென் பதாம். இதனால், மேற்சொல்லிய காவல்கள் வேண்டா என்பதில்லை. அவ்வளவு சிறப்பில்லை என்பது கருத்து.

அ. பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

(58)

(இ-ம்) பெண்கள் தம்மைக் கொண்ட கணவனைப் பூசித்தல் பெறுவாரானால் தேவர்கள் வாழு முலகத்திலே அத்தேவராற்

செய்யப்படும் பெரிய சிறப்பினையடைவ ரென்பதாம். பெருஞ்சிறப்பாவது - இவள் கற்புடைத் தெய்வமென் றுபசரிக்கப்படுதல்.

கூ. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
ஏறுபோற் பீடு நடை.
(59)

(இ-ம்) பகழை விரும்பிய மனையாளில்லாதவருக்குத் தம்மை யிகழ்ந்து பேசும் பகைவருக்கு முன்னே ஆண்சிங்கம்போல நடக்கும் பெருமிதமான நடையில்லை என்பதாம். புகழாவது, மேற்சொல்லிய கற்புக்காத்தல் முதலிய நற்குண நற்செய்கைகளைச் செய்தல். பெருமிதமான நடையில்லாமையாவது-தமது பகைவருக்கு முன்னே நாணத்தால் தலைகவிழ்ந்து நடத்தல்.

கo. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு.
(60)

(இ-ம்) மனையாளது நற்குண நற்செய்கைகள் குடும்பத்துக்கு நன்மையாமென்று அறிந்தோர் சொல்லுவர். அதனோடு நல்ல புதல்வரைப் பெறுதல் அந்நற்குண நற்செய்கைகளுக்கு நல்ல ஆபரணமென்று சொல்லுவர் என்பதாம். நல்ல புதல்வர்-அறிவாலுயர்ந்த

புத்திரர்.

---

## 7-ஆம் அதி—புதல்வரைப் பெறுதல்.

அஃதாவது *இருபிறப்பாளர் மூவராலும் இயல்பாகச் செய்யப்படுங் கடன் மூன்றனுள், முனிவர்கடன் கேள்வியாலும், தேவர்கடன் வேள்வியாலும், தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலாலும் அல்லாமல் செய்யப் படாமையின் அக்கடன் செய்தற்பொருட்டு நல்ல புத்திரரைப் பெறுதல். மேலையதிகாரத்தினிறுதியில் மனையாளது நற்குண நற்செய்கைகளுக்கு நல்ல

---

* இருபிறப்பாளர் பிராமணரும், க்ஷத்திரியரும், வைசியரும்.



ஆபரணம், நன்மக்களென்பதற்கேற்ப நன்மக்களென்பவர் ஆண் மக்களும் பெண்மக்களும் ஆவாரென்றாலும், மேற்கூறிய கடன்கள் செய்தற்கு ஆண்

மக்களே யுரியயாதலாலும், பெண்மக்களிற் சிறந்தார் ஆண்மக்களாதலாலும்

இவ்வதிகாரத்துக்கு மக்கட்பேறெனப் பெயர்கூறாது புதல்வரைப் பெறுத

லென்று நாயனார் கூறியருளிய நுட்பத்தைக் கற்றறிந்தார் கண்டுகொள்க.

க. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த

மக்கட்பே றல்ல பிற.

(61)

(இ-ம்) ஒருவன் அடையவேண்டிய பேறாகிய பொருள்களுள்ளே அறிய வேண்டியவைகளை யறிதலையுடைய புத்திரரைப் பெறுதலைத்தவிர, மற்றொன்

றையும் நாம் மதிப்பதில்லை என்பதாம். இங்கே மக்களென்றது, ஆண் பெண்

இருவருக்கும் பொதுப்பெயரானாலும் அதிகாரம் நோக்கிப் புத்திரரையே

குறித்து நின்றது. இக்கருத்தைவிட்டு, மக்களெனப் பொதுப்படக் கூறியத

னால் ஆண்பெண் என்னுமிருபாலாரையும் குறித்ததேஎன்பர்சிலர்.அவரை,புதல்

வரைப் பெறுதலென்னு மதிகாரத்தை நோக்குக என்றால், அதிகாரம் பிழை

பட்டதென்றும் அல்லது அதிகாரம் பிற்காலத்தில் வகுக்கப்பட்ட தென்றுங்
கூறுவர். அது, ஆசிரியர் பரிமேலழகர் முதலிய பெரியாரது அபிப்பிராயத்
துக்கு விரோதமாம்.

உ. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். (62)

(இ-ம்) பிறரால் பழிக்கப்படாத நற்குணங்களையுடைய புத்திரரை
யொருவன் பெறுவானானால் அவன் கன்ம வசத்தால் இனி யெய்தும் எழு
பிறவியினுந் தீமையாகிய துன்பங்கள் அவனைச் சேரமாட்டா வென்பதாம்.
ஏதனாலென்றால், தந்தை தாயரது தீவினை தேயும் பொருட்டு அவரைக்
குறித்துப் புதல்வர் செய்யுந் தானதருமத்தாலென்க. எழு பிறவியாவன:—
தேவர், மக்கள், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் ஆம்.
தாவரம்—நிலையிலே நிற்கும் மலை, மரங்கள் முதலியன.

ந. தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொருள்

தம்தம் வினையான் வரும். (63)

(இ-ம்) தம்முடைய புதல்வரைத் தம்முடைய பொருளென்று அறிந்தோர் சொல்லுவர். ஏனெனில், அப்புதல்வர் சம்பாதித்த பொருள்கள் தம்மைக் குறித்து அப்புதல்வர் செய்யும் நல்வினையினாலே தம்மிடத்துவரும் ஆதலால் என்க என்பதாம். தம்மிடத்து வருதலாவது—தாம் செய்த தீவினை

## எ-ஆம் அதி.—புதல்வரைப் பெறுதல்.

உக நீங்கும் பொருட்டுத் தம் புதல்வர் தம் பிதிர் தேவதைகளைப் பூசை செய்து பலியீதல்.

ச. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ். (64)

(இ-ம்) பெற்றவருக்குத் தம்முடைய மக்களது சிறியகைகளா லளையப் பட்ட சோறானது மதுரமிக்க அமிர்தத்தைப் பார்க்கினு மினிமையுடையதா யிருக்குமென்பதாம்.

ரு. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு. (65)

(இ-ம்) ஒருவனுடைய உடம்புக்கு இன்பமாவது தான் பெற்ற மக்க ளுடைய உடம்பைத் தன் கைகளாலெடுத்து மார்பிலணைத்துத் தழுவுதலாம். இஃதன்றி

அவன்காதுக் கின்பமாவது-அப்பிள் ளை கள் மழலைச் சொற்களைக் கேட்குதலாம் என்பதாம்.

சு. குழலினி தியாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.
(66)

(இ-ம்) தமது பிள்ளைகளுடைய குதலைச் சொற்களைக் கேளாதவரே குழலினிமை ச யினியது, வீணையினிசை யினியது என்று சொல்லுவர் என்ப தாம். எனவே, குழலோசையினும் வீணையிசையினும் அதிக இன்பஞ் செய் யும், தாம் பெற்ற பிள்ளைகள் குதலை ச்சொல் லென்பதாயிற்று. குதலைச்சொல்- பொருள் புலப்படாச் சொல்.

எ. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.
(67)

(இ-ம்) பிதாவானவன் தன் புத்திரனுக்குச் செய்யும் நன்மையாவது, கற்றூரது சபையில் அக்கற்றூரைப் பார்க்கினும் உயர்வாயிருக்கக் கல்வி கேள்வியுடையவனாகச் செய்தல். (எ-ம்) இதுவல்லாமல் பொருளுடையவ னாகச் செய்தல் துன்பந்தருதலின் நன்மையாகாதென்பது கருத்து. எப்படி யென்றூல் , கல்வியறிவில்லாத செல்வமுடையவன் பணிவுடைமையில்லாமல் இறுமாந்திருந்து துன்பத்தை யடைவனென்க.

அ. தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை

மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.
(68)

(இ-ம்) ஒருவர் பெற்ற புத்திரரது இயற்கை அறிவோடு கூடிய செயற்கையறிவாகிய கல்வியறிவானது பெரிய பூமியினிடத்து நிலைபெற்றிருக்கின்ற உஉ



அறிவுடையா ரெல்லாருக்கும் அறிவுடைய புத்திரரைப் பெற்ற பிதா வுக்கு இன்பஞ் செய்தலைப் பார்க்கினும் அதிக இன்பத்தைச் செய்வதாகு மென்பதாம். இதனால், கல்வியறிவுடைய புத்திரரைப் பெற்ற பிதாவைப் பார்க்கினும் அப்புத்திரரது அறிவுடைமையைக்கண்ட சபையிலுள்ள அறி வுடையாரெல்லாரும் மனமகிழ்ச்சியுடைவரென்பது காண்க.

சூ. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.
(69)

(இ-ம்) தாயானவள் தன்னுடைய மகனைப்பெற்ற காலத்திலடைந்த மகிழ்ச்சியைப் பார்க்கினும் அம்மகனைக் கல்வி கேள்விகளால் உயர்ந்தோ னென்று அறிவுடையார் சொல்லக்கேட்ட காலத்து அதிக மகிழ்ச்சியடைவள் என்பதாம். பெண் சுபாவத்தால் கல்வி கேள்வியுடையானென்று தானே யறிதல் கூடாமையால்

அறிவுடையார் சொல்லக்கேட்ட தாயென்று நாயனு ரருளிச்செய்தனர். சுபாவம்-இயற்கை. இவ்விடத்துப் ' 'பேதைமை யென் பது மாதர்க் கணிகலம்' ' என்று பெரியோர் கூறிய வாக்கு கவனிக்கத்தக்கது.

கo. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லென்னுஞ் சொல். (70)

(இ-ம்) தன்னைக் கல்வி கேள்வி யறிவுடையவனாக்கிய பிதாவுக்குப் புத்திரன் செய்யும் பிரதி யுபகாரமாவது—தன்னுடைய நல்லறிவையும் நல்லொழுக்கத்தையும் கண்ட அறிவுடையோர் இப்படிப்பட்ட மகனைப் பெறுதற்குத் தகுதியாக இவனுடைய பிதா என்ன தவத்தைச் செய்தானோ என்று சொல்லுஞ் சொல்லை யுண்டாக்குதல் என்பதாம். சொல்லை யுண்டாக்குதல் எப்படி யென்றால், தன்னைக் கண்டவர் மகிழ்ச்சியடையுமாறு நன்மார்க்கத்திலே தான் செல்லுதல்.

---

## 8-ஆம் அதி—அன்புடைமை.

அஃதாவது - மேற்கூறிய வாழ்க்கைத்துணையும் புதல்வரும் ஆதியோரிடத்துப் பற்றுள்ளவனாயிருத்தல்.

க. அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ளார்வலர்

புன்கணீர் பூசல் தரும்.
(71)

(இ-ம்) ஒருவரிடத்து ஒருவர் செய்யும் அன்பு, மற்றைக் காலத்தில் வெளிப்படா திருந்தாலும் அன்பு செய்யப்பட்டவரது துன்பத்தைக் கண்ட

௸-ஆம் அதி.—அன்புடைமை.

உ௱ இடத்து அன்பு செய்தாருடைய கண்களினின் று ஒழுகும் சிறிய கண்ணீ ரானது வெளிப்படுத்திவிடும். ஆதலால், அன்பினை மறைத்து வைக்குங் கருவி யொன்றும் இல்லை யென்பதாம்.

உ. அன்பிலா ரெல்லாந் தமக்குரியர் அன்புடையார்
என்பும் உரியர் பிறர்க்கு.
(72)

(இ-ம்) அன்பில்லாதவர் பிறருக்கு உதவிசெய்ய மாட்டாராதலால், எல்லாப் பொருளுந் தமக்கே யுரிமையாகக் கொள்வர். அன்புடையவர் பிறருக் குதவிசெய்யுங் காரணத்தால் தமக்கேயுரிய தமது தேகத்திலுள்ள எலும்பை யும் பிறருக்கு உபகாரமாகக் கொடுத்து உதவி செய்வர் என்பதாம். தமக்கே யுரிய முதுகெலும்பைத் தேவர்கள் பொருட்டு, இந்திரனுக்கு க் கொடுத்து உதவிசெய்த ததீசி முனிவர் சரித்திரத்தால் இதை நன்றாக

யாருந் தெரிந்து கொள்ளலாம். இச் சரித்திரம் திருவிளையாடற் புராணத்திற் காண்க.

ங. அன்பொ டியைந்த வழக்கென்ப ஆருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.
(73)

(இ-ம்) கிடைத்தற்கரிய மனிதருயிர்க்கு எலும்பு, தோல் முதலிய உடம்போடு உண்டாகிய சம்பந்தத்தை அன்போடு பொருந்துதற்கு வந்த நிகழ்ச்சி என்று அறிந்தோர் சொல்லுவரென்பதாம். அன்பு செய்தற்கு உடம்பில்லாமல் முடியாது. ஆதலால், இவ்வாறு கூறியருளினர். இதனால், சரீரமெடுத்ததனாலாகிய பிரயோசனம் அன்புடைமையென்றறிந்து கொள்க. நிகழ்ச்சி—முக்காலத்திலும் நடைபெற்றுவருகின்றது.

ச. அன்பீனும் ஆர்வ முடைமை யதுவீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு.
(74)

(இ-ம்) ஒருவன் தனக்குச் சம்பந்தமுடையாரிடத்துச் செய்த அன்பானது பழக்கவாசனையால் பிறரிடத்தும் அன்பு செய்தற்கேற்ற ஆசையை உண்டாக்கும். அவ்வாசையுடைமையே தனக்குப் பகையும் நொதுமலும் இல்லாமல் யாவரும் சிநேகரென்று சொல்லப்படும் அளவில்லாத சிறப்பினைக்

கொடுக்குமென்பதாம். யா வரும் சிநே கராதலால் எல்லாப் பொருளுந் தடை யில்லாமல் அடைவரென்பதாயிற்று. நொதுமல்-பகையும் உறவும் இல்லா திருத்தல்.

ரு. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின் புற்றா செய்துஞ் சிறப்பு .
(75).

உ௪ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) இவவுலகத்தில் இல்லறத்திலிருந்து இன்பம் அநுபவித்து, அதன்மேல் மோக்ஷ உலகிற் சென்று அடையும் பேரின்பத்தினை, இல் வாழ்க்கையில் மனைவி, மக்கள், சுற்றத்தாரோடும் அன்புடையராயிருந்து பெற்ற நன்னெறியின் பயனென்று அறிந்தோர் சொல்லுவரென்பதாம். துறவறத்திற் புகுந்து தவத்தால் வருத்தமுற்றுப்போய்த் தேவராகி யடையும் பேரின்பத்தை இல்லறத்தி லன்புடையரா யிருந்து நல்வழி நடத்தலின் பய னென்பதானல் அன்பின் பெருமையை ஆராலளந்து சொல்லமுடியும். இவ் வருமை நோக்கியே "அன்ப தொன்றின் றன்மை யமரு மறிந்த தன்றால்" என்று கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் கூறினர். (இராமாயணம் மருத்துப் படலம் 3 )

கூ. அறத்திற்கே யன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கு மஃதே துணை.
(76)

(இ-ம்) அன்பின் றன்மை யறியாதவர், அன்பு தருமத்தை யுண்டாக்கு தற்கே துணையாமென்று சொல்லுவர். அறிந்தவர், மறமாகிய பகையை நீக்கு தற்கும் துணையாமென்று சொல்லுவர். எப்படி யென்றால், ஒருவன் தனக் குப் பகைவராயிருப்பவர் கே டு செய்ய நினைத்தவிடத்து, அக்கேட்டை நீக்கு தற்கு அப்பகைவரைச் சிநேகஞ் செய்துகொள்ள நினைத்து அவரிடத்தி லன்பு செய்தால் அக்கேடு நீங்குதலால் என்க.

எ. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை யறம்.
(77)

(இ-ம்) எலும்பில்லாத உடம்பினைச் சூரியனுடைய ஒளியாகிய வெயில் எப்படிச் சுடுமோ அப்படியே அன்பில்லாத உயிர்களை அறக்கடவுள் கோபித் துக் கெடுக்குமென்பதாம். இதனால் உடம்புக்கு உறுதியுள்ளது எலும்பென் பதுபோல உயிர்க்குறுதியுள்ளது அன்பென்பது கண்டுகொள்க.

அ. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்

வற்றல் மரந்தளிர்த் தற்று.
(78)

(இ-ம்) மனத்தினிடத்து அன்பில்லாத உயிர், இல்லறத்தோடு கூடியிருந்து வாழ்தல் எதுபோல என்றால், கடினமாகிய பாலைநிலத்தில் ஈரங்கெட்டு வற்றிய மரமானது தளிரெடுத்ததுபோலு மென்பதாம். எப்படி யென்றால், காய்ந்த கட்டை தளிரெடுத்தால் பூத்துக் காய்த்துச் செழிக்கமாட்டாது. அதுபோல, அன்பில்லாமல் உயிர்வாழ்ந்தால் பிரபலப்பட்டுப் பிறர்க்குப் பயனாகாது என்பதாம்.

. ௯-ஆம் அதி.—விருந்தோம்பல்.

உ௫

௯. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.
(79)

(இ-ம்) சரீரத்தின் அகத்தினிடத்து நின்று இல்லறத்துக்கு வேண்டும் அவயவமாகிய அன்பில்லாதவருக்கு வெளியே நின்று அவயவமாக விளங்கும் இடம், பொருள், ஏவல் முதலானவைக ளெல்லாம் என்ன பயனைக்கொடுக்கும் என்பதாம். அன்பில்லாத இடத்துக் கொடுத்தல் முதலாகிய உபகாரங்கள் செய்ய ஏலாதென்பது இதனாலே கண்டுகொள்க. புறத்துறுப்பென்பதற்குக் கண், கால், கை

முதலானவை யென்று பொருள் கூறுவாரு முண்டு. இது இவவிடத்துக்குப் பொருந்தாதென்று ஆசிரியர் பரிமேலழகர் கூறினர்.

௮௦. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

(80)

( இ -ம்) அன்பு காரணமாக அதன்வழி நின்ற உடம்பே உயிர் நின்ற உடம்பாம். அன்பில்லாதவருக்கு உண்டாகிய உடம்புகள் எலும்பினைத் தோல்மூடிய அவ்வளவே யல்லாமல் உயிர் நின்ற உடம்புகள் ஆகமாட்டா என்பதாம். எனவே, அன்பில்லாத உடம்பு பிணத்தோடொப்பாம் என்றபடி.

---

## ௯-ஆம்

## அதி—விருந்தோம்பல்.

அஃதாவது, முன் பழக்கத்தாலும், அப்பழக்க மில்லாமலும் வந்த விருந் தினரை உணவு முதலியவை கொடுத்து உபசரித்தல்.

௧. இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம்
விருந்தோம்பி

வேளாண்மை செய்தற் பொருட்டு.
(81)

(இ-ம்) ஒருவன் இல்லறத்தில் மனைவியோடு கூடியிருந்து பொருள் களைக் காப்பாற்றி வாழ்வதெல்லா மெதற்காக வென்றால், தன்னிடத்து வந்த விருந்தினரை உணவு முதலியவை கொடுத்து உபகாரஞ் செய்தற்கென்பதாம். இதனால், விருந்தினருக்கு உபகாரஞ் செய்யாதவன் வாழ்க்கையாற் பயனில்லை யென்பது கருத்து.

உ. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.
(82)

4

உக திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) ஒருவன் உண்ணப்படு முணவு தேவாமிர்தமாயிருந்தாலும் தன் னிடத்தில் வந்த விருந்தினர் புறத்திண்ணையில் பசித்திருக்கத் தானே தனி யிருந்து உண்ணுதல் நல்லதில்லை என்பதாம். இக்கருத்து நோக்கியே "மருந்தே யாயினும் விருந்தோ டுண்" என்று ஔவையார் அருளிச்செய்தனர். (ஆத்திசூடி)
மருந்து-அமிர்தம்.

ந. வருவிருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று .
(83)

(இ-ம்) தினந்தோறும் தன்னிடத்து வந்த விருந்தினரை உணவு முதலியவை கொடுத்துக் காப்பாற்றுகிறவன் வாழ்க்கையானது தரித்திரப் பட்டுத் துன்பத்தையடைதல் இல்லை யென்பதாம். எனவே, விருந்தினரை யுபசரிப்பவருக்கு மேலுமேலுஞ் செல்வம் வளருமென்பதாயிற்று.

ச. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.
(84)

(இ-ம்) தன்னை நோக்கிவந்த அறிவொழுக்கங்களாற் சிறந்த விருந் தினரை முகமலர்ச்சி காட்டி யுபசரித்து உணவு முதலியவை கொடுத்து ஆதரிப்பவன் வீட்டில் வந்து மனமகிழ்ச்சியோடு இலக்குமி வாசஞ்செய்வாள் என்பதாம். இதனால், செல்வம் விருத்தியடைதற்குக் காரணம் விருந்தினரை யுபசரித்தலென்பது கண்டுகொள்க.

ரு. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ

விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்.
(85)[1]

( இ-ம் ) தன்னிடத்து வந்த விருந்ினரை முன்னே யுண்ணும்படி செய்து மிச்சமிருக்கும் உணவைப் பின்னே யுண்பவன் விளைநிலத்துக்கு விதையும் விதைக்கவேண்டுமோ? வேண்டுவதில்லை யென்பதாம். இதன் கருத்தென்னவென்றால், விளைநிலத்தில் பருவகாலங்களிற் செய்யவேண்டிய வைகளைச் செய்தாலும், நோய், விட்டில், கிளி முதலியவற்றால் இடையூறு எய்தாமல் பூ ர ண ம ா க விளையுமென்பதே. '''வித்துமிடல் வேண்டுங் கொல்லோ'' என்பது உபசார வழக்கு. எதனாலென்றால், வித்தில்லாமல் முளை முளைக்காது. ஆதலால் என்க. வித்தில்லாமல் முளைமுளைக்கச் செய்வது கடவுள் செய்கையே யல்லாமல் மற்றையோர் செய்கையாகாது. இதற்குதாரண மாக "விச்சின்றி நாறுசெய்வானும்'' என்னுந் தேவாரத்தை நோக்குக. (திருநா. திருவாரூர்ப் பதிகம் 2.)

கூ-ஆம் அதி.—விருந்தோம்பல். உஎ

கூ. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.
(86)

(இ-ம்) தன்னிடத்து வந்த விருந்தினரை யுண்ணச்செய்து மேலும் வருகின்ற விருந்தினரை எதிர்பார்த்துத் தான் அவ்விருந்தினரோடு உட னிருந்து உண்பவன் மறுமையில் தேவனாய்ப் பிறந்து வானுலகத்திலுள்ள வருக்குக் கிடைத்தற்கரிய விருந்தாவன் என்பதாம். இதனால், விருந்திடுப வர் மண்ணுலகத்துக்கு மேலாகிய விண்ணுலகத்தில் மனிதருக்கு மேலாகிய தேவராய்ப் பிறப்பரென்பது கருத்து. செல்விருந்தோம்பி வருவிருந்து பார்த் திருப்பானென்பதற்கு உதாரணமாக, "அருந்தின ரருந்திச் செல்ல............நோக்கி" என்னும் செய்யுளைக் காண்க. (திருவிளையாடற்புராணம் நகரப்படலம் 56)

எ. இணைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
துணைத்துணை வேள்விப் பயன்.
(87)

(இ-ம்) விருந்தினரை யுபசரிப்பதாகிய யாகத்தின் பயன் இவ்வளவினை யுடையதென்று வரையறுத்துச் சொல்லக்கூடியதொன்றில்லை. விரு ந்தினர் எவ்வளவு தகுதியுடையாரோ அவ்வளவே அதற்கு அளவு என்பதாம். தகுதி-அறிவு, ஒழுக்கம், துறவு, ஆசார முதலிய நற்குண நற்செய்கைகள் . விருந்தினரை யுபசரிப்பதாகிய யாகம் - பஞ் ச யாகத்தினொன்று. அவையா

வன—பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகமென் பன. இவற்றுள் மானுடயாகமென்பதே விருந்தோம்புதலாம். பூதயாகம்- பலிகொடுத்தல். அதாவது, பிச்சையிடுதல்; இது ஆசிரியர் பரிமேலழகர் அபிப்பிராயம்.

அ. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.
(88)

(இ-ம்) ஒரு நிலையாக நில்லாத பொருளை வருத்தப்பட்டுக் காத்துப் பின்னர் அப்பொருளை யிழந்து, இப்பொழுது யாம் ஒன்றுமில்லாதவராயினோ மென்று வருத்தப்படுவர் யாவரென்றால், உள்ளகாலத்து அப்பொருளால் விருந்தோம்பலாகிய யாகத்தைச் செய்து அதன் பயனை யநுபவிக்கும் ஊழில் லாதவர் என்பதாம். எனவே, விருந்தினை யுணவு முதலியவை கொடுத்து உபசரியாதவர் செல்வம் விருத்தியில்லாமற் கெடுமென்பது காண்க. ஓம்பல்- காத்தல்.

உ௪ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

கூ. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா

மடமை மடவார்க ணுண்டு.

(89)

(இ-ம்) பொருளுடைய காலத்து வறுமையாவது, அப்பொருளால் விருந்ினரை யுபசரித்துக் காவாத மடமை (அறியாமை) யாம். அவ்வறி யாமை அறிவில்லாரிடத்தே யுண்டாம் என்பதாம். எனவே, அறிவுடையா ரிடத்து விருந்தினரை யுபசரியாத குற்றமில்லை யென்பதாயிற்று.

௯0. மோப்பக் குழையும் அனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(90)

(இ-ம்) அனிச்சப் பூவானது மோந்து பார்த்தவிடத்து வாடுமே யல்லாது தூரத்திலே கண்ட இடத்து வாடமாட்டாது. முகம் வேறுபட்டுத் தூரத்திலே பார்த்த இடத்து விருந்ினர் வாட்டமடைவர். ஆதலால், விருந் தினர் அனிச்சப்பூவினு மெல்லியர் என்பதாம். இதனுல், விருந்தினரைக் கண்டவுடனே முகமலர்ச்சி காட்டுதலே விருந்தினரை யுபசரிப்பார்க்கு முத லாவது ஆவசியகமான குணமாம். இக்குண மில்லாத இடத்து இரண்டாவ தாகச் செய்யு மற்றை யுபசாரங்கள் பயன்படமாட்டா. பயன்படாமையாவது, முகமலர்ச்சி இல்லையானல் விருந்தினர் கிட்டவாாமல் தூரத்திலே செல்லுதல்.

---

# 1 0-ஆம் அதி.—இனியவைகூறல்.

அஃதாவது, மனத்திலுள்ள மகிழ்ச்சியை வெளிப்படுத்துவனவாகிய இன் சொற்களைச் சொல்லுதல்.

க. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.
(91)

(இ-ம்) தருமத்தின் உண்மையை யுணர்ந்தவர் வாயில்நின்றும் வஞ்சக மில்லாமல் அன்பொடு கலந்துவருஞ் சொற்களே இனிய சொற்கள் என்பதாம்.

வஞ்சகமாவது, விருந்தினரைக் கண்டவுடன் இவர் வருகின்றாரே, இவருக்கேதா வது கொடுக்கவேண்டுமே யென்று நினைப்பது முதலியவை.

உ. அகனமர்ந் தீதலி னன்றே முகமலர்ந்
தின்சொல னாகப் பெறின்.
(92)

(இ-ம்) மனமகிழ்ந்து ஒருவருக்குவேண்டிய பொருளைக் கொடுப்பதைப் பார்க்கிலும் அவரைக் கண்டவுடனே முகமலர்ச்சி காட்டி இனிய வார்த்தை



பேசுதலுடையவனானால் அதுவே மிக நல்ல தென்பதாம்.

எப்படி யென்றால் , தருமத்தில் இயல்பாகவே அன்புடையவருக் கல்லாமல் மற்றவருக்கு இனிய வார்த்தை சொல்லுதல் வரமாட்டாது. ஆதலாலென்க.

ங. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானாம்
இன்சொ லினதே யறம்.
(93)

(இ-ம்) வந்தவரைக் கண்டவுடனே முகத்தால் விரும்பி இனியதாகப் பார்த்து அவர் கிட்ட நெருங்கியபோது மனத்துடனாகிய இனிய சொற்களைச் சொல்லுதலினிடத்தே யுள்ளது தருமம் என்பதாம். இதனால், இனிய வார்த் தையில்லாமல் ஈதலினிடத்துத் தருமமில்லை யென்பது கண்டுகொள்க. ஆதலால், ஈகையுடையார்க்கு இன்சொல் அவசியம் வேண்டுமென்பதாயிற்று. முகத்தால் விரும்புதல்-முகமலர்ச்சி காட்டல். மனத்துடனாகிய இன்சொல்- உ ண்மையாகச் சொல்லு மினிய வார்த்தை.

ச. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.
(94)

(இ-ம்) எல்லாரிடத்தும் இன்பத்தையதிகப்படுத்தும் இனியவார்த்தை யுடையவருக்குத் துன்பத்தை

யதிகப்படுத்துந் தரித்திரம் உண்டாக மாட் டாது என்பதாம். இனிய வார்த்தையுடையவருக்குப் பகையும் நொதுமலும் இல்லாமல் சிநேகமே யுண்டாதல் காரணமாக அவர் எல்லாச் செல்வமும் பெறு தலால் இவ்வாறு கூறினர். நொதுமல்-பகையும் உறவு மில்லாதிருத்தல்.

௫. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(95)

(இ-ம்) ஒருவனுக்கு ஆபரணமாவது, தன்னால் தாழப்படுவோரிடத்துத் தாழ்மையுடையவனாகி எல்லாரிடத்தும் இனியவார்த்தை சொல்லுதலுடையவ னாதலேயாம். இவ்விரண்டு மில்லாமல் ச ரீரத்தி லணிந்துகொள்ளும் ஆபா ணங்கள் ஆபரணங்க ளாகமாட்டா என்பதாம். தாழ்மையும் இன்சொல்லும் போலப் பேரழகு செய்யாமையால் ஆபரணங்களை ஆபரணங்களாகாவெனக் கூறினர்.

௬. அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை
நாடி யினிய சொலின்.

(96)

(இ-ம்) பிறருக்கு நன்மையைக் கொடுக்குஞ் சொற்களை மனத்தால் ஆராய்ந்து இனிமையுண்டாக ஒருவன் சொல்லுவானானால் அவனுக்குப் பாவங் [illegible]

குறையத் தரூமம் வளருமென்பதாம். இக்கருத்துப் பற்றியே "அறத்தின் மூன்னில்லாதாம் பாவ" மென்றூர் பெரியார். இதை நாலடியாரிற் காண்க.

எ. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(97)

(இ-ம்) பிறருக்கு நன்மையைக் கொடுத்து இனிமைக்குணத்தி னீங் காத சொல்லை ஒருவன் சொல்வானுனல், அச்சொல்லானது அவனுக்கு இம் மைக்கு வேண்டும் நீதியை யுண்டாக்கி மறுமைக்கு வேண்டும் அறத்தையு மூண்டாக்கு மென்பதாம். எனவே, இம்மைக்கு வேண்டுவது நீதியும், மறு மைக்கு வேண்டுவது அறமும் என்பது கண்டுகொள்க.

அ. சிறுமையுள் நீங்கிய இன்சொல்
மறுமையும்
இம்மையும் இன்பந் தரும்.

(98)

(இ-ம்) பிறருக்கு மனவேதனையைச் செய்யாத இன்சொல்லானது ஒருவனுக்கு இம்மைப் பயனையும், மறுமைப்பயனையுங் கொடுக்கு மென்பதாம்.

இம்மைப்பயன்-உலகத்தாரெல்லாம் இனிய வார்த்தையால் தன்வசப்படுதலால் நல்லவை யெய்தி மகிழ்ச்சியடைதல்.

மறுமைப்பயன்-தேவனுய்ப் பிறந்து தேவபோக மநுபவித்தல்.

கூ. இன்சொ லினிதீன்றல் காண்பா
னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.
(99)
(இ-ம்) பிறர்கூறும் இனிய வார்த்தையானது தனக்கு மகிழ்ச்சியை யுண்டாக்குதலை அநுபவித்தறிந்தவன், பிறரிடத்துத் தான் பேசும்போது அவ்வினிய வார்த்தை பேசாமல் கொடிய வார்த்தை பேசுதல் யாது காரணமோ என்பதாம். கொடிய வார்த்தை பிறருக்குத் துன்பம் விளைப்பதல்லாமல் தனக்குந் துன்பம் விளைக்கும். ஆதலால், யாரிடத்தும் கொடிய வார்த்தை பேசலாகாது.

கO. இனிய வுளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று .
(100)
( இ-ம் ) தருமத்தைக் கொடுக்கும் இனிய சொற்களுந் தன்னிடத்து உள்ளனவாயிருக்க, அச்சொற்களைச் சொல்லாமல் பாவத்தைக் கொடுக்கும் கொடிய சொற்களை ஒருவன் சொல்லுதலானது, மதுரமிகுந்த கனிகளுந் தன்னிடத்து உள்ளனவாயிருக்க அவைகளை யுண்ணமல் மதுரமில்லாத காய் களை உண்டதுபோலு மென்பதாம்.

## கக-ஆம் அதி—செய்ந்நன்றி யறிதல்.

அஃதாவது, தனக்குப் பிறர்செய்த நன்மையை மறவாதிருத்தல்.

க. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமும் ஆற்ற லரிது.
(101)

(இ-ம்) தனக்கு முன்னொரு உதவியுஞ் செய்யாதிருக்கிற பிறனொருவனுக்குத் தான் செய்யும் உதவிக்கு, அவன் மண்ணுலகத்தையும் விண்ணுலகத்தையும் பிரதியுபகாரமாகக் கொடுத்தாலும் சமானமாகமாட்டாது என்பதாம். ஏனென்றால், உதவியெல்லாங் காரணங்கருதியேயிருத்தலால், காரணங் கருதாத சிறப்புடைமை பற்றி என்க.

உ. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது.
(102)

(இ-ம்) ஒருவனுக்குக் கேடுவந்த காலத்து ஒருவன் செய்த வுபகாரம் அற்பமாயிருந்தாலும், அவ்வுபகாரமானது

உலகத்தைப் பார்க்கிலு மிகப் பெரியதாகும் என்பதாம். இதனால், உதவிப்பொருள் சிறியதானாலும் பெரிய தானது காலத்தை நோக்கி யென்பது கண்டுகொள்க.

௩. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கின்
நன்மை கடலிற் பெரிது.

(103)

(இ-ம்) இவருக்கு நாமிந்த உதவியைச் செய்தால் இவர் நமக்கு இதற் கேற்ற உதவியைச் செய்வாரென்று ஆராயாமல் செய்த உதவியாகிய அன் புடைமையை ஆலோசித்தால் அவ்வன்புடைமையின் நன்மையானது கடலி னும் பெரியதாகும் என்பதாம். எனவே, பிரதியுபகாரங் கருதாமற் செய்யும் உதவியே பெரிதென்பதறிந்து கொள்க.

௪. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

(104)

(இ-ம்) தமக்குத் தினையளவினதாகிய சிறிய உபகாரத்தை யொருவன் செய்தானாலும், அதனைச் சிறிதென்று நினையாமல் பனையளவினதாகிய பெரிதென்று கொள்ளுவர் அவ்வுதவியின் பயனை யறிந்தவரென்பதாம். பயனையறிதல் எப்படியென்றால், தாகத்தால் மூர்ச்சையடைந்து மரண வேதனை யடையுஞ்சமயத்தில் நீர் கொண்டுவந்து கொடுத்து

மூர்ச்சையை நீக்கித் தெளிவுண்டாக்கி மரணவேதனையைப் போக்குதல் போலும், உதவி சிறிதாயிருந்தாலும் பயன் பெரிதென்று அறிதல் போல்வதாம்.



ரு. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. (105)

(இ-ம்) ஒருவன் ஒருகாரணமுமில்லாமல் பிறருக்கு உபகாரமாகக் கொடுக்கும் பொருளின் அளவினை யெண்ணிப் பார்க்குமிடத்து அது அப் பொருளின் அளவல்ல. வேறெது வென்றால், அப்பொருளை யேற்றுக் கொண்டவரது குணத்தின் அளவே என்பதாம். எனவே, தாழ்ந்த குணத் தார்க்குச் செய்த உதவி பெரிதாயிருந்தாலும் சிறிதாமென்பதும், உயர்ந்த குணத்தார்க்குச் செய்த உதவி சிறிதாயிருந்தாலும் பெரிதாமென்பதுங் கண்டுகொள்ளலாயிற்று. ஆகவே, அறிவுடையாரைத் தெரிந்து செய்யும் உதவியே சிறந்ததென்பது கண்டுகொள்க. இது பற்றியே "பாத்திரமறிந்து பிச்சை யிடு" என்ற பழமொழியும் வழங்குகிறது.

௬. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துள் துப்பாயார் நட்பு.

(106)

(இ-ம்) ஒருவன் தனக்குத் துன்பம் வந்த காலத்து, அத்துன்பத்தை நீக்கும் ஆதாரமாகிய துணையாயிருப்பவரது சிநேகத்தை யெப்பொழுதும் விடாது பற்றிக்கொள்ளவேண்டும். இதுவே யிம்மைக்குப் பிரயோசனமா வது. இதுவல்லாமல், மறுமைக்குத் துணையாகிய கல்வி யறி வொழுக்கங்க ளாற் குற்றமற்ற பெரியாரது சிநேகத்தையு மறவாதிருக்கவேண்டுமென்பதாம்.

௭. எழுமை யெழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

(107)

(இ-ம்) தம்மிடத்து வந்த துன்பத்தை அப்பொழுதே விரைந்து வந்து வேரறக்களைந்து நீக்குவாரது சிநேகத் தை வினைப்பயன் றொட ரும எழுவகைப் பிறப்பினிடத்தும் நினைப்பார் நல்லோரென்பதாம். விடாது பின்பற்றிச் செல் லுதலால் வினைப்பயனையுடைய எழுவகைப் பிறப்பென்றார் நூலாசிரியரும், உரையாசிரியரும். இக்கருத்துப் பற்றியே ' 'வினைப்போகமே யொரு தேகங் கண்டாய்'' என்றார் பிறரும். மறுபிரப்புக்களில் நினைத்தலாவது, தமக்குத் துன்பத்தை நீக்கினவரிடத்து வைத்த அன்பானது தாமடையும் பிறப்புத் தோறும் தொடர்தலால் அவ்விடத்தும் அன்புடையராயிருத்தல்.

அ. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
தன்றே மறப்பது நன்று .

(1 08) கஉ-ஆம் அதி.—நடுவு நிலைமை.

௱௱

.

(இ-ம்) பிறர் மனவாக்குக் காயங்களால் தனக்குச் செய்த நன்மையை மறந்து விடுதல் தருமமாகாது. அவர் செய்த தீமையை, செய்த அப்பொழுதே மறந்துவிடுதல் தருமமென்பதாம். தீமையை மறவாவிட்டால், தானும் அவருக்குத் தீமை செய்ய நேர்ந்து அவருக்குச் சமானமாவனென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "ஒருவன் செய்த நோய் மறப்பவ னுயர்ந்த வன்" என்றார் பிறரும். (பிரபுலிங்கலீலை-சித்தராமையர்கதி 27.)

கூ. கொன்றன்ன இன்னா செயினு மவர்செய்த
ஒன்றுநன் றுள்ளக் கெடும்.

(109)

(இ-ம்) தமக்கு முன்னொரு நன்மையைச் செய்தவர் பின் கொலை செய்தாற்போன்ற துன்பங்கள் பலவற்றைச் செய்தாராலும் அவர் முன் செய்த நன்மை ( இ ன்பம் ) ஒன்றினையும் நினைத்துப் பார்த்தால் அத்துன்பங்க ளெல்லாம் இல்லையாய்விடு மென்பதாம். தினையளவு நன்றியைப் பனையள வாகக்கொள்ளும்

அறிவுடையாருக்கு இது பொருந்துமாதலால் இவ்வாறு கூறியருளினர்.

கo. எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. (110)

(இ-ம்) பெரிய தருமங்களை யழித்தவருக்கும் அவற்றை நீக்கும் பிரா யச் சித்தம் உண்டு. தாமொரு நன்றியுஞ் செய்யாதிருக்கத் தனக்குப் பிறர் செய்த நன்றியாகிய உதவியை மறந்தவனுக்கு மறத்தலாகிய அப்பாவத்தை நீக்கும் பிராயச்சித்தம் இல்லை என்பதாம். பெரிய தருமங்களை யழித்த லாகிய பாவங்க ளாவன:-பசுவின் மடியை யறுத்தலும், வேதமோதும் நல் லொழுக்கமுடைய பிராமணரைக் கொல்லுதலும், மகளிர் கருவை யழித்த லும்; கோயில்களை இடித்தலு முதலியவைகளாம். பிராமணரைக் கொல்லுத லென்றது - தலைமைபற்றி யாதலால் நல்லொழு க்க முடையார் எச்சாதியாரா யிருந்தாலும் அவரைக் கொன்றாலும் பிராயச்சித்தமில்லாத பாவமேயாம். பிராயச்சித்தம்-பரிகாரம்.

---

## 12-ஆம் அதி—நடுவு நிலைமை.

அஃதாவது-பகைவர், நட்பினர், இவ்விருவரு மல்லாதாராகிய நொதுமல ரென்னு மூவரிடத்தும் ஒரே சமமாய் நிற்றல்.

க. தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
பாற்பட் டொழுகப் பெறின்.

௫

(111) ௱௧௧ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) பகைவர், சிநேகர், இவ்விருவரு மல்லாதாராகிய நொதுமல ரென்னு மூன்று பகுப்பினையுடையாரிடத்தும் நடுவுநிலைமை (நீதி) யைத் தவறாது செலுத்தி நடப்பான் ஆனால், அவனுக்குத் தகுதியென்று சொல்லப் படும் நீதியாகிய தருமம் ஒன்றுமே நல்லது என்பதாம். இதன் கருத்து, வாரபக்ஷம் பேசலாகாதென்று காண்க. இக்கருத்துப் பற்றியே "ஓரம் பேசேல்" என்றார் ஔவையாரும். (கொன்றைவேந்தன்)

உ. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
யெச்சத்திற் கேமாப் புடைத்து.

(112)

(இ-ம்) மேற்கூறிய நடுவுநிலைமை (நீதி) யுடையவனது செல்வமானது பிறர் செல்வம்போல அழியாது, அவனுக்கு மவன் சந்ததியாருக்கும் வலிமை யுடையதாய் நிற்குமென்பதாம். இதனால், நீதியாகிய தருமவழியால் வந்த செல்வம் அழியாதென்பதாயிற்று. இக்கருத்துப் பற்றியே "அறத்தா றீட்டு நம்பொருள் படுமோ" என்று பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத் துட் கூறினர். (மாமனாக வந்து வழக்குரைத்த படலம் 27)

ரு. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
யன்றே யொழிய விடல்.
(113)

(இ-ம்) தீமையில்லாமல் நன்மையே கொடுத்தாலும், நடுவு நிலைமை (நியாயம்) இல்லாமல் கிடைத்த செல்வத்தை கிடைத்த அப்பொழுதே யொருவன் விட்டுவிடல் வேண்டும். விடானாயில் கேடு விளைக்குமென்பதாம். நன்றே தரினு மென்றதனால் தாமாட்டாதென்பதே துணிந்த பொருளென் பது கண்டுகொள்க. துணிந்த பொருள்-பாட்டிற்கண்ட அருத்தம்.

சு. தக்கார் தகவில ரென்ப தவரவர்

எச்சத்தாற் காணப் படும்.
(114)

(இ-ம்) ஒருவர் நடுவுநிலைமையாகிய நீதியுடையரென்பதை அவருக்கு நல்ல பிள்ளைகள் பிறத்தலாலும், நடுவுநிலைமையாகிய நீதியில்லாரென்பதை நல்ல பிள்ளைகள் பிறவாமையாலும் அறியலாம் என்பதாம். இவ்விரண்டும் நிச்சயமென்று ஆசிரியர் பரிமேலழகர் உரையிற் கூறினர். அவர் அவ்விதங் கூறியது, இவ்விரண்டு மல்லாமல் வேறு பொருள் கூறுவார் தெளிதற் பொருட்டேயாம். எச்சமென்றதற்கு, ஒருவர் ஆயுள் முடிவிலே மிச்சமாய் நின்ற புண்ணிய பாவங்களைக் கொண்டு, தக்கார் தகவிலரென்று அவரை யறியப்படுமென்று சோழவந்தான் அரசஞ்சண்முகனார் முதலிய சிலர் பொருள் கூறினர்,

கஉ-ஆம் அதி.—நடுவு நிலைமை.

௱௫

ரு. கேடும் பெருக்கமும் இல்லல்ல நெஞ்சத்துக்
கோடாமை சான்றோர்க் கணி.
(115)

(இ-ம்) எல்லாருக்கும் தீவினை காரணமாகக் கேடும், நல்வினை காரண மாக ஆக்கமும் முன்னே அமைக்கப்பட்டிருந்தனவாதலால் அந்தக் காரணங் களை யெண்ணமல் கேடும்

ஆக்கமும் இப்பொழுது வருவனவாக நினைத்துக் கேட்டை நீக்கும்பொருட்டும், ஆக்கத்தை யாக்கும்பொருட்டும் ஒரு பக்கம் சாய்ந்து நிற்றல் இல்லாதிருத்தலானது அறிவாலுயர்ந்தார்க்கு அழகு என்ப தாம். கேடு-வறுமை. ஆக்கம்-செல்வம். சாய்ந்து நிற்றல்-முன்னே கூறிய பகையினர், உறவினர் இவவிரண்டு மல்லாதவராகிய மூவரிடத்தும் பொது நிலையில் நில்லாமல் ஒருவருக்காக நியாயவிரோதமாக நிற்றல்.

சு. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்சம்
நடுவொரீஇ யல்ல செயின்.

(116)

(இ-ம்) ஒருவன் மனமானது மேற்கூறிய நடுவுநிலையாகிய தருமத்தை விட்டுத் தீயவழியாகிய பாவத்தைச்செய்ய நினைக்குமானால் இந்நினைவு நான் கெட்டுப் போவேன் என்பதற்கு அறிகுறியென்று அறிந்துகொள்ள வேண்டு மென்பதாம். நினைத்தது லென்னகுற்றமென்றால், நினைத்தலும் செய்த லோடொக்குமென்று பெரியார் கூறுதலாலெண்க. அறிகுறி-அடையாளம். தீயவழியாவன-நியாயவிரோதம் பேசுதல், பிறர் மனைவியை விரும்புதல், பிறர் பொருளை யிச்சித்தல், பொய்சொல்லுதல் முதலியவை.

எ. கெடுவாக வையா துலகம் நடுவாக
நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

(117)

(இ-ம்) தகுதியாகிய நடுவு நிலையில் நின்று தருமத்தினிடத்தே யிருப் பவனுடைய தரித்திரத்தை உயர்ந்தோர் தரித்திரமென்று நினைக்கமாட்டார் என்பதாம். எனவே, செல்வமென்று நினைப்பரென்பது கண்டுகொள்க. ஏனென்றால், அத்தரித்திரம் அறத்தைத் தருதலால் என்க. அறம்-தருமம்.

அ. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி.

(118)

(இ-ம்) முன்னே தானொருபக்கமுங் கோணாமல் நின்று பின்னே தன் னிடத்துவைத்த பாரத்தைச் சமமாக அளவுபடுத்தி நிறுத்திக் காட்டுந் துலாக்கோல்போல, பகை, சிநேகம், நொதுமல் என்னு மூவகைப் பட்டவருக் கும் சமமாக இருந்து அவர்கள் சொல்லும் வழக்கை வினுவிடைகளால் [illegible]

## திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

அறிந்து ஒருபக்கமுஞ் சாயாமல் நியாயஞ்சொல்லி விடுப்பதே அறிவாலுயர்ந்த வருக்கு அழகு என்பதாம்.
துலாக்கோல்-தராசு. நொதுமல்-உறவும் பகையு மில்லாமை.

௯ . சொற்கோட்ட மில்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின். (119)

(இ-ம்) ஒருவன் மனமானது எதாவதொரு காரணம்பற்றி ஒரு பக்கஞ் சாயாமல் நேரே நின்றால் அவன் தருமத்தோடு விரோதமில்லாமற் சொல்லுஞ் சொல்லே நடுவு நிலைமை என்பதாம். இதனால் மனங்கோணியவிடத்து வாக்குங் கோணுமென்பது கண்டுகொள்க.

௰ . வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின். (120)

(இ-ம் ) வியாபாரஞ் செய்யும் வியாபாரிகளுக்குப் பிறர் பொருளையுந் தம் பொருள்போல நினைத்துச் செய்யும் வியாபாரமே நன்றாகிய வியாபார மென்பதாம். பிறர்பொருளையும் தம் பொருள்போல நினைத்தலாவது, தாம் ஒருபொருளை வாங்கும்போது குறைந்த விலைகொடுத்து வாங்குதலும் அப் பொருளை விற்கும்போது அதிக விலைபெற்று விற்றலுமில்லாமல் இரண்டும் ஒப்ப நாடி வியாபாரஞ் செய்தல். அஃதாவது, தாம் வாங்கிய விலைக்குமேற் சிறிது லாபம் வைத்துவிற்றல். இது நடுவுநிலைமையாவ தெப்படியென்றால், தம் பொருளை விருத்திசெய்வதோடு பிறர் பொருளுக்குக் கேடுசெய்ய

நினையா திருத்தலாமென்க.

---

## 13-ஆம்
## அதி.—அடக்கமுடைமை.

அஃதாவது-மனம், வாக்கு, காயங்கள் தீயவழியிற் செல்லாமல் அடங்குத லுடையவனாயிருத்தல்.

க. அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

(121)

(இ-ம்) மனம் வாக்குக் காயங்கள் தீயவழிச் செல்லாமல் அடங்குத லாகிய அறம் ஒருவனுக்கு இருக்குமானால் அவ்வறம் அவனை மறுமையில் தேவருலகத்திற் செலுத்தும். அடங்குதலில்லாததாகிய பாவம் சகித்தற்கரிய இருளென்னும் நரகத்திற் செலுத்திவிடும் என்பதாம். எனவே, தேவருலகத்



துக்கு வழி அறமென்பதும், நரகத்துன்பத்துக்கு வழி பாவமென்பதுங் கண்டு கொள்க. அறம்-தருமம். காயம்-சரீரம்.

உ. •காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை யுயிர்க்கு.
(122)

(இ-ம்) மனிதருயிர்க்கு மேற்கூறிய அடக்கத்தைப்போல உயர்ந்த செல்வமில்லை. ஆதலால், ஒவ்வொருவரும் அவ் வடக்கத்தை உறுதியாகக் கைக்கொண்டு அழியாமற் காக்கவேண்டுமென்பதாம்.

ங. செறிவறிந்து சீர்மை பயக்கும் அறிவறிந்
தாற்றி னடங்கப் பெறின் .
(123)

(இ-ம்) ஒருவன் நமக்கு அறிவாவது முறைப்படி அடங்குதலே யென் றறிந்து அடங்குவானானால் அவவடக்கமானது, அறிவு நெருங்கிய பெரியோரால் அறியப்பட்டுப் பெருமையைக் கொடுக்குமென்பதாம். பெருமை-எல்லாராலும் நன்கு மதிக்கப்படுதல். முறைப்படி யடங்குதல்-மனம் வாக்குக் காயங் களை வரிசையாயடக்கல்.

ச. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம்
மலையினு மாணப் பெரிது.
(124)

(இ-ம்) இல்வாழ்க்கைக்கு விதித்த விதியினின்று மாறுபட்டுத் தீயவழிச் செல்லாமல் ஒருவன் அடங்குவானானால் அவனுடைய உயர்ச்சி மலையின் உயர்ச்சியைப் பார்க்கினு மிகப்பெரிது என்பதாம்.

ரு. எல்லார்க்கும் நன்றாம் பணித லவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(125)

(இ-ம்) பெருமிதம் (கருவம்) இல்லாமல் அடங்கியிருத்தல், எல்லா ருக்கும் பொதுவாக நல்லதே யானாலும், செல்வமுடையவருக்கே மேற்கூறிய படி அடங்கியிருத்தல் வேறொரு செல்வமாஞ் சிறப்பினையுடையது என்பதாம். எப்படியென்றால், கல்வியறிவு, நல்லகுடிப் பிறப்புடையவர் அடங்கியிருத்தல் இயற்கையாதலால் அவருக்கது சிறப்பாகாது. செல்வமுடையவர் இறுமாப் புடையவராய் அடங்கமாட்டார். ஆதலால், அவருக்கே அடக்கமுடைமை வருதல் சிறப்பாயிற்றென்க.

சு. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து .

(126) ௩௨ திருக்குறள் மூலமும்,

தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) தனக்குத் துன்பம் வராமல் ஐ ந்து அவயவத்தையும் உள்ளடக்கிக் கொள்ளும் ஆமைபோல ஒருவன் ஒரு பிறவியிடத்து ஐம்பொறிகளையும் பாவம் பொருந்தாமல் அடக்க வல்லமையுடையவனானல், அவ்வல்லமை அவனுக்கு ஏழு பிறப்பினிடத்தும் தீயவழியிற் செல்லவொட்டாமற் காவலாக உடையது என்பதாம்.

இதனுல், ஒரு பிறப்பினிடத்துச் செய்த வினைப்பயன் எழு பிறப்பினிடத்தும் தொடருமென்பது காண்க. ஐம்பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவிகள். இக்குறள் மெய்யடக்கம் கூறியது.

எ. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.
(127)

(இ-ம்) ஒருவர் தம் மனம் வாக்குக் காயங்களால் வரும் எந்தக் குற்றங் களையும் வராமற் காக்கவேண்டும். அவவிதம் காவாமற்போனுராலும் நாவி னுற் சொற்குற்றம்வாராமற் காக்கப்படும் ஒன்றையாவது வராமற் பாதுகாக்க வேண்டும். அதைக் காவாராலுல் அச்சொற்குற்றத்திலகப்பட்டுத் துன்பத்தை யடைவ ரென்பதாம். போனுராலும் என்றதனுல், போகாமையே தகுதி யென்பதை உறுதிப்படுத்தியவாறு தெரிந்துகொள்க. சொற்குற்றம் வாராமற் காக்கவேண்டு மென்னும் இக்கருத்துப் பற்றியே "சொற்சோர்வு படேல்" என்றுர் ஔவையாரும். (கொன்றைவேந்தன்.)

அ. ஒன்றுனுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயின்
நன்றுகா தாகி விடும்.
(128)

(இ-ம்) தீங்குடையனவாகிய சொற்களின் அருத்தங்களாற் பிறருக்கு வருந் துன்பம் ஒன்றுனுலும், ஒருவனிடத்து உண்டானுல் அவனுக்கு மற்றைத் தருமங்களாலாகிய நன்மை தீயதாகிவிடும் என்பதாம். இதனுல், பிறருக்குத் தீங்குவரும் சொற்களைப் பேசலாகாதென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "பிழைபடச் சொல்லேல்" என்றுர் ஒளவையார். (கொன்றை வேந்தன்)

கூ. தீயினுற் சுட்டபுண் ணுள்ளாறும் ஆறுதே
நாவினுற் சுட்ட வடு.

(129)

( இ-ம் ) ஒருவனை மற்றொருவன் தீயினுற் சுட்ட புண்ணுனது சரீரத்தி னிடத்து இருந்தாலும், மனத்தினிடத்து அப்பொழுதே யாறிவிடும். அப்படி யல்லாமல் கொடிய வார்த்தையையுடைய நாவினுற் சுட்ட வடுவானது, எந்தக் காலத்தும் ஆறுது என்பதாம். ஆதலால், தீயைப்பார்க்கிலும் கொடிய

கஃ-ஆம் அதி.—ஒழுக்கமுடைமை.

ficiö

வார்த்தை கொடுமையுடையதென்பதாயிற்று. ஆதலால்தான், தீயினுற் சுட்டதனைப் புண்ணென்றும், நாவினுற் சுட்டதனை வடுவென்றும் நாயனுர்

அருளிச்செய்தனர். இக்குறளும் இதன் முன்னிரண்டு குறள்களும் மொழி யடக்கங் கூறின.

கo. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
அறம்பார்க்கும் ஆற்றி னுழை ந்து .
(130)

(இ-ம்) மனத்தினிடத்தே கோபம் வாராமற் றடுத்துக் கல்வியறிவுடை யவனாய் அடங்கியிருக்க வல்லவனது சமையத்தைத் தருமதேவதை அவனைச் சேரும் வழியில் நின்று பார்த்துக்கொண்டு நிற்கும் என்பதாம். இதனால் மனவடக்கமுள்ளவனுக்கு எல்லாச் செல்வமும் எய்துமென்பது காண்க. மனவடக்கமாவது-மனம் பாவவழியிற் செல்லாதிருத்தல். இக்குறள் மன வடக்கங்கூறியது.

---

## 14- ஆ ம்
## அதி.—ஒழுக்கமுடைமை.

அஃதாவது-தங்கள் சாதிக்கும், நிலைக்குஞ் சொல்லப்பட்ட நல்ல நடத் தையுடையவாதல். நிலை-ஆச்சிரமம்.

க. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினும் ஓம்பப் படும்.
(131)

(இ-ம்) நல்லொழுக்கம் உயர்ந்தவருக்கும் தாழ்ந்தவருக்கும் நன்கு மதிக்கப்படுதலைக் கொடுத்தலால், அவ்வொழுக்கம் எல்லாப் பொருளினும் சிறந்ததாகிய உயிரைப் பார்க்கினும் அதிகமாகப் பாதுகாக்கவேண்டுமென்பதாம். ஒழுக்கம்-ஒழுகுதல். அஃதாவது, நீதிவழியிற் செல்லுதல்.

உ. பரிந்தோம்பிக் காக்க ஒழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை. (132)

(இ-ம்) ஒழுக்கத்தை எதனாலும் அழிவுபடாமற் பேணி, வருத்தமடைந்தும் பாதுகாக்க வேண்டும். அறங்கள் பலவற்றையும் ஆராய்ந்து, அவற்றுள் இம்மைக்கு மறுமைக்குந் துணையாவது எதுவென்று மனத்தை ஒற்றுமைப் படுத்தித் தெளிந்தாலும், துணையாய் நிற்பது அவ்வொழுக்கமே யாதலால் என்பதாம். மனத்தை ஒற்றுமைப்படுத்தலாவது-மனம் பலவழியிற் செல்லாமல் குறித்த ஒருவழியில் நிற்கச்செய்தல்.

ந. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.
(133)

(இ-ம்) தங்கள் தங்கள் வருணத்திற்கேற்ற ஒழுக்கமுடைமையே சாதியினுயர்ச்சி, அவ்வொழுக்கத்திற் றவறி நடத்தலே சாதியினிழிவு என்ப தாம். இதனால், தாழ்ந்த சாதியார் ஒழுக்கமுடையராயிருந்தால் உயர்ந்த சாதியார் ஆவரென்றும் , உயர்ந்தசாதியார் ஒழுக்கமில்லாதவராயிருந்தால் இழிந்த சாதியார் ஆவரென்றும் கண்டுகொள்க. பிறப்பினாற் பயனில்லை என்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "சூத்திரனு மொழுக்கமுறின் மறையோ னெப்பான், சூத்திர னெப்பான் மறையோ னொழுக்கம்விட்டால்" என்றார் பிறரும். (திருவானைக்காப்புராணம்-கோச்செங்கணார் வழிபடுபடலம் 26)

ச. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கம் குன்றக் கெடும்.
(134)

(இ-ம்) பார்ப்பானானவன் தான் கற்ற வேதத்தை

மறந்துவிட்டானுனலும் அவன் குலங் கெடாமையால் திரும்பவும் கற்றுக்கொள்ளலாகும். ஒழுக் கத்தை விட்டானுனல் இழிந்த சாதியானுவன் என்பதாம். இதனுல், வேதம் ஓதுதலைப்பார்க்கினும் ஒழுக்கம் உயர்ந்ததென்று கண்டுகொள்க. உயர்ந்த குலத்தானுக்கே ஒழுக்கத்தைக் கைவிடுதல் ஆகாதென்றுல், தாழ்ந்த குலத்தானுக்கு ஒழுக்கத்தைக் கைவிடுதலாகாதென்பது சொல்லாமலே விளங்கும்.

ரு. அழுக்கா றுடையான்கண் ஆக்கம்போன் றில்லை
ஒழுக்க மிலான்கண் உயர்வு. (135)

(இ-ம்) பிறரிடத்துக் காணப்படும் செல்வமுதலிய நலன்களைக்கண்டு பொறுமையடைபவனிடத்து அச் செல்வமில்லாமற் போதல்போல் ஒழுக்க மில்லாதவனிடத்து உயர்ச்சியில்லாமற் போய்விடும் என்பதாம். எனவே, ஒருவனுயர்தற்குக் காரணம் ஒழுக்கமென்பதாயிற்று. பொறுமையுடையவ னிடத்துச் செல்வமில்லாதானுல் அவன் சுற்றத்தாரும் வறுமையடைவர். எப்படியென்றுல், சுற்றத்தாருக்குக் கொடுத்து உதவிசெய்ய அவனுக்கு இயலாமையாலென்க.

௬. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தின்

ஏதம் படுபாக் கறிந்து.

(136)

கச-ஆம் அதி.—ஒழுக்கமுடைமை.

சக

(இ-ம்) உயர்ந்த குலத்தினராயிருந்தாலும் ஒழுக்கத்தைக் கைவிட்டால் இழிந்த குலத்தினரென்று சொல்லப்படுங் குற்றந் தமக்கு வருமென்பதறிந்து மனவலியுடையார் செய்தற்கருமையாகிய அவ்வொழுக்கத்திற் குறைய மாட்டாரென்பதாம்.

எ. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தின்

எய்துவ ரெய்தாப் பழி.

(137)

(இ-ம்) எல்லாரும் ஒழுக்கத்தால் மேம்பாட்டையடைவர். அப்படிப் பட்ட ஒழுக்கத்தைத் தவறவிடுதலால், அவ்வொழுக்கமில்லாத காலத்தில் தாம் அடைதற்குரியதல்லாத நிந்தையை அடைவரென்பதாம். மேம்பாடு- நன்கு மதிப்பு. நிந்தை-பிறர் தம்மை அவமதித்துக் குறைகூறுதல்.

அ. நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கந் தீயொழுக்கம்

என்றும் இடும்பை தரும்.

(138) (இ-ம்) ஒருவனுக்கு நல்லொழுக்கமானது தருமத்துக்குக் காரணமாய் நின்று, இம்மையினும் மறுமையினும் இன்பத்தைக் கொடுக்கும். தீயவொழுக்கமானது, பாவத்திற்குக் காரணமாய் நின்று, எந்தக் காலத்தும் இம்மையினும் மறுமையினும் துன்பத்தைக் கொடுக்குமென்பதாம். நல்லொழுக்கம்-விதிப் படி நடத்தல். தீயவொழுக்கம்-விதிக்கு மாறுபட்டு நடத்தல்.

கூ. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய

வழுக்கியும் வாயாற் சொலல்.

(139)

(இ-ம்) ஒழுக்க முடையவருக்கு மறந்தாலும் தம்வாயால் தீயசொற் களைச் சொல்லுந் தொழில்கள் உண்டாகமாட்டா வென்பதாம். ஏனென்றால், நல்ல சொற்களையே பேசும் பழக்கமுடைமையாலென்க.

சௗ. உலகத்தோ டொட்ட ஒழுகல் பலகற்றுங்

கல்லா ரறிவிலா தார்.

(140)

(இ-ம்) காலத்துக்குத் தக்கவாறு உயர்ந்தோர் பலரும் நடந்த முறைப் படி நடத்தலைச் செய்யாதவர் பல நூல்களைப் படித்திருந்தாராலும் அறிவில்லாதவரே யாவரென்பதாம்.

காலத்துக்குத் தக்கவாறு உயர்ந்தோர் பலரும் நடந்த முறையாவது—தரும சாஸ்திரங் கூறியவற்றுள் அந்தந்தக் காலத்துக் கிணங்க ஏற்பனவற்றைக் கொள்ளுதலும் ஏலாதவற்றைத் தள்ளுதலுமே. கற்றும் அறிவில்லாதவ ரென்றதனால், கல்விக்குப் பயன் அறிவும், அறிவுக்குப் பயன் ஒழுக்கமுமென்பது கண்டுகொள்க.

---

சுஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

## 15-ஆம் அதி.—பிறனில் விழையாமை.

அஃதாவது, காம மயக்கத்தால் அந்நியனுடைய மனைவியை யிச்சியா திருத்தல்.

க. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
தறம்பொருள் கண்டார்க ணில். (141)

(இ-ம்) அந்நியனுக்கு உரிமைப் பொருளாகிய மனைவியை யிச்சித்துச் செல்லும் அறியாமைக்குணம் இந்தப் பூமியினிடத்துத் தரும நூலையும் பொருள் நூலையும் படித்து அறிந்தவரிடத்து இல்லை யென்பதாம். எனவே, இன்பநூலைப் படித்தவரிடத்து உண்டென்பதும்

அது நல்லதில்லையென்பதும் யூகித்தறிந்துகொள் க. பொருள்நூல் - பொருள் சம்பாதிக்கும் வழியைச் சொல்லும் நூல்.

உ. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்.
(142)

(இ-ம்) காமங்காரணமாக அறத்தினின்று விலக்கப்பட்ட பாவவழியிற் சென்றாரெல்லாருள்ளும் அந்நியனுடைய மனைவியை விரும்பி அவன் தலைவாயிலிற்போய் நிற்கும் அறிவில்லாதவரைப்போலும் வேறொரு அறிவில்லாதவர் இல்லை யென்பதாம். எந்தக் காரணத்தால் அறிவில்லாமற் போனாலுங் காமங் காரணமாக அறிவில்லாமற்போதல் பெரும்பாவமென்பது கருத்து.

ங. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
றீமை புரிந்தொழுகு வார்.
(143)

(இ-ம்) எந்த விதத்தாலுந் தம்மைச் சந்தேகப்படாமல் நிச்சயமாகத் தெளிந்து சிநேகஞ் செய்தவாது மனையாளிடத்திற் காம இன்பத்தை அநுபவித்துத் திரிவார் உயிர்க்குறுதியைத் தரும் நலங்களை

யிழந்தவராதலால் உயிரிருந்துஞ் செத்தவராவரென்பதாம்.

௪. எனைத்துணைய ராயினு மென்னாந்
தினைத்துணையுந்
தேரான் பிறனில் புகல் .
(144)

(இ-ம்) எவ்வளவு பெருமையுடையவரா யிருந்தாலும் தன் குற்றத்தைச் சிறிதும் உணராதவராய் அந்நியருடைய மனையாளிடத்துக் காம மயக்கத்தால் செல்வாரானால் அப்பெருமையெல்லா மிழந்து சிறுமையடைவரென்பதாம்.

## கரு-ஆம் அதி.—பிறனில் விழையாமை.

சா௯

இதற்குதாரணமாக, இந்திரன் கௌதமமுனிவர் மனையாளும், சதானந்த முனிவர் தாயுமாகிய அகலிகையிடத்துக் காமங்கருதிச் சென்று பெருமை யிழந்து சிறுமையடைந்த சரித்திரத்தைத் திருவிளையாடற்புராணத்துட் கண்டுகொள்க.

௫. எளிதென இல்லிறப்பா னெய்துமெஞ்
ஞான்றும்
விளியாது நிற்கும் பழி.
(145)

(இ-ம்) பிறர் மனையாளிடத்துச் செல்லுதல் இலேசென்று நினைத்துப் பின்வரும் தீமைகளை யெண்ணாமல் நீதிதவறிச் செல்லுவான், எந்தக் காலத் தும் அழியாது நிற்குங் குடிப்பழியை அடைவனென்பதாம். பிறன் மனை யாளை இச்சித்தலால் வரும் பழி இச்சித்தவனோடு நில்லாது, அவன் பிறந்த குடியிலும் நிற்குமென்பது கருத்து.

சு. பகைபாவம் அச்சம் பழியென நான்கும்
இகவாவாம் இல்லிறப்பான் கண் .
(146)

(இ-ம்) பிறன்மனையாளிடத்து நீதி கடந்துபோய் இன்பம் அநுபவிப் பவனிடத்து பகையும், பாவமும், பயமும், குடிப்பழியுமாகிய இந்நான்கு குற்ற மும் எந்தக் காலமும் நீங்குதலில்லை யென்பதாம். உதாரணமாக "காணிற் குடிப்பழியாங் கையுறிற் கால்குறையும், ஆணின்மை செய்யங்கா லச்சமாம்" என்னும் செய்யுளைக் காண்க. (நாலடியார் தீவினையச்சம் 4.)

எ. அறனியலா னில்வாழ்வா னென்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்.
(147)

(இ-ம்) தருமமாகிய தன்மையோடு இல்லறத்தில் வாழ்வானென்று சொல்லப்படுவான் எவனென்றால், பிறனுக்கு உரிமைப்பொருளாகி அவனு டைய சொல்வழி

நிற்கும் மனையாளது இன்பத்தை விரும்பாதவனே என்ப தாம். எனவே, தருமத்தின் குணமாவது பிறன் மனைவியை ஆசைப்படா திருத்தலென்று கண்டுகொள்க.

அ . பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ ஆன்ற ஒழுக்கு.
(148)

(இ-ம்) அந்நியனுடைய மனைவியைக் காம இச்சையாற் பாராத பெரிய ஆண்தகைமை, அறிவுடையாருக்குத் தருமமாம். அம்மட்டோ! உயர்ந்த ஒழுக் கமும் ஆமென்பதாம். செய்தற்கரிய தருமமும் நல்லொழுக்கமும் பிறன்

ருது திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

மனையாளை ஆசைப்படாதிருத்தலென்றால், இது எவ்வளவு உயர்ந்ததென்று அறிவுடையார் கருதவேண்டும். ஆண்தன்மை-ஆடவர்க்குரிய பெருமை.

கூ. நலக்குரியார் யாரெனில் நாமநீர் வைப்பிற்
பிறர்க்குரியாள் தோள்தோயா தார்.
(149)

(இ-ம்) அகலத்தாலும் ஆழத்தாலுங் கண்டவர்க்குப் பயத்தைத்தரும் கடலாற் சூழப்பட்ட இங்கிலவுலகத்தில் எல்லா நலங்களும் அடைதற்குரியவர் யாவரென்றால், பிறனுக்கு உரிமைப்பொருளாயுள்ள மனைவியினது தோள்களைத் தழுவி காமம் அநுபவியாதவ ரென்பதாம். எனவே, இவரே இம்மை யின்பமும் மறுமையின்பமும் அடைந்தவரென்பது கருத்து.

கO. அறன்வரையான் அல்ல செயினும் பிறன்வரையாள்

பெண்மை நயவாமை நன்று.

(150)

(இ-ம்) தருமசாத்திரத்தில் விதிக்கப்பட்ட விதிகளைக் கடந்து பாவங்களையே ஒருவன் செய்தாலும், அந்நியனுடைய சுதந்தரத்திலிருக்கும் மனையாளின்பத்தை விரும்பாதிருத்தல் அவனுக்கு நல்லது என்பதாம். எனவே, விரும்புதல் மிகக் கொடிய பாவமென்பதாயிற்று. விரும்புதலே மிகக் கொடிய பாவமானால் அனுபவித்தல் கொடியதினுங் கொடியதென்பது கூறவும் வேண்டுமோ?

---

## 16-ஆம் அதி.—பொறையுடைமை.

அ ஃத ாவது-காரணம்பற்றியாவது, அறியாமையாலாவது ஒருவன் தமக் குக் குற்றஞ் செய்தால், தாமும் அவனிடத்துக் குற்றத்தைச் செய்யாமல் பொறுத்தலுடையவராயிருத்தல்.

க. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
யிகழ்வார்ப் பொறுத்தல் தலை.
(151)

(இ-ம்) தன்னை வருந்தும்படி வெட்டுங் கருவிகொண்டு தோண்டு வாரை வெறுத்துவிடாமல் சுமக்கும் நிலத்தைப்போலத் தம்மை அவமதித்து, இகழ்ச்சியாகப் பேசுகின்றவரைக் கோபியாமல் பொறுத்துக்கொள்ளுதல் ஒருவருக்கு முதன்மையான தருமம் என்பதாம். வெட்டுங்கருவி - மண் வெட்டி.

உ. பொறுத்த லிறப்பினை யென்றும் அதனை
மறத்த லதனினு நன்று.
(152)

கசு-ஆம் அதி.—பொறையுடைமை.

ஜரு

(இ-ம்) தம்மைப் பிறர் அவமதித்துப் பேசுங் குற்றத்தைத் தாம் அவ ரைத் தண்டிக்குங்காலம் வந்த இடத்தும் பொறுத்துக்கொள்ள வேண்டும். அக்குற்றத்தை

நினைத்துக்கொண்டிராமல் குற்றஞ் செய்த அப்பொழுதே அதை மறந்துவிடுதல் பொறுத்துக்கொண்டிருப்பதைப் பார்க்கினு மேலான தருமம் என்பதாம். இக்கருத்துப் பற்றியே "ஒருவன் செய்த நோய் பொறுப் பவ னடுவுளன் பொறுக்கு நெஞ்சமு மறப்பவன் உயர்ந்தவன்" என்றார் பிறரும். (பிரபுலிங்கலீலை) எப்படி யென்றால், ஒருவன் செய்த குற்றத்தை நினைத்துக்கொண்டிருந்தால் சமையம் வந்தவிடத்து அவனுக்குத் துன்பஞ் செய்ய நினைவு எழுந்தாலும் எழும், மறந்துவிட்டால் அந்நினைவும் உண்டாகாது ஆதலாலென்க.

ந. இன்மையுள் இன்மை விருந்தொரால் வன்மையுள்

வன்மை மடவார்ப் பொறை.

(153)

(இ-ம்) தரித்திரத்தினுள் உயர்ந்த தரித்திரமாவது, தம்மிடத்தில் வந்த விருந்தினரை யேற்றுக்கொள்ளாமல் விலக்குதலாம். அதுபோல வலிமையுள் உயர்ந்த வலிமையாவது, அறிவில்லாதவர் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்வது என்பதாம். வலிமை-இவ்விடத்து உயர்ச்சி.

ச. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை

போற்றி யொழுகப் படும்.

(154)

(இ-ம்) ஒருவன் எல்லாக்குணமும் அடங்கிய பெருங்குணத்தை விரும்புவானுனல் அவனுல் பொறுமையாகிய செல்வத்தைத் தன்னிடத்தில் நின்று நீங்காமல் காக்கவேண்டுமென்பதாம். இதனுல், பொறுமைக்குணத் தைப் பொன் போலப் போற்றவேண்டுமென்பதாயிற்று. போற்றல்-இவ்விடத் துக் காப்பாற்றல். இதற்குதாரணமாக, "பொருள் தனைப் போற்றிவாழ்" என்ற ஔவையார் திருவாக்கைக் காண்க. (கொன்றைவேந்தன்)

ரு. ஒறுத்தாரை யொன்ருக வையாரே வைப்பர்
பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து. (155)

(இ-ம்) தமக்குப் பிறனொருவன் தீங்கு செய்தால் அத்தீங்கைப் பொறுத்துக்கொள்ளாமல் அவனைத் தண்டித்தவரை அறிவுடையார் ஒரு பொருளாகத் தம் மனத்து நினைக்கமாட்டார். அத்தீங்கைப் பொறுத்துக் கொண்டவரைத் தம் மனத்துப் பொன்போலப் பொதிந்து வைத்துக்கொள்வரென்பதாம்.
பொதிதலாவது-இடைவிடாது நினைத்தல்.

௬. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம்
பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழ்.
(156)

(இ-ம்) தமக்குக் குற்றஞ்செய்தவனைத் தண்டித்தவருக்குத் தண்டித்த ஒருநாள் மட்டுமே இவனைத்தண்டித்து நினைத்தது முடித்தோமெனக் கருவங் கொண்டிருக்கும் இன்பம் உண்டாம். அக்குற்றத்தைப் பொறுத்துக்கொண் டவருக்கு உலக மழியுங் காலம் வரையும் கெடாத புகழ் உண்டா மென்பதாம். இதனால், செய்த அன்றே அழியும் இன்பத்தைப் பார்க்கினும் என்றும் அழியாத புகழை யுண்டாக்குவதே நல்லதென்று கண்டுகொள்க.

எ. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
தறனல்ல செய்யாமை நன்று.
(157)
(இ-ம்) செய்யத்தகாத தீக்கொடுஞ் செய்கைகளைத் தனக்குப் பிறர் ஒருவர் செய்தாராலும் அக்குற்றத்தால் அறக்கடவுள் அவருக்கு விதிக்கும் துன்பத்தை நினைந்துவருந்தித் தான் அவருக்குப் பாவமாகிய கொடிய விஷ யங்களைச் செய்யாதிருத்தல் நல்லது என்பதாம். செய்தால் தாமும் அவருக் குச் சமானமாவரென்பது

கருத்து. இக்கருத்துப் பற்றியே "கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டு மாங்கவரைப், பேர்த்துநா கௌவினு நீங்கில்லை" என்றார் பிறரும். (நாலடியார் சினமின்மை 10.)

அ . மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
தகுதியான் வென்று விடல்.
(158)

(இ-ம்) மனவலிமைச் செருக்கால் ஒருவர் தம்மிடத்துக் கேடு விளைத் தாராயினும் அவரைத் தாம் தம்முடைய பொறுமையாற் பொறுத்து வெற்றி கொள்ளவேண்டு மென்பதாம். தாம் வென்றுவிடுதலால் அவர் தோல்வி யடைந்தாரென்பது கண்டுகொள்க. தோல்வியடைதலாவது, என்ன செய் தாலும் பொறுத்துக்கொண்டிருக்கும் இவருக்கு நாம் இனியொன்றுந் தீமை செய்தல்ாகாதென்று அடங்கியிருத்தல்.

கூ . துறந்தாரிற் றாய்மை யுடையர் இறந்தார்வா
யின்னாச்சொல் நோற்கிற் பவர்.
(159)

(இ-ம்) நன்மார்க்கத்தை யகன்று சென்றவரது வாயில் நின்றுவரும் துன்பத்தைத் தரும் சொற்களைப்

பொறுத்துக்கொள்வார் ஒருவர் இல்லறத்திலிருந்தாராலும், துறவறத்தை யடைந்து நின்ற பெரியாரைப்போல்

கஎ-ஆம் அதி.—அழுக்காருமை. சஎ

மனக்குற்ற மில்லாமையாகிய பரிசுத்தத்தையடைவர் என்பதாம். நோற்றல்- இவ்விடத்துப் பொறுத்தல்.

கoு. உண்ணது நோற்பார் பெரியர் பிறர்சொல்லும்
இன்னுச்சொல் நோற்பாரிற் பின். (160)

(இ-ம்) விரதங்களால் உணவை நீக்கிப் பசியைப் பொறுத்துத் தவஞ் செய்பவரே பெரியவர். அவரும், எண்ணுமிடத்து அறிவில்லார் சொல்லுந் துன்பமான சொல்லைப் பொறுத்துக்கொள்வாருக்குப் பின்னே நிற்பவராவ ரென்பதாம். எனவே, அறிவில்லாதவர் செய்த குற்றத்தைப் பொறுத்தலான து தவஞ்செய்தலைப் பார்க்கினும் அருமை யென்பதாயிற்று. அருமை யென்பதற்குப் பெரிது என்பது பொருள்.

---

## 1 7-ஆம் அதி.—அழுக்காருமை.

அஃதாவது, பிறருடைய செல்வ முதலிய நலங்களைக்கண்டு பொறாமைப் படாதிருத்தல்.

க. ஒழுக்காறுக் கொள்க ஒருவன்றன் னெஞ்சத்

தழுக்கா றிலாத இயல்பு.

(161)

(இ-ம்) ஒருவன் தன் மனத்தினிடத்துப் பொறாமை யென்னுங் குற்றமில்லாத அறிவோடு கூடிய தன்மையைத் தனக்குச் சொல்லப்பட்ட ஒழுக்கத்தின் முறையாகக் கொள்ளவேண்டு மென்பதாம். இத் தன்மையும் ஒழுக்கத்தைப்போல நன்மையைக் கொடுத்தலால் உயிரைப் பார்க்கினும் அதிகமாகப் பாதுகாக்கவேண்டுமென்பது கருத்து. தன்மை-குணம்.

உ. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டும்

அழு க்காற்றின் அன் மை பெறின் .

(162)

(இ-ம்) ஒருவன் எல்லாரிடத்தும் பொறாமையில்லாததாகிய குணத்தைப் பெறுவானானால், அவன் அடையும் பெரிய பிரயோசனத்துள் மேற்கூறிய பொறாமையில்லாததாகிய குணத்துக்குச் சமானமானது ஒன்றுமில்லை யென்பதாம். எல்லாரிடத்து மென்றதனால், பகைவரிடத்தும் பொறாமைப் படுதலாகாதென்பது அறிக.

ந .

அறனாக்கம் வேண்டாதா னென்பான் பிறனாக்கம்
பேணா தழுக்கறுப் பான்.

(163) சஅ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) மறுமைக்குப் பயனாகும் தருமமும், இம்மைக்குப் பயனாகும் செல்வமும் வேண்டாதவனென்று சொல்லப்படுவான் எவனென்றால், அந்நிய னுடைய செல்வ முதலிய நலங்களைக் கண்டவிடத்துச் சந்தோஷப்படாமல் பொறாமைப்படுவா னென்பதாம். இதனால், பொறாமையுள்ளவன் கேடு பெறுவா னென்பதாயிற்று. முதலிய நலங்கள்-மனைவி, மக்கள், ஆடை, ஆபரணம், மணி, பொன், விளைநிலம், வாகனம், புகழ் ஆகியவையும் மற்றவை யுமாம்.

ச. அழுக்காற்றின் அல்லவை செய்யார் இழுக்காற்றி
னேதம் படுபாக் கறிந்து.

(164)

(இ-ம்) பொறாமைப்படுதலாகிய தீயவழியால் இம்மையினும் மறுமை யினும் தமக்குத் துன்பம் வருதலை

அறிவுடையார் அறிந்து பொறாமை காரண மாகத் தருமத்துக்கு வேறாயு ள்ள பா வங்களைச் செய்யமாட்டாரென்பதாம். பாவங்களாவன:-செல்வம், கல்வி முதலிய நலங்களுடையார்க்குத் தீங்குசெய்ய நினைத்தலும், சொல்லுதலும், செய்தலுமாம்.

ரு. அழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.
(165)

(இ-ம்) பகைவரில்லாமல் ஒருவரிருந்தாராலும் அவருக்குக் கேடா
கிய தீமைகளைச் செய்தற்குப் பொறாமையொன்றே போதும். வேறு பகை
வர் வேண்டுவதில்லை யென்பதாம். ஆதலால், இவ்விரண்டும் உடையார்க்குப்
பெருங்கே டு விளையுமென்பது நுட்பமாகக் கண்டுகொள்க. இவ்விரண்டு -
பொறாமையும், பகையுமாம்.

சு . கொடுப்ப தழுக்கறுப்பான் சுற்றம் உடுப்பதூஉம்
உ ண்பதூஉம் இன்றிக் கெடும்.
(166)

(இ-ம்) ஒருவன் பிறருக்கு ஏதாவது கொடுப்பதைக் கண்டு பொறாமைப்படுவானது சுற்றத்தாரும் உடுப்பதாகிய ஆடையும், உண்பதாகிய அன்னமு மில்லாமற் கெட்டுப்போவ ரென்பதாம். சுற்றத்தாரும் கெடுவ ரென்றதனுல் பொறாமைப்படுவான் கெடுவனென்பது சொல்லாமலே விளங்கும். இக்கருத்துப் பற்றியே "கொடுப்பது விலக்கு கொடியோ யுனது சுற்றம், உடுப்பதுவும் உண்பதுவு மின்றி யொழியுங் காண்" என்றார் கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர். (இராமாயணம் வேள்விப்படலம் பழைய சுவடி)

கஎ-ஆம் அதி.—அழுக்காறமை.

சுக

எ. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்.
(167)

(இ-ம்). பிறருடைய செல்வ முதலிய பெருக்கத்தைக் கண்டு பொறாமைப்படுவானை இலக்குமியானவள் தானும் (அவவித்து) பொறுத்திராமல் அவசரப்பட்டுத் தன்னுடைய தமக்கையாகிய மூதேவிக்குக் காண்பித்து, அவனைவிட்டு நீங்குவளென்பதாம் , எனவே, மூதேவியாகிய தரித்திரம் பொறாமையுடையவனிடத்தே குடியிருக்கு மென்பதாயிற்று.

அ. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.
(168)

(இ-ம்) பொறாமை யென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத் பாவியானவன் தன்னையுடையவனை இம்மையிற் செல்வ முதலிய நலங்களைக் கெடுத்து மறுமையில் நரகத்திற் செலுத்திவிடுவானென்பதாம். இதனால், பொறாமை யானது செல்வத்தைக் கெடுப்பது மாத்திரமல்லாமல் நரகத்தையுங் கொடுப்ப தானல் அது எவ்வளவு கொடிய தென் று யாரும் அதற்குப் பயப்படவேண்டு மென்பது தெளிவாகக் காண்க.

கூ. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமுஞ் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.
(169)

(இ-ம்) பொறாமையாகிய தீங்குடையான் செல்வமுடையவனு யிருப்ப தையும் பொறாமை யில்லாததாகிய ஒழுங்கு (நியாயம்) உடையான் தரித்திர முடையவனு யிருப்பதையும் அறிவுடையார் ஆராயவேண்டு மென்பதாம். ஆராய்ச்சி செய்தால் பொறாமையானது செல்வமடைதற்குக் காரணமாகாமை யாலும், செம்மையாகிய ஒழுங்கு தரித்திர மடைதற்குக்

காரணமாகாமை யாலும் அவனவன் முற்செய்த நல்வினையால் செல்வமும் வறுமையும் வந்தன என்று தெரிந்துகொள்ளலாமென்பது கருத்து.

கo. அழுக்கற் றகன்றாரு மில்லையஃ தில்லார்
பெருக்கத்திற் றீர்ந்தாரும் இல். (170)

(இ-ம்) பொறாமைப்பட்டுச் செல்வத்திலுயர்ந்தவருமில்லை. பொறா மைப்படாமல் செல்வத்தில் தாழ்ந்தவருமில்லை யென்பதாம். எனவே, பிற ருடைய செல்வத்தைக்கண்டு பொறாமைப் படுபவனுக்குத் தன் செல்வம் விருத்தியாகமாட்டாதென்பது கண்டுகொள்க.



## 18-ஆம் அதி—வெஃகாமை.

அஃதாவது, பிறருக்குரிய பொருளை அபகரியாதிருத்தல்.

க. நடுவின்றி நன்பொருள் வெஃகிற்

குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்.

(171)

(இ-ம்) பிறருக்குரிய நற்பொருளை அபகரித்தல் தரும மல்லவென்று நினையாமல் ஒருவன் எடுத்துக்கொண்டால் அச் செய்கையானது எடுத்துக் கொண்டவனது குடியைக் கெடச்செய்து குற்றத்தையும் கொடுத்துவிடும் என்பதாம். குற்றம்-திருடனென்று பிறர்கூறும் வசைச்சொல்.

உ. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
நடுவன்மை நாணு பவர்.

(172)

(இ-ம்) பிறருடைய பொருளுக்குத் தாம் உரிமையுடையவர் அல்லரென்று நினைக்கும் நடு (நியாயம்) இல்லாமைக்குப் பயப்படுகின்றவர் தமக்கு வரும் சுகநலத்தை விரும்பிப் பிறர்பொருளை அபகரித்தலாகிய வசையினிடத்தே உண்டாகும் செயல்களைச் செய்யமாட்டாரென்பதாம். வசையினிடத்தே உண்டாகும் செயல்கள்-கொலை, களவு செய்தல், பொய் கூறல் முதலியவைகள்.

ங. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
மற்றின்பம் வேண்டு பவர்.

(173)

(இ-ம்) தருமவழியால் வரும் நிலைத்த இன்பத்தை விரும்புவார் பிறரிடத்தில் அபகரித்த பொருளால் தாம் அடையும் நிலையில்லாத இன்பத்தை விரும்பி, அவரிடத்தே பாவச் செயல்களைச் செய்யமாட்டார் என்பதாம். நிலையில்லாத இன்பம்-பாவச் செய்கையால் வருமின்பம்.

.

ச. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர்.

(174)

(இ-ம்) ஐம்புலங்களையும் வென்ற குற்றமில்லாத தோற்றத்தினை யுடையவர் நாம் தரித்திரமுடையோமென்று நினைத்துப் பிறருக்குரிய பொருளைக் கிரகித்தல் செய்யமாட்டாரென்பதாம். ஏனென்றால், ஐம்புலங்களையும் வென்றவாறிவு தீயவழியிற் செல்லாமையால் என்க. ஐம்புலங்களையும் வெல்லுதலாவது-அப்புலங்கள் இழுத்த வழி மனத்தைச் செல்லவிடாமல் அவற்றைத் தம் வசப்படுத்தல். ஐம்புலங்கள்-மெய் வாய் கண் மூக்கு செவி ஆகிய ஐம்பொறிகளுக்கு விஷயமாகிய அறிவுகள். இப்புலங்கள் வழியே

சென்றால் துன்பமுண்டாம் என்பதற்கு உதாரணம், "பொறிகள் யாண்டும் இழுத்திழுத் தலைப்ப நொந்தேன்" என்பது (காஞ்சிப் புராணம்.)

ரு. அஃகி யகன்ற அறிவென்னும் யார்மாட்டும்
வெஃகி வெறிய செயின்.

(175)

(இ-ம்) அறிவுடையவர்பொருளை யிச்சித்து எல்லாரிடத்தும் அறிவோடு கூடாத தீச்செயல்களைச் செய்வாரானால் எல்லா நூல்களிலும் நுட்பமாகச் சென்று விஷயங்களைத் தெரியும் அவர் பேரறிவு என்ன பிரயோசனத்தை யுடையது என்பதாம். இதனால், கற்றதற்கு அழகு பிறர்பொருளை இச்சியா திருத்தலென்பது கண்டுகொள்க.

சு. அருள்வெஃகி யாற்றின்கண் நின்றான் பொருள்வெஃகிப்
பொல்லாத சூழக் கெடும்.

(176)

(இ-ம்) அருளாகிய தருமத்தை விரும்பி அத்தருமவழியாகிய இல்லறத் திலிருப்பவன் பிறர்பொருளை யிச்சித்து, அப்பொருள் வரும்வழியாகிய தீச் செயல்களை நினைத்தால் மேற்கூறிய அருளாகியதருமங் கெட்டுவிடு

மென்ப தாம். நினைத்தால் கெடுமெனவே, செய்தாற் கெடுமென்பது சொல்லாமலே அறிந்து கொள்ளலாம். இதனால், துறவறத்திற்குரிய அருளாகிய தருமத்தை யடையவேண்டுவார் இல்லறதருமத்தை நீள வளரச்செய்யவேண் டு மென் பதும் , இல்லறதருமங் கெடுமானால் அதனாலாகுந் துறவறமுங் கிடையா தென் பதும் உறுதியாம். ஆகவே, இ வவிரண்டு தருமமும் கெடுமென்பது நுட்ப மாகத் தெரிந்துகொள்க.

எ. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
மாண்டற் கரிதாம் பயன் .
(177)

(இ-ம்) பிறர்பொருளை யிச்சித்துக் கவர்ந்துகொண் டு அப்பொருளா லுண்டாகிய செல்வப் பெருக்கை விரும்பாதிருக்கவேண்டும். ஏனென்றால், பின் அநுபவிக்குமிடத்து அப்பொருளா லெய்து மின்பம் நன்மையாகாது ஆதலால் என்பதாம். கவர்தல்-அநியாய வழியாற் பெறுதல். ஏன் நன்மை யாகாதென்றால், இவர் பிறர்பொருளை வஞ்சித்து அபகரித்தவரென்று எல்லா ரும் வசைகூறுதலால் என்க. இவ்வசைக் கிடங்கொடாமல் வாழுமின்பமே நன்மையாம். இக்கருத்துப்பற்றியே இந்நூலாசிரியர் ‘வசையொழிய வாழ் வாரே வாழ்வார்’ என்று 240-ஆவது திருக்குறளிற் கூறினர்.

அ . அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை

வேண்டும் பிறன்கைப் பொருள்.

(178) ருஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) குறையுந் தன்மையுடைய செல்வப் பொருளுக்கு அக்குறைவு வாரமலிருப்பதற்குக் காரணம் எதுவென்று ஒருவன் ஆராயப்புகுந்தால் பிற ருக்குச் சொந்தமாய் அவரிடத்துள்ள பொருளைத் தான் இச்சியா திருத்தல் வேண்டும் என்பதாம். இதனால், பிறர் பொருளை விரும்பி அபகரித்துச் சேர்த்து வைத்தால் அப்பொருள் தன்னிடத்து முன்னுள்ள பொருளையும், "வந்தவெள்ளம் இருந்த வெள்ளத்தையும் கொண்டுபோயிற்று" என்னும் பழமொழிக்கிணங்கக் கொண்டுபோய் விடுமென்பது கருத்து.

சுஅ. அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேருந்

திறனறிந் தாங்கே திரு .

(179)

(இ-ம்) இது தருமமென்று தெரிந்து பிறருடைய பொருளை விரும்பா திருக்கும் அறிவுடையவரைக் காலமும் இடமும் சமயமும் பார்த்து இலக்குமி வந்து சேர்ந்திருப்பாள் என்பதாம். எனவே, செல்வம் வருதற்குக் காரணம் பிறர்பொருளைத் தான் அபகரிக்க நினையாதிருத்தலாம் என்று கண்டுகொள்க.

கo. இறலீனு மெண்ணுது வெஃகின் விறலீனும்
வேண்டாமை யென்னுஞ் செருக்கு. (180)

(இ-ம்) பின் விளையுந் தீமையை நினையாது பிறருடைய பொருளை நாம் அபகரிக்க விரும்பினுல் அவ்விருப்பம் மாணத்துக்குச் சமமான துன்பத் தைக் கொடுக்கும். அப்பொருளை விரும்பாதிருக்குங் கருவமானது தரும வழியாலாகுஞ் சம்பத்தைக் கொடுக்கும் என்பதாம். சம்பத்து-செல்வம்.

---

## 19-ஆம் அதி.—புறங்கூறுமை.

அஃதாவது, பிறரைக் காணுதவிடத்து இகழ்ந்து பேசுதலில்லாதிருத்தல்.

க. அறங்கூறு னல்ல செயினு மொருவன்
புறங்கூறு னென்ற லினிது . (181)

(இ-ம்) தருமம் என்ற சொல்லையும் ஒருவன் வாயினுற் சொல்லாமல் பாவங்களையே செய்தாலும், காணுத இடத்துப் பிறரை யிழிவாகப் பேசமாட் டானென்று உலகத்தார் சொல்லுதலைப் பெறுவானுனல் அதுவே அவனுக்கு நன்மையுடையது என்பதாம். உலகத்தார் சொல்லுதற்குக் காரணம், பிறரை யிழிவாகப்

பேசாதிருத்தல். நன்மையாவது-இவ்விடத்துத் தருமம். இக் கருத்துப்பற்றியே "புறங்கூற்றின் மூகையாய் நிற்பானேல் யாதும், அறங்கூற வேண்டா அவற்கு" என்றார் பிறரும் (நாலடியார் மேன்மக்கள் 10.)

கஅ-ஆம் அதி.—புறங்கூறாமை. ருரு

உ. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே

புறனழீஇப் பொய்த்து நகை.

(182)

( இ-ம் ) தருமமென்பதொன்று இல்லையென அழித்துப் பேசிப் பாவங் களையே செய்வதைப் பார்க்கினும் தீமையுடையது எதுவென்றால், ஒருவரைக் காணாதவிடத்து இகழ்ந்துபேசிக் கண்ட இடத்துப் பொய்யாகச் சிரித்துப் பேசுதல் என்பதாம்.

ங. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாதல்

அறங்கூறும் ஆக்கம் தரும்.

(183)

(இ-ம்) பிறன் ஒருவனைக் காணாதவிடத்து இகழ்ந்துபேசிக் கண்ட விடத்து அவனுக் கினிமையுடையவனாகப் பொய்பேசி ஒருவன் வாழ்தலைப் பார்க்கினும் அப்படிப் பேசாமல் இறந்துபோதலானது தரும நூலாற் சொல் லப்பட்ட நன்மையை அவனுக்கு க்

கொடுக்கு மென்பதாம். (ஆக்கமாகிய) நன்மை-மறுமைப்பயன்.

ச. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
முன்னின்று பின்னோக்காச் சொல். (184)

(இ-ம்) ஒருவன் பின்வரும் குற்றங்களை நோக்காமற் செய்த தீச்செயல் களாகிய சிறுமையை விளக்குஞ் சொற்களை அவன் எதிரே நின்று தாக்ஷணிய மில்லாமல் சொன்னாலும் அவனில்லாத இடத்து அச் சிறுமைச் சொற்களைப் பிறரிடத்துச் சொல்லாதிருக்கவேண்டு மென்பதாம். இவ்விதம் சொல்லா திருப்பவன் பிறரால் நன்கு மதிக்கப்படுவான் என்பது கருத்து. இக் கருத்துப் பற்றியே "பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும், மறவாமே நோற்ப தொன் றுண்டு—பிறர்பிறர், சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து, யார் யார்க்கும் தாழ்ச்சி சொலல்" என்றார் திருவருள் பெற்ற குமரகுருபரமுனிவர். (நீதிநெறி விளக்கம் 20)

ரு. அறஞ்சொல்லு நெஞ்சத்தான் அன்மை புறஞ்சொல்லும்
புன்மையாற் காணப் படும்.

(185)

(இ-ம்) புறங்கூறிப் பிழைக்கும் ஒருவன் தருமத்தை நன்றென்று சொன்னாலும் அவன் மனப்பூர்த்தியாகச் சொல்கின்றானில்லை யென்பது அவன் புறங்கூறுதற்குக் காரணமான மனப்புன்மையா லறியப்படும் என்பதாம். மனப்புன்மை-அற்பத்தனம், அற்பச்செய்கை.

ருசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

கூ. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
திறன்றெரிந்து கூறப் படும்.

(186)

(இ-ம்) பிறனொருவன் பழியாகிய குறையை எடுத்து அவனைக் காணாத இடத்துப் பேசுகிறவன் இப்படிப் பேசுவதை அவன் தெரிந்துகொண்டால் தன்னுடைய பழிகள் பலவற்றுள்ளுங் கேட்டவுடன் சாகுந் தன்மையைத் தரத்தக்க பழியைத் தன்னெதிரே வந்து, அவனாற் சொல்லக் கேட்பன் என்பதாம். எனவே, தானொருவரைச் சிறிது குறைத்துப் பேசினால் அவர் தன்னைப் பெரிது குறைத்துப் பேசுவரென்பது கண்டுகொள்க. இதனால், பிறருடைய வசையை எடுத்துப்பேசுதல் பெருமையல்ல வென்பது கருத்து.

இக்கருத்துப்பற்றியே "பிறர்வசை யுரைத்தல் பெருமை யன்று" என்றார் பிறரும் (வில்லிபாரதம் பழம்பொருந்து சருக்கம் 17)

எ. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்றா தவர்.
(187)

(இ-ம்) தம்மோடுசேர்ந்து சந்தோஷப் படும்விதம் பிறரோடு சிநேகஞ் செய்தலை அறியாதவர் தம் சுற்றத்தாரையுந் தம்மைவிட்டு நீங்கும் விதம் புறத்தே யிகழ்ந்துபேசிப் பிரிந்துபோகச்செய்வர் என்பதாம். இதனால், புறங் கூறுவார்க்கு எல்லாரும் பகையாவரென்பது கருத்து.

அ. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.
(188)

(இ-ம்) தம்மோடு நெருங்கியிருக்கும் உறவினரது குற்றத்தையும் அவரைக் காணாதவிடத்துப் பலரும் அறியும்படி சொல்லுந் தன்மையுடையவர் அயலாரிடத்து என்னசெயல் செய்வாரோ என்பதாம். எனவே, உறவினர் குற்றங்கூறுதல் கொடியதென்பதும் அயலார் குற்றங்கூறுதல் மிகக்கொடியதென்பதும் ஆயின.

கூ. அறநோக்கி யாற்றுங்கொல் வையம் புறநோக்கிப்

புன்சொ லுரைப்பான் பொறை. (189)

(இ-ம்) பிறர் தம்மைவிட்டு நீங்கின சமையம் பார்த்து அவருடைய குறைவாகிய செயல்களைக் கூறுவானுடைய உடற்பாரத்தைப் பூமிதேவி யானவள் அதிகக் கொடியதைத் தாங்குதலே நமக்குத் தருமமென்றெண்ணித் தாங்குவாள் போலும் என்பதாம். இதனல், எல்லாப் பொருளையுந் தாங்குதல் பூமிக்கு இயல்பாயினும் புறங்கூறுவான் போன்ற பாவிகள் உடலைத்தாங்குதல் பெரும்பாரமாமென்று கண்டுகொள்க.

## ௨௦-ஆம் அதி.—பயனில சொல்லாமை.

௫௫

௧0. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றம் காண்கிற்பிற்
தீதுண்டோ மன்னு முயிர்க்கு. (190)

(இ-ம்) அயலாரை நிந்தித்துப் பேசுதற்குக் காரணமாகிய அவர் குற் றத்தை ஆராய்தல்போல அவரை நிந்தித்துப்பேசுந் தம்முடைய குற்றத்தை ஆராய்ந்து பார்ப்பாராளுல் அவருடைய நிலைபெற்ற உயிருக்கு யாதொரு தீங்குமில்லை யென்பதாம். எனவே, தம் குற்றத்தைத் தெரிபவர் பிறர் குற் றத்தைக்

கூறமாட்டாரென்பது கருத்து.

---

## 20-ஆம் அதி.—பயனில சொல்லாமை.

அஃதாவது, தனக்காவது பிறர்க்காவது பொருள் இன்பங்களுள் ஒன்றுங் கொடாத சொற்களைப் பேசாதிருத்தல்.

க. பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும். (191)

(இ-ம்) அறிவுடையார் பலருங் கேட்டு வெறுக்கும்படி தனக்காவது பிறர்க்காவது பிரயோசனமில்லாத சொல்லைச் சொல்லுவான், அறிவுடையார் அறிவில்லாராகிய இருவகையாராலும் இகழ்ந்து பேசப்படுவான் என்பதாம்.

உ. பயனில பல்லார்முற் சொல்லல் நயனில
நட்டார்கட் செய்தலிற் றீது. (192)

(இ-ம்) பிரயோசனமில்லாத சொற்களை அறிவுடையர் அநேகருக்கு முன் (எதிரே) ஒருவன் சொல்லுதல், விருப்பமில்லாத செயல்களைத் தன்னுடைய சிநேகரிடத்துச் செய்தலைப் பார்க்கினுங் கொடியது என்பதாம்.

ங. நயனில னென்பது சொல்லும் பயனில
பாரித் துரைக்கு முரை.
(193)

(இ-ம்) பிரயோசனமில்லாத பொருள்களை ஒருவன் விரித்துரைக்குஞ் சொல்லே இவன் நன்மையாகிய நீதியில்லாதவனென்று அறிவிக்கு மென்பதாம். எனவே, சொற்பொருளறிவார்க்கே அது தெரியுமென்பது காண்க.

ச. நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
பண்பில்சொற் பல்லா ரகத்து.
(194) ருசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) பிரயோசனத்தோடு கூடாத குணமில்லாத சொற்களை ஒருவன் பலரிடத்துச் சொல்வானானால் அச்சொற்கள் அவரிடத்து நியாயத்தோடு பொருந்தாதனவாய், சொல்லிய அவனை நற்குணங்களினின்று நீக்கும் என்பதாம். சொல்லுக்குக் குணமாவன-இனிமையும், மெய்ம்மையும்.

ரு. சீர்மை சிறப்பொடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.
(195)

(இ-ம்) பிரயோசனமில்லாத வார்த்தைகளை நல்ல

குணமுடையவர்கள் பேசுவாராஞல் அவருடைய மேன்மையும், அதனுல் வரும் நன்கு மதிப்பும் நீங்கிவிடுமென்பதாம். நன்கு மதிப்பு நீங்குதலாவது-வீண்பேச்சுப் பேசுகிருரென்று எல்லாராலும் இகழப்படுதல்.

சு. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

(196)

(இ-ம்) தனக்காவது பிறர்க்காவது பிரயோசனமில்லாத வார்த்தைகளைப் பலதரமும் பேசுகிறவனை அவன் மனிதனுயிருந்தாலும், மனிதனுகச் சொல்லவேண்டா. மனிதருக்குள் பதரென்று சொல்லவேண்டு மென்பதாம். நெற்பதர் நெற்போலிருந்தாலும் உள்ளீடாகிய அரிசி யில்லாதது போல மனிதப்பதர் மனிதன்போ லிருந்தாலும் உள்ளீடாகிய அறிவில்லாதவ னென்பது கருத்து.

எ. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
பயனில சொல்லாமை நன்று.

(197)

(இ-ம்) நீதி சம்பந்தமில்லாத வார்த்தைகளை அறிவுடையோர் சொன்னாராஞலும் அது அமையும்.

(பொருந் ந்தும்) பிரயோசனமில்லாத வார்த்தை களைச் சொல்லாதிருக்கப்பெற்றால் அது அவருக்கு நல்லதென்பதாம். சொன்னாலு மென்றதனால், சொல்லமாட்டாரென்பதும், நயமில்லாத வார்த்தையினும் பயனில்லாத வார்த்தை தீயதென்பதும் இதனாலறிந்து கொள்க.

அ. அரும்பயன் ஆயும் அறிவினார் சொல்லார்
பெரும்பய னில்லாத சொல் .

(198)

(இ-ம்) அறிதற்கரிய பயனை ஆராய்ந்து பார்க்கும் நுண்ணிய அறிவு டையார் பெரிய பயனைத் தருதலில்லாத சொற்களைச் சொல்லமாட்டா ரென்பதாம். அறிதற்கரிய பயன்-மேற்பதவிக்குச் செல்லுதலும், மோக்ஷத் திற்குச் செல்லுதலு முதலாயின. பயன்-பிரயோசனம்.

## உக-ஆம் அதி.—தீவினையச்சம்.

ருள

கூ. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார்
மருடீர்ந்த
மாசறு காட்சி யவர்.

(199)

(இ-ம்) மயக்கத்தினின்று நீங்கிய குற்றமற்ற மெய்யறிவுடையவர் பயனில்லாத சொற்களை மறந்தாலுஞ் சொல்லமாட்டாரென்பதாம். பயன்- பிரயோசனம்.

௧௦. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
சொல்லிற் பயனிலாச் சொல்.

(200)

(இ-ம்) சொற்களுக்குள் பயனுடைய சொற்களைச் சொல்லவேண்டும், பயனில்லாத சொற்களைச் சொல்லாதிருக்கவேண்டும் என்பதாம். பயன்-தனக் காவது பிறர்க்காவது உண்டாகும் நன்மைகள்.

---

## 21. ஆம் அதி—தீவினையச்சம்.

அஃதாவது, பாவச்செய்கைகளைச் செய்தற்குப் பயப்படுதல்.

௧. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு.

(201)

(இ-ம்) தீச்செயலென்று சொல்லப்படும் மயக்கத் தைத் தீச்செய லுடையார் செய்யப்

பயப்படமாட்டார். தீச்செயலில்லாதவர் செய்யப் பயப்படுவாரென்பதாம். பயப்படாமைக்குக் காரணம் பூர்வசனனம் தொட்டுத் தீவினையிற் பழகி வந்திருத்தலும், பயப்படுதற்குக் காரணம் அத்தீவினையிற் பழகாதிருத்தலுமெனக் கண்டுகொள்க.

உ. தீயவை தீய பயத்தலாற் றீயவை
தீயினு மஞ்சப் படும்.

(202)

(இ-ம்) தனக்கு இன்பம் உண்டாவதை யெண்ணித் தான் செய்யுங் கெட்ட செய்கைகள் பின்பு துன்பத்தைக் கொடுத்தலால் அச்செய்கைகள் தீயைப் பார்க்கினுங் கொடுமையுடையனவென்று பயப்படுவன ஆகுமென்பதாம். ஏனென்றால், கெட்ட செய்கையாகிய தீவினை வேறொரு காலத்தும், வேறொரு தேசத்தும் தன்னைச் செய்தவன் கூடவேசென்று சுட்டு வருத்தும். அப்படி வருத்துங் குணம் தீக்கு இல்லாமையாலென்க. தீயவே தீய பயத்தலால் என்னும் பாடமும் உண்டு. அப்பாடத்துக்குப் பொருள்-யாகமுதலிய வற்றில் நன்மையுங் கொடுக்கும் தீயைப் போலாமல் ஒருகாலத்திலும் நன்மை

5

வசனமும்.

யைக் கொடாமல் எந்தக்காலத்தும் எந்தஇடத்தும் தீமையே தீவினை கொடுத் தலால் தீக்குப் பயப்படுதலினும் அதிகமாகத் தீவினைக்குப் பயப்படவேண்டு மென்பது. இப்பாடமும் பொருளும் சோழவந்தான் ஊர் அரசஞ்சண்முகனு ரால் முதலிற் கண்டு கூறப்பட்டன.

ங. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.
(203)

(இ-ம்) தம்மை விரோதித்து வருத்தப்படுத்துவாருக்குந் தீமையான காரியங்களைத் தாம் செய்யாதிருத்தலானது தமக்கு நிலைப்பதாகிய நன்மையைத் தரும் அறிவு பலவற்றுள்ளும் முதன்மையான அறிவென்பதாம். இதனால், யாவருக்குந் தீமைசெய்ய லாகாதென்பது கருத்து.

ச. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.
(204)

(இ-ம்) ஒருவன் மற்றொருவனுக்குக் கேடு உண்டாகுஞ் செய்கையை மறந்தாலும்

எண்ணுதிருக்கவேண்டும். எண்ணுவானுனல், எண்ணியவனுக் குக் கேடு உண்டாகுஞ் செய்கையை அறக்கடவுள் சிறிதுந் தாமதியாமல் உடனே எண்ணும் என்பதாம். எண்ணுதிருக்கவேண்டுமென்று சொல்லவே செய்யாதிருக்க வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். அறக்கடவுள் - தருமதேவதை.

ரு. இலனென்று தீயவை செய்யற்க செய்யின்
இலனாகு மற்றும் பெயர்த்து .
(205)

(இ-ம்) நான் தரித்திரமுடையேன் என்றெண்ணி அது நீங்கும் பொருட்டுப் பிறருக்குத் தீங்குதருஞ் செய்கைகளைச் செய்து ஒருவன் பொருள் முதலியவற்றைச் சம்பாதிப்பான் ஆனால் திரும்பவும் முன்னுள்ள தரித்திரத்துக்கு அதிகமாகிய தரித்திரத்தை அடைவான் என்பதாம். எனவே, ஏகதேசம் முன்னிருந்த பொருள் முதலியனவும் பறிபோமென்பது கண்டுகொள்க. ஏகதேசம்-சிறுபான்மை.

சு. தீப்பால தான்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால
தன்னை யடல்வேண்டா தான் .
(206)

(இ-ம்) துன்பஞ்செய்யும் பகுப்பாகிய பாவங்கள்

தன்னைப் பின்பற்றி வந்து வருத்துவதை விரும்பாதவன் தீங்கின் வகையாகிய செய்கைகளைத் உ௨-ஆம் அதி.—ஒப்புரவறிதல். ருகூ

தான் பிறரிடத்துச் செய்யாதிருக்கவேண்டுமென்பதாம். செய்தால் அச் செய் கைகளாகிய பாவங்கள், செய்த தன்னைவந்து வருத்துமென்பது நிச்சயம். இதற்குச் சாட்சியாக "செய்த தீவினை செய்தவற் கெய்திடும், ஐய மில்லை அரன்றிரு வாணையே" என்றார் பிறரும்,

எ. எனைப்பகை யுற்றாரும் உய்வர் வினைப்பகை
வீயாது பின்சென் றடும்.
(207)

( இ-ம்) எவ்வளவு பெரிய பகையுடையவரும் ஒவ்வொரு விதத்தால் அப் பகையைத் தப்பிப் பிழைத்துக்கொள்வர். தீவினையாகிய பகையைத் தப்பிப் பிழைக்கமுடியாது. எப்படியென்றால், இம்மையிலேமட்டுமெல்லாமல் மறுமையி லுந் தான் சென்ற சென்ற இடமெல்லாந் தொடர்ந்து வந்து தீவினையாகிய பகை கெடுக்குமென்பதாம். ஆதலால், சிறிதாயினுந் தீவினைசெய்யாமல் ஒவ் . வொருவனுந் தன்னைக் காத்துக்கொள்ளல் வேண்டும். தீவினை-பாவச்செய்கை.

அ. தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை

வீயா தடியுறைந் தற்று.
(208)

(இ-ம்) ஒருவனுடைய நிழலானது தூரமாக நீண்டுபோனாலும் திரும்ப அவனுடைய காலில் வந்து தவறாது ஒடுங்குதல்போலத் தீங்காகிய காரியங்களைப் பிறருக்குச் செய்தவர் தவறாமல் நிச்சயமாகக் கெடுவரென்பதாம்.

கூ. தன்னைத்தான் காதல னாயின் எனைத்தொன்றுந்
துன்னற்க தீவினைப் பால்.
(209)
(இ-ம்) தன்னை ஒருவன் நன்மையடைய விரும்புதலுடையவனானால் பிறரிடத்துத் தீங்குதரத்தக்க செயல்களைச் செய்யாதிருக்கவேண்டுமென்பதாம். எனவே, பிறருக்குத் தீங்குசெய்தால் தனக்குக் கேடுவரும்படி தன்னை வெறுத்தவனாவனென்பது கண்டுகொள்க.

கா. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்
தீவினை செய்யா னெனின்.
(210)
(இ-ம்) நல்ல வழியிற் செல்லாமல் தீய வழியிற் சென்று பிறருக்குத் துன்பந்தருங் கொடுஞ்செய்கைகளைச் செய்யாதிருப்பானானால் அவனே யாதொரு கேடும்

இல்லாதவனென்று அறிந்துகொள்ளவேண்டுமென்பதாம். இத னால், பிறருக்குக் கேடு செய்யாதவனே தனக்குக் கேடு இல்லாதவனென்பது கருத்து.

---



## 22-ஆம் அதி.—ஒப்புரவறிதல்.

அஃதாவது-உலகநடையை அறிந்து செய்தல். உலகநடை தருமசாத்திரங்களிற் சொல்லப்படுவதல்லாமல் தாமேயறிந்து செய்யத்தக்கது. உலகநடை- உயர்ந்தோர் செய்கை. அஃதாவது அறத்தையாக்குஞ் செயல். அச் செயல் பலவகையானுலும் பெரும்பாலும் ஈகையேயாம், ஆதலால், "ஈதலறம் தீவினை விட் டீட்டல்பொருள்" என்ருர் ஔவையார்.

க. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
டென்னுற்றுங் கொல்லோ உலகு.
(211)

(இ-ம்) தமக்கு மழைபெய்து உதவிசெய்யும் மேகங்களினிடத்து உயிர் கள் என்ன

பிரதியுபகாரஞ்செய்யும்? ஒன்றுஞ்செய்வதில்லை. ஆதலால், அம் மேகங்களுக்குச் சமமானவர் தாம் செய்த உபகாரத்துக்குப் பிரதியுபகாரம் விரும்புவதில்லை என்பதாம். எனவே, எதிர் நன்றியை விரும்பாமல் ஒருவன் செய்யும் உதவியே உதவியென்பது கண்டுகொள்க.

உ. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு. (212)

(இ-ம்) தகுதி (உயர்ச்சி) யுடையவருக்கானல் முயற்சிசெய்து சம்பாதித்த பொருள் முழுவதும் பிறருக்குக் கொடுத்து உதவிசெய்யும் பிரயோசனத்தையுடையதென்பதாம். எனவே, தகுதியில்லாதவருக்கு அப்பொருள் உண்டானல் தாம் உண்ணுதற்கும் காத்துவைத்து இழந்துவிடுதற்கும் ஆமென்பதாயிற்று.

௩. புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே
யொப்புரவி னல்ல பிற. (213)

(இ-ம்) தேவருலகத்திலும் இந்த உலகத்திலும் பிறருக் குதவிசெய்யுந் தொழில்போல நன்மையுடையனவாகிய வேறு தொழில்கள் செய்தல் இல்லை என்பதாம். இந்த உலகத்திற் கொடுப்பாரும் கொள்வாரும் இருத்தல்போலத் தேவருலகத்தில்

அவவிருவருமில்லாமல் எல்லாரும் ஒரே தன்மையரா யிருத்தலால் ஈகையால் வரும் பயன் அவவுலகத்திலும் இல்லையென்று நாயனார் கூறிய நுட்பங் கண்டுகொள்க.

ச. ஒத்த தறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும். (214)

## உஉ-ஆம் அதி.—ஒப்புரவறிதல்.

சுக

(இ-ம்) உலகநடையை அறிந்து அதனைச் செய்வான் உயிரோடு கூடி வாழ்வானவன். அதனையறிந்து செய்யாதவன் உயிரில்லாத பிணத்தோடு ஒன்றாக எண்ணப்படுவான் என்பதாம். எப்படியென்றால், அறிவுஞ் செயலும் பிணத்துக்கு இல்லாமையால் என்க. உலகநடை-உயர்ந்தோர் செய்யும் ஒப்புரவு, அஃதாவது பிறருக்கு உதவிசெய்தல்.

ரு. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு. (215)

(இ-ம்) உயர்ந்தோர் செய்யும் வழக்கத்தை விரும்பி அறியும் பேரறிவுடையவனது செல்வமானது ஊாரெல்லாரும் உண்ணப்படும் நீர்நிலையாகிய குளம் நீர் நிறையப் பெருகி நின்றாற்போல வளர்ந்து எல்லாருக்கும் பிரயோசனப்படும் என்பதாம். உயர்ந்தோர் வழக்கமாவது - பிறருக்கு உதவிசெய்தல்.

௬. யயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம்
நயனுடை யான்கட் படின். (216)

(இ-ம்) பிறருக்கு உதவிசெய்வானிடத்துச் செல்வமுண்டானால் அச் செல்வமானது உண்ணுதற்கு ஆகும் பழமுதலியவற்றைக் கொடுக்கும் ஊர் நடுவிற் பழுத்து நின்றாற்போலும் என்பதாம். எப்படியென்றால்,

மரம்

ஊர்
நடுவில் நின்ற மரத்தில் எல்லாரும் இலேசாக வந்து பழம் பறித்துக்கொள்வது போல உதவிசெய்வானிடத்துள்ள செல்வம் வருத்தப்படாமல் எல்லாரும் வந்து பெற்றுக்கொள்ளலாம் என்க.

௭. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
பெருந்தகை யான்கட் படின்.
(217)

(இ-ம்) ஒப்புரவு (பிறருக்குச் செய்யும் உதவி) உடையவனித்துச் செல்வமுண்டானால் அச் செல்வமானது இலை, காய், பழம், வேர் முதலிய எல்லா மருந்தாகி எல்லாரும் இலேசாக வந்து வேண்டியதை எடுத்துக்கொள்ளும்படி வெளியிடத்தில் நின்ற மரத் தைப்போல , எல்லாருக்கும் பிரயோசன மாகுமென்பதாம்.

௮. இடனில் பருவத்தும் ஒப்புரவிற் கொல்கார்
கடனறி காட்சி யவர்.

(218)

(இ-ம்) செய்யத்தக்க காரியங்களைச் செய்யவேண்டுமென்று அறிந்த இயற்கையறிவுடையவர் தமக்குச் செல்வங் குறைந்த காலத்திலும் பிறருக்கு.

## ௬உ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

உதவிசெய்யுங் கடமையைச் செய்யத் தளர்ச்சியடைய மாட்டாரென்பதாம். இக்கருத்துப்பற்றியே "ஆற்றுப் பெருக்கற் றடிசுடுமந் நாளுநீ, ரூற்றுப் பெருக்கா லுலகூட்டும்" என்று ஒளவையார் அருளிச் செய்தனர். உதாரணம் இஃதொன்றோ? "வறுமையுற் றுழியுந் தொண்டை வளமலி நாட்டோர் தங்க, ளிறமுடல் வருத்தி யேனு மீவதற் கொல்கார்" (காஞ்சிப் புராணம் நாட்டுப்படலம்) இன்னும் பலபல காணலாம்.

௯. நயனுடையான் நல்கூர்ந்தா னாதல் செயுநீர
.
செய்யா தமைகலா வாறு.

(219)

(இ-ம்) பிறருக்கு உதவிசெய்யும் பேரறிவுடையவன் தரித்திரமடைதல் எதுவென்றால், செய்யத்தக்க

கடமையாகிய ஒப்புரவுகளைச் செய்யமுடியாது வருத்தப்படுகின்ற இயல்பு என்பதாம். எனவே, இதுவல்லாமல் தானுண்ணப் படும் உணவுகள் இல்லையென வருந்துதல் அல்லவென்று கண்டுகொள்க. செய்ய முடியாமை-செய்தற்கு வேண்டும் பொருள் வசதியில்லாதிருத்தல். ஒப்புரவு-உபகாரம்.

கo .

ஒப்புரவி னால்வருங் கேடெனின் அஃதொருவன்
விற்றுக்கோட் டக்க துடைத்து.
(220)

(இ-ம்) பிறருக்கு உதவியாகக் கொடுத்தலினாலே யொருவனுக்குப் பொருட்கேடு உண்டாகுமென்று சொன்னால் அக்கேடு, தன்னை விலைக்கு விற்றாயினும் அவன் வாங்கும் தகுதியுடையதென்பதாம். ஏனென்றால், ஒரு காலத்து நிலையில்லாத பொருளைப் பெற்றிருப்பதைப் பார்க்கினும் எந்தக் காலத்தினும் நிலைபெற்றிருப்பதாகிய புகழைப் பெற்றிருப்பது உயர்வாதலா லென்க. இக்கருத்துப்பற்றியே "தம்மை மாறியும் புரிவது தருமமங் நாடு" என்றார் பெரியார். (காஞ்சிப்புராணம் நாட்டுப்படலம் 59 ) கேடுவருமென்று சொன்னால் என்பதனால் அவவிதம் சொல்லுதல் ஏகதேசமென்பதும், அது சொல்வார் அறிவிலாரென்பதும் கூர்ந்து பார்த்தால் நன்கு விளங்கும்.

---

# 23-ஆம் அதி.—ஈகை.

அஃதாவது, வறியவராய் வந்து ஏற்றவருக்கு இல்லையென்னுமற் கொடுத் தல்.

க. வறியார்க்கொன் றீவதே யீகைமற்
றெல்லாங்
குறியெதிர்ப்பை நீர துடைத்து.
(221)

உஉ-ஆம் அதி.—ஈகை.

சுஉ

(இ-ம்) ஒரு பொருளு மில்லாதவருக்கு அவர் வேண்டிய ஒரு பொருளைக் கொடுத்தலே கொடையென்பது. அப்படியல்லாமற் கொடுக்குங் கொடையானது தான் கொடுத்த பொருளளவுக்குத் தக்கபடி வேறொரு பொருளை வாங்கிக்கொள்ளுந் தன்மையுடையது என்பதாம். இப்படிக் கொடுக் கும் கொடை பண்டமாற்றலல்லாமல் கொடை யாகாது என்பது கண்டு கொள்க. பண்டமாற்றாவது-தயிரைக் கொடுத்து நெல்வாங்குதல் போல்வது.

உ. நல்லா றெனினுங் கொளல்தீது மேலுலகம்

இல்லெனினும் ஈதலே நன்று.
(222)

(இ-ம்) ஒருவரிடத்தே ஒன்றை யாசித்து வாங்குவது நல்லதென்பா ராளுலும் தீயதேயாம். (இதுபற்றியே "ஏற்பதிகழ்ச்சி" யென்றார் ஔவை யார்) ஒருவருக்கு ஒன்றைக் கொடுப்பவருக்கு மேலுலகமாகிய சொர்க்க இன்பம் இல்லையென்று சொல்வாராளுலும் கொடுப்பது நல்லது என்பதாம். மேலே சொல்லிய நல்லதென்பாரும், மேலுலகம் இல்லையென்பாரும் இல்லை யென்பது கருத்து.

ங. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.
(223)

(இ-ம்) யாசிப்பவன், யானென்று மில்லாதவனென்று சொல்லும் இழி வான வார்த்தையைத் தான் பிறரிடத்துச் சொல்லாதிருத்தலும், அந்த வார்த் தையை அவன் தன்னிடத்துச் சொன்னவுடனே தடையில்லாமல் கொடுக்கக் கூடியமட்டுங் கொடுத்தலும் ஆகிய இரண்டு குணங்களும் நல்லகுலத்திற் பிறந் தவனிடத்தேயே உண்டாமென்பதாம். இனி, இலனென்னு மெவ்வ முரை யாமை ஈதலென்பதற்கு, யாசகன் என்னிடத்து

ஒன்றுமில்லையென்று சொல்லுமுன்னே அவன் குறிப்பைத் தெரிந்து கொடுத்தலென்றும், தன்னிடத்தில் வந்து சொன்னதுபோல வேறு பிறரிடத்திலும் போய் இல்லையென்று சொல்லாதிருக்கும்படி நிறைந்த செல்வத்தைக் கொடுத்தலென்றும், தன்னிடத்து வந்த யாசகனைப் பின்பு பார்த்தவர் வறியவனென்று சொல்லாதிருக்கும்படி பெரும்பொருளைக் கொடுத்தலென்றும், உலோப குணத்தால் உள்ள பொருள்களை மறைத்து வைத்துக்கொண்டு தானும் ஒன்றுமில்லாதவனா யிருக்கின்றே னென்று சொல்லாமற் கொடுத்தல் என்றும் பலவாறு பொருள் கூறுவாருமுண்டு. குறிப்பறிந் தீதலே கொடையென்பதற்கு உதாரணமாக "குறிப் பறிந் தீதலே கொடைமற் றின்றெனி, மறுத்தலே கேட்டபின் வழங்கல்" என்னுஞ் செய்யுளைக் காண்க. (நைடதம் நள்ன் றூதுப்படலம் 19)

௲௪ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௪. இன்னா திரக்கப் படுதல் இரந்தவர்
இன்முகங் காணும் அளவு .
(224)

(இ-ம்) யாசகர் ஒன்றுமில்லை யென்று வருந்தி

ஒருவரிடம் போய் ஒன்றைக் கேட்டலும், அப்படிக் கேட்டவுடனே அவர் கேட்ட பொருளைக் கொடுக்க முடியுமோ முடியாதோவென்று கொடுப்பவ ரெண்ணி இருத்தலும், யாசிப்பவரது முகமலர்ச்சி காணும்வரையும் துன்பம் என்பதாம். காணும் வரையும் துன்பமென்றதனால் அது கண்டவுடன் இன்பமென்பது தானே விளங்கு மென்பதாயிற்று, இவ்விருவருக்குந் துன்பம் எப்படி யென்றால், யாசிப்பவர் இவர் கொடுப்பாரோ கொடுக்கமாட்டாரோ என்று சந்தேகித்த லால் அவர்க்கது துன்பம். கொடுப்பவர் யாசித்தவர் கேட்ட பொருளைக் கொடுக்க முடியுமோ முடியாதோ வென்று எண்ணுதலால் அவர்க்கது துன்பம் என்று கண்டுகொள்க. முகமலர்ச்சி காணுத லெப்படியென்றால், யாசகர் இச்சித்த பொருளைக் கொ டுப்பவர் கொடுத்தலாலென்க.

ரு. ஆற்றுவார்க் காற்றல் பசியாற்றல் அப்பசியை
மாற்றுவார் ஆற்றலிற் பின்.
(225)

(இ-ம்) மனத்தைத் தம் வசப்படுத்தித் தவஞ்செய்யும் வலிமையுடைய வருக்கு வலிமையாவது, தம்மை வருத்தப்படுத்தும் பசிப்பிணியைப் பொறுத் திருத்தலாம். அவவலிமைதான் அப்பசிப்பிணியை நீக்குவார் வலிமைக்குப் பின்னே நிற்கும் என்பதாம். ஏனென்றால்,

தம்மையுற்ற பசியை உணவால் நீக்கி, உணவில்லாமற் பொறுத்திருப்பார் பசியையும், அவ்வுணவு கொடுத்து நீக்குதலால் இவவிரண்டு மில்லாத தவஞ்செய்வார் வலிமை பின் எண்ணப் பட்டதென்க. ஆற்றுவாராற்றலெனவும் பாடமுண்டு.

௬. அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி.
(226)

(இ-ம்) ஒன்றுமில்லாமல் வறியவராயினாது எல்லா நலங்களையுங் கெடுக்கும் பசிநோயைத் தருமத்தின் பொருட்டுத் தீர்க்கவேண்டும். பொருட் செல்வத்தை யடைந்தவன் ஒருவன் அப்பொருளைக் காப்பாற்றிவைக்கும் இடமாவது அத்தருமம் என்பதாம். தரித்திரன் பசியைத் தீர்த்தவனுடைய பொருள், பின் தனக்கே வந்து உதவுமென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "இம்மையி லளித்த வர்ன்பொருள் மருவிய மறுமையில் வழங்கும் பர்ன்மையால்" என்றார் பிறரும். (நைடதம் நள்ன்றாது 22) பின்னென் பது-இனிவரும் பிறவி.

## உ௩-ஆம் அதி.—ஈகை.

௬௫

எ. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்

தீப்பிணி தீண்டல் அரிது.
(227)

(இ-ம்) தன்னிடத்து வந்தவருக்குத் தானுண்ணும் உணவைப் பகுந்து கொடுத்துத் தானும் உண்ணப் பழகியவனைப் பசியென்னுங் கொடிய நோயானது வந்து தொடுதலில்லை யென்பதாம். கொடியநோய் எல்லா நலங்களையுங் கெடுக்கும் நோய். உண்ணப் பழகியவன், பலநாளும் பிறர்க்குக் கொடுத்து உண்டவன். இதனால், பசிப்பிணியைத் தன்னிடத்து வரவொட்டாமல் தடுப்பதற்கு மருந்து தான் பிறருக்குக் கொடுத்து உண்ணுதலென்பது கண்டு கொள்க.

அ. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்.
(228)

(இ-ம்) தம்மிடத்துள்ள பொருளை ஒருவருக்குங் கொடாமல் வைத்திருந்து பின்பு இழந்துவிடும் சீவகாருண்ய மில்லாதவர் தம்முடைய பொருளைத் தம்மிடத்தில் வந்து யாசிக்கும் தரித்திரமுடையவருக்குக் கொடுத்து, அவர் மகிழ்ச்சியடைதலால் தாமும் சீவகாருணியமுடையராய் மகிழ்ச்சியடையும் இன்பத்தையறியமாட்டாரோ என்பதாம். எனவே, அறிந்திருந்தால் தாம் வறியவருக்குக் கொடுத்து மகிழ்ச்சியடைந்து தம்முடைய பொருளை யிழந்து

விடமாட்டாரென்பதாயிற்று. வறியவர்-தரித்திரர். இக் கருத்துப்பற்றியே "கொடாஅது, வைத்தீட்டி னாரிழப்பர் வான்றோய் மலைநாட, உய்த்தீட்டுந் தேனீக் கரி" யென்றார் பிறரும். (நாலடியார் செல்வநிலையாமை 10)

௯. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமிய ருணல்.
(229)

(இ-ம்) தம்மிடத்துள்ள பொருளை அதிகப்படுத்தும்பொருட்டு வறியவர்க்கு ஒன்றுங் கொடாமல் தாமே தனித்திருந்து உண்ணுதலானது ஒருவருக்குப் பிரசித்துப் போய் யாசிப்பதைப் பார்க்கினும இழிவுடையது. இது நிச்சயமென்பதாம். ஒருவருக்கு இழிவுடையதெனக் கூட்டி முடித்துக் கொள்க. எப்படியென்றால், யாசித்தல் யாசகருக்கு அப்பொழுதுமட்டும் இழிவுடையது, வறியவர்க்குக் கொடாமல் தாமே தனித்திருந் துண்ணுவார்க்கு உண்ணும் அப்போது இழிவும் பின் தரித்திரமடைதலுங் கூடும்; ஆதலா லென்க. இதனால், பிறருக்குக் கொடுத்து உண்பவன் செல்வம் வளருமென்பதும், கொடுத்துண்ணாதவன் செல்வங் குறையுமென்பதுங் கண்டுகொள்க.

9

வசனமும்.

கo. சாதலின் இன்னாத தில்லை யினிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

(230)

(இ-ம்) ஒருவருக்கு இறத்தலைப்போலுந் துன்பம் ஒன்றில்லை. அத் தன்மையுடையதாகிய இறத்தலும், வறியவர்க்கு ஏதேனுங் கொடுக்க முடியாத இடத்து இன்பம் என்பதாம். இன்பம் என்றது வறியவர்க்குக் கொடுத்து உதவி செய்யாதவர் சரீரம் பூமிக்குப் பாரமாதலால் அப்பாரம் நீங்குதல் என்று அறிந்து கொள்க. வறியவர்-தரித்திரர்.

---

## 24-ஆம் அதி.—புகழ்.

அஃதாவது, இல்வாழ்க்கை முதல் ஈகை யிறுதியாகச் சொல்லப்பட்ட இல்லற ஒழுக்கத்தில் தவறாதவருக்கு இம்மைப் பயனாகி இவ்வுலகத்தில் நடைபெற்று நிற்குங் கீர்த்தி.

க. ஈத லிசைபட வாழ்தல் அதுவல்ல
தூதிய மில்லை யுயிர்க்கு.

(231)

(இ-ம்) தரித்திரருக்கே பொருள் முதலானவைகளைக்

கொடுக்கவேண் டும். அதனாலே புகழுண்டாக வாழவேண்டும். அப்புகழையல்லாமல் மனித ருயிருக்குக் கல்வி வீர முதலிய பல இருந்தாலும் அவை எல்லாவற்றினுஞ் சிறப்புடையது கொடையேயென்பது அறிவித்தற்கு இவ்வாறு கூறினர். இக் கருத்துப்பற்றியே "கொடையே யெவர்க்குமெப் பேறுங் கொடுக்கும்" என் றார் சிவஞானமுனிவர். (காஞ்சிப்புராணம் புராண வரலாற்றுப் படலம் 15)

உ. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்

றீவார்மேல் நிற்கும் புகழ்.

(232)

(இ-ம்) சொல்லுவார் சொல்லும், பாடுவார் பாட்டும் ஆகிய எல்லாம் தரித்திரத்தால் வந்து யாசிக்கும் யாசகருக்கு, வேண்டுவன கொடுப்பாரிடத்து நிலைநிற்கும் புகழ் என்பதாம். மூலத்தில் பாடுவார் பாட்டென்று கூறா விட்டாலும், இனம்பற்றி உரையாசிரியர் கூறினர்.

ங. ஒன்றா உலகத் துயர்ந்த புகழல்லாற்

பொன்றாது நிற்பதொன் றில்.

(233)

(இ-ம்) தனக்குச் சமானமில்லாமல் உயர்ந்த

புகழல்லாமல் இந்நில வுலகத்து இறவாது நிற்கும் பொருள் வேறொன்றில்லை என்பதாம். சமரஸ உ௩-ஆம் அதி
.—புகழ். ௬௭
மில்லாமல் உயர்ந்த புகழென்று கூறியது கொடுத்தற்கு முடியாத சரீரத்தி லுள்ள மாமிசத்தையுங் கொடையின் உயர்ச்சியை யறிந்தவர் கொடுத்தலா லென்க. அப்படிக் கொடுத்தவர் ததீசி முனிவர், சிபிச்சக்கரவர்த்தி என்பவர். இச்சரித்திரத்தைப் பல புராணங்களிலு மறியலாம்.

ச. நிலவரை நீள்புகழ் ஆற்றிற் புலவரைப்
போற்றாது புத்தே ளுலகு.
(234)

(இ-ம்) ஒருவன் இந்நிலவுலகத்தினிடத்து என்றும் நிலைநிற்பதாகிய புகழை உண்டாக்கிக்கொள்வானானால் அவனையல்லாமல் தேவருலகம் தன்னை யடைந்துநின்ற ஞானிகளை விரும் பிப் பேசமாட்டாது என்பதாம். ஏனென்றால், புகழுடம்பால் இந்த உலகமும், புத்தேளுடம்பால் தேவசரீரமும் ஒருங்கே ஞானிகள் பெறுத லில்லாமையாலென்க. இதனால், இவ்விரண்டு சரீரமும் பெற்றவன் கொடையாளியாதலால் அவனையே விரும்பிப் பேசுமென்பது கண்டுகொள்க.

ரு. நத்தம்போற் கேடும் உளவாகும் சாக்காடும்

வித்தகர்க் கல்லால் அரிது.
(235)

(இ-ம்) புகழுடம்பு செல்வமடையப் பூத உடம்பு தரித்திரமடைதலும், புகழுடம்பு அழியாது நிற்கப் பூத உடம்பு அழிதலும் உயர்ந்த அறிவுடையவருக்கு உண்டு. அவ்வறிவில்லாதவருக் கு இல்லையென்பதாம். புகழுடம்பு செல் வமடைதலாவது-நாளுக்குநாள் வளர்தல். பூதவுடம்பு தரித்திரமடைதலாவது- நாளுக்கு நாள் ஆயுள் குறைதல். நாளுக்குநாள் ஆயுள் குறைதலுக்கு உதார ணமாக "நாளும்நாம் சாகின் றேமால் நமக்குநா மழாத தென்னே" என் னுஞ் செய்யுளைக் காண்க. (வளையாபதி) புகழுடம்பு அழியாதென்பதற்கு உதாரணமாக "மலரவன்செய், வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா, புகழ் கொண்டு மற்றிவர் செய்யு முடம்பு" என்னுஞ் செய்யுளைக் காண்க. (நீதிநெறி விளக்கம்) இம்மட்டோ, "பூதல மிருக்குங் காறும் புகழுடம் பிருக்கு" மென் றூர் ஒரு பெரியார் (விநாயக புராணம் அரசியல்) புகழுடம்பு உயர்ந்த அறி வில்லார்க் கில்லை யென்றது எதனுலென்றூல், நிலையில்லாத பொருளைக் கொண்டு நிலைநிற்பதாகிய புகழுடம்பு செய்வதாகிய உபாயம் உயர்ந்த அறி வுடையவருக்கே தெரியுமாதலாலென்க.

சு. தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(236)

சுஅ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) மனிதராய்ப் பிறந்தால் புகழுண்டாதற்குக் காரணமாகிய குணத்தோடு பிறக்கவேண்டும் . அப்படிப் பிறவாதவர் மனிதராகப் பிறப்பதைப் பார்க்கினும் மிருகங்களாய்ப் பிறப்பது நல்லதென்பதாம். இக்கருத்து நோக்கியே "காதவழி பேறில்லான் கழுதையோ டொக்குமெனக் காணலாமே" என்றார் பிறரும். (தண்டலையார் சதகம் 25) ஏனென்றால், புக ழில்லாமையால் மனிதரை யிகழ்வாரல்லாமல் மிருகங்களை இகழ்வாரில்லை ஆதலால் என்க.

எ. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
யிகழ்வாரை நோவ தெவன்.

(237)

(இ-ம்) புகழுண்டாக வாழமாட்டாதவர் பிறர் இகழ்ச்சியாகப் பேசிய இடத்து, இக்குற்றம் புகழுண்டாகத் தாம் வாழாமையால் வந்ததென்று தம்மை நொந்துகொள்ளாமல் தம்மை இகழ்ச்சியாகப்பேசிய அவரை

நொந்து கொள்ளுதல் என்ன காரணம் பற்றியோ என்பதாம். நொந்துகொள்ளுதல், வருத்தப்பட்டுக்கொள்ளுதல்.

அ. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னும்
எச்சம் பெறாஅ விடின்.
(238)

(இ-ம்) புகழென்னும் பிள்ளையைப் பெறவேண்டியிருக்க, அதனைப் பெறுவிட்டால் உலகத்தாருக்கெல்லாம் அதுவே இகழ்ச்சி யென்று சொல்வர் அறிவுடையாரென்பதாம். இதனால், தாம் இறந்துபோகத் தம்மால் செய்யப் பட்ட புகழ் என்றும் இறவாமல் நிலை நிற்பதால் அதை அவசியம் செய்ய வேண்டுமென்பது காண்க.

கூ. வசையிலா வண்பயன் குன்றும் இசையிலா
யாக்கை பொறுத்த நிலம்.
(239)

(இ-ம்) புகழைச்செய்து வாழாத உடம்பைச் சுமந்த

நிலம் (தேசம்) விளையாத கொடிய பூமியென்று சொல்லும்படி வளந்தங்கிய எல்லாப் பொருள்களும் விளையுந் தன்மை குறைந்துவிடும் என்பதாம். புகழில்லாத உடம்பு உயிருண்டாயிருந்தாலும் அதனால் பயனில்லாமையால் அவ்வுயிரை யொதுக்கி விட்டு யாக்கை பொறுத்த நிலமென்று நாயனாருளிச்செய்தனர். ஒதுக்கா விட்டால் இசையில்லாதவனைப் பொறுத்த நிலம் என்று கூறியிருக்கலாம். தன்மை-குணம், அல்லது செயல்.

## உரு-ஆம் அதி.—அருளுடைமை.

கூசு

௪௦. வசையொழிய வாழ்வாரே வாழ்வா
ரிசையொழிய
வாழ்வாரே வாழா த்வர்.
(240)

(இ-ம்) தம்மிடத்துப் பிறரிகழ்ந்து பேசும் வசை (நிந்தை) உண்டாகா மல் வாழ்வாரே உயிரிருக்க வாழ்பவராவர். தம்மிடத்துப் புகழ்ந்து பேசும் இசை (புகழ்) உண்டாகாமல் வாழ்வாரே வாழாதாரென்பதாம். எனவே, வசையில்லாமல் வாழ்வாரே

உயிரோடிருப்பவரென்பதும், புகழுண்டாகாமல் வாழ்வாரே உயிரோடிருந்தாலும் பிணமெனப்படுவாரென்பதுங் கண்டு கொள்க.

இனி, தரும சாத்திரங்கள் பலவற்றுள்ளும் பொதுவாகக் கூறப்பட்ட இல்லறத்தின் இயல்பெல்லாம் நாயனுர் தொகுத்துக் கூறியவற்றுள்ளே அறி வுடைய ரர் அடக்கும் முறை தெரிந்து அவற் றுள் அடக்கிக்கொள்ளவேண்டும்.

இல்லறவியல் முற்றிற்று.

---

## உ-வது துறவற இயல்.

அஃதாவது, மேற்கூறிய இல்லறத்தில் தவறாது நடந்து அறிவுடைய ராய்ப் பிறவிக்குப் பயந்து மோக்ஷமடையும் பொருட்டுத் துறந்தவர்க்குரிய அறமாம். அவ்வறமானது—வினையாலாகிய குற்றம் நீங் கி அந்தக் கரணங்கள் பரிசுத்தமாதற்பொருட்டு அவரால் காக்கப்படும் விரதங்களும், அவவிரதங்களால் அந்தக் கரணம் பரிசுத்தமாகிய இடத்து உதிப்பதாகிய ஞானமும் என இரு வகைப்படும். அவற்றுள் விரதங்களாவன: இன்ன தருமம் செய்வேனெ ன வும், இன்ன பாவம் நீங்குவேனெனவும் தம்முடைய

வலிமைக்கேற்ப அளவு படுத்திக்கொள்வன. அவையும் அளவில்லாதன ஆதலால் விரியுமென்று பயந்து அவற்றை யெல்லாந் தம்முளடக்கி நிற்கும் சிலவற்றை மாத்திரம் இவ் விடத்துக் கூறத்தொடங்கி முதலாவது அருளுடைமை கூறுகின்றார்.

---

## 25-ஆம்
## அதி.—அருளுடைமை.

அஃதாவது, யாதொரு சம்பந்தமும் இல்லாமல் எல்லா உயிர்களிடத்துஞ் செய்வதாகிய அருளுடைமை. இது இல்லறத்துக்கு அன்புடைமை சிறந்ததுபோலத் துறவறத்துக்குச் சிறந்ததாம்.



க, அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள.
(241)

( இ-ம் ) செல்வங்கள் பலவற் றுள்ளும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட செல்வு மானது அருளால் வரும்

செல்வமாம். அவ்வருள் நீங்கிய பொருளால் வரும் செல்வங்கள் இழிந்தவரிடத்தும் உள்ளன என்பதாம். அருளால் வரும் செல்வமாவது—உயிரைப் பாதுகாக்கும் அறத்தால் மேன்மையடைதல், இது, உயர்ந்தோரிடத்தே யுள்ளதாதலால் சிறப்புடையது. பொருளால் வருஞ் செல்வம் தாழ்ந்த நீசரிடத்தும் உள்ளதாதலால் சிறப்புடையது அல்ல. பொருளால் வரும் செல்வங்கள்-நெல், மணி, நிலம், பசு முதலியவைகள்.

உ. நல்லாற்றால் நாடி யருளாள்க பல்லாற்றாற்
றேரினும் அஃதே துணை.

(242)

(இ-ம்) காட்சிப்பிரமாணத்தாலும், அநுமானப்பிரமாணத்தாலும் , கடவுள் மொழியாகிய ஆகமப்பிரமாணத்தாலும், இது கூடும் இது கூடாதென்று அறியும் யுத்திப்பிரமாணத்தாலும் நமக்கு இம்மை மறுமைக்கு ஒன்றுக் கொன்று மாறுபட்டிருக்கும் பல சமயக்கொள்கைக்கும் துணையாய் நின்று பயன் தருவது எது என்று ஆராய்ந்து பார்த்துத் தெளிந்தாலும் அருளே யாதலால் எல்லாரும் அருளுடையராக இருக்கவேண்டு மென்பதாம். காட்சிப்பிரமாணம் - கண்ணாற்கண்டு அறிதல். அநுமானப்பிரமாணம் - கண்ணாற் காணாத தீயைப் புகையால் உண்டென்று அறிதல் போல்வது. ஆகமப் பிரமாணம்-உண்மை நூல்கள் சொல்லும் சொல்லை நம்பி அறிதல். அருளாவது எது என்றால்-யாதொரு சம்பந்தமுமில்லாமல் துன்பமுற்ற

வறியவ ரிடத்து, அத்துன்பத்தை நீக்கும்பொருட்டுச் செய்யும் பேரன்பாம். அப் பெரிய அன்பு, ஏதேனும் ஒரு காரணம்பற்றிப் பிறருக்குச் செய்யும் அன்பு முதிரமுதிர உண்டாவது என்று தெரிந்துகொள்க.

௩. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
இன்னா உலகம் புகல்.
(243)

(இ-ம்) இருளென்னும் பெயரையுடைய, மிகத் துன்பஞ்செய்யும் நரக உலகத்திற் போயிருத்தல் மேற்கூறிய அருள்மிகுந்த மனத்தையுடையவருக் கில்லை என்பதாம். நரக உலகம்-பாதாளலோகம்.

௪. மன்னுயி ரோம்பி யருளாள்வார்க் கில்லென்ப
தன்னுயி ரஞ்சும் வினை.
(244)

௨௫-ஆம் அதி.—அருளுடைமை.

எக்

(இ-ம்) என்றும் அழிவில்லாமலிருக்கும் உயிர்களைப் பேணி அவ்வுயிர்களிடத்து அருளுடையவனாக இருப்பவனுக்குத் தன்னுடைய உயிர் பயப்படு

தற்கேதுவாகிய தீவினைகள் உண்டாகமாட்டா என்பதாம். தீவினைகள்-கொலை செய்தல் முதலாகிய கொடுஞ்செயல்கள். இச் செயல்கள் மறுமையில் நரகத் திற் புகுத்திவிடுமாதலால் இச்செயல்களில்லாதவருக்கு நரகமில்லையென்பது கண்டுகொள்க.

ரு. அல்லல் அருளாள்வார்க் கில்லை வளிவழங்கும்
மல்லல்மா ஞாலங் கரி.
(245)

(இ-ம்) அருளுடையவருக்கு எந்தக் காலத்தும் யாதொரு துன்பமும் இல்லை. அதற்குச் சாட்சியாவார், காற்றுச் சஞ்சரிக்கின்ற இவ்வுலகத்தி லுள்ளார் என்பதாம். எப்படியென்றால், தாம் கண்டு தெரிந்ததைக் காணாதவருக்குச் சொல்வாரே சாட்சியென்பவர். ஆதலால், அருளுடையார் துன்ப மடைந்தாரென்று ஒருகாலத்திலும் ஓரிடத்திலும் கண்டு அறிவார் இல்லாமை யால் சாட்சி சொல்வாரில்லை. ஆதலால், அருளுடையாருக்குத் துன்பமில்லை யென்பது உறுதியாயிற்று.

சு. பொருள் நீங்கிப் பொச்சாந்தா ரென்ப ரருள்நீங்கி
யல்லவை செய்தொழுகு வார்.
(246)

(இ-ம்) உயிர்களிடத்துச் செய்யப்படும் அருளைக் கைவிட்டுக் கொலை முதலிய கொடிய பாவச்செயல்களைச் செய்து திரிவாரை மூற் பிறவியிலும் தமக்குறுதிப்பொருளாகிய அறத்தினைச் செய்யாமல் தாம் இப் பிறவியில் துன்பப்படுவதை மறந்தவரென்று அறிவுடை யார் சொல்லுவர் என்பதாம். எனவே, மறவாதவரானால் தீச்செயல்கள் செய்யமாட்டாரென்பது கருத்து.

எ. அருளில்லார்க் கவ்வுலக மில்லைப் பொருளில்லார்க்
இவ்வுலக மில்லாகி யாங்கு.
(247)

(இ-ம்) திரவியம் இல்லாதவருக்கு இவ்வுலகத்தில் அநுபவிக்கும் இன்பம் இல்லையானாற்போலப் பிற உயிர்களிடத்துச் செய்யும் அருளில்லாதவருக்கு மோக்ஷ உலகத்தில் அநுபவிக்கும் இன்பம் இல்லையென்பதாம். ஆகவே இவ்வுலக இன்பத்திற்குப் பொருள் காரணமாவதுபோல மோக்ஷ உலக இன்பத்திற்கு அருள் காரணமென்பது கண்டுகொள்க.

அ. பொருளற்றார் பூப்ப ரொருகால் அருளற்றார்
அற்றார்மற் றாதல் அரிது.

வசனமும்.

(இ-ம்) ஊழ்வினையால் கைப்பொருளை இழந்து வறுமையுடையராயினர், அவ்வறுமை நீங்கி மற்றொருகாலத்துச் செல்வங் கிடைக்கப்பெற்று விளங்குவர். உயிர்களிடத்துக் கருணையில்லாதவராயினர், எந்தக் காலத்தும் தீய செயலுடையவராதலால் ஒருகாலத்திலாயினும், கருணையுடையவராகுதல் இல்லை என்பதாம். இதனால் ஒவ்வொருவரும் அருளுடையவராதலையே விரும்பவேண்டுமென்பது கருத்து.

௯. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேரின்
அருளாதான் செய்யும் அறம். (249)

(இ-ம்) உயிர்களிடத்து அருளில்லாதவன் செய்யுந் தருமத்தை ஆராய்ந்து பார்க்குமிடத்து உண்மைநூற் பொருளை யறிந்து தெளியும் அறிவில்லாதவன் ஒருகாலத்துத் தெரிந்தாற்போலும் என்பதாம். எப்படி யென்றால், நிலைபெற்ற அறிவில்லாதவன் ஒருகாலத்து

உண்மைநூலிற் சொல்லிய பொருளைத் தெரிந்தால் தன் அறிவில்லாமையால் தானே மறந்துவிடுவன்; அது போல உயிர்களிடத்து அருள் இல்லாத வன், ஒரு காலத்து ஏதேனும் ஒரு தருமஞ் செய்தால் தன் அருளில்லாமையால் தானே அழித்து விடுவன் என்க. தன்னறிவு - இயற்கையறிவு. தன்னருள் - இயற்கையாகத் தன் னிடத்துள்ள அருள். இதன் கருத்து-அறஞ்செய்தற்கு மூலம் அருளென் பது. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டது மிகச் சிறுகுழந்தை கையிற் பொன்னாற் செய்த கிண்ணங் கிடைத்ததுபோலு மென்னும் பொருள்பட "மழக்கை யிலங்குபொற் கிண்ணம் போல்" என்று இலக்கணக்கொத்து நூலாசிரியர் உதாரணங் காட்டினர்.

௲௦. வலியார்முற் றன்னை நினைக்கதான் தன்னின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.
(250)

(இ-ம்) ஒருவன் எல்லாவற்றாலும் தனக்குக் குறைந்த எளியவரிடத்து அவரை வருத்தப்படுத்தச் செல்லும்போது எல்லாவற்றாலுந் தனக்கு மேற்பட்ட வலிமையுள்ளவர் தன்னை வருத்தஞ்செய்ய வரும்போது தான் அவருக்குப் பயந்து நிற்பதை நினைக்கவேண்டும் என்பதாம்.

நினைத்தால் எளியவரைத் துன்பஞ்செய்ய மாட்டாரென்பது கருத்து. இதனால், அருள் பிறத்தற்கு உபாயம் கோபத்தை அடக்குதலென்பது கண்டுகொள்க.

## 26-ஆம் அதி.—புலால் மறுத்தல்.

அஃதாவது, ஊன் உண்ணுதலை நீக்குதல்.

ஊன்-மாமிசம்.

க. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்
எங்ஙனம் ஆளும் அருள். (251)

(இ-ம்) தன்னுடைய உடம்பைப் பெரிதாக்கும் பொருட்டு மற்றொரு உயிரினது உடம்பாகிய ஊனை (மாமிசத்தை) உண்பவன் அருளை எவ்வாறு கொண்டு நடத்துவன் என்பதாம். எனவே, பயனில்லாத ஊனை (உடலை) வளர்வித்தல் பயனென நினைத்துப் பிறவுயிரை வருத்துங் கொடுமை செய்பவனே அறிவில்லாத கொடியவனென்பது கண்டுகொள்க. இவனே அருளைக் காப்பாற்றமாட்டானென்பது, எவ்விதம் ஆளுமென்ற இகழ்ச்சிக் குறிப்பால் தெரிந்தது.

உ. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
ஆங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(இ-ம்) பொருளாற் பயனடைதல் அப்பொருளைக் காக்கு முறையாற் காவாதவருக்கு இல்லை. அதுபோல், அருளாற் பயனடைதல் மாமிச போசனஞ்செய்தவருக்கு இல்லை என்பதாம். இதனால் ஊன் தின்றாராயினும் உயிர்களிடத்துத் தீங்கு நினையாராயினால் அருளாற் பயனடைதல் உண்டென் பது மறுக்கப்பட்டது. அருளாவது-எல்லா உயிர்களிடத்தும் ஒரு காரணமுமில்லாமல் இரக்கஞ் செய்தல்.

௩. படைகொண்டார் நெஞ்சம்போல் நன்றூக்கா தொன்றன்
உடல்சுவை உண்டார் மனம்.



(இ-ம்) கொலைசெய்யும் ஆயுதத்தைக் கையிலெடுத்துக்கொண்டு நிற்பவரது மனம் கொலையை நோக்குவதல்லாமல், இரக்கத்தை நோக்காதவாறு போல மற்றொரு உயிரினது உடலாகிய மாமிசத்தைச் சுவையுண்டாகச் சுவைத்து உண்டவர் மனம் அந்த மாமிசத்தையே நோக்குவதல்லாமல் அவ் வுயிரினிடத்து இரக்கஞ்செய்ய மாட்டாது என்பதாம். சுவையுண்டாக என்றது பெருங்காய முதலியவற்றால் சுவையுண்டாகச் செய்த லென்பதாம். எனவே, ஊன் இயற்கையிலே கெட்டது என்பது கருத்து.

ச. அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

(254)



(இ-ம்) அருளாவது எதுவென்றால், கொலை செய்யாதிருத்தலாம். அருளல்லாதது (கொடுமை) எதுவென்றால் கொலை செய்தலாம். பாவமாவது எதுவென்றால், கொலை செய்தலால் வந்த மாமிசத்தைத் தின்னுதல் என்பதாம். தின்னுதல் பாவமாவது எப்படியென்றால், தின்னுதல் காரண மாகவே கொலையுண்டாதலால் என்க.

ரு. உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

(255)

(இ-ம்) உண்ணப்படாத ஊனையுடைய சில பகுப்பிலுள்ள உயிர்களின் நிலை உடம்பினிடத்தே நின்றாலும் அவவூனை யுண்ணாதிருத்த லென்கின்ற அறத்தினிடத்தே நிற்கிறது. ஆதலால் அந்த நிலையழியும் விதமாக ஊனை யுண்பானானால் அவனை விழுங்கிய நரகம் நெடுங்காலம் தன்னிடத்து வைத் திருக்குமல்லாமல் விரைவில் அவனை வாய்திறந்து வெளியே தள்ளமாட்டாது

என்பதாம். உண்ணுதற்காகாத மாமிசத்தையுடைய உயிரோடிருக்கும் விலங்கு முதலியவைகள் மிகுந்திருத்தலும், உண்ணுதற்காகும் மாமிசத்தை யுடைய விலங்கு முதலியவை குறைந்திருத்தலும் பிரத்தியக்ஷமாதலால் இவ் வாறுகூறியிருக்கின்றனர்.

சூ. தினற்பொருட்டாற் கொல்லா துலகெனின் யார்க்கும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். (256)

(இ-ம்) ஊன் (மாமிசம்) உண்பது காரணமாக உலகத்திலுள்ளார் கொலைசெய்யாதிருந்தால் விலைப்பொருள் காரணமாக ஊனை விற்பவரில்லை யென்பதாம். இதனால், கொன்றவருக்கே பாவம்; தின்றவருக்குப் பாவமில்லை யென்பது மறுக்கப்பட்டது கண்டுகொள்க. ஊனுண்பவரில்லையானல் உண்ணுதல் காரணமாகக் கொலையுண்டாக மாட்டாதென்பது யாவருக்கும் வெளிப் படையாகத் தெரியும்.

எ. உண்ணுமை வேண்டும் புலாஅல் பிறிதொன்றன்
புண்ண துணர்வார்ப் பெறின், (257)

(இ-ம்) இறைச்சியாவது மற்றொரு உயிரின் புண்ணென்று அறிந்தவரா ஒருவன் காணப்பெறுவானுனல்

அவரால் புலால் புசித்தல் சுத்தமில்லாத தென்று அறிந்து விட்டுவிடுவானென்பதாம். ஊனுண்ணலும் இழிவைத் தெளியாதவரே அவ்வூனை யுண்பாரென்பது கருத்து.

அ. செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த வூன்

(258) உஎ-ஆம் அதி.—தவம். எரு

(இ-ம்) கெட்டதை நல்லதென்று மயங்கிய குற்றத்தினின்று நீங்கிய அறிவுடையவர் மற்றொரு உயிரினின்று நீங்கிய பிணமாகிய புலாலைப் புசிக்க மாட்டார் என்பதாம். புலால்-மாமிசம்.

சு. அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று.

(259)

(இ-ம்) தீயினிடத்து நெய், தேன், பழம் முதலியவற்றைச் சொரிந்து ஆயிரம் யாகத்தைச் செய்து அதனால் வரும் பயனைப் பார்க்கிலும், ஒரு விலங் கின் உயிர்நின்ற உடம்பினை (ஊனை) அவ்வுயிரைப் போக்கிவிட்டு உண்ணா திருத்தலே நன்மையு டை ய தென்பதாம். இதனால், யாகங்களால் வரும் பயனைப் பார்க்கிலும் கொல்லாமையாகிய விரதம் ஒன்றால் வரும் பயன் பெரிய தென்பது பெறப்பட்டது.

க0 . கொல் லான் புலாலை மறுத்தானைக்
கைகூப்பி

யெல்லா வுயிருந் தொழும்.
(260)

(இ-ம்) ஒரு உயிரையுங் கொல்லாதவனுமாகிப் புலாலை உண்ணாதவனு மாகியவனை எல்லா உயிர்களுங் கைகுவித்து வணங்கும் என்பதாம். இந்த இரண்டு செய்கையுமுடையவன் தேவரில் ஒருவனென்றெண்ணப்படுதலால் எல்லா உயிருந் தொழுமென்று நாயனார் கூறியருளினர். புலால் மறுத்தலா கிய இவ்வதிகாரத்தில் கொல்லாமையும் உடன் கூறியது புலால் உண்ணாமை மாத்திரமிருந்தாற் பயன்படாது; அதோடு கொல்லாமையு மிருந்தால்தான் பயன்படுமென்பது அறிவித்தற்கு என்க. உயிரைக் கொல்லுதல்-உடம்பி னின்று உயிரைப் பிரித்தல்.

---

## 27-ஆம் அதி.—தவம்.

அஃதாவது, மனம் ஐம்பொறிகளின் வழியே செல்லாமல் நிற்கும் பொருட்டு விரதங்களால் உண்டி சுருங்குதலும், கோடைக்காலத்தில் வெயி லில் நிற்றலும், மழைக்காலத்திலும் பனிக்காலத்திலும் நீர்நிலையில் நிற்றலு மாகிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம்முயிருக்கு வருந் துன்பங் களைப் பொறுத்துப் பிற உயிர்களைக் காத்தல். ஐம்பொறி-மெய், வாய், கண், மூக்கு, செவி.

க. உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு. (261) எசுஎ

திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) உணவில்லாமல் பசிநோயால் வரும் துன்பத்தைப் பொறுத்தலும், பிற உயிர்களுக்குத் துன்பஞ் செய்யாதிருத்தலும் ஆகிய அவ்வளவே, தவத்துக்கு வடிவமென்பதாம். ஆகவே, பசிநோயைப் பொறுக்கும் விரதம் போல்வதொன்று பிற உயிர்க்குத் துன்பஞ் செய்யாதிருத்த லென்பது கண்டு கொள்க.

உ. தவமுந் தவமுடையார்க் காகும் அவமதனை
அஃதிலார் மேற்கொள் வது. (262)

(இ-ம்) தவத்தால் வரும் பயனே யல்லாமல் அத்தவமும் முற்பிறப்பில் தவஞ் செய்து பழகியவருக்கே கைகூடும். முற்பிறப்பில் தவஞ்செய்தல் இல்லாதவர் தவஞ்செய்ய இப்பிறப்பில் முயற்சி செய்தால் முடிவுபெறுதல் இல்லை யென்பதாம். ஆயினும், இனி வரும் பிறவிகளில் சிறிது சிறிதாக வளர்ந்து முடிவுபெறு மென்க. இத்திருக்குறளுக்குச் சோழவந்தான் அரசஞ் சண்முகனார் கூறிய பொருளாவது—தவமும் தவத்திற்குரிய ஒழுக்கமுடைய வருக்கே கூடும். அவ்வொழுக்க

மில்லாதவர் தவத்தைச்செய்ய. முயற்சி செய்தால் பயனடையாமல் அத்தவம் வீணுகுமென்பதாம். இக்கருத்துப் பற்றியே "வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்" என்ருர் பிறரும் என்று திருமந்திரச் செய்யுளை யெடுத்து உதாரணமுங் காட்டினர். இப் பொருளுக்கு 2-வது தவம்-ஆகுபெயர்.

௫. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மற ந்தார்கொல்
மற்றை யவர்கள் தவம்.
(263)

(இ-ம்) இல்லறத்திலிருப்பவர், துறவறத்திற் சென்றவருக்கு உணவும் மருந்தும் இருப்பிடமும் கொடுத்தலை விரும்பித் தாம் தவஞ் செய்தலை மறந் தார் போலும் என்பதாம். எனவே, துறவறத்திலிருப்பவருக்கு உணவு முத வியவை கொடுத்தல் இல்லறத்தாருக்குக் கடமையென்பது ஆயிற்று. எல்லா ராலுஞ் செய்யப்படும் தவத்தைத் தாமுஞ் செய்தலைத் தாம் செய்யுந் தானத் தின்மேல் ஆசையினுலே மறந்தாரென்று கூறவே, தானத்தின் உயர்ந்தது தவமென்றறிந்துகொள்க. தானம்-கொடை.

ச. ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தான் வரும்.

(264)

(இ-ம்) துறந்தவர் தாம் செய்யுந் தவத்திற்குப் பகையாய்க் கேடு செய் தவரை அழித்தலும், அத்தவத்தை மகிழ்ந்து உதவி செய்தாரை உயர்த்தலு உஎ-ஆம்

## அதி.—தவம் எஎ

மாகிய இரண்டும் அவர் நினைத்தால் அவர் தவத்தின் வலிமையால் அவருக்கு உண்டாமென்பதாம். இவ்விரண்டுக்கும் உதாரணமாக, விசுவாமித்திர முனி வர் தவத்துக்குக் கேடுசெய்த தாடகை முதலிய அரக்கர் அழிதலையும், உதவிசெய்த இராமபிரான் உயர்தலையுங் கண்டுகொள்க. (இராமாயணம் தாடகைவதைப்படலம்)

ரு. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்
செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

(265)

(இ-ம்) மறுமையினிடத்துத் தாம் விரும்பிய பயன்கள் குன்றயாமல் விரும்பியபடியே யடையலாம். ஆதலால், தாம் செய்யத்தக்க தவத்தை இம்மையினிடத்துச் செய்யவேண்டும். மறுமை - இனிவரும் பிறப்பு. இம்மை-இப்பிறப்பு. மறுமையிற் பயன்களாவன - இந்திரன் முதலியோர் பதவிகளும்,

மோக்ஷமும் அடைதல்.

சு. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு . (266)

(இ-ம்) எல்லாப் பற்றையும் விட்டு நீங்கித் துறவறத்தில் என்றும் நிலைநிற்பதாகிச் சென்று பேரின்பம் பெறுதல் காரணமாகத் தவம் செய் வாரே தமக்குரிய கருமஞ் செய்பவராவர்; அவரல்லாதார் கணப்பொழுதிலழி யுஞ் சிற்றின்பங் காரணமாக மண், பெண் முதலிய ஆசையுள் அகப்பட்டு வீண் தொழில் செய்வார் என்பதாம். தம் கருமம் - மனத்தை ஐம்பொறி வழியே போகவிடாமல் தாம் குறித்த வழியிலே செல்லவிடுதல். ஐம்பொறி- மெய், வாய், கண், மூக்கு, செவிகள். வீண்தொழில் - பகை, பாவம், பழி களுக்கு அஞ்சாமல் நினைத்ததெல்லாஞ் செய்தலாம்.

எ. சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.
(267)

(இ-ம்) தீயினிடத்து நிற்கும் பொன்னானது அத்தீச் சுடச்சுடத் தன்னோடு கலந்திருந்த மாசு (குற்றம்) நீங்கிப் பிரகாசம் மிகுதல்போலத் தம் கருமமாகிய தவத்தைச் செய்யும் வலிமையுடையவருக்குப் பசி, பிணி, வெயில், காற்று, மழை முதலியவை மிகுந்த வருத்தப் படுத்தலால் தம்மோடு கலந் திருந்த பாவநீங்க ஞானம் பிரகாசிக்கும் என்பதாம். எனவே, ஞானம் பிரகா சித்தால் மோக்ஷம் கிடைக்குமென்பதும், ஞான ம் வருதற்குக் காரணம் தவ மென்பதுங் கண்டுகொள்க. தம்கருமம்-மேலவசனத்துட் காண்க,

## எ.ங திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

அ. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
மன்னுயி ரெல்லாந் தொழும்.
(268)

(இ-ம்) தன்னுயிரைத் தனக்கு உரிமையுடையதாகப் பெற்றவனை அப்படிப் பெறுமலிருப்பனவாகிய எல்லா உயிர்களும் வணங்கும் என்பதாம். ஏனென்றால், உரிமையாகப் பெற்றவனிடத்துச் சாபமும் அநுக்கிரகமுஞ் செய்யும் வலியுடைமையா லென்க. உரிமையாகப் பெறுதல்-தன் கருமமாகிய தவஞ் செய்தலாம்.

அத்தவஞ் செய்யாதவரே அவஞ்செய்பவர். அறப் பெறுதல்-உரிமையாகப் பெறுதல்.

கூ. கூற்றங் குதித்தலுங் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட் டவர்க்கு.
(269)

(இ-ம்) தவஞ் செய்ததால் அடையும் ஆற்றல் (சாபமும் அநுக்கிரகமும்) உறுதியாகக் கை வந்தவருக்கு மேற்சொல்லியபடி மன்னுயிரெல்லாந் தொழப்படுதலே அல்லாமல் யமன் செய்யுந் துன்பங்கள் பலவற்றைக் கடந்து செல்லவுமுடியும் என்பதாம். எனவே, தவஞ் செய்வாருக்கு யமவாதனை யில்லை என்பதாம். இதற்குச் சாட்சியாக, தவத்தால் சிவபூசை செய்து உயிர் யமவாதனையைக் கடந்த மார்க்கண்டமுனிவர் சரித்திரத்தைக் காண்க.

கO. இலர்பல ராகிய காரணம் நோற்பார்
சிலர்பலர் நோலா தவர்.
(270)

(இ-ம்) உலகத்தில் தரித்திரமுடையவர் பலர் ஆதற்குக் காரணம் முற் பிறப்பில் அப் பலரும் தவஞ்செய்யாதிருத்தலாம். செல்வமுடையவர் சிலராவதற்குக் காரணம் அச்சிலரும் முற்பிறப்பில் தவஞ்செய்தல் என்பதாம். ஆதலால், காரணம்

உண்டானபோது காரியம் உண்டென்பது கண்டுகொள்க. இனி, தரித்திர மென்பது அறிவில்லாமை யென்றும், செல்வமென்பது அறி வுடைமை யென்பதும் ஒரு பொருள் கூறலாம். இதற்குதாரணமாக "நுண் ணுணர் வின்மை வறுமை யஃதுடைமை, பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம்" என்றார் ஒரு பெரியார். (நாலடியார் 10-ம் அதி—அறிவின்மை 1 ) முற் பிறப்பில் தவஞ்செய்யாதவருக்கு இம்மையின்பமும் இல்லை யென்பது இதனாலறியலாம்.

## 28-ஆம் அதி.—கூடாஒழுக்கம்.

அஃதாவது, தாம் வெறுத்துவிட்ட காம இன்பத்தைப் பின்னும் விரும் பித் தவத்தொடு பொருந்தாததாகிய தீயொழுக்கம். அது, பிறர் மனைவி யரையும் பொது மாதரையுஞ் சேர்தல்.

க. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்கள்
ஐந்தும் அகத்தே நகும்.
(271)

(இ-ம்) புறத்திலுள்ளாரை வஞ்சிக்கின்ற மனத்தை யுடையவனது கள்ள ஒழுக்கத்தைப் பிறர் அறியாமற் போனாலும் அவனது உடம்பாய் அவ னுடன் கலந்து நிற்கின்ற பஞ்சபூதங்களுங் கண்டு அவமதித்துச் சிரிக்கு

மென்பதாம். யாருக்கு ஒளித்தாலும் பஞ்சபூதங்களுக்கும் ஒளிக்கமுடியா தென்பது கருத்து. பஞ்சபூதங்களாவன—நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம். இவ்வைந்தும் இல்லாமல் ஒருவனுக்குச் சரீரம் இல்லாமையால், ஐந்தும் அகத்தே நகும் என்று நாயனர் அருளிச்செய்தனர். தத்வ சாதிரம் படித்தால் இவ்வைந்தாலும் சரீரம் உண்டானதென்று நன்கு விளங்கும். இதனல், ஒருவன் தான் செய்த குற்றத்தை மறைக்க முடியாதாகையால் மேலே சொல்லிய கள்ள ஒழுக்கம் ஆகாதென்பது நிச்சயம்.

உ. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
தானறி குற்றப் படின். (272)

(இ-ம்) ஒருவன் தான் குற்றமென்றறிந்த செய்கையைத் தன்னுடைய மனத்தில் தங்கியிருக்கும்படி செய்வானனல் அவனுக்கு ஆகாயம்போல் உயர்ந்த தவவேடம் என்ன பிரயோசனத்தைக் கொடுக்கும் என்பதாம். எனவே, தவத்திற்குரிய ஒழுக்கமில்லாவிட்டால் தவவேடத்தால் பயனில்லை யென்பதாயிற்று. ஆகாயம்போல உயர்தலாவது எல்லாரும் நன்கு மதிக்கப் படுதல். அறிந்து செய்த குற்றத்திற்குப் பரிகாரம் (பிராயச்சித்தம்) இல்லாமையால் அந்தக் குற்றத்தைத் தன்

மனத்தில் தோயவைத்தால் அம்மனம் எப்போதும் குற்றமுடையதென்பது கண்டுகொள்க.

ரு. வலியி லினிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.
(273)

(இ-ம்) மனத்தைத் தன் வசப்படுத்தும் வலிமையில்லர்தவன் தம் வசப்படுத்தும் வலிமையுடையார் தவவேடத்தை யணிந்து தன் மனத்தின் வசப்பட்டிருத்தல் எதுபோலு மென்றால், காவலாளிகள் புலி புல்லைத் தின்னு

திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

தென்பதனாலும் அச்சத்தாலும் தன்னை யடித்து வருத்தஞ் செய்யாதிருக்கும் படி பசுவானது புலித்தோலை மூடிக்கொண்டு பயிர்களை மேய்ந்துகொண்டு இருத்தல்போலு மென்பதாம். தன் மனத்தின் வசப்பட்டி ருத்தலாவது— தன் மனம்போன வழியே ஓடிச்சென்று பிறருடைய மனைவியரை விரும்பிக் கைகலத்தல். இவ்வசனத்தை யின்னுங் கொஞ்சம் விரித்தெழுதலாம்; அப் படி எழுதினாலும் மேற்கூறிய

கருத்தல்லாது வேறில்லாமையால் இவ்வளவு எழுதியதே போதும்.

ச. தவமறைந் தல்லவை செய்தல் புதல்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. (274)

(இ-ம்) மேற்கூறியவாறு தவத்தின் வலிமையில்லாதவன் தவவேடங் களைத் தரித்துக்கொண்டு தவத்திற்கு உரியன அல்லாத தீய காரியங்களைச் செய்தல் எதுபோலுமென்றால், வேடனானவன் இடைவெளியில்லாமல் நெருங் கிய புற்செடிக்குள் மறைந்திருந்துகொண்டு பறவைகளைப் பிடித்துக் கட்டி னாற்போலும் என்பதாம். தவவேடம்-அந்தந்த மதாசாரங்களுக்குரிய அடை யாளப் பொருள். தீச்செயல்களாவன-பிறர் மனைவியரைத் தன் வசப்படுத்தல், பிறர் பொருளைத் தருமஞ் செய்வேனென்று அபகரித்தல் முதலியவைகள்.

ரு. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்கம் எற்றெற்றென்
றேதம் பலவும் தரும். (275)

(இ-ம்) தம்மைப் பிறர் நன்கு மதிக்கும்பொருட்டு எல்லாப் பற்றையும் விட்டுவிட்டோமென்று சொல்லுவார், கணப்பொழுதி லழிவதாகிய சிற்றின் பங் கருதிச்செய்யும் கள்ள ஒழுக்கமானது முன்பு சுகம்போலத் தோன்றி

ஞலும் பின்பு நாம் என்செய்தோம் என்செய்தோ மென்று வருந்துந் துன்பங் கள் பலவற்றையுங் கொடுக்குமென்பதாம். பிறர் நன்கு மதிக்கும்பொருட்டுப் பற்றற்றேமென்று செய்வாரென்றதஞல் உள்ளபடி மனத்தில் பற்று அறாதவ ரென்பது தானே விளங்கும். இவரே பொய்த்துறவிகளென்று கண்டு கொள்க.

ங. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணா ரில்.
(276)

(இ-ம்) மனத்தில் யாதொரு பொருளினும் ஆசையை விடாது வைத் திருக்கொண்டு விட்டவர்போல நடித்துக் காட்டிப் பிறர் பொருளை வஞ்சகமாகக் கைப்பற்றிக்கொண்டு வாழும் பொய்த்துறவிகள் போலக் கொடிய பாவிகள்

உ௩-ஆம் அதி.—கூடாஒழுக்கம்.
௩க

இல்லை என்பதாம். வஞ்சித்தலாவது , இவர் நல்லவரென்று தானங்கொடுப் பார் பொருளை வாங்கி அக்கொடையால் வரும் பயனைக் கொடை கொடுத்த வரைச் சேரவொட்டாமற் செய்தல். எனவே, நல்லவருக்கு க் கொடுத்தவர், கொடைப்பயன் பெறுவர் என்று கண்டுகொள்க.

எ. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
மூக்கிற் கரியா ருடைத்து.
(277)

(இ-ம்) குன்றிமுத்தின் மேற்புறத்திற் காணப்படும் செம்மை (சிவப்பு) போல வெளி வேடத்தால் ஒழுங்குடையராகக் காணப்பட்டாலும் குன்றி முத்தின் உட்புறமாகிய மூக்கிலுள்ள கறுப்புப்போல மனத்தில் குற்ற முடையராக இருக்கும் பொய்த்துறவிகளை இவ்வுலகம் உடையதென்பதாம். மெய்த்துறவிகள் இருந்தாலும் பொய்த்துறவிகளையுடையது பூமியென்று சொல்லியது பெரும்பாலும் இவரே இருத்தலால் என்று கண்டுகொள்க.

அ. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
மறைந்தொழுகு மாந்தர் பலர்.
(278)

(இ-ம்) காமம், வெகுளி, (கோபம்) மயக்கம் என்று சொல்லப்படும் மூன்று குற்றங்கள் தம் மனத்தைவிட்டு நீங்குதற்காகப் புண்ணிய நதிகளில் ஸ்நானம் பண்ணுமல் அம்மூன்று குற்றங்களுந் தம் மனத்திலிருக்க இவர் தவத்தாற் சிறந்தவரென்று பிறர் தம்மை மதிப்பதற்காக அந்நதிகளில் ஸ்நானஞ் செய்யும் பொய்த்துறவிகள் இவ்வுலகத்திற் பலர் என்பதாம். ஆதலால் மெய்த்துறவிகளைக் காணுதல் அரிதென்பதாயிற்று.

௬. கணைகொடி து யாழ்கோடு செவ்விதாங் கன்ன
வினைபடு பாலாற் கொளல். (279)

(இ-ம்) உருவத்தால் அம்பு (பாணம்) கோணுமல் ஒழுங்காக இருந்தாலும் அதன் செயலாலே கொலை செய்யுங் கொடியதாம். வீணை ஒருபுறம் கோணலாயிருந்தாலும் பிறருக்கு இனிமையைத் தரும் இசையை யுண்டாக்கும் செயலால் ஒழுங்குடையதாம். இவை போல, தவம் செய்வாரை வடிவத்தால், கெட்டவர் நல்லவரென்று மதியாமல் அவர் செய்யும் நன்மை கொடுக்கும் நற்செயலாலும் தீமை கொடுக்கும் தீச்செயலாலும் மதித்துக் கண்டுகொள்க.

௰. மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்த தொழித்து விடின். (280)



(இ-ம்) தவஞ் செய்வார்க்குத் தீயதென்று உலகத்தாரால் சொல்லப் பட்ட காமத்தை நீக்கிவிடுவாரானல் அவர் தலையிலுள்ள மயிரைப்போக்கி மொட்டையாக்கிக்கொள்ளுதலும் அம்மயிரைச் சடையாக

முறுக்கிவிட்டுக் கொள்ளுதலுமாகிய வேடங்கள் வேண்டுவதில்லை யென்பதாம். இதனால் வேடத்துக்குத் தக்க ஒழுக்கமில்லாதவர் தவவேடத்தால் பிரயோசனமில்லை யென்பது தெளிவாகத் தெரிந்துகொள்க. வேண்டுவது-தொழிற்பெயர்.

---

## 29-ஆம் அதி.—கள்ளாமை.

அஃதாவது, பிறருடைமையாய் இருக்கும் எந்தப் பொருளையும் வஞ்சித் துத் திருடிக்கொள்ளக் கருதாதிருத்தல். கருதுதல் துறவறத்திற்குப் பெரியதோர் இழுக்கு (குற்றம்) களவு செய்தல் குற்றமல்லாமல் கருதுதலுங் குற்றமோ என்றால் "நினைத்தலுஞ் செய்தலோ டொக்கு" மெனப் பெரி யோர் கூறுதலாற் குற்றமேயாம். கருதுதல்-நினைத்தல்.

க. எள்ளாமை வேண்டுவா னென்பான்
எனைத்தொன் றுங்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு
(281)

(இ-ம்) மோக்ஷத்தை அடைதற்குரியவன் இவனே என்று தவஞ் செய்தவரால் தன்னை நன்கு மதிக்கப்படுதலை விரும்பியவன் யாதொரு பொருளையும் பிறரை வஞ்சித்து

எடுத்துக்கொள்ளக் கருதாத விதமாகத் தன்னுடைய மனத்தை அடக்கிக்கொள்ளல் வேண்டும் என்பதாம். எனவே, மனம் போன தீயவழியிலே போகலாகாதென்பது கருத்து. இக்கருத்துப்பற்றியே "மனம்போன போக்கிலே போகவேண்டாம்" என்றார் ஒளவையார். (உலக நீதி) மனத்தைத் தன் போக்கிலே போகும்படி வசப்படுத்தினவன் பிறவித் துன்பத்தை யடையமாட்டான். அப்படி வசப்படுத்தத் தெரியாதவன் எக் காலத்தும் பிறவித்துன்பத்தி லழுந்தி வருவான். இக்கருத்தால், "மன மொருத்தன் வசப்படு மேலவன், பின்னை வருதரும் பிறப்பை யடைந்திடான்,
மன மொருத்தன் வசப்படா தோடு மேல்,இனி பிறப்பிடை நாளுஞ் சுழல்வனே" என்றார் பிறரும்.
(பிரபுலிங்கலீலை-ராதகாங்ககதி 10.)

உ. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கொள்வேம் எனல். (282)

(இ-ம்) துறவிகள் தீய விஷயங்களைத் தம்முடைய மனத்தால் நினைத்தலும் பாவமாம், ஆதலால் பிறருக்குரிய பொருளை அயலார் அறியாதவிதம்

## உகூ-ஆம் அதி.—கள்ளாமை.

அ

வஞ்சித்து எடுத்துக்கொள்வோமென்று நினையாதிருக்கவேண்டும் என்பதாம். மற்றவர் மனம்போல் அல்லாமல் துறவிகள் மனம் பரிசுத்தமுடையது ஆதலா லிவ்வாறு கூறியருளினர். தீய விஷயங்களை நினைத்தலும் பாவமென்று சொல்லவே, செய்தல் பாவமென்பது சொல்லாமலே விளங்கும்.

ங. களவினா லாகிய வாக்கம் அளவிறந்
தாவது போலக் கெடும்.
(283)

(இ-ம்) களவு செய்தலாலுண்டாகுஞ் செல்வமானது வளர்வதுபோலத் தோன்றி அளவு கடந்து பின்பு கெட்டுப்போகுமென்பதாம். அளவு கடந்து கெடுதல் எப்படி யென்றால், களவு செய்தலால் வரும் பொருள் களவு செய் தவனிடத்துப் பாவத்தையும் பழியையும் உண்டுபண்ணி வைத்துவிட்டு, அவன் முன் வைத்திருந்த பொருளையும் தருமத்தையும் தன்னுடன் கொண்டு போதல் என்க.

ச. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்

வீயா விழுமந் தரும்.
(284)

(இ-ம்) பிறர் பொருளை வஞ்சகஞ் செய்து எடுத்துக்கொள்ளுதலி னிடத்து மிகுந்த ஆசையானது அப்பொழுது சுகம்போலத் தோன்றினும் முடிவிலே எப்பொழுதும் நீங்காத பாவத்தையும் பழியையுங் கொடுக்கு மென்பதாம். சுகம்போல என்றதனால் நியாயவழியால் கிடைத்த பொருளால் வந்த சுகமாகாதென்பது கருத்து. கன்றுதல்-மிகுதல்.

ரு. அருள்கருதி யன்புடைய ராதல்
பொருள்கருதிப்
பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.
(285)

(இ-ம்) அருளினது உயர்ச்சியை அறிந்து அவவருளின்மேல் அன் புடையவராயிருத்தல் பிறர் பொருளை வஞ்சகஞ் செய்தெடுத்துக்கொள்ள அவர் காவல் சோர்ந்திருக்கும் சமயம் பார்ப்பவருக்கு இல்லை என்பதாம். திருடுதற்குச் சமயம் பார்ப்பவருக்கே அருளில்லையானால் திருடினவருக்கில்லை யென்பது சொல்ல வேண்டுமோ? தமக்குரிய பொருளையுங் குற்றமென்று வெறுத்துவிட்டு வந்த துறவிகள் பிறர்க்குரிய பொருளை வஞ்சித்துக் கைப் பற்றும் உபாயத்தை நோக்கும் மயக்கமுடையவரானால் பிறவுயிர்களிடத்துச் செய்யும் அருள் அவர்க்கு வரமாட்டா தென்பது கருத்து.

சு. அளவின்க ணின்றொழுக லாற்றார் களவின்கட்

கன்றிய காத லவர்.

(286) உ௮௬ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) உயிர்களுக்குள்ள குணங் குற்றங்களை அளந்து பார்த்தலாகிய வழியில் நின்று குற்றங்களை நீக்கிக் குணங்களை யாக்குதற்கேற்ற முறையில் நிற்கமாட்டார் யாரென்றால், பிறர் பொருளை வஞ்சகத்தாற் கொள்ளும் மிகுந்த ஆசையுடைய பொய்த்துறவிகள் என்பதாம். உயிர்களுக்குள்ள குற்றங்களாவன—அநாதியாகத் தொடர்ந்து வரும் நல்வினை தீவினையாகிய துன்பங்களும், அத்துன்பங்களால் மேலுமேலும் வரும் பலவகைப் பிறப்புக் களிலும் பிறந்திறந்து வருந் துன்பங்களுமேயாம். குணங்களாவன - மேற் கூறிய குற்றங்களை நீக்கும் யோக ஞானமும், அவ்விரண்டால் மோக்ஷமடை தலுமேயாம். நல்வினையையும் துன்பமென்று கூறியது எதனாலென்றால், அதுவும் பிறவிக்குக் காரணமாதலாலெனக. எனவே, நல்வினையும் தீவினை யும் சமமென்பது காண்க. இக்கருத்துக்கொண்டே "இருவினை யொப்பு வந்தால் மலபரிபாகம்" வருமென்று சித்தாந்த சாத்திரங்கள் பலவுங் கூறும். ஆதலால் இவ்விரண்டும் அற்றவரே பிறப்பிறப்பு நீங்கி மோக்ஷமடைவ ரென்பது உண்மை நூலின் முடிபாம்.

எ . களவென்னுங் காரறி வாண்மை

யளமென்னும்

ஆற்றல் புரிந்தார்கண் இல். (287)

(இ-ம்) களவென்று சொல்லப்படும் மயக்க அறிவினையுடையவரா யிருத்தல் இதன் முன் வசனத்திற் கூறிய உயிர் முதலியவற்றை அளத் தல்செய்யும் பெருமையை விரும்பினவரிடத் து இல்லை என்பதாம். இதனால் களவு இருள்போலவும், துறவு ஒளிபோலவும் இருத்தலால் இவ்விரண்டும் ஓரிடத்து இருக்கமுடியாதென்பது கண்டுகொள்க. எனவே, களவு இருப் பார்க்குத் துறவொழுக்கம் பயன்படாதென்பதும், அவ்வொழுக்கமுடையவ ரிடத்துக் களவு இல்லையென்பதுங் காண்க. உயிர் முதலியவற்றை அளத்த லாவது - பசு பதி பாசங்களின் இலக்கணங்களை வரையறைசெய்தறிதல். அறிதலெப்படியென்றால், சித்தாந்த சாத்திரம் படித்தால் விளங்குமென்க.

அ. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்கும். களவறிந்தார் நெஞ்சிற் கரவு. (288)

(இ-ம்) உயிரினது குணங் குற்றங்களை அளந்து பழகிவந்தவர் இருத யத்தில் அறம் நிலைநிற்பதுபோலக் கூடாவொழுக்கத்திற் பழகிவந்தவர் இருத யத்தில்

வஞ்சனையாகிய கள்ளம் நீங்காது நிற்கும் என்பதாம். அறம்-தருமம். குணங்களையும் குற்றத்தினையும் அளந்து பார்ப்பவர், குணத்திலிருக்கிற நன் மையும் குற்றத்திலிருக்கிற தீமையும் தெரிதலால் குற்றத்தைத் தள்ளிக் குணத்தைக் கொள்ளுவரென்பது கருத்து.

.

## ௩௦-ஆம் அதி.—வாய்மை.

அரு

௬. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
மற்றைய தேற்று தவர்.

(289)

(இ-ம்) களவொன்றுமட்டும் அறிதல் அல்லாமல் தாம் உணவாக உண்ணும் கனி காய் சருகுகளையும், துறவறத்தாருக்கு இல்லறத்தார் செய்யுந் தானப் பொருள்களையும் அறியாதவர் 286-ஆம் வசனத்திற் கூறிய அளவில்லாத தீய நினைவுகளை நினைத்து நினைத்து அப்பொழுதே கெட்டுப் போவர் என்பதாம். எனவே, துறவிகள் கனி காய் முதலியவைகளை உண்ண வேண்டுமென்பதும், அதுவல்லாமல் அறுசுவை உணவுகளை விரும்பி யுண்பாராஞல் உடம்பில் திமிருண்டாகி முன் தாம் வெறுத்துவிட்ட காமத்தை அநுபவிக்கும்

கருத்துடையவராவரென்பதும் யூகித்துக் கண்டுகொள்க. தீய நினைவுகளாவன-பிறர் பொருளை வஞ்சித்தலும், அவ் வஞ்சனையால் அப் பொருளைக் கைப்பற்றலும், கைப்பற்றிய உடனே பஞ்சேந்திரியங்களின் வழியே சென்று வேண்டிய வேண்டியபடியே இன்பம் அநுபவிக்குமாறும், இன்னும் பலவுமாம். இத் தீயவைகளைச் செய்தால் கேடுவருமேயல்லது நினைத்தால் கேடுவருமென்பது "நினைத்தலுஞ் செய்தலோடொக்கும்" ஆதலாலென்க. இது பல ஆன்றோர் கூறிய கருத்து. எப்படியென்றால், ஒரு செய்கையை நினைத்தலல்லாமல் செய்யமுடியாதாகையால் நினைத்தலுங் கெடுதற்குக் காரணமாயிற்றென்று கண்டுகொள்க.

கo. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
தள்ளாது புத்தே ளுலகு.
(290)

(இ-ம்) களவுசெய்து பழகிவருவாரைத் தாம் நிற்கின்ற நிலையாய்த் தம்முடனிருக்கும் உடம்பும் இவனைச் சுமந்திருக்கின்றோமேயென்று அருவருக்கும். களவு செய்யாதிருப்பாரைத் தூரத்திலிருக்கிற தேவருலகமும் மகிழ்ந்து வரவேற்றுக்கொள்ளும் என்பதாம். உடம்பு அருவருத்தல் எப்படியென்றால், மறுமையில் யமதண்டனை அடைதல் அல்லாமல் இம்மையிலும் தண்டனையடைதலால் வருந் துன்பம் பொறுக்கமாட்டாமையென்க.

## 30-ஆம் அதி—வாய்மை.

அஃதாவது, மெய்யினது தன்மை. மெய்-உண்மை. தன்மை-குணம். க. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
தீமை யிலாத சொலல்,
(291) அசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) மெய்யென்று சிறப்பித்துச் சொல்லப்படுவது எதுவென்று கேட்டால், பிற உயிர்க்கு யாதொரு தீங்கும் கொடாத சொற்களைச் சொல் லுதல். இதனுல் நடந்ததைச் சொல்லுதல் மெய்யென்று சொல்லுவாரது அபிப்பிராயம் மறுக்கப்பட்டது. நடந்ததைச் சொல்லுதல் நன்மையைத் தருமானுல் மெய்யாமென்பதும் தீமையைத் தருமானுல் மெய்யாகாதென் பதும் கருத்து. இக்கருத்தை அடுத்த திருக்குறள் வசனத்தில் விவரமாகக் கண்டுகொள்க.

உ. பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.
(292)
(இ-ம்) பிறருக்குக் குற்றம் நீங்கிய நன்மையை

உண்டாக்குமாஞல் ஒருவன் சொல்லும் பொய்வார்த்தையும் மெய்வார்த்தையைச் சேர்ந்ததே யாம் என்பதாம். குற்றம் நீங்கிய நன்மை-அறம். அவ் வறத்தை யுண்டாக்கும் வார்த்தையாவது - கேடாவது மரணமாவது அடையநின்றதோருயிர் அவ் விரண்டும் அடையாமற் காப்பதாகிய பொய்ச்சொல். அதற்கு உதாரணம்:- வழிச்செல்வோனுகிய ஒருவனது பொருளையும் உயிரையும் பறிப்பதாகத் தேடிவரும் திருடர் இடையில் நின்ற ஒருவனை நோக்கி இவ்வழியே ஒருவன் மூட்டை கொண்டுபோகின்ருனென்று கேட்டால் வழிச்செல்வோனைக் கண்ட இவன் , கேட்பவர் திருடர் என்று காலத்தாலும் இடத்தாலும் பிற குறிப்புக்களாலும் தெரிந்தால் இவ்வழி அவன் போகவில்லை. வேறுவழிப் போகின்ருனென்று பொய்சொல்லித் தடுத்தல் போல்வன. இதனுல், வழிச் செல்வோனுக்குப் பொருட்கேடும் உயிர்க்கேடும் வராமற் காத்தலுடன் திருடர் வழிப்பறிப் பாவமும் கொலைப்பாவமும் இம்மையில் இராசதண்டனை யும் மறுமையில் யமதண்டனையும் அடையாமற் காத்தலுமாகிய நன்மையுண் டாயதென்று கண்டுகொள்க.

௩. தன்னெஞ் சறிவது பொய்யற்க
பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.
(293)

(இ-ம்) ஒருவன் தன்னுடைய மனமறிந்த செய்கையைப் பிறர் அறிய மாட்டாரென்று பொய்

சொல்லுவானானால் அதனை அறிந்த தன்னுடைய மனமே சாட்சியாய் நின்று அப் பொய்யின் பயனாகிய துன்பத்தையடையும் படி செய்யும் என்பதாம்.

௪. உள்ளத்தாற் பொய்யா தொழுகின் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்,
(294)

௩0-ஆம் அதி.—வாய்மை.
புள

(இ-ம்) ஒருவன் தன் மனத்துக்கு ஒப்பப் பொய் சொல்லாது நடப்பான் ஆனால் அவன் உயர்ந்தோருடைய மனத்தில், இவன் யோக்கியனென்று நினைக்கும்படி இருப்பன் என்பதாம்.

௫. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
தானஞ்செய் வாரிற் றலை.
(295)

(இ-ம்) ஒருவன் தன் மனத்தொடு பொருந்த உண்மையைச் சொல்லு வான் ஆனால் அவன் தவமுந் தானமும் ஒன்றாகச் செய்வாரைப் பார்க்கிலும் முதன்மையுடையவன் ஆவன் என்பதாம். இ த னா ல் மனத்திலொன்றும் வாக்கிலொன்றும் பேசலாகாதென்பது கருத்து. மனத்திலொன்று வாக்கி லொன்றாவது-மனம்

மெய்யென்றறிந்ததைச் சொல்லாமல் அதற்கு விரோதமாகப் பொய் பேசுதல்.

௬. பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை
யெல்லா அறமுந் தரும்.
(296)

(இ-ம்) ஒருவனுக்கு இம்மைக்கு வேண்டும் புகழ் வருதற்குக் காரணம் பொய் சொல்லாதிருத்தலாம். அதற்குச் சமானமான காரணம் வேறில்லை. இம்மட்டோ? மறுமைக்கு மெய் வருந்தாமல் அவனுக்கு எல்லா அறங்களையும் பொய் சொல்லா திருத்தல் கொடுக்குமென்பதாம். அறத்தின் பொருட்டாகத் துறவறத்தார் உண்ணுதிருத்தல் முதலியவற்ருலும், இல்லறத்தார் பொரு ளீட்டல் முதலியவற்ருலும் எய்தும் வருத்தம் பொய்சொல்லாதிருப்பார்க்கு இல்லை. ஆகவே, இவ விருவகையாருக்கும் வேண்டும் அறங்களெல்லாம் பொய்சொல்லா திருப்பவருக்குத் தாமே வந்து சேரும் என்பது கருத்து. உண்ணுதிருத்தல்-பட்டினியிருத்தல்.

௭. பொய்யாமை பொய்யாமை யாற்றின் அறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.
(297)
(இ-ம்) இடைவிடாமல் பொய்சொல்லாதிருத்தலாகிய

தருமத்தையே எந்தக்காலத்தும் ஒருவன் செய்ய வல்ல வனுனல் அவன் மற்றைத் தருமங்களைச் செய்யாதிருத்தல் நல்லது என்பதாம். எப்படியென்ருல், பல தருமங்களையுஞ் செய்வது அருமையாதலால் அவை செய்யும்போது ஏதேனும்தவறுத லால் வரும் குற்றம் தனக்கில்லாமல் அத் தருமங்கள் பலவற்றையும் தானே கொடுக்கவல்லதா யிருத்தலால் பொய்சொல்லாதிருத்தலாகிய தருமம் ஒன்றே உயர்ந்ததென்க. உயர்ந்ததென்பதற்கு உதாரணமாக, சக்கரவர்த்திகளுள்



முதலாவதெண்ணப்பட்ட அரிச்சந்திரன் சரித்திரத்தைக் கண்டுகொள்க. இதுவல்லாமல் இத் திருக்குறளுக்கு மற்ருெரு பொருளுங் கூறலாம். அஃதாவது; பொய்சொல்லாதிருத்தலாகிய தருமம் உடையவனுக்கு மற் றைத்தருமங்கள் செய்தல் நல்லதாகும். அத்தருமம் இல்லாதவனுக்கு மற் றைத் தருமங்கள் செய்தல் நல்லதாகாது என்பதாம். இதனுல் பொய்யுடைய வன் செய்யும் தருமம் பயன்படாதென்பது கருத்து. ஏனென்ருல் எல்லாக் குற்றங்களுக்கும் பொய் காரணமாயிருத்தலாலென்க. இக்கருத்துப்பற்றியே "குற்றங்கள் யாவுக்கும் பொய் பிதாவாம்" என்ருர்

பிறரும். (வேதநாயகம் பிள்ளை நீதிநூல்) எல்லாக் குற்றங்கள்-கொலை, களவு, கள், காமம், குருத் துரோகம் என்பன. இவவைந்தும் பஞ்சமாபாதகங்கள் என்னும் பெயர்பெற் றவையாம். இப் பாதகங்கள் ஐந்தும் பொய் ஒன்று இல்லாதவனிடத்துப் புகுதமாட்டா. இதற்கு உதாரணமாக, தொன்றுதொட்டுக் கேள்வியால் அறியப்படும் கதை ஒன்றுண்டு. அஃதாவது, ஒரு நகரத்தில் மேற்கூறிய ஐந்து பாதகங்களையுஞ் செய்யுங் கொடியனொருவ னிருந்தான். அவனால் மற் றெல்லாரும் பெருந்துன்பமடைந்திருக்கும் காலத்தில் உபதேச குரு ஒருவர் வந்தனர். அவரை அவ்வூராரெல்லாரும் வந்தனை வழிபாடு செய்து மந்திரோபதேசம். பெற்றுக்கொண்டபின் இன்னும் யாராவது உபதேசம் பெற வேண்டியவரிருந்தால் வரவழைபுங்களென்று குரு கட்டளையிட்டனர். அக் கட்டளைப்படி போய்ப் பஞ்சமாபாதகனை யழைத்தார். அவன், "உங்களுக்கெல் லாம் என்ன உபதேசித்தார்"? என்று கேட்டான். ' ' எங்களுக்கெல்லாம் கொலை முதலிய அஞ்சு பாதகங்களையும் செய்யக்கூடாதென்று உபதேசித்தா" ரென்று அவர் சொல்லுதலும், அவன் அவ வைந்தும் செய்யாதிருக்க என்னு லாகாது , நான் வரமாட்டேனென்றான் . இதைக் குருவினிடம் போய்ச்சொல் லினர். அவர் அவ்வைந்தும் அல்லாத ஒன்றை உபதேசிக்கிறேன். அவனை யழைத்துவாருமென்றனர். அவ்விதமே சொல்லி அவனை அழைத்துக் கொண்டு வந்து விட்டனர். அவனை நோக்கி உன் கருத்துப்படி கொலை முதலிய ஐந்தையுஞ்

செய்துகொள்ளலாம். நான் சொல்லுகிற ஒன்றைமட்டும் நீ செய்யாதிருக்கக் கடவர்யென்று அவனை ஒப்புக்கொள்ளச் செய்து பொய்மட்டுஞ் சொல்லாதிருப்பாயாக என்று உபதேசஞ்செய்துவிட்டுப் போயினர். அவர் சென்றபின் அன்றிரவில் பஞ்சமா பாதகன் இராசா அரண்மனையிற் களவு செய்ய நடுச்சா மவேளையிற் புறப்பட்டுப் போகும் போது அரண்மனை வேலைக்காரன் ஒருவன் தன்னெதிரே வரக்கண்டு இவன் இந்நேரம் எங்குப்போகின்றாயென்று கேட்டால் குறித்துப்போகிற காரியத்தை மறைத்துப் பொய்தானே சொல்லவேண்டும். ஆதலால் இந்த வேலையை விட்டுவிட வேண்டுமென்று உறுதிப்படுத்தி வீட்டுக்குச் சென்று

## ௩௰-ஆம் அதி.—வாய்மை.

ம்க

இப்படியே ஒவ்வொன்றுக்கும் வரும் இடையூறுகளுக்கெல்லாம் பொய் சொல்லவேண்டுமே யென்று நினைந்து எல்லாப் பாதகங்களையும் விட்டொழிந் தான் என்பதாம்.

அ. புறந்தூய்மை நீரா னமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்.

(298)

(இ-ம்) உடம்பு பரிசுத்தப்படுதல் நீரினாலுண்டாகும்.

மனம் பரிசுத் தப்படுதல் வாய்மை (உண்மை) யால் உண்டாகும் என்பதாம். ஆகவே, உடம்பு சுத்தப்படுதற்கு நீரல்லாமல் வேறில்லை யென்பதும் மனம் சுத்தப் படுதற்கு வாய்மையல்லாமல் வேறில்லை என்பதும் கண்டுகொள்க.

கூ. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.
(299)

(இ-ம்) புறத்திருளைப் போக்கும் உலகத்தாருடைய சூரியன், சந்திரன், அக்கினியாகிய விளக்குகளெல்லாம் அறிவுடையாரது அகத்திருள் போக்கு தற்கு விளக்காகமாட்டா. வேறு எது விளக்ாகுமென்றால், பொய் சொல்லா திருத்தலாகிய ஒன்றே விளக்காகும் என்பதாம். அகத்திருளாவது - அறி யாமை. மேற்கூறிய சூரியன் முதலிய மூன்றும் விளக்காகா வென்பது அகத்திருளைப் போக்க மாட்டாமையாலெ ன்க. இது வல்லாமல் வேறொரு பொருள் கூறுதலுமுண்டு. அஃதாவது, அறிவுடையார்க்குக் கல்வி முதலிய வற்றால் வரும் விளக்கமெல்லாம் விளக்கமல்ல. பொய் சொல்லாதிருத்த லால் வரும் விளக்கமே விளக்கமென்பது. விளக்கம் - எல்லாரும் புகழ்ந்தெடுத்துப் பேசுதல்.

கO. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை

யெனைத்தொன்றும்

வாய்மையி னல்ல பிற.

(300)

(இ-ள்) நாம் ஒன்றை மற்றொன்றாகக் காணப்பட்ட மயக்கமில்லாமல் உள்ளதை உள்ளபடியே யறியப்பட்ட மெய்ந்நூல்களிற் பார்க்கும்போது வாய்மை (மெய்) யினும் உயர்வாகிய அறம் (தருமம்) வேறு இல்லை யென்பதாம். மெய்ந்நூல்கள் - மயக்கம் நீங்கிய இறைவன் அருளாற் சொல்லப்பட்ட ஆகமங்கள்.

---



## 31-ஆம் அதி—வெகுளாமை.

அஃதாவது, கோபத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவனிடத்திருந்த போதினும் அதனைச் செய்யாதிருத்தல்.

க. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக்

காக்கிலென் காவாக்கா லென்.
(301)

(இ-ம்) தன் கோபம் பலிக்குமிடத்துச் செல்லவொட்டாமல் தடுப்ப வனே அருளால் தடுப்பவனுவான். பலியாத இடத்துத் தடுத்தாலென்ன பயன், தடுக்காதிருந்தா லென்ன பயன் என்பதாம். பலிக்குமிடம் - தனக்கு மெலிந்தவர். பலியாத இடம் - தனக்கு மேற்பட்டவர். வலியவரிடத்துக் கோபத்தைச் செலுத்தினுல் அக்கோபஞ் செல்லாது. ஆதலால், அவரிடத் துக் காத்தலாற் பயனில்லை. காத்தல் - இவ்விடத்துக் கோபத்தைத் தடுத் தல். இக்கருத்துப் பற்றியே "வலியவ னிடத்து மொத்தான் மாட்டினும் வெகுளி காத்தல், பொலிவுசே ரறம தென்னப் பொருந்துரு து" என்ருர் ஒரு பெரியார். (பிரபுலிங்கலீலை, சித்தராமையர்கதி 59)

உ. செல்லா இடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற.
(302)

(இ-ம்) ஒருவன் கோபமானது தன்னைப் பார்க்கினும் வலியவரிடத்துச் சென்ருல் தனக்கே தீங்கு வரும். தனக்குக் கீழ்ப்பட்ட எளியாரிடத்துச் சென்ருல் அதைப்பார்க்கினும் தீயவை வேறில்லை யென்பதாம். எப்படி யென்ருல், வலியவரிடத்துச் செலுத்திய கோபம்

பலியாமல் தான் தோற்றுப் போதலால் அவமானமாகிய துன்பம் ஒன்றே தரும். எளியவரிடத்துச் செலுத்திய கோபம் இம்மையில் பழியும், மறுமையில் பாவமும் தரும் என்பதாம். எனவே, ஒருவரிடத்துங் கோபஞ் செலுத்தலாகாதென்பது கருத்து.

௩. மறத்தல் வெகுளியை யார்மாட்டும் தீய
பிறத்தல் அதனால் வரும்.
(303)

(இ-ம்) தனக்கு உயர்ந்தவர், சமானமானவர், தாழ்ந்தவரென்னும் மூவகையாரிடத்தும் கோபஞ்செய்தலை மறந்துவிடவேண்டும். ஏனென்றால், தீய நினைவுகளெல்லாம் அக்கோபத்தாலுண்டாதலால் என்பதாம்.

௪. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
பகையும் உளவோ பிற.
(304)

௩௧-ஆம் அதி.—வெகுளாமை.

௩௦௪

(இ-ம்) துறவிகளுக்கு அருளாலுண்டாகிய முகமலர்ச்சியையும் மனத்தினிடத்துண்டாகிய மகிழ்ச்சியையும் அழித்துவிடும் கோபத்தைப் பார்க்கினும் உயர்ந்த வேறு பகைகளும் உண்டோ? இல்லை என்பதாம்.

பிறவித்துன்பத் தைக் கொடுத்தலால் கோபம் உயர்ந்த பகையாயிற்று. இக்கருத்துப் பற்றி "கோபமே பிறவியைக் கொடுக்குங் கொள்கலம்" என்றார் பெரியார்.

ரு. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
றன்னையே கொல்லுஞ் சினம். (305)

(இ-ம்) தன்னைத் துன்பமெய்தாமல் ஒருவன் காக்க நினைத்தானானால் தன்னிடத்துக் கோபம் வாராமல் தடுத்துக்கொள்ளவேண்டும். தடுக்காவிட் டால் அக்கோபமானது தன்னையே கெடுக்கும் கொடுந்துன்பங்களைக் கொடுக்குமென்பதாம். தன்னைக் கெடுத்த லெப்படி யென்றால், நினைத்த காரியமெல்லாம் நினைத்தபடி கைகூடச்செய்யும் தவத்தைப் பிறருக்குச் சாபங் கொடுக்கும்பொருட்டு இழந்துவிடுந் துன்பமும் தவமுற்றாமையால் பிறவித்துன்பமும் அநுபவிக்கச்செய்தல் என்க.

சு. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னும்
ஏமப் புணையைச் சுடும். (306)

( இ-ம்) துறந்தவர்களுடைய கோபமாகிய நெருப்பானது தான் தோன் றுவதற்கிடமாயிருந்த அவரையும் அவருக்கினமாய் யோகஞானங்களாற் பெரியாராயினர் கூறும் உறுதிச்சொற்களையும் சுடும் என்பதாம். கருத்து-கோபமுடையாரைப் பிறவியாகிய கடலுள் வீழாமல் எடுக்க வருகின்ற இன்பத் தைத் தரும் பெரியாரது உபதேச வார்த்தையாகிய மரக்கலத்தை அக் கோப மாகிய நெருப்பு எடுக்கவொட்டாமல் கெடுக்கும் என்பது., இதனுல் கோபமுடையார் பெரியார் சொல்லையும் கேட்கமாட்டாரென்பது கண்டுகொள் க. கோபமுடையாரைக் கோபம் சுடுத ல் என்பதற்குப் பொருள்-பிறவிக்கடலுள் ளே தள்ளுதல். பெரியாரைச் சுடுதல் என்பதற்குப் பொருள்-அவர் உபதேச மொழியை விலக்குதல்.

எ. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. (307)

(இ-ம்) கோபத்தைத் தன்னுடைய வலிமையைக் காட்டும் குண மென்று தன்னிடத்துக் கொண்டவனது வலிமை கெடுதல், தரையிலடித்த வன் கையானது தரையில் வந்து படுதல் தவருததுபோலத் தவறமாட்டாது

வசனமும்.

என்பதாம். நிலத்திலடித்தவன் கை புண்படுதல்போலக் கோபஞ்செய்தவன் துன்புறுவனென்பது இங்கே யூகிக்கத்தக்கது.

அ. இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
புணரின் வெகுளாமை நன்று.
(308)

(இ-ம்) பல பிளவுபட்டெரியும் அக்கினி வந்து தன்மேற் பட்டாற் போலுங் கொடுந் துன்பத்தைத் தனக்கொருவன் செய்தாலும் அவனைத் தானுங் கோபஞ்செய்யாதிருத்தல் முடியுமானல் அது நல்லது என்பதாம். முடியுமானலெனவே, முடிவது அருமையென்பது காண்க. புணரினென்பதற்கு-தன்னாற் கோபஞ்செய்யப்படுவார் தன்னிடத்தில் வந்து தாம் முன் செய்தது குற்றமென்று சொல்லி வணங்கிவந்தால் அவரைக் கோபியாதிருத் தல் நல்லதென்று பொருள் கூறுவாருமுண்டு. அஃது அவ்வளவு சிறப்பில்லையாம்.

கூ. உள்ளிய எல்லா முடனெய்தும் உள்ளத்தால்
உள்ளான் வெகுளி யெனின்.
(309)

(இ-ம்) தவஞ்செய்கின்றவன் தன்னுடைய மனத்தால் கோபத்தை நினையாதிருப்பானானல் தான்

எண்ணிய எல்லா நலங்களையும் ஒருமிக்கப் பெறுவன் என்பதாம். கோபமில்லாத மனம் அருளுடைய மனமாதலால், அம் மனத்தால் நினைத்தவையெல்லாம் கைகூடுமென்பது கருத்து.

கo. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
துறந்தார் துறந்தார் துணை.

(310)

(இ-ம்) கோபத்தினிடத்தே அளவுகடந்து நின்றவர் உயிரிருந்தாராயினும் செத்தவரோ டொப்பாவர். அக் கோபத்தை நீக்கினவர் இறத்தற்குரியராயினும் இறத்தலை நீக்கினவரோ டொப்பாவர் என்பதாம். இதனாற் கோப முடையவர் தவத்தாற் பிரயோசன மில்லை யென்பது கருத்து. இறத்தலை நீங்கினவர்-மோக்ஷமடைந்தவர்.

---

## 32-ஆம் அதி—இன்னா செய்யாமை.

அஃதாவது, தனக்குப் பிரயோசனங் கருதியாவது கோபம்பற்றியாவது சோர்வாலாவது பிறவுயிருக்குத் துன்பஞ்செய்யா திருத்தல். சோர்வு-அறியாமை.

ஙூஉ-ஆம் அதி.—இன்னா செய்யாமை.

ஙோரு

க. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள் . (311)

(இ-ம்) பிறருக்குத் துன்பஞ்செய்தலால் எல்லாரும் நன்கு மதிக்கப் படுஞ் செல்வத்தைத் தாம் பெறலாமாளுலும், அத்துன்பத்தைச் செய்யா திருத்தலே நூலறிவால் காமம் வெகுளி மயக்கமென்று சொல்லப்பட்ட மூன்று குற்றங்களையும் நீக்கியவரது கொள்கை என்பதாம். ஏனென்றால், பிறர்க்குத் துன்பஞ்செய்தலாகிய கெட்ட வழியால் வந்தபொருள் தமக்குப் பழிபாவங்களைக் கொடுத்துவிட்டுத் தம்மிடத்து முன்னிருந்த பொருளையும் தன்னுடன் கூட்டிக்கொண்டு தான் வந்த வழியே போய்விடும் ஆதலால் என்க. எனவே, மேற்கூறிய மூன்று குற்றங்கள் நீங்காதவரே பிறர்க்குத் துன்பஞ் செய்யத் துணிவரென்பது கண்டுகொள்க. காமம்-பிறர்மனைவியரை இச்சித்தல். வெகுளி-கோபம். மயக்கம்-ஒன்றை மற்றொன்ருகக் காண்பது.

உ. கறுத்தின்னா செய்தவக் கண்ணு மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

(312)

(இ-ம்) தம்மிடத்திற் கோபங்கொண்டு ஒருவன் துன்பத்தைச் செய்தவிடத்தும் தாம் அவனுக்குத் திரும்பத் துன்பஞ்செய்யாதிருத்தலும் மேற்கூறிய முக்குற்றங்களையும் நீக்கியவரது கொள்கை என்பதாம். தமக் குத் துன்பஞ்செய்தவனுக்குத் துன்பஞ்செய்தாற் குற்றமென்ன வென்றால், தாமும் அவனோடொத்தவ ராதலால் முக்குற்றங்களையும் நீக்கியவரென்று சொல்லப்படும் சிறப்புப் போய்விடுதல் என்க.

௩. செய்யாமற் செற்றார்க்கும் இன்னாத செய்தபின்

உய்யா விழுமந் தரும்.

(313) (இ-ம்) தான் முன்பு ஒரு துன்பத்தைச்செய்யாதிருக்க, அகாரணமாகத் தனக்குத் துன்பஞ்செய்தவருக்கும் தான் துன்பத்தைச் செய்தால் அச் செய் கையானது கடக்கமுடியாத துன்பத்தைப் பின்பு தனக்குக் கொடுக்குமென் பதாம். கடக்கமுடியாத துன்பமென்றது-பிறர் தன்னை அகாரணமாகத் துன்பஞ்செய்தவரோ டொன்றாக்கி அவமதித்துப் பேசுதல்.

௪. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண

நன்னயஞ் செய்து விடல்.

(314)

(இ-ம்) தமக்குத் துன்பஞ்செய்தவரை அறிவுடையவர் தண்டித்தலாவது, அவர் வெட்கமடையும்படி இனிய சந்தோஷங்களைச் செய்து அவர் கூ



செய்த துன்பத்தையும், அவரைக் கோபிக்குங் கோபத்தையும் மறந்துவிட வேண்டுமென்பதாம். வெட்கமடைதலாவது, இவ்வளவு நன்மை செய்தவருக்கு நாம் தீமை செய்தோமே என்று மனம் வருந்தி அவர் தம் முன்பு முகம் வாடி நிற்றல்,

ரு. அறிவினா லாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக் கடை.
(315)

(இ-ம்) வேறோருயிர்க்கு வந்த துன்பத்தைத் தமக்குவந்த துன்பத் தைப்போல நினைந்து தவத்தாலுயர்ந்தோர் விலக்காவிட்டால் உயிர் முதலிய பொருள்களை உள்ளபடி தெரிந்தஅவரறிவாலாகும் பயன் இல்லையென் பதாம். ஆகவே, தம் முயிரைப்போலப் பிறவுயிரை நினைப்பது உயர்ந்தோ ரறிவாலாகும் பயனென்பது கண்டுகொள்க. பயன்-பிரயோசனம். இத்தப்பற் றியே , தன்னுயிரைப்போல மன்னுயிரைக்

காப்பவனென்று அரசனை வித்து வான்கள் பாடிவருவர். உயிர் முதலிய பொருள்-பசு பதி பாசம். பசு என் பது பாசத்தாற் கட்டுப்பட்ட உயிர். பதி என்பது இறைவன். பாசமென் பது பசுவாகிய உயிரைக் கட்டுப்படுத்தி நிற்கும் ஆணவமலம்.

சு. இன்னா எனத்தா னுணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறர்கட் செயல்.
(316)

(இ-ம்) மக்களுயிரு (மனிதரு) க்குத் துன்பந் தாத்தக்கவை யென்று தன் மனத்தால் தானறிந்த கொடிய செய்கைக ளைப் பிறரிடத்துச் செய் வதை அறிவாலுயர்ந்தோர் அடக்கிக்கொள்ளவேண்டும் என்பதாம்.

எ. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு
மனத்தானா
மாணாசெய் யாமை தலை.
(317)

(இ-ம்) மனத்தாலாகுந் தீச்செயல்களாகிய துன்பங்களை எல்லாரிடத்
தும் எந்தக் காலத்துஞ் சிறிதாயினும் செய்யாதிருத்தல்
முதன்மையான
அறம் (தருமம்) என்பதாம். மனத்தாலாகும்

தீச்செயலென்றது, மனம்
நினையாமல் ஒன்றுஞ் செய்யமுடியாதென்பது
அறிவித்தற்கு என்க. சிறி
தும் செய்யாதிருக்கவேண்டுமென்று வற்புறுத்திக்
கூறியது, சிறிது செய் தாலும் பெரிய பாவமாம்
என்பதறிவித்தற்கு என்க.

அ. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா
னென்கொலோ
மன்னுயிர்க் கின்னா செயல்,
(318)

௩௩-ஆம் அதி.—கொல்லாமை. கூ௫

(இ-ம்) பிறர் தனக்குச் செய்யுந் தீச்செயல்களைத்
தான் துன்பமென்று அநுபவித்தறிந்தவன், நிலையாகிய
பிறவுயிருக்கு அத்தீச்செயல்களாகிய துன்பங்களைத் தான்
செய்வது என்ன காரணம்பற்றியோ தெரியாது என்பதாம்.
இதனால், துன்பமநுபவித்தறிந்தவன் பிறருக்குத்
துன்பஞ் செய்தல் பிராயச்சித்தமில்லாத
குற்றமென்றறிந்துகொள்க. பிராயச்சித்தம்- பரிகாரம்.

கூ. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற்
றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

(319)

(இ-ம்) பிற உயிருக்குத் துன்பத்தை ஒருவர் ஒரு பகலின் முற்பாதி யிற் செய்வாரானால் அப்பகலின் பிற்பாதியிலே அவருக்கு அத்துன்பமடைந் தவர் செய்யாதிருக்க, பல துன்பங்களும் தாமே வந்து சேரும் என்பதாம். ஆதலால், எல்லாரும் எல்லா உயிர்களிடத்துங் கருணை (அன்பு) உடையரா யிருத்தல் வேண்டும்.

.

கo. நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
நோயின்மை வேண்டு பவர்.

(320)

(இ-ம்) துன்பங்களெல்லாம் பிறவுயிருக்கு ஒரு துன்பஞ் செய்தா ரிடத்துக் குடிகொண்டிருக்கும். ஆதலால், துன்பங்கள் வேண்டா என் றிருப்பவர் பிறவுயிருக்கு ஒரு துன்பமுஞ் செய்யாதிருக்கக் கடவர் என்ப தாம். ஒரு துன்பஞ்செய்தால் பல துன்பங்கள் உண்டாகுமென்பது, ஒரு நெல் விதைத்தால் பல நெற்கள் விளைதல்போல் என்று அறிந்துகொள்க. இக் குறட்கருத்துப்பற்றியே "உயிர் நிலத்து வினைவித்திட்டார்க்கு அவ்வினை யே விளையுமென்றார்" திருத்தக்க தேவர் (சீவகசிந்தாமணி முத்தியிலம் பகம் 164)

33-ஆம்

## அதி.—கொல்லாமை.

அஃதாவது, எந்த உயிரையும் மறந்தாவது கொலைசெய்யாதிருத்தல்.

க. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
பிறவினை யெல்லாந் தரும்.

(321)

(இ-ள்) எல்லாத் தருமங்களும் உண்டாதற்கேதுவாகிய செய்கை எதுவென்று கேட்டால், ஓருயிரையுங் கொல்லாதிருத்தலாம். அதை மறந்து

கூகூ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

கொலை செய்தால் எல்லாப் பாவச் செய்கைகளும் சேரத் திரண்டு கொடுக்குந் துன்பத்தை அக்கொலைசெய்தலொன்றே கொடுத்துவிடும் என்பதாம்.

உ. பகுத்துண்டு பல்லுயி ரோம்புதல் நூலோர்
தொகுத்தவற்று ளெல்லாந் தலை.
(322)

(இ-ம்) தான் உண்ணும் உணவைப் பங்கிட்டுப் பசித்த எல்லா உயிருக் குங் கொடுத்துத் தானும் உண்டு அவ்வுயிர்களைக் கொலைசெய்தாமற் பாது காத்தலானது தருமசாத்திரங் கற்றோர் தருமமென்று திரட்டிவைத்த எல்லாவற்றுள்ளும் முதன்மையான தருமம் என்பதாம். இத் தருமம் துறவறத்தாருக்கும் இல்லறத்தாருக்கும் மற்றைய எல்லாருக்கும் பொது வென்பது யூகித்தறிந்துகொள்க.

ங. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
பின்சாரப் பொய்யாமை நன்று.
(323)

(இ-ம்) கற்றறிந்தோர் அறம் (தருமம்) என்று சொல்லப்பட்டவற்றுள் ஒப்பில்லாத நல்ல தருமமாவது ஒரு உயிரையும் கொலைசெய்யாதிருத்த லாம் . அஃதில்லாவிட்டால் பொய்சொல்லாதிருத்தல் கொலைசெய்யாமை யின் பின்னே நிற்க நல்ல தருமம் ஆகுமென்பதாம். ஆகவே, கொலை செய் யாமையும் பொய் சொல்லாமையும் மிக மேலான தருமமென்று கண்டு கொள்க. இவவிதங் கொலையோடு பொய்யைச் சேர்த்து

எண்ணுதலால் பொய்யை ஒருவன் கனவிலும்கூட நினைக்கலாகாது. பின்னே நிற்க என்றது, ஒரு காரியஞ் செய்தற்கு அவனே தகுதியுடையான். அவனில்லாவிட்டால் இவனென்றபடி. இக் குறட் கருத்து, ஒப்பில்லாத தருமம்-முதலாவது கொலைசெய்யாமை, இரண்டாவது பொய்சொல்லாமையாம்.

ச. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
கொல்லாமை சூழு நெறி.
(324)

(இ-ம்) வீடு பெறுதற்கு (மோக்ஷம் அடைவதற்கு) நல்லவழி எது வென்று கேட்டால், யாதோருயிரையுங் கொல்லாதிருத்தலைக் காக்கவல்ல வழி என்பதாம். கொல்லாமையானது மோக்ஷமடைதற்கு நல்லவழியென்பது எப்படியென்றால், கொலைமுதலிய பாவங்களைச் செய்யாதிருத்தலே மெய்ஞ்ஞானமென்று சொல்லப்படும். அந்த மெய்ஞ்ஞானத்தாலே மோக்ஷமடையக்கூடுமாதலாலென்க. இதற்குச் சான்றாக "கொலையாதி நெறி யகன்ற ஞானந் தானே கூறரிய மெய்ஞ்ஞானம்" என்னும் சிவஞான

௩௩-ஆம் அதி.—கொல்லாமை.
கூள்

தீபச் செய்யுளையும், "ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் முதலா நல்லவாகமஞ் சொல்லும்" என்னும் சிவஞானசித்தியார் சுபக்கம் அ-ம் சூ-ம் அ-ம் செய்யுளை யுங் கண்டு தெரிந்து கொள்க.

ரு. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாம் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் றலை. (325)

(இ-ம்) உயிர்கள் பிறப்பு இறப்புத் துன்பங்களே மாறி மாறி வருதற் கிடமாய் நிற்கும் நிலைமைக்குப் பயந்து அவ விருவகைத் துன்பமும் நீங்கும் பொருட்டு இல்லற வாழ்க்கையை நீங்கித தவஞ்செய்யு முனிவரெல்லாருள்ளும் கொலைப்பாவத்துச்குப் பயந்து கொலைசெய்யாதிருத்தலை மறவாதிருப் பவன் உயர்ந்தவன் என்பதாம்.

சு. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாள்மேற்
செல்லா துயிருண்ணுங் கூற்று. (326)

(இ-ம்) கொலைசெய்யா திருத்தலாகிய விரதத்தையே உயர்ந்த தென்று கடைப்பிடித்து (உறுதியாகப் பிடித்து) நடப்பவனுடைய ஆயுள் நாளின்மேல் எல்லா உயிரையும் உண்ணும் யமன் வரமாட்டான் என்பதாம். இதன் கருத்து என்னவென்றால், புண்ணிய பாவஞ் செய்தவர் அவ்விரண் டின் பலன்களை மறுமையிலனுபவிப்பரென்னும் வரம்புகடந்து மிகப்பெரிய புண்ணியஞ்செய்தவரும், மிகப்பெரிய பாவஞ்செய்தவரும் அவவிரண்டின் பயனை இம்மையிலே யநுபவிப்பரென்று அறநூலுட் கூறிய முடிவுபற்றிக் கொலைசெய்யாமையாகிய பெரிய தருமஞ்செய்தவன் அத் தருமத்தின் பயனாகிய மோக்ஷத்தையடைவதற்குச் சாதனமாகிய ஞானம் பிறந்து வளர் தற்கு அவனுக்கு வரையறுக்கப்பட்ட ஆயுள்நாள்வரையும் அவனிருக்கவேண் டும். ஆதலால் அவனிடத்து இடையிலே யமன் வரமாட்டானென்பதாம். எனவே, ஒருவனுக்கு வரையறுக்கப்பட்ட ஆயுள்நாளிலல்லாமல் இடையிலே யமன் வருதலு முண்டோவென் றால், பாவமிகுதிபற்றி இடிவிழுதல், ஆறிழுத்தல், *திருடரால் வெட்டுப்படுதல் முதலிய அபமிருத்தால் வருத லுண்டென்க. அபமிருத்து-துன்மரணம். மிகப்பெரிய புண்ணியபாவங்கள் செய்தவர் அவவிரண்டின் பலன்களை இம்மையிலே யநுபவிப்பரென்ப தற்குச் சாட்சியாகப் பின்

வருஞ் செய்யுளைக் காண்க. ''மிகமேவிய புண் ணிய பாவமெனும் வினையின் பயன் வேறொரு காலமுறா திகமேவரும்'' (சசிவர்னபோதம்-அ) இன்னும் தசரதன் யாகஞ்செய்து உடனே புத்திரர் களையடைந்ததும், தக்கன் யாகஞ்செய்து உடனே தலையிழந்ததும் சான்ற ரும். சான்று- சாட்சி.

## 13

## கூ.ம் திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

எ. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(327)

(இ-ம்) தன்னை வந்து கொல்லுதலால் தன்னுயிர் தன்னுடம்பினின் றும் போமானாலும், தன்னைக் கொன்ற மற்றொன்றின் இனிய உயிரை அதன் உடம்பில் நின்று நீக்குந் தொழிலினை யாருஞ் செய்யாதிருக்கவேண்டும் என்பதாம். ஏனென்றால், தான் பிறவுயிரால் கொலையுண்டவழிப் பாவந் தேய்தலும், தான் பிறவுயிரைக் கொலைசெய்தவழிப் பாவம் வளர்தலுமாம் · ஆதலா லென்க.

அ. நன்றாகும் ஆக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
கொன்றாகும் ஆக்கங் கடை .
(328)

*(இ-ம்) யாகஞ் செய்யும் இடத்து ஆடு மாடுகளைக் கொல்லுதலாலுண் டாகிய இன்பமிகுஞ் செல்வம் இல்லறத்தாருக்குப் பெரிதென்று சொன்னாலும் துறவறத்தாலுயர்ந்தவருக்கு ஒருயிரைக் கொல்லுதலாலுண்டாகிய செல் வம் தாழ்ந்தது என்பதாம்: இன்ப மிகுஞ் செல்வமென்றது—யாகஞ் செய் தலால் தேவராகித் தேவபோகத்தை யநுபவிக்குஞ் செல்வம். துறவிகளுக்கு அவ்வின்பங் தாழ்ந்ததென்றது, தவத்தாலெய்தும் ஈறில்லாத மோக்ஷ இன் பத்தை நோக்கி என்க. பெரிதெனினு மென்றதனால் யாகத்தில் ஆடுமாடு களைக் கொல்லுதல் இந்நூலாசிரியர்க்கு உடன்பாடல்ல வென்பது கண்டு கொள்க.

கூ. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
புன்மை தெரிவா ரகத்து .
(329)

(இ-ம்) கொலைத்தொழி லுடையவராகிய மனிதர், அக்கொலைத்தொழி லின் இழிவை யறியாத நெஞ்சத்தாராலும் அக் கொலைத்தொழில் கீழ்மை

யென்றறிந்தார் நெஞ்சத்துப் புலைத்தொழிலின ரென்று அறியப்படுவர் என்ப தாம். எனவே, உயர்ந்த சாதியினராானாலும் கொலை செய்தார் புலையராவ ரென்பது காண்க. புலையர்-எல்லாச் சாதியாரினுங் கடையாகிய கடைய ரினும் கடையர்.

.

கo. உயிருடம்பி னீக்கியா ரென்ப
செயிருடம்பிற்
செல்லாத்தீ வாழ்க்கை யவர். (330)

(இ-ம்) பார்ப்பதற்குச் சகிக்கமுடியாத நோயுடம்புடனே தரித்திரப் பட்டிருக்கின்ற கொடிய வாழ்க்கையுடையாரை இவர் முற்பிறப்பினிடத்து

## ௩௪-ஆம் அதி.—நிலையாமை.

௩௩௧

உயிர்களை அவ்வுயிர்கள் நின்ற உடம்புகளை விட்டுப் பிரித்தவரென்று சொல்லு வார், வினைகளாலுண்டாகிய வினையை (பயன்களை) அறிந்த பெரியோர் என்பதாம். எனவே, உடம்பைவிட்டு உயிரைப் பிரித்தலே கொலையெனத் தெரிந்துகொள்க. போன சென்மத்திற் கொலைசெய்தவர் "அக்கேபோ லங்கை யொழிய விரலழுகித் துக்கத் தொழுநோ யெழுபவே" என்று

*நாலடியாரிற் கூறியதும் இக்கருத்துப் பற்றியே.
அக்கு-சங்கு. அங்கை- உள்ளங்கை.

அருளுடைமை முதற் கொல்லாமை யீறாகச் சொல்லப்பட்ட இவற் றுள்ளே, சொல்லப்படாத விரதங்களும் அடங்கும். அஃதறிந்து நுட்ப அறிவுடையோர் அடக்கிக்கொள்க.

விரதமுற்றிற்று.

---

ஞானம்.

அஃதாவது, மோக்ஷத்தைத் தரும் உணர்ச்சி. அது-நிலையாமை முதல் அவாவறுத்த லீறாக நான்கதிகாரத்துள் அடக்கப்பட்டது.

## 34-ம் அதி.— நிலையாமை.

அஃதாவது, தோற்றமுடைய (காணப்பட்ட) எல்லாப் பொருள்களும் நாசமடையுந் தன்மை. இது தெரிந்தாலல்லாமல் பொருள்களிற் பற்று விடாது. ஆதலால், ஞானத்தைப் பெறவேண்டியவருக்கு முதலாவது தெரியவேண்டுவது இந்நிலையாமையேயாம்.

க. நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்

புல்லறி வாண்மை கடை.
(331)

(இ-ம்) நிலைநில்லாதழியும் பொருள் களை நிலைநிற்பனவென்று அப்பொருள் களின்மேற் பற்றுவைக்கும் சிற்றறிவினையுடையாதல் துறவிகளுக்கு இழிவு என்பதாம். ஏனென்றால், நிலைத்தபொருளாகிய மோக்ஷம் பெறுதலை விரும் பித் தவஞ்செய்யுந் துறவிகள் நிலையாத மற்றைப் பொருள்களிடத்து ஆசை வைத்தால் அவவாசை காரணமாகப் பிறவித்துன்பம் வருமாதலால் என்க. இனி, புல்லறிவாளர் பற்று (ஆசை) வைப்பது சிற்றின்பத்திற் கேதுவாகிய செல்

*நாலடியார் தீவினையச்சம் 3.



வத்தினிடத்தும் அவ்வின்பத்தை யநுபவிக்கும் சரீரத்தினிடத்தும் ஆதலால் மேல்வரும் இரண்டு திருக்குறளால் அவ்விரண்டினது நிலையாமை கூறுவர். இதனால், யாராயிருந்தாலும் பொய்ப்பொருளாய் அழிந்து போகும் பொருள் களின்மேல் பற்று (ஆசை) வைத்தாரானல் அவருக்குப் பிறவித்துன்பம்

ஒழியாதென்று கண்டுகொள்க.

௨. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று. (332)

(இ-ம்) ஒருவரிடத்துப் பெருஞ்செல்வம் வந்து சேருதலானது கூத் தாடுகின்ற சபையினிடத்துக் கூத்துப்பார்ப்போர் கூட்டம் வந்து கூடுதலை யொக்கும். அச்செல்வம், அவரைவிட்டு நீங்குதலும் கூத்து முடிந்தவுடனே கூத்துப்பார்க்க வந்தவர் கூட்டம் நீங்குதலை யொக்குமென்பதாம். ஆதலால், செல்வம் ஒரு நிலையில் நிற்பதல்லவென்று கண்டுகொள்க.

௩. அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்
அற்குப ஆங்கே செயல். (333)

(இ-ம்) ஊழில்லாத இடத்துச் செல்வமானது நிலையாக நில்லாத தன்மையுடையது. அப்படிப்பட்ட செல் வங் கிடைத்த அப்பொழுதே பிரதிப்பிரயோசனங் கருதாமல் நிலையாக நிற்பனவாகிய கடவுட் பூசையும் தானங்களுமாகிய தருமங்களைச் செய்யவேண்டும் என்பதாம். இதனால், ஊழுள்ள இடத்துத தான் செல்வங்கிடைக்குமென்றும், நிலைநிற்குமென்றும், ஊழில்லாத இடத்துச் செல்வங் கிடையாததோடு முன்னுள்ள செல்வமும் போய்விடுமென்றுங் கண்டுகொள்க.

அல்குதல்-நிலையாகத் தங்குதல்.

ச. நாளென ஒன்றுபோற் காட்டி யுயிரீரும்
வாள துணர்வார்ப் பெறின்.

(334)

(இ-ம்) உலககாரியம் நடக்கும்பொருட்டுச் சூரியனைக்கொண்டு காலத்தைப் பகுக்கப்பட்ட ஒரு சிற்றளவாகிய நாள்போலத் தன்னைக் காட்டி உயிரை இடைவிடாது பிளந்துகொண்டு போகும் காலமாகிய அரிவாளின் வாயினிடத்து அவ்வுயிர் உள்ளது. இவ் வுண்மையறியாதவர் அறிந்தவரை அடையப்பெற்றால் அவராலறிந்துகொள்ளலாம் என்பதாம். இக்கருத்துப் பற்றியே "நாளும்நாம் சாகின் றேமால் நமக்குநாம் அழாத தென்னே" என்றார் பெரியார். (வளையாபதி) இடைவிடாது பிளந்துகொண்டுபோத லெப் படி யென்றால், ஒருவனுக்கு விதிக்கப்பட்ட ஆயுளை நீங்காதிருந்து சிறிது

௩௪-ஆம் அதி.—நிலையாமை.

௩௦௩

சிறிதாகக் குறைத்து முடிவில் முழுவதுங் கொண்டுபோவதாம். ஆயுளென் பது, உயிர் உடம்போடு கூடியிருக்கும் நிலை.

அவ்வுயிர், தான் நின்ற உடம்பை விட்டுப் பிரிந்து போவதுதான் ஆயுள் முடிவு. இவையெல்லாம் நுட்பமான அறிவால் அறியத்தக்கவை.

ரு. நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் னல்வினை
மேற்சென்று செய்யப் படும்.
(335)

(இ-ம்) பேசவொட்டாமல் நாவை யடக்கி விக்கல் மேலெழுந்து வரு முன் செய்யவேண்டிய தருமங்களை அதிவிரைவாகச் செய்யவேண்டும் என்பதாம். அதிவிரைவாக என்றது, மரணம் இன்ன வேளையென்றில்லாமல் உறுதியாகத் தவறாது வந்துவிடுமென்பதறிவித்தற்கென்க. இக்கருத்துப் பற்றியே "ஒன்றும் நன்றே செய்யவும் வேண்டும், நன்றும் இன்றே செய்யவும் வேண்டும், இன்றும் இன்னே செய்யவும் வேண்டும்" என்றார் ஒரு பெரியார். (கபிலரகவல்)

சு. நெருந லுளனொருவன் இன்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.
(336)

(இ-ம்) நேற்று இருந்த ஒருவன் இன்று செத்தானென்று சொல்லும் நிலையாமையே அதிகமுடையது இவ்வுலகம் என்பதாம். இக்கருத்தை நுட்பமாக உணர்ந்து "விண்ணிடு வில்லும் புனல்மேற் குமிழியும் மின்னு மெண, மண்ணிடைத் தோன்றி யழியுமிக் காயத்தை" என்றார் வாதுங்கா. (கருவையந்தாதி 16) வாதுங்கராமபாண்டியன் பாடியதென்பது பழைய ஏட்டுச்சுவடிகளிற் கண்டது.

எ. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
கோடியும் அல்ல பல.

(337)

(இ-ம்) ஒரு கணப்பொழுதளவும் உயிரும் உடம்புங் கூடி வாழ்ந்திருத் தலை அறியமாட்டார்; அப்படிப்பட்டவர் கோடியளவு மல்லாமல் அதற்கு மேற்பட்ட பலவாகிய நினைவுகளை நினைப்பர் என்பதாம். பலவாகிய நினைவு களாவன: ஐம்பொறிகளாலநுபவிக்கும் இன்பங்கள்; தமக்குச் சுதந்தர மாகும் விதமும், அவைகள் கிடைக்கும் விதமும், அதற்குப் பொருள்துணைக் காரணமாகும் விதமும், அப்பொருள் தம்முயற்சிகளால் வரும் விதமும், அம்முயற்சியைத் தொடங்கும் விதமும், அவற்றிற்கு வரும் இடையூறும், அதை நீக்கும் உபாயமும், அதனுலப்பொருள் கைவசப்படும் விதமும், அப் கoஉ

பொருளைப் பிறர் கொண்டுபோகாமற் காக்கும் விதமும், சிநேகரை யாக்கும் விதமும், பகைவரைக் கெடுக்கும் விதமும் இன்னும் இவைபோல்வன பலவு மென்பதாம்.

அ. குடம்பை தனித்தொழியப் புட் பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு.
(338)

(இ-ம்) தோன்றும்போது தான் தனிமையாயில்லாத முட்டையானது தன்னுள்ளிருந்த பறவை பருவம்வந்த காலத்துப் பறந்துபோகத் தனியே கிடத்தலைப்போலும். எதுவென்றால், தோன்றும்போதே வினை வசத்தாற் சரீரத்தோடு நட்புக்கொண்டு பிரியாதிருந்து உயிரானது முடிவு காலத்திலே தன்னைவிட்டுப் பிரிந்துபோக . அச்சரீரம் தனியே கிடத்தல் என்பதாம். தனியே கிடத்தலல்லாமல் எல்லாரும் பிணமென்று சொல்லும் சொல்லையும் பொருந்தும். ஆதலால், இச்சரீரத்தை நிலையுள்ளதென்று அறிவுடையோர் அதனிடத்து அபிமானம் வைக்கமாட்டாரென்பது கருத்து. குடம்பை யென்றது கூடென்று பொருள் கூறுவாருமுளர், அது பொருந் தாது. ஏனென்றால், தே ான்றும்போது தனியே தோன்றுதலாலும் கூட்டைவிட்டுச் சென்ற பறவை திரும்பவும் அதனுட் புகுதலாலுமென்க.

௯. உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

(339)

(இ-ம்) ஒருவனுக்கு மரணம் வருதல் உறக்கம் வருதலோ டொப்பா கும். பிறப்பு வருதல் உறங்கியபின் விழிப்பு வருதலோ டொப்பாகும் என் பதாம். இதனால், ஒருவனுக்குச் சீக்கிரம் உறக்கமும் விழிப்பும் மாறிமாறி வருத ல்போல மரணமும் பிறப்பும் மாறிமாறி வந்துகொண்டே யிருக்குமென் பது கண்டுகொள்க.

௪௰. புக்கி லமைந்தின்று கொல்லோ உடம்பினுள்
துச்சி லிருந்த வுயிர்க்கு.

(340)

( இ-ம் ) வாத பித்த சிலேட்டு மங்களின் வீடாகிய சரீரத்தில் ஒதுக்குக் குடியாக இருந்த உயிர்களுக்கு எந்நாளும் விட்டு நீங்காத வீடு கிடைத்த தில்லை போலும் என்பதாம். கிடைத்தால் அந்த வீட்டிலே யிருக்கலாமென் பது கருத்து. அந்தவீடு-மோக்ஷவீடு. ஒதுக்குக்குடி-வேண்டியபோது தன் னிடத்திருந்தாரைப் புறத்தே போகச்செய்யும் வீடு.

## 35-ஆம் அதி.—துறவு.

அஃதாவது, புறத்தாகிய செல்வத்தினிடத்தும், அகத்தாகிய சரீரத்தினிடத்தும் உள்ளதாகும் பற்றினை (ஆசையை) அவ்விரண்டினது நிலையாமை நோக்கி விட்டுவிடுதல்.

க. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன் .
(341)

(இ-ம்) எந்தெந்தப் பொருளில் ஆசையை நீக்கிவிட்டான் எவனோ அவனுக்கு அந்தந்தப் பொருளைத் தேடுதலாலுங் காத்தலாலும் பின்னர் இழந்துவிடுதலாலும் வருந் துன்பங்கள் இல்லையென்பதாம். இதனால், எல்லாப் பொருளிலும் ஆசையை விட்டவருக்கே ஒரு துன்பமும் இல்லையென்பதும், அப்படி விடமாட்டாதவர் விடுவதற்குச் சாதனமாகிய உபாயம் ஒவ்வொரு பொருளினிலை ஆசையை விட்டுப் பழகுதலென்பதுங் கண்டுகொள்க.

உ. வேண்டினுண் டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல.
(342)

(இ-ம்) எல்லாப் பொருள்களிலும் பற்று (ஆசை) யையாது விட்டு விட்டால் ஒருவர்க்கு இம்மையில் ஒழுங்குடைய எல்லா இன்பங்களும் உண் டாகும்.

ஆதலால், அவ்வின்பங்களை விரும்பினல் காலத்தைக் கடத்தாமல் நினைத்தபொழுதிலே எல்லாப் பற்றையும் நீக்கிவிடவேண்டு மென்பதாம். எல்லா இன்பங்கள்-மனம் வாக்குக் காயங்கள் வருத்தப்படாமல் நின்று நல் வழியிற் சேர்தலாலாகும் பயன்கள். இம்மை-இப்பிறப்பு.

ந. அடல்வேண்டு மைந்தின் புலத்தை விடல்வேண்டும்
வேண்டிய எல்லா மொருங்கு. (343)

(இ-ம்) வீடு (மோக்ஷம்) அடைவார் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறி (இந்திரியங்) கட்குரிய ஓசை முதலிய ஐந்து புலன்க ளாலு மநுபவிக்கு மின்பங்களையுங் கெடுத்துவிடல் வேண்டும். அப்படிக் கெடுக்கும்போது ஐ ம்புலன்களாலாகிய இன்பங்கள் காரணமாகச் சேர்த்து வைத்த எல்லாப்பொருள்களையு ம் ஒருமிக்க விட்டுவிடுதல் வேண்டும் என்ப தாம். ஒருமிக்க விடாமல் சிறிதுசிறிதாக விட்டால் விறகிற்பற்றிய நெருப்புப்போல வளர்ந்து ஆசை பெருகுமே யல்லாமல் கெடமாட்டாதென்பது கருத்து. ஓசை முதலிய ஐந்து-சத்த பரிச ரூப ரச கந்தம் என்பன.

வசனமும்.

ச. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை மயலாகு மற்றும் பெயர்த்து.
(344)

(இ-ம்) தாம் ஆசை வைக்கும் ஒரு பொருளுமில்லாதிருத்தலே தவஞ் செய்வாருக்கு இயல்பு (நன்மை) ஆகும். இதுவல்லாமல் ஏதாவது ஒரு பொருளிருந்தால் மீண்டும் பிரபஞ்ச வாழ்க்கையில் மயங்குதற்கு ஏதுவாகும் என்பதாம்.

ரு. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை.
(345)

(இ-ம்) பிறவித்துன்பத்தை விட்டு நீங்க நினைப்பவருக்குத் தம்முட னொற்றுமையா யிருக்கும் உடம்பும் அதிகமென்றால் தம்மோடு சம்பந்தப் படாமல் வேறாயிருக்கும் மற்றைப் பொருள்களில் ஆசை வைப்பது என்ன காரணமோ தெரியவில்லை என்பதாம். இதனால், பிறவித்துன்பத்தை நீக்கு தற்குத் தவஞ்செய்பவர் தம் சரீரத்திலும் அபிமானம் வைக்கக்கூடாதென்பது கருத்து.

௬. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.
(346)

(இ-ம்) தானல்லாத உடம்பை யானென்றும், தன்னோடு சம்பந்த மில்லாத மற்றைப் பொருளை எனதென்றும் நினைத்து, அவ்விரண்டினும் பற்று (ஆசை) வைப்பதற் கேதுவாகிய மயக்கத்தை நீக்குபவன் தேவர்களுக் கும் அடைதற்கரிதாகிய (வீட்டுலகம்) மோக்ஷஉலகத்திற் சென்று இருப்பன் என்பதாம். யானென்பது-அகப்பற்று. எனதென்பது - புறப்பற்று. இவ் விரண்டும் நீங்காதவர் மோக்ஷமடைய மாட்டாரென்பது கருத்து.

௭. பற்றி விடாஅ இடும்பைகள் பற்றினைப்
பற்றி விடாஅ தவர்க்கு.
(347)

(இ-ம்) மேற்கூறிய இரண்டு பற்றினையும் இறுகப் பிடித்துக்கொண்டு விடமாட்டாதவரைப் பிறவித் துன்பங்கள் இறுகப்பிடித்துக்கொண்டு விட மாட்டார் என்பதாம். இறுகப்பற்றுதல்-சிறிதும் நெகிழ விடாமற் பிடித்தல். எல்லாப் பொருள்களிலும் ஆசையை விடாதவர்

எந்தக் காலத்தும் பிறர் இறந்து வருந்துவரென்பது கருத்து.

அ. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். (348)

௩௯-ஆம் அதி.--மெய்யுணர்தல்.

கஂ௫

(இ-ம்) முற்றத் துறந்த முனிவரே மோக்ஷவீட்டை யடையப்பெற்றவர். அவர்போலத் துறவாத மற்றவரே மயக்கமுற்றுப் பிரபஞ்சமாகிய வலையு ளகப்பட்டவர் என்பதாம். இதனால், இவர் பெரிது துறந்து சிறிது துறவாம லிருந்தாலும் மோக்ஷமடைய மாட்டாரென்க. ஏனென்றால், அச்சிறிய ஆசை வளர்ந்து பெரிய ஆசையிலிழுத்துக்கொண்டு தள்ளிவிடலால் என்க. துறத்தல்-பற்றுவிடுதல்.

௯. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
நிலையாமை காணப் படும். (349)

(இ-ம்) ஒருவன் அகப்பற்று புறப்பற்றென்னும் இரண்டு மற்றபோது அப்பற்றறுதலே அவன் பிறவித்துன்பத்தைக் கெடுக்கும். அப்பற்று அறாத போது

அவ்விருவகைப்பற்றாலும் பிறந்து இறந்து வருகின்ற நிலையாமையே காணப்பட்டு நிற்கும்; நிலையாகிய மோக்ஷம் காணப்படாது என்பதாம் .

பிறவித்துன்பமில்லையேல் மரணத்துன்பமுமில்லை. காரணம் இல்லாதபோது காரியமுமில்லையாதலால் பிறவிக்குக் காரணமாகிய ஆசையற்றபோது காரிய மாகிய பிறவியில்லை யென்பது தெளிவாகக் காணப்பெற்றது. இக்கருத்துப் பற்றியே "அற்றது பற்றெனில் உற்றது வீடு" என்றார் பெரியார். (திருவாய் மொழி 2-ஆம் பத்து 2 பதிகம் 5)

க௦. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

(350)

(இ-ம்) எல்லாப் பொருளையும் பற்றி நின்றே அப்பற்றை விட்டு நீங்கிய இறைவன் (கடவுள்) அருளிச்செய்த மோக்ஷவழியை இதுவே நல்லவழி யென்று உறுதியாக மனத்துள்ளே பற்றிக்கொள்ளவேண்டும். அப்படிப் பற்றிக்கொண்டு அம்மனத்தால் தன்னை விடாது வந்து பற்றிய பற்று நீங்குதற்கு ஏற்ற உபாயத்தைச் செய்யவேண்டும். உபாயமாவன—தியானம் சமாதி முதலியன. விடாது வந்து பற்றிய பற்றென்றது—அநாதியாய் வரும் சரீரப் பற்றினை.

## 36-ஆம் அதி—மெய்யுணர்தல்.

அஃதாவது, பிறவியையும் மோக்ஷத்தையும் அவ்விரண்டின் காரணங்களையும் விபரீதமும் ஐயமுமில்லாமல் உண்மையாயறிதல். விபரீதம் - ஒன்றை மற்றொன்றாகக் கருதுதல். ஐயம்-சந்தேகம்.

14

௩0௬ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

க. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
மருளானு மாணாப் பிறப்பு .

(3 5 1) (இ -ம்) பொய்ப்பொருள் களை மெய்ப்பொருள்களென்று அறியும் மயக்க அறிவினாலே மாட்சிமையில்லாத பிறவியுண்டாகும் என்பதாம். பொய்ப்பொருள்களாவன—சனனமரணத்தி லகப்பட்ட தாவர சங்கமமாகிய எல்லாப்பொருள்களுமே. தாவரம் - நிலையிலே நிற்பதாகிய மரமுதலியவை. சங்கமம்-நடந்து

திரியும் மனிதர் தேவர் முதலானவரும், மாடு ஆடு முதலியவைகளும். மயக்கஅறிவு-மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் இவை போல்வன பிறவும் இல்லையென்று கூறும் பொய்ந்நூல்களின் வழக்கங்களை மெய்ந்நூல் வழக்கங்களெனக் கைக்கொள்ளுதல். மாட்சிமை-குணம்.

உ. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு.

(352)

(இ-ம்) அவிச்சை (அஞ்ஞானம்) யை விட்டு நீங்கிக் குற்றமற்ற மெய் யறிவு கைவந்தவர்க்கு, அம்மெய்யறிவானது இருளாகிய பிறவியைக் கெடுத்து மோக்ஷமாகிய பேரின்பத்தைக்கொடுக்கு மென்பதாம். குற்றமற்ற மெய் யறிவு-உள்ளதை யுள்ளபடியே யறியும் அறிவு.

ந. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்து .

(353)

(இ-ம்) இவை பொய்யோ மெய்யோவென்று நினைக்கும் சந்தேகத்தை விட்டு நீங்கி உள்ளதை உள்ளபடியே யறிந்து தெளிந்தவர்க்குத் தாமிருக்கும் உலகத்தைப் பார்க்கினும் தங்கண் ணுக்குத் தோன்றுதிருக்கும் தேவருலகம் சமீபமுடையது என்பதாம். இவை யென்றது - மறுபிறப்பு, இருவினைப் பயன்,

மோக்ஷம், நரகம், கடவுள் என்பன். உள்ளதை உள்ளபடி யறிந்து தெளிந்தவருக்கு அப்பழக்கவாசனையால், பொய்யாகிய உலக இன்பம் நீங்கும். அது நீங்கவே மெய்யாகிய பேரின்பத்தை விரைவில் அடைவர். ஆதலால், தேவருலகம் சமீபமென்று கூறிய நுட்பங் கண்டுகொள்க. பேரின்பம் - மோக்ஷம்.

௪. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயனின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(354)

(இ-ம்) மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் ஐம்பொறிகளின் வேறுபாட்டால் அப்பொறிகளின் விஷயமாகிய ஐந்தாகிய அறிவு தம்மனத்



தின் வசப்பட்டிருந்த இடத்தும் மெய்யுணர்ச்சி யில்லாதவருக்கு ஐயறிவு வசப்பட்டிருத்தலாற் பயனில்லை என்பதாம். எனவே, மனத்தை யொரு நிலையில் நிறுத்தித் தாரணையாகிய யோகப்பயிற்சி கைவந்தவராலும் பரம் பொருள் இன்னதென்று நிச்சயித்தறியக்கூடாதவர்க்கு அந்த யோகத்தாற் பயனில்லை என்பது கருத்து. பயன் - பிரயோசனம். தாரணை - யோகஞ் செய்யும் நிலையிலொருபாகம். இதை யோகநூல் படித்தால் நன்றாகத்

தெரிய லாம். ஐந்தாகிய அறிவுகள்-ஐம்பொறிகளால் சத்த பரிச ரூப ரச கந்தங்களை யறியும் அறிவுகள். மெய்யுணர்ச்சி-உள்ளதை யுள்ளபடி யறிதல்.

ரு. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. (355)

(இ-ம்) எந்தப் பொருள் எந்த இயல்பினதாய்க் காணப்பட்டாலும் அந்தப் பொருளில் நின்று அதன் உண்மைத் தன்மையைக்கண்டு அப் பொருள் இன்னதென்று கண்டறிவதே அறிவு என்பதாம். இதனால், ஒரு பொருள் மற்றொரு பொருளினியல்பாகத் தோன்றுமென்பதும், அப்படித் தோன்றினால் அத்தோற்றங்கண்டு மயங்காமல் உண்மையைக் கண்டறிய வேண்டுமென்பதும், உறுதியாகக் கொள்க. உதாரணம்-கயிறானது பாம்பு போல உருவத்தாற் காணப்பட்டால் பாம்பென்று மயங்காது அசைதல் முதலிய குணமில்லாமையால் கயிறென்றறிதல் போல்வது. இப்படியே ஒவ்வொரு சாதியாரும் சமயத்தாரும் தங்கள் தங்களுக்குரிய கடவுள் இலக் கணங்களெல்லாம் பொதுவாக எல்லாக் கடவுளுக்கும் ஒத்திருந்தாலும் கடவுளுக்குரிய சிறப்பிலக்கணங்களாகிய பிறப்பு இறப்பு இல்லாதிருத்தல் எந்தக் கடவுளுக்கில்லையோ அந்தக் கடவுள் பரம்பொருள் ஆகாதென்று கண்டு கொள்க.

சு. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.
(356)

(இ-ம்) இப்பிறப்பில் பல நூல்களைப் பல ஆசிரியர்களிடத்திற் கற்று அநுபவமுடைய உபதேச குருவினிடத்து நல்லுபதேச மொழிகளைப் பெற்று அதனால் உண்மைப் பொருளாகிய பரம்பொருளை யறிந்தவர் திரும்பவும் இப்பிறப்பில் வாராத மார்க்கமாகிய வீடு பெறும் மார்க்கத்தைப் பெறுவர் என்பதாம். வீடு-மோக்ஷம். மோக்ஷம் பெறுதற்கு நிமித்த காரணமாகிய முதற்பொருளை (கடவுளை) யறிதற்கு உபாய மூன்று, அவை-கேட்டல், சிந் தித்தல், தெளிதல். அம்மூன்றனுள் இத்திருக்குறள் கேட்டல் கூறியது,

கூ௦அ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

எ. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.
(357)
(இ-ம்) மேற்குறளிற் சொல்லிய விதம் உபதேச

குருவினிடத்துக்
கேட்ட சொற்பொருளை ஒருவன் மனமானது
அளவைகளாலும், பொருந்து
முறையாலும் தெளிய ஆராய்ந்து, அதனால்
முதற்பொருளாகிய பரம்பொருளை
யறியுமானால் அம் மனத் தையுடைய அவனுக்கு
இனிமேற் சனனம் வரு
மென்று நினைக்கவேண்டுவதில்லை என்பதாம்.
சனனம்-பிறப்பு. அளவை- , காட்சி, அனுமானம், ஆகமம்
என மூன்ருகும். இவற்றைச் சித்தாந்த சாத்
திரம் தெரிந்தாரிடத்திற் றெளிவாகக்
கேட்டறிந்துகொள்க. இதுவே சிந்
தித்தல்.

அ. பிறப்பென்னும் பேதைமை நீங்கச்
சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்ப தறிவு.
(358) (இ-ம்) பிறவிக்குக் காரணமாகிய அவிச்சை
(அஞ்ஞானம்) ஆனது
கெட, எந்நாளு மொன்றுபோல நிற்பதாகிய
சிறப்பென்று சொல்லப்படும்
செவ்வை (ஒழுங்கு) உடைய பரம்பொருளைத்
தன்னோடொற்றுமையுற
இடைவிடாது பாவித்து (நினைத்து)ப் பழகி வருதல்

அறிவு என்பதாம்:
இவ்விதம் பழகுதலே நிட்டை அல்லது சமாதி என்று சொல்லுவர். ஒருவன்
மரணகாலத்தில் நினைப்பதெதுவோ அதுவே பின்னர் அடைவதாமென்று
எல்லா ஆகமங்களும் கூறலால், வீடு (மோக்ஷம்) பெறவிரும்புவார் மரண
காலத்தில் பிறவிக்கேதுவாய நினைப்புக் கெடுதற்பொருட்டு மோக்ஷத்துக்
கேதுவாய நினைப்பு வருதற்கு முன்னரே பழகி வரவேண்டுமென்பது கருத்து.
இதுவே தெளிவு.

௬. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் .
(359)

(இ-ம்) ஒருவன் எல்லாப் பொருளும் வந்து சாருதற்கிடமாகிய, மேலே செம்பொருளென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட பரம்பொருளே யோக ஞானங்களாலறிந்து, அகப்பற்றும் புறப்பற்றுங் கெடும்படி நடக்க வல்லவனாகில் அவனை முன் சாரக்கடவனவாகி நின்ற துன்பங்கள் அவனுடைய நடைகளை

(ஒழுக்கங்களை)க் கெடுத்துப் பின் வந்து சாரமாட்டா என்பதாம். மூன் சாரக்கடவனவாகி நின்ற துன்பங்கள்-யோக ஞானங்களை யறிதற்கு முன் சம்பாதித்த நல்வினை தீவினையின் பயன்கள். நல்வினைப் பயனும் துன்பமென்றது, அதுவும் பிறவிக்காரணமாதலாலென்க, எனவே, நல்வினை

## ௩௭-ஆம் அதி.—அவாவறுத்தல்,

௩௦௬.

தீவினைகளின் பயன்களாகிய இருவகைத் துன்பங்களும் விளக்கின்முன் இருள்போல ஞான யோகங்களாற் கெடுமென்பது கண்டுகொள்க.

௩௦. காமம் வெகுளி மயக்கம் இவைமூன் றின்
நாமங் கெடக்கெடும் நோய்.

(360)

(இ-ம்) ஞான யோகங்களில் மிகப் பழகிய மெய்யறிவுடையவருக்கு ஒரு பொருளில் விருப்பும் வெறுப்பும் அவிச்சையும் ஆகிய மூன்று குற்றங் களின் பெயருங்கூட இல்லாமற் கெடுதலால் அக்குற்றங்களால் உண்டாகும் காரியங்களாகிய வினைப்பயன்களென்னுந் துன்பங்கள் உண்டாகமாட்டா என்பதாம். பெயருங்கூட

இல்லாமற் கெடுமென்றது-முழுவதும் இல்லாமற் கெடுமென்றபடி. அவிச்சை - அஞ்ஞானம். அவிச்சையை அநாதியே உள்ளதென்றார் உரையாசிரியர். இதனால், எல்லா வினைப்பயன்களுக்கும் காரணம் மேற்கூறிய முக்குற்றங்களே யென்பது கண்டுகொள்க. காம முதலிய மூன்று குற்றங்களாகிய காரணங்கெடுதற்கு மெய்யறிவின் முதிர்ச்சி வேண்டுமென்பது தெளிவாகத் தெரிந்தது.

---

## 37-ஆம் அதி.—அவாவறுத்தல்.

அஃதாவது, உடம்பு உண்டாவதற்கு முன்னும் பின்னும் வினைத் தொடர்ச்சியைக் கெடுத்தவருக்கு நடுநின்ற உடம்பும், அது கொண்ட வினைப் பயன்களும் இருந்தமையால் துன்பம் பற்றி ஒவ்வோரிடத்து முன்துறக்கப் பட்ட ஐம்புலன்கள்மேற் பழைய பழக்கத்தாலுண்டாகிய நினைவும் ஆசையும் பிறவிக்கு வித்தாதலால் அந்நினைவை இடைவிடாத மெய்ப்பொருளுணர்ச்சியாற் கெடுத்தல். ஐம்புலன்கள்-சத்த பரிச ரூப ரச கந்தங்கள்.

க. அவாவென்ப எல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து. (361)

(இ-ம்) எல்லா உயிர்களுக்கும் எந்தக் காலத்தும் கெடாமல் வருகின்ற பிறவியைத் தரும் வித்தானது எதுவென்றால்-அவா (ஆசை) என்று நூல் களைக் கற்றறிந்தார் சொல்லுவரென்பதாம். ஆதலால் "வீடும் வேண்டா விறலின் விளங்கினர்" என்றார் பெரியார். (பெரிய இடம் மோக்ஷம் என்னும் ஒரு பழமொழியும் உண்டு. ருக்குந் தெரியாதென்பது கருத்து,

புராணம்) ஆசையற்ற
இவ்வுண்மை யெல்லா .

கக0 திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

உ. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை
மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.
(362)

(இ-ம்) பிறப்பு, பிணி, மூப்பு, இறப்பு ஆகிய துன்பத்தின் தன்மையை யறிந்தவன் ஒன்றை விரும்பினால் பிறவாதிருத்தலை விரும்பவேண்டும். பிறவாதிருத்தல் எதனால் கிடைக்குமென்றால், தான் ஒரு பொருளையும் இச்சியாதிருத்தலாலே கிடைக்கு மென்பதாம். இதனால், பிறவி இல்லாதிருத் தலே

இன்பமென்பதாயிற்று. அவ்வின்பமே பேரின்பமாம். அது எதுவென்றால், பிணி மூப்பு மரண மில்லாமல் எப்பொழுதும் எங்கு நிறைந்த பூரணப் பொருளோடு கலந்திருத்தல் என்க.

ந., வேண்டாமை யன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
ஆண்டும் அஃதொப்ப தில்.
(363)

(இ-ம்) ஒரு பொருளையும் இச்சியா திருத்தலைப் போலும் சிறந்த செல்வம், காணப்படும் இவ்வுலகத்திலில்லை; இவ்வளவு தானோ? கேட்கப் படும் தேவருலகத்திலும் வேண்டாமையைப் போன்ற செல்வம் இல்லை என்பதாம். இதனால், பிறவாதிருப்பதற்கு உபாயம் ஒரு பொருளிலும் ஆசை இல்லாதிருத்தலென்பதாயிற்று. மனிதாநுபவிக்கும் செல்வத்தின் மேலானது ஆசையில்லாதிருத்தலே. ஆதலால் அதனை விழுச்செல்வமென்று நாயனாருளிச்செய்தனரென்பது யூகித்தறிந்துகொள்க. இக்கருத்துப் பற்றியே "வேண்டாமை யன்ன விழுச்செல்வம் பெற்றேம்" என்றார் பிறரும்.

ச. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
வாஅய்மை வேண்ட வரும்.
(364)

(இ-ம்) ஒருவனுக்குப் பரிசுத்தமாகிய

மோக்ஷமென்று சொல்லப்படுவது ஒரு பொருளினும் ஆசையில்லாமையாம். அப்படி ஆசை இல்லாமை யானது உண்மைப் பொருளாகிய பரம்பொருளை இடைவிடாமல் தானாகப் பாவித்து விரும்புதலால் தானே யுண்டாகும் என்பதாம். பரம்பொருளை (கடவுளை)த் தானாகப் பாவிக்குமுறையை அநுபவமுடைய குருமுகமாக விசாரித்துத் தெரிந்துகொள்க. கடவுளைத் தானாகப் பாவிப்பதே சோகம் பாவனை யென்று சொல்லுவர் பெரியோர். பாவித்தல்-நினைத்தல்.

ரு. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையார்
அற்றாக அற்ற திலர்,
(365)

ஙஎ-ஆம் அதி.—அவாவறுத்தல். கூகரு

(இ-ம்) ஆசையறுதலே பிறவித்துன்ப மறுதற்கு நேரான காரணம் ஆதலால் ஆசையற்றவரே பிறவித்துன்ப மற்றவராவர். பிறவியறுதற்கு வேறு காரணங்களற்று ஆசையொன்றும் அறாதிருந்தவர் பிறவித்துன்ப முழுவது மறாமல் சிறிது அற்றவராவரென்பதாம். வேறு காரணங்களாவன - காமம், வெகுளி (கோபம்), மயக்கம் முதலியவை.

௬. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
வஞ்சிப்ப தோரும் அவா.

(366)

(இ-ம்) அகப்பற்றையும் புறப்பற்றையும் விட்டு ஐம்பொறிகளையு மடக்கி மனத்தை யொருவழிப்படுத்தி யோக நிட்டையிலிருந்து மெய்புணர்த லாகிய காரணத்தைப் பெற்று வீடு (மோக்ஷம்) பெறநின்ற ஒருவனை மறவி வழியாற் புகுந்து இன்னும் பிறவியினிடத்துத் தள்ளிக் கெடுக்கவல்லது ஆசை; அதலால், அவவாசையைப் பயந்து தம்மிடத்து வரவொட்டாமற் காத்துக்கொள்வது துறவறம் என்பதாம். மூலத்தில் ஒரும் என்ற இரண்டும் அசைச்சொற்கள்.

௭. அவாவினை யாற்ற அறுப்பிற் றவாவினை
தான்வேண்டும் ஆற்றான் வரும்.

(367)

(இ-ம்) ஒருவன் ஆசை முழுவதுங் கெடுக்கவல்லவனானல் பிறவித் துன்பத்து ளகப்பட்டுக் கெடாமைக்குக் காரணமாகிய செயல் தான் விரும்புந் துறவறத்தாலுண்டாகும் என்பதாம். ஆகவே, ஆசையற்றவன் மோக்ஷமடைதற்கு ஒரு விதத்தாலுந் தடையில்லை யென்பது கருத்து. கெடாமைக்

குக் காரணமாகிய செயல்-இறைபணி நிற்றலாம். இது னபிப்பிராயம்.
சித்தாந்த சாத்திரத்தி

அ. அவாவில்லார்க் கில்லாகுந் துன்ப மஃதுண் டேற்
றவா அது மேன்மேல் வரும்.
(368)

(இ-ம்) ஆசை யற்றவருக்கு இனி வரக்கடவதாகிய துன்ப மொன்று மில்லையாம். வேறு காரணங்களெல்லா மில்லாமல் ஆசை யொன்றுமாத்திர மிருந்தால், அதனுல் எல்லாத் துன்பங்களும் அளவில்லாமல் இடைவிடாது எப்போதும் வந்துகொண்டிருக்கும் என்பதாம். இனி வரக்கடவதாகிய துன்பம் இப்போது செய்த வினையால் பின் வரும் துன்பம். இதனுல், இப் போது அநுபவிக்கிற துன்பம் முன் செய்த வினையால் வந்த துன்பமென்று கண்டுகொள்க.

கீக்உ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

கூ. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்

துன்பத்துட் டுன்பங் கெடி ன்.
(369)

(இ-ம்) ஆசையென்று சொல்லப்படுகின்ற பெரிய துன்பம் ஒருவனுக் கில்லையானால் அவன் மோக்ஷமடைந்த இடத்தில்மட்டுமெல்லாமல் உடம்போ டிருக்கும் இ வ் வுலகத்தினிடத்தும் இடைவிடாமல் இன்பம் எய்துவன் என்பதாம். இதனால், ஆசையற்றவர் மோக்ஷ இன்பத்தை இவ்வுடம்போடு நின்றும் அநுபவிப்பர் என்பது கருத்து.

கo. ஆரா இயற்கை யவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.
(370)

(இ-ம்) ஒரு காலத்தும் இது போதுமென்று அடங்காத தன்மை யுடைய ஆசையை ஒருவன் விட்டுவிடுவானானால் அப்படி விட்டுவிடுதலானது அவனுக்கு அப் பொழுதே எக்காலத்தும் ஒரு நிலைமையுடையவனுந்தன்மை யைக் கொடுக்குமென்பதாம். ஆசை யடங்காதென்பதை "ஆசைக்கோ ரளவில்லை" என்று பிறபெரியார் (தாயுமானவர்) கூறியதனாலும் காண்க. ஒரு நிலையனுந்தன்மையாவது-பிணி, மூப்பு, பிறப்பு, இறப்புமுதலியவற்றால் அடிக்கடி மாறுபடுதலில்லாமல் சதா விட்டு நீங்காத பேரின்பத்தோடிருத் தல். இவ்வின்பத்தையே நிரதிசயானந்தமென்று அறிந்தோர் சொல்லுவர்.

துறவறவியல் முற்றிற்று.

இம்முறையால் இம்மை, மறுமை, வீடு (மோக்ஷம்) என்னும் மூன்றினையுங் கொடுத்தற் சிறப்புடையதாகிய அறங்கூறினார். இனி, பொருளும் இன்பமும் கூறத்தொடங்கி அவ்விரண்டிற்கும் முதற்காரணமாகிய ஊழின் வலி கூறுகின்றார்.

## 38-ஆம் அதிகாரம்.—ஊழ்.

அஃதாவது, நல்வினைப் பயனுந் தீவினைப் பயனும் அவ்வினைகளைச் செய்தவனையே சென்றடைதற்குக் காரணமாகிய நியதி. நியதியாவது—அவ்வினைப் பயன்களை அநுபவிக்கச் செய்யும் கடவுளால் ஏற்படுத்தப்பட்ட விதி.

க. ஆகூழாற் றோன்று மசைவின்மைக் கைப்பொருள்
போகூழாற் றோன்று மடி.

(371)

(இ-ம்) ஒருவனுக்குக் கைப்பொருள் மிகுதற்குக் காரணமாகிய ஊழால் முயற்சி உண்டாகும்; அப்பொருள் கெடுதற்குக் காரணமாகிய ஊழால் மடி (சோம்பல்) உண்டாகும் என்பதாம். இதனால், பொருள் உண்டாவதற்குத் துணைக்காரணமாகிய முயற்சியும் , அப்பொருள் கெடுதற்குத் துணைக் காரணமாகிய சோம்பலும் ஊழே தோற்றுவிக்கு மென்பது கருத்து. பொருள் உண்டாதற்கு முயற்சியும் அப்பொருள் கெடுதற்குச் சோம்பலுந் துணைக்காரணமாகவே ஊழ் முதற்காரணமென்பதும், சம்பாதிக்கிறவன் நிமித்தகாரணமென்பதுங் கண்டுகொள்க.

உ. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்றும்
ஆகலூ முற்றக் கடை.
(372)

(இ-ம்) ஒருவனுக்கு விசாலமான அறிவு இருந்தாலும் கைப்பொருளை இழந்து விடுதற்குக் காரணமாகிய ஊழ் வந்து பொருந்தியவிடத்து அவ்வூழானது அவ்வறிவினை மாறுபடுத்திச் சுருக்கிச் சோம்பலை உண்டாக்கும். அதுவல்லாமல், அப்பொருள் பெருகுதற்குக் காரணமாகிய ஊழ் வந்து பொருந்தியவிடத்து அவனுக்கு அறிவு சுருங்கி யிருந்தாலும் அதனை அவ் வூழ் விரிந்து பெருகச்செய்யும் என்பதாம். ஊழ் விரிந்து

பெருகச்செய்த லாவது - சோம்பலில்லாமல் மேலுமேலும் முயற்சியை விடாது செய்யச் செய்தல்.

௩. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்.
(373)

(இ-ம்) இயற்கையறிவைக் கீழ்ப்படுத்தும் ஊழுடைய ஒருவன் நுட்ப மாகிய பல நூல்களைக் கற்றிருந்தானானாலும் அவனுக்குப் பின்னும் ஊழினு லாகிய பேதைமையறிவே மேற்பட்டு நிற்கும் என்பதாம். இதனால், ஊழறி வானது செயற்கை யறிவாகிய நூலறிவையுங் கீழ்ப்படச் செய்தல் தவறாதென்று கண்டுகொள்க. இதற்குதாரணமாக "காதல் மிக்குழிக் கற்றவுங் கைகொடா" என்னுஞ் செய்யுளை ஆசிரியர் பரிமேலழகர் எடுத்துக்காட்டினர். (சீவகசிந்தாமணி கனகமாலையாரிலம்பகம் 76) இவ்வுண்மையை இராவணன் கற்றிருந்த ஆயிரம் வேதங்களும் அவனுக்குச் சீதையினிடத்து ஆசையுண் டானபோது அவனைத் தடைசெய்யாதிருத்தலிற் காண்க.

௪. இருவே றுலகத் தியற்கை திருவேறு
தெள்ளிய ராதலும் வேறு.
(374)

(இ-ம்) உலகத்தில் ஊழினாலாகிய தன்மை இரண்டு பாகம், அவ்விரண் டில் ஒன்று செல்வமுடையவராகச் செய்வது. மற்றொன்று அறிவுடை யராகச் செய்வது என்பதாம். செல்வத்தைச் சம்பாதித்தலும் காத்தலும் அதனாற் பயனடைதலும் அறிவுடையார்க்கேயா மல்லாமல் மற்றவர்க்கு ஆகாதல்லவா? அப்படியல்லாமல் அறிவுடையார் தரித்திராகவும், அறிவில்லார் செல்வ முடையாராகவும் காணப்படுதலால் அறிவுடையாதற்கு ஆகும் ஊழானது செல்வமுடையாதற்கு ஆகாது. செல்வமுடையாதற்கு ஆகும் ஊழ் அறி வுடையார்க்கு ஆகாதென்பது தெளிவாகத் தெரிந்தது. இதனால், செல்வம் வருங்காலம் அறிவாகிய துணைக்காரணமும் முயற்சியாகிய துணைக்காரணமும் வேண்டுவதில்லை யென்பது கண்டு கொள்க. இக்கருத்துப் பற்றியே "ஆங் கால மெய்வருந்த வேண்டா" என்று ஔவையா ருளிச்செய்தனர். (மூதுரை......) பழையபதிப்பு.

ரு. நல்லவை யெல்லாஅந் தீயவாம் தீயவும்
நல்லவாம் செல்வஞ் செயற்கு .

(375)

(இ-ம்) செல்வத்தை ஆக்குதற்குச் சாதனமாகக்கொண்ட காலம், இடம், கருவி, தொழில் முதலிய நல்லவைகளெல்லாம் தீயூழுற்ற இடத்துத் தீயனவாகி ஆக்கமற் கெடுத்துவிடும். செல்வத்தை ஆக்குதற்கு இவை சாதனமாகாதென்று தள்ளப்பட்ட காலம், இடம், கருவி முதலிய தீயவைக ளெல்லாம் நல்லூழுற்ற இடத்து நல்லனவாகிச் செல்வத்தை யுண்டாக்கும் என்பதாம். எனவே, நல்லூழ் வரும்போது கெட்டவை யெல்லாம் நல்லவை யாகுமென்பதும், தீயூழ் வரும்போது நல்லவை யெல்லாம் கெட்டவை யாகு மென்பதுங் கண்டுகொள்க. இக்கருத்துப் பற்றியே "நன்னலம் பயப்ப துண் டேற் றீயவும் நல்ல வாகும், செந்நல மிழப்ப துண்டேல் நல்லவுந் தீய வாகும்" என்றார் பெரியார். (பேரூர்ப்புராணம் சூழகன் குழப்புற்ற சருக்கம் 64)

சூ. பரியினு மாகாவாம் பாலல்ல உய்த்துச்
சொரியினும் போகா தம.

(376)

(இ-ம்) ஊழினாலே தம்மை விட்டுப் போகப்படும் பொருள் கள் அப் பொருளுடையவர் வருந்திக் காப்பாற்றினாலும் தம்மிடத்து நில்லாவாம். அவ்வூழாலே தமக்குரியவாகிய பொருள்கள் புறத்தே கொண்டுபோய்க் கொட்டிவிட் டாலுந் தம்மைவிட்டுப்

போகாமல் தம்மிடத்தே வந்து சேரும் என்பதாம். இதனால், பொருளானது தன்னை யுடையவரிடத்திலே நிற்றலும் நீங்கலும் ஊழாலாவதல்லாமல் பொருளுடையார் செயலால் ஆவதில்லை யென்பது கண்டுகொள்க.

## ௩௮-ஆம் அதி.—ஊழ்.

கசரு

ஏ. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

(377)

(இ-ம்) மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐந்து இந்திரியங்களாலும் அநுபவிக்கப்படும் பொருள்களை இடைவிடா முயற்சி செய்து கோடிக் கணக்காக ஒன்றுசேரத் திரட்டி வைத்தவருக்கும் அப்பொருள்களை ஒருயிர் செய்த வினைப்பயன் மற்றோருயிரினிடத்துச் செல்லாமல் அந்தந்த உயிரி னிடத்தே செல்ல நியமித்த (வகுத்த) தெய்வம் (ஊழ்) கூட்டிவைத்தபடி யல்லாமல் அநுபவித்தல் கூடாதென்பதாம். இவ்வுண்மையைப் பெரும் பொருளுடைய பெரும்பாலார் (அநேகர்) சாமானிய உணவு மெய்தப்பெறுமல் வாழ்நாள் கழித்து மரிக்கின்றதைப் பிரத்தியட்சத்திற் கண்டுகொள்க.

அ. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
ஊட்டா கழியு மெனின்.

(378)

( இ -ம்) நிலையில்லாதனவென்று தம்மால் நீக்கப்படும் பொருள்கள் தம்மை விட்டு நீங்கிறைல் நல்லதென்று நினையாமல் அப்பொருள்கள் போயினவே என்று வருந்தும் மனமயக்கத்தால் வரக்கடவனவாகிய துன்பங்களை ஊழ் வரவொட்டாமற் செய்யுமாறைல், தரித்திரத்தால் தாமநுபவிக்கப்படும் பொருளில்லாதவர் துறவற நிலையடையுங் கருத்தினராவரென்பதாம். எனவே, ஊழால் தம் பொருள் போயினதென்றறிந்தார் துன்பமடைய மாட்டாரென்பது கருத்து.

சுல.

நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்.

(379)

(இ-ம்) முற்பிறப்பில் தாம் செய்த நல்வினை விளையுங் காலத்தில் அவ் வினையின் விளைவாகிய இன்பங்களை நீக்குந் திறத்தை விரும்பாமல் அவவின் பங்களை நல்லன வென்று சம்மதித்து அநுபவிப்பவர் தீவினை விளையுங் காலத் தில் தீவினையின் விளைவாகிய *துன்பங்களையும் அவ்விதம்

அநுபவியாமல் அவற் றை நீக்குந் திறத் தை ஆராய்ந்து வருத்தப்படுவது என்ன காரணமோ தெரியவில்லை என்பதாம். இதனால், இன்பமுந் துன்பமும் நாம் செய்த நல்வினை தீவினைகளால் வந்தனவென்று நினைத்து இன்பத்தை அநுபவிப் பது போலத் துன்பத்தையு மநுபவியாமல் வருத்தப்படுவது அறியாமை என்பது கருத்து.

கo. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்,

(380) ககசு திருக்குறள் மூலமும்,
தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) ஊழானது, தன்னை விலக்கும் உபாயத்தை யாராவதொருவர்
பலருடன் ஆராய்ந்தாலும், அவ்வுபாயத்தின் வழியாலாவது வேறு வழியா லாவது முற்பட்டு வந்து நிற்கும். ஆதலால், அவ்வூழ்போலப் பெரிய வலிமை யுடைய பொருள்கள் எவை யிருக்கின்றன? ஒன்றுமில்லை யென்பதாம்.
வினைப்பயன்களை அநுபவிக்கச் செய்யும் ஊழை எந்தவிதத்தாலும் விலக்க
லாகாதென்பது கண்டுகொள் க.

முதலாவது அறத்துப்பால் முற்றிற்று.

# இரண்டாவது, பொருட்பால்.

அஃதாவது, இல்லறத்தின் வழி யுண்டாவனவாகிய பொருள் இன்பங் களுள் இம்மைப்பயனு மறுமைப்பயனுந் தருவதாகிய பொருளின் பகுப்பைக் கூறுதல்.

## முதலாவது அரசியல்.

அஃதாவது, அரசனது தன்மை; அது, பொருளினது துணைக்காரணமாகிய அரசநீதி கூறுதலால் விளங்கும். அரசநீதியாவது-காவலை நடாத்து முறைமை. அதனை, அரசியல், அங்கஇயல், ஒழிபியல் என மூவகைப்படுத்தி உலகத்திற் குயிரெனச் சிறந்த அரசனது இயல்பு இருபத்தைந்து அதிகாரத் தாற் கூறத்தொடங்கி முதலில் இறைமாட்சி கூறுகின்றார். மாட்சி-குணம்.

### 39-ஆம் அதி.—இறைமாட்சி.

அஃதாவது, இறைவனது நற்குண நற்செய்கைகள். அரசனை இறைவன் என்றது உலகத்தைக்காக்கும் கடவுள் வடிவாய் நின்று எல்லா உயிர்களை யுங் காத்தலாலென்க. இதுபற்றியே "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேன்" என்றார் பெரியார். (திருவாய் மொழி 34-ஆம் பதிகம்)

க. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறும்
உடையா னரசரு ளேறு.
(381)

(இ-ம்) படையும், குடியும், (நாடும்) கூழும், (பொருளும்) அமைச்சும்,
(மந்திரியும்) நட்பும், அரணும் (கோட்டையும்) ஆகிய ஆறும் உடையவன்
அரசருக்குள் முதன்மை பெற்றவன் என்பதாம்.

இவ்வாறில் ஒன்றில்லா ஙூகூஆம் அதி.—இறைமாட்சி. ககஎ

விட்டாலும் அரசநீதி ஒழுங்காக
நடைபெறமாட்டாதென்பது கருத்து. இவ்வாறுமே அரசன் வெற்றிக்குக் காரணமாம்.

உ. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கும்
எஞ்சாமை வேந்தற் கியல்பு .
(382)

(இ-ம்) பயப்படாதிருத்தலும், (திண்மையும்) கொடையும், அறிவும், ஊக்கமும் (உள்ளக்கிளர்ச்சியும்) ஆகிய இந்நான்கு குணங்களும் இடைவிடா திருத்தல் அரசனுக்கு இயற்கைச்சிறப்பு என்பதாம்.

ங. தூங்காமை கல்வி துணிவு டைமை
யிம்மூன்றும்

நீங்கா நிலனாள் பவர்க்கு.

(383)

(இ-ம்) நில உலகத்தை ஆளும் சிறப்புடைய அரசனுக்கு ஆளத்தக்க காரியங்களில் விரைவுடைமையும் அக்காரியங்களை அறிதற்கேற்ற கல்வி யுடைமையும் ஆண்மையுடைமையுமாகிய இம்மூன்று குணங்களும் ஒருகால மும் நீங்குதல் இல்லை என்பதாம். ஆ ண்மை-எடுத்துக்கொண்ட காரியத்தில் ஒன்றையும் பாராது துணிந்து செய்தல். கல்வி-படை முதலிய ஆறு அங்கங் களுக்கும் உரித்து. மற்றவை அரசன் செய்தொழிற் குரியன. துணி வுடைமை-ஆண்மையுடைமை.

ச. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா மான முடைய தரசு.

(384)

(இ-ம்) தனக்குச் சொல்லப்பட்ட அறத்தில் (தருமத்தில்) தவறுத லில்லாமல் நடந்து தருமமல்லாதவைகளைத் தன்னிடத்தும் தன்னாட்டினிடத் தும் உண்டாகவொட்டாமல் விலக்கி வீரத்தில் வழுவாத உயர்ச்சியுடையவன் அரசன் என்பதாம். அரசனுக்கு அறமாவன - ஓதல், வேட்டல், ஈதலென் னும் பொதுத் தொழிலினும், படைக்கலம் (ஆயுதம்) பயிறல், வித்தையிற் பழகுதல், பலவுயிர்களைக் காப்பாற்றல், பகைவரது வலிமையை அழித்தல் என்னும் சிறப்புத்தொழிலினும் வழுவாதிருத்தலாம்.

தருமமல்லாதன - கொலை, களவு முதலாயினவாம். வீரத்தில் வழுவுதலாவன - பகையில்லார் மேற் படையெடுத்துச் செல்லுதலும், புறங்காட்டி ஓடியவர்மேல் ஆயுதம் பிர யோகித்தலும், பெண்கள்மேற் போர்புரிதலும் இன்னு மிவைபோல்வனவு மாம்.

ரு. இயற்றலும் ஈட்டலும் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(385).



(இ-ம்) தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேலுமேலும் உண் டாக்கலும், அவ்வழிகளால் வந்த பொருள்களை ஒருசேரத் திரட்டி வைத்த லும், அப்படி வைத்த பொருள்களைப் பிறர் கொண்டுபோகாமற் காத்தலும், அவ்விதங் காத்தபின் அறம் பொருள் இன்பங்களின் பொருட்டுச் செல்ல விடுத்தலும் வல்லவனே அரசன் என்பதாம். பொருள் களாவன - மணி, பொன், நிலம் முதலியவைகள். வழிகளாவன - பகையினைக் கெடுத்தல், இறை (வரிப்) பொருளைவிடாது வாங்கல், தன்னுடைய நாட்டை முதன்மை யாம்படி காத்தல் முதலியவைகள். பிறரென்றது-கள்ள ர், சுற்றத்தார், வேலை செய்வார் முதலானவரை கடவுளர்க்கும், அந்தணர்க்கும்,

(அழகிய செவ்விய குணமுடையார்க்கும்) வறியவர் (தரித்திரர்)க்கும், புகழிற்கும் கொடுத்தலை அறத்தின் பொருட்டாகவும், யானை, குதிரை, தேர், காலாள் முதலியவை களுக்கும், இவையல்லாமல் தன் பகைவர்க்கு வலிமை யுண்டாகும்படி கூடி யிருப்பவரைப் பிரிப்பதற்கும், தன் னை விட்டுப் பிரிந்திருக்கும் வன்மையுடை யாரைத் தன்னொடு சேர்ப்பதற்கும் கொடுத்தலை, பொருட்பொருட்டாகவும், மண்டபம், தடாகம், கூபம் (கிணறு), செய்குன்று (விளையாட்டுமலை), இளம்பூஞ்சோலை யுண்டாக்குதற்கும், ஐம்பொறிகளா லநுபவிக்கு மற்றைப் பொருள்களை ஆக்குதற்குங கொடுத்தலை இன்பத்தின் பொருட்டாகவுங் கொள்க.

கூ. காட் சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனே ல்

மீக்கூறு மன்ன னிலம்.

(386)

(இ-ம்) வலியவரால் வருத்தஞ் செய்யப்பட்டு அவ்வருத்தம் தீர்ப்பதற் காக வந்தவர்க்கும், வறுமையால் வருந்தி அவ்வருத்தந் தீர்ப்பதற்காக யாசகஞ் செய்ய வந்தவர்க்கும் காண்பதற்கு உடனே சமயம் கொடுப்பவனாய் எவரிடத் துங் கொடுமையான சொற்களைச் சொல்லாதவனாய் அரசனிருந்தால் அவ் வரசனா லாளப்பட்ட நிலத்தை எல்லா நிலங்களினும் உயர்ந்ததென்று உலகத் தார்

சொல்லுவரென்பதாம். எல்லா நிலங்களினும் உயர்ந்ததென்று சொல்லு தற்குக் காரணம், அந்நாடு அரசன் ஆளு முறையால் பசி, நோய், பகையில்லா மல் எல்லாரு மின்பம்பெறச் செய்தலாம்.

எ. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத்
தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு.
(387)

(இ-ம்) இனிய வார்த்தையுடனே வேண்டுவார் வேண்டும் பொருள் கொடுப்பதோடு, தன் குடிகளைத் தன் பரிவாரத்தாலும் பகைவராலும் வரு

ங்கூ ஆம்

அதி.—இறைமாட்சி. சக்கூ

திாமற் காக்க வல்லவனுகிய அரசனுக்கு, இவவுலகம் அவன் புகழோடு கூடி யிருந்து அவன் கருதிய பொருளெல்லாம் மிக விளைவித்துக்கொண்டு நிற்கும் எனபதாம.

அ. முறைசெய்து காப்பாற்று மன்னவன்
மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

(இ-ம்) உறவினர், பகைவர், இவவிருவரு மல்லாதவராகிய தூங் தாரதம்மிய மில்லாமல் தருமசாத்திரஞ் சொல்லியபடி நீதி

மூவரிடத்

செலுத்திக்

குடிகளைக் காப்பாற்றும் அரசன் பிறப்பினல் மனிதனே யானுலும் செய்கை யால் மனிதருக்குக் கடவுளென்று வேறு வைத்தெண்ணப்படுவான் என்பதாம். செய்கையாற் கடவுளாதலால் அரசனை

இறையென்று அறிஞர் கூறினர். தாரதம்மியம்-உயர்வு தாழ்வு.

சு .

செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன் கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(இ-ம்) தன் காதுகள் பொறுக்கக்கூடாத சொற்களைத் தனக்கு நன்மையை நாடுவோர் சொன்னாரானால் அச்சொற்களாலாகும் பயனை யுத்தே சித்துப் பொறுத்துக்கொள்ளுங் குணமுடைய அரசனது குடை நிழலி னிடத்தே இவ்வுலகந் தங்கியிருக்கும் என்பதாம். இதனால், இராசநீதி தவ றாதவனுக்கு உலகங் கை கவசப்படுமென்பது கருத்து.

கO. கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்
உடையானாம் வேந்தர்க் கொளி. (390)

(இ-ம்) கேட்பார்க்குக் கேட்ட பொருளைக் கொடுத்தலும், முகமலர்ச்சி யோடு இன்சொற் சொல்லுதலும், எல்லாரிடத்தும் ஒன்றுபோல நீதி செலுத் தலும், தளர்ச்சியடைந்த குடிகளைப் பேணிக் காததலுமாகிய இந்நான்கு குணங்களுமுடைய அரசன் அரசர்களுக்கெல்லாம் விளக்கு என்பதாம்.
விளக்கு என்றது—எல்லா அரசர்களினும் மிகப் பிரகாசிப்பன் என்றபடி யாம். தளர்ச்சியடைந்த குடிகளைப் பேணிக் காத்தலாவது—அக் குடிகளுக் குரிய இறை (வரிப்) பொருளைப் பெருமையோடு, வேண்டும் பொருள் கொடுத்து உதவி செய்தலாம்.

வசனமும்.

## 40-ஆம் அதி—கல்வி.

அஃதாவது, அவ்வரசன் கற்றற்குரிய நூல்களைக் கற்றல். கற்றற்குரிய நூல்களாவன—தரும சாத்திரமும், நீதிநூலும், யானை, குதிரை, ஆயுதம் என்ற இவைகளின் நூல்களும் முதலியனவாம்.

க. கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க வதற்குத் தக.

(391)

(இ-ம்) ஒருவன் கற்கவேண்டும் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு பொருளையும் தரத்தக்க நூல்களைக் குற்றமறப் படிக்கவேண்டும். அப்படிப் படித்தபின் அந்நூல்களிற் கூறிய மார்க்கத்தில் தவறாது நடக்க வேண்டும் என்பதாம். எனவே, மேற்கூறிய நான்கு நூல்களுமே பயனுள்ளன என்பதும், படித்த அந்நூல்களின் வழியே நடவாவிட்டால் படித்ததனாற் பயனில்லை யென்பதுங் கண்டுகொள்க. கசடறக் கற்றலாவது-ஒன்றை மற்றொன்றாகக் காண்பதும், இதுவோ அதுவோ வென்று சந்தேகப்படுதலு மில்லாமல் மெய்ப்பொருளை யறிய நல்லோர் பலருடனுங் கூடிப் பலகாலமும் பழகுதல். நிற்றலாவது-இல்லறத்தி லிருந்தால்

இல்லறத்திற் கூறிய தருமஞ் செய்தலும், துறவறத்திற் சென்றால் தவத்தால் மெய்யுணர்ந்து ஆசையை விடுதலும் தவறாது செய்தலாம்.

உ. எண்ணென்ப ஏனை யெழுத்தென்ப
இவ்விரண்டும்
கண்ணென்ப வாழு முயிர்க்கு.
(392)

(இ-ம்) தெரியாதவர் எண்ணென்று சொல்லப்படுவனவும், எழுத்தென்று சொல்லப்படுவனவுமாகிய இவ்விரண்டு கலைகளினையும் தெரிந்தவர் சிறப்புடைய உயிருக்குக் கண்ணென்று சொல்லுவர் என்பதாம். எண் - கணிதநூல். எழுத்து-இலக்கணநூல். இவ்விரண்டு நூல்களும் அறமுதலிய நான்கு பொருள்களையும் காணுதற்குக் கருவியாதலால் கருவிநூல்க ளெனப்படும். ஆதலாற் கண்ணென்று சொல்லப்பட்டன. சிறப்புடைய வுயிர்-அறிவுமிகுதியுடைய வுயிர்.

௩. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.
(393)

(இ-ம்) மேற்கூறிய நூல்களைக் கற்றவர் தூரதேசத்திலுள்ள பொருள்களையும், நீண்ட காலத்துக்கு முற்பட்ட பொருள்களையும் அறியும்

## ௪௦-ஆம் அதி.—கல்வி.

கஉக

ஞானக்கண்ணுடையராவர். அந்த ஞானக்கண்ணில்லாத கல்லாதவர், முகத்தி னிடத்து நோய் முதலியவற்றால் துன்பஞ்செய்யும் இரண்டு ஊனக்கண்ணை மாத்திர முடையவரே யாவர் என்பதாம். கண்டபொருளை யல்லாமல் காணாத பொருளையும் அறியுஞ் சத்தி முகக்கண்களுக்கு இல்லாமையால் இவ்வாறு கூறியருளினர். இதனால், கற்றவர் உயர்த்தப்படுவோரென்றும் கல்லாதவர் தாழ்த்தப்படுவோரென்றும் கண்டுகொள்க.

௪. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில்.
(394)

(இ-ம்) எல்லாரையும் அவரவர் மனமகிழும்படி சேர்ந்து கலந்திருந்து அவர், இவர் நம்மைவிட்டுப் பிரிந்தால் இனி எக்காலத்து எவ்விடத்துக்

காண்போமென்று நினைக்கும் விதம் பிரிந்துபோதலாகிய அவ்வளவே கற்றறிந்தார்து தொழில் (வேலை) என்பதாம். நினைப்பதற்குக் காரண மென்ன வென்றால், நினைப்பார்க்கு நிகழ்காலத்தும் எதிர்காலத்தும் நன்மையைத் தரும் இனிய வார்த்தையை முகமலர்ச்சியோடு பேசுதலும் தம்முடைய நற் குண நற்செய்கைத் தோற்றமும் என்க. இத் தொழிலால் கற்றறிந்தார்க்கு வரும் பயன் என்னவென்றால், தாம் கண்ட உறுதிப் பொருள்களைப் பிறர்க்குக்கூறி அவரை நல்வழியில் நடக்கச்செய்தலாகிய புண்ணியம் என்க.

ரு. உடையார்முன் னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.
(395)

(இ-ம்) செல்வமுடையவரிடத்து அஃதில்லாதவர் தாழ்ந்து நிற்றல் போல நூல்களைக் கற்ற போதகாசிரியரிடத்து மிகப் பணிவுடையராய் நின்றும் கற்றவரே உயர்ந்தவராவர். அவவிதம் பணிவுடைமையராய் நின்று கற்பதற்கு நாணமடைந்து கல்லாதவர் தாழ்ந்தவராவரென்பதாம். கற்பார்க்குப் பணிவுடைமை முக்கியமாக வேண்டுமென்பதை "ஆசிரியன் கருத்தி லருள் வர நடத்தல் என்று" ஆசிரியர் சுவாமிநாத தேசிகர் அருளிச்செய்த இலக் கணக்கொத்துப் பாயிரத்துள்ளூங்

கண்டுகொள்க. பொய்யாகிய மானத்தைக் கைக்கொண்டு மெய்யாகிய கல்வியை யிழக்கலாகாதென்பது கருத்து. உயர்வு- எல்லாரும் நன்கு மதிக்கப்படுதல். தாழ்வு - எல்லாரும் படியாதவனென்று இகழப்படுதல்.

௬. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.

16

(396) ௩௯௬ திருக்குறள் மூலமும்,

தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) மணற்கேணியில் (கிடங்கில்) உள்ள நீரானது தோண்டப் பட்ட அளவு ஊறிப் பெருகும்; அதுபோல, மனிதருக்கு அறிவானது நூல் களைப் படித்த அளவுக்குத் தக்கபடி பெருகி வளரும் என்பதாம். இதனால், சிறிது படித்தது போதுமென்று நிறுத்திவிடாமல் மேலும் மேலும் படிக்க வேண்டுமென்பது கருத்து. இவவிதம் வளர்வது ஊழ்விரோதப்படாதிருக்கு மிடத்து ஆதலால், "நுண்ணிய நூல்பல கற்பினும் மற்றுந்தன் உண்மை யறிவே மிகும்" என்றதனோடு மாறுபாடில்லாமை தெரிந்து கொள்க.

௭. யாதானு நாடாமா லூராமா லென்

ஞொருவன் சாந்துணையுங் கல்லாத வாறு.
(397)

(இ-ம்) நூல்களைக் கற்றவனுக்குப் பொருள் கொடுத்தற்கும் உபசாரஞ் செய்தற்கும் தன்னுடைய நாடும் ஊருமே இடமாதலல்லாமல் எல்லா நாடும் எல்லா ஊரும் இடமாகும். அப்படி யிருக்க, ஒருவன் சாமளவும் கல்லாதிருப்ப தற்குக் காரணம் யாதோ தெரியவில்லை என்பதாம். எனவே, கல்விபோலச் சிறந்தது ஒன்றில்லை யென்பது கருத்து.

அ. ஒருமைக்கண் தான்கற்ற கல்வி யொருவற்
கெழுமையு மேமாப் புடைத்து.
(398)

(இ-ம்) ஒருவன் ஒரு பிறப்பில் கற்ற கல்வியானது அவனுக்கு ஏழு பிறப்பினிடத்தும் தான் செய்த வினைபோலக் கூடவே வந்து உதவி செய்வதாகும் என்பதாம். உதவுதல்-நல்வழியிற் செலுத்தல். ஏழு பிறப்பாவன- தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பனவாம். மூலத்தில், உதவுதலை ஏமாப்பு என்றது கண்டு கொள்க.

கூ. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(இ-ம்) ஒருவர் தாமின்பமடைதற்குக் காரணமாகிய கல்விக்கு உயர்ந் தோர் இன்பமடைதலால் அச்சிறப்பு நோக்கிக் கல்வியைக் கற்றறிந்த அவர், மேலும் மேலும் அக் கல்வியைக்கற்க ஆசைப்படுவர் என்பதாம். தாமின்ப மடைதலாவது—தற்காலத்திற் சொற்சுவை பொருட்சுவைகளை அநுபவித்த லாலும், புகழ் பொருள் உபசாரம் பெறுதலாலும், பிற்காலத்தில் அறம் மோக்ஷங் கிடைத்தலாலும், அதனல் மற்றை யின்பம்போ லாகாது இடையறா மகிழ்ச்சி யெய்துதல்.

உயர்ந்தோரின்பமடைதலாவது — இப் பெரியரோடு கலந்து அறியாதனவெல்லாம் அறியப்பெற்றோமென்று மகிழ்தல். இக்

சுக-ஆம் அதி.—கல்லாமை. கஉ௲.

கல்வியானது—செல்வத்துக் கெய்தும் பல கேடுகளில் ஒன்றாயினும் எய்தாமையால், மேலுமேலுஞ் சம்பாதிக்கப்பட்ட மெய்ப்பொருளென்பது கண்டுகொள்க. செல்வத்துக்கெய்துங் கேடாவன—பகைவர், திருடர், அக்கினி முதலியவற்றால் தன்னையுடையவரை விட்டு நீங்குதல். கo. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு

மாடல்ல மற்றை யவை,

(400)

(இ-ம்) ஒருவனுக்கு அழிவில்லாத சீரிய (சிறந்த) செல்வமாவது கல்வி யேயாம். இதுவல்லாமல் மணி பொன் நில முதலியவை செல்வமல்ல வென்பதாம். அழிவில்லாமையாவது-தாயாதிக்காரர், திருடர், வலியர் என்ற இவரால் எவ்விதத்தாலும் கைப்பற்றிக்கொள்ளக் கூடாதிருத்தலும், எந்தக் காரணத்தாலாவது பிறருக்குக் கொடுத்தால் குறையாதிருத்தலுமாம். ஆதலால், கல்வியே சிறந்த செல்வமென்பது கண்டுகொள்க. கல்வி இவ்வளவு சிறப்புடைமையால் "கைப்பொருள் கொடுத்துக் கற்க கற்றபின் கண்ணு மாகும்" என்றார். (திருத்தக்கதேவர் சீவகசிந்தாமணி கனகமாலையாரிலம் பகம் 39)

---

## 41-ஆம் அதி—கல்லாமை.

அஃதாவது, மேலதிகாரத்திற் கூறிய நூல்களைக் கல்லாமையால் வருங் குற்றம்.

க. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(401)

(இ-ம்) நிறைந்த நூல்களைக் கல்லாமல் ஒருவன் சபையினிடத்துப் பேசுதலானது வட்டு விளையாடுவார் அவ்வட்டுப் போய்நிற்கும் அறைகளை வகுத்துக்கொள்ளாமல்

விளையாடினாற்போலும் என்பதாம். வட்டு விளையாடல்-உண்டையுருட்டி விளையாடுதல். இதை இக்காலத்தார் சூதாடலென வழங்குவர். நிறைந்த நூல்கள்-சபையினிடத்துப் பேசுதற்குவேண்டிய நூல்கள். அறைகளில்லாமல் விளையாடுதல்-வெற்றியடையாமைபோல நூல்களைப் படியாமற் சபையினிடத்துப் பேசுதல் பயனடையாதென்பது கருத்து.

௨. கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டும்
இல்லாதாள் பெண்காமுற் றற்று.



(இ-ம்) கல்வியைப் படியாதவனொருவன் சபையினிடத்து ஏதாவது பேசுதற்கு விரும்புதலானது, இயற்கையாகவே இரண்டு தனங்களுமில்லாதவளொருத்தி பெண் தன்மையை விரும்பினாற்போலும் என்பதாம். கல்லாதவன் சபையினிடத்துப் பேசுதலும், இரண்டு தனமும் இல்லாதவள் பெண் தன்மையை விரும்புதலும் பிறருக்கு இன்பம் கொடாமல் அவமதிச் சிரிப்புக்கு இடமாமென்பது கருத்து. பெண் தன்மை-காம இன்பத்தை விரும்புதல்.

௩. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(403)

(இ-ம்) கல்லாதவர் தம்முடைய நிலைமையைத் தாமேயறிந்து சபையினிடத்துள்ள கற்றார் (பெரியார்) முன்பு யாதொன்றும் பேசாமல் மௌனமாயிருப்பாரானால் அவரும் மிக நல்லவராவர் என்பதாம். தம்முடைய நிலைமையைத் தாமே யறிதலாவது-கற்றறிந்தார் முன் நாம் ஏதாவது பேசினால் பிரயோசனப்படாமல் அவமானம் வருமென்றறிதல். மிக நல்லவரென்றது- தம்முடைய கல்லாத குற்றத்தை வெளிப்படுத்தா திருத்தலாமென்க. இதனால், கற்றவரிருந்த சபையில் கல்லாதவர் செல்லத்தகாதவரென்பதும், சென்றால் அவர்முன்பு யாதொன்றும் பேசாதிருக்க வேண்டுமென்பதும் தெரியவந்தன.

ச. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(404)

(இ-ம்) படியாதவனது அறிவுடைமை ஒரு சமயம் மிக நன்மையுடை யதாயிருந்தாலும் அதனை அறிவுடையோர் ஒருபொருளாக மதிக்கமாட்டா ரென்பதாம். ஏனென்றால், நீரிலே புழு ஊர்ந்த எழுத்துப்போலு மாதலா லென்க. புழு ஊர்ந்த எழுத்தாவது-தானொன்றை எழுதவேண்டுமென்ற எண்ணமில்லாமல் ஊர்ந்து திரியும்போது டகாரமாகவாவது,

பகரமாகவாவது வேறெழுத்தாகவாவது கோடுவிழுதல். இந்த உவமானத்தால் கல்லாதவன் நூல் வழி ஆலோசியாமல் இயல்பாகப் பேசும்போது அறிவுடைமையாக அமைந்துகொள்வதாம் என்பது கண்டுகொள்க. புழு-நீர்ப்பூச்சி.

௫. கல்லா வொருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.
(405)

(இ-ம்) நூல்களைப் படியாத ஒருவன் நான் அறிவுடையேனெனத் தன்னை மதித்திருக்கும் மதிப்பானது நூல்களைக் கற்றவர் அவனைக்கண்டு



பேசும்போது அழிந்துவிடுமென்பதாம். எப்படியென்றால், இன்னது சொன்னால் இன்னதுவருமென்றறியாமல் கல்லாதவன் சொன்ன சொல்லைக் கற்றவர் கண்டித்துவிடுவர் ஆதலாலென்க.

௬. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
களரனையர் கல்லா தவர்.
(406)

(இ-ம்) நூல்களைக் கல்லாதவர் பார்ப்பவர்கண்ணுக்குக் காணப்படுதலாற்

சனத்தொகையிலொருவராக உள்ளவரென்றெண்ணப்படுதல் அல்லாமல் தமக்கும் பிறர்க்கும் பயன்படாத களர் நிலத்துக்குச் சமானமாவர் என்பதாம். எப்படி என்றால், களர்நிலம் உணவுப் பொருள்களை விளைவித்து உயிர்களுக்குக் கொடாமையா லொருவரும் பேணப்படாமல் நீக்கிவிடுதல்போலக் கல்லாதவரும் பிறருக்கு அறிவு முதலியவற்றைக் கொடாமையால் ஒருவரும் உபசரியாமல் வெறுத்துவிடப்படுவரென்க. களர்நிலம் பிறருக்குப் பயன்படா திருத்தல்-உணவுப் பொருள்களை உயிர்களுக்கு விளைத்துக்கொடாதிருத்தல், தனக்குப் பயன்படாதிருத்தல்-ஒருவரும் பேணப்படா திருத்தல். கல்லா தவர், பிறருக்குப் பயன்படாதிருத்தல்-அறிவு முதலியவற்றைப் பிறருக்கு உதவாதிருத்தல். தமக்குப் பயன்படாதிருத்தல்-பிறர் தம்மை உபசரிக்கப் பெறாதிருத்தல். களர் நிலத்தை அளர்நிலமென்றுஞ் சொல்லுவர். களர் நிலம்-உப்பும் விளையாத நிலம். இதனால், கல்லாதவர் பயனில்லையென்று கண்டுகொள்க.

உயிரோடிருப்பதிற்

எ. நுண்மா ணுழைபுலம் இல்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

(407)

(இ-ம்) கூர்மையாய் ஒழுங்குபட்டுப் பல நூல்களிற்சென்று அவற்றின் பொருள்களையறியும் அறிவில்லாதவனுடைய தோற்றமும் அழகும் எதுபோலு மென்றால், சுண்ணும்பால் பார்ப்பவர் கண்ணுக்கு இனிமையுண்டாக அலங் கரித்துச் செய்துவைத்திருக்கப்பட்ட பாவை (பொம்மை) போலும் என்ப தாம். இதனால், நூலறிவில்லாதவனது அழகு எவ்வளவு உயர்ந்ததாயினும் பயனில்லையென்பது கருத்து.

அ. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

(408)

(இ-ம்) நூல்களைக்கற்றவரிடத்து நின்ற வறுமையைப் பார்க்கினும் நூல்களைக் கல்லாதவரிடத்து நின்ற செல்வமானது துன்பமுடையது என்ப தாம். எப்படியென்றால், கற்றவரிடத்து நின்ற வறுமை (தரித்திரம்) துன்பு

கஉ௬ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும். மாணுலும் அீவைத்

தீயவழியிற் செலுத்திக் கெடுக்கமாட்டாது; கல்லாதவ ரிடத்து நின்ற செல்வம் இன்புமானாலும் அவரைத் தீயவழியிற் செலுத்திக் கெடுத்துவிடுமாதலாலென்க.

சுசு. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.
(409)

(இ-ம்) தாழ்ந்த சாதியினிடத்துப் பிறந்து நூல்களைக் கற்றவருடைய பெருமை (நன்கு மதிப்பு) உயர்ந்த சாதியினிடத்துப் பிறந்து நூல்களைக் கல்லாதவருக்கு இல்லை யென்பதாம். இதனால், உடலோடு அழியுஞ் சாதி யுயர்ச்சியைப் பார்க்கினும் உயிரோடுகூடவருங் கல்வியுயர்ச்சி சிறந்ததென்பது கண்டுகொள்க. "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்கு, எழுமையும் ஏமாப் புடைத்து" என்று இந்நூலாசிரியர் இதன்முன்னுங் கூறியதே இதற்கு ஒரு பெரிய சாட்சியாகும்.

சுo. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
கற்றாரோ டேனை யவர்.
(410)

(இ-ம்) மிருகங்களையும் மனிதரையும் பார்க்குமிடத்து மனிதர் எவ்வளவு நன்மையுடையவரோ அவ்வளவு தீமையுடையவர், விளங்கிய நூல்களைக் கற்றாரையுங் கல்லாதவரையும் பார்க்குமிடத்துக்

கல்லாதவரென்பதாம். மிருகத்தைப் பார்க்கினும் அறிவால் மனிதர் உயர்ந்ததுபோல நூல்களைக் கல்லாதவரைப்பார்க்கினுங் கற்றவர் அறிவாலுயர்ந்தவரென்பது தெளிவாகக் காணப் பட்டது. இதனால், கல்லாதவர் மனிதரானாலும் மிருகங்களே யென்பது கருத்து.

---

## 42-ஆம் அதி.—கேள்வி.

அஃதாவது, கேட்கவேண்டும் நூற்பொருள்களைக் கற்றுத்தெரிந்தவர் சொல்லக்கேட்டல்.

க. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை.
(411)

(இ-ம்) ஒருவனுக்கிருக்கும் சகல செல்வத்துள்ளுஞ் சிறப்புடைய செல்வமாவது எதுவென்றால், கேள்வியால் எல்லாப் பொருளையுங் கேட்டறித லாகிய செல்வமேயாம், அவவிதங் கேட்டறிதலாகிய செல்வமானது மற்

றைச் செல்வங்களுக் கெல்லாம் முதன்மையாக நிற்பதாதலால் என்பதாம்.

எப்படி யென்றால், மற்றைச் செல்வங்கள் நிலையில்லாமல் துன்பத்தை விளை
வித்தற்கேதுவாகும். கேள்விச்செல்வம் அப்படி இல்லாமல் கேட்டவருக்கு
இன்பத்தை விளைக்கும் சிறப்புடையதென்க.

உ. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும் .
(412)

(இ-ம்) காதுக்கு உணவாகிய கேள்வியில்லாத பொழுது வயிற்றுக்குச்
சிறிது உணவு கொடுக்கப்படும் என்பதாம் . எப்படி யென்றால், சுவை மிகுதி
யும் பின்பு பயன் அடைதலுமுள்ள கேள்வியுள்ள பொழுது வயிற்றுணவு
வெறுக்கப்படுதலால் அக்கேள்வி இல்லாதபொழுது வேண்டப்படுமென்றும்,
அப்படி வேண்டப்பட்டாலும் அதிகமாக வயிற்றுக்கு உணவு கொடுத்தால்
நோயுங் காமமும் உண்டாகுமாதலால் சிறிது கொடுக்கப்படுமென்றுங் கண்டு
கொள்க.

ரு. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவின்
ஆன்றாரோ டொப்பர் நிலத்து .
(413)

(இ-ம்) செவியுணவாகிய கேள்விச்செல்வமுடையவர் இப் பூமியி னிடத்து இருந்தாரானாலும் துன்பமில்லாராதலால் யாகத்தீயிற் கொடுக்கப் படும் அவி (அமுது) உணவினையுடைய வானுலகத்திலுள்ள தேவருக்குச் சமானமாவர் என்பதாம். ஆன்றோர்—அறிவானுயர்ந்தவர்.

ச . கற்றில னாயினுங் கேட்க அஃதொருவற் .
கொற்கத்தி னூற்றாந் துணை.
(414)

(இ-ம்) தருமசாத்திரப் பொருள்களைக் கல்லாதவனாயிருந்தாலும் அச் சாத்திரப் பொருள்களைக் கற்றறிந்தார் வாயில் நின்றும் வரும் சொற்களால் கேட்கவேண்டும். அப்படிக் கேட்பது , மனத்தளர்ச்சி வந்த இடத்து அத் தளர்ச்சியை நீக்கும் ஆதாரமாகும் துணை என்பதாம். இக்கருத்துப்பற்றியே "கற்றல் கேட்டலுடையார் பெரியார்" என்று திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருளிச்செய்தனர்.

(தேவாரம் திருப்பிரமபுரம் 2) துணை என்பது துன்பம் வந்தவிடத்து அத்துன்பத்தை நீக்குவது என்பதாம்.

ரு. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே

யொழுக்க முடையார்வாய்ச் சொல். (415)

கஉ௲ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) வழுக்குதலையுடைய சேற்று நிலத்து நடப்பவர்க்கு ஊன்றுகோ லெப்படி யுதவிசெய்யுமோ அப்படியே எந்தக்காரணத்தாலாவது மனத் தளர்ச்சியுடையவருக்கு அத்தளர்ச்சியை நீக்குவதற்கு ஒழுக்கமுடையவர் வாயிலிருந்து வருஞ் சொற்கள் உதவிசெய்யும் ஆதலால், அச்சொற்களைக் கேட்கவேண்டுமென்பதாம். இதனால் ஒழுக்கமுடையவர் வாயிலிருந்து வருஞ் சொற்களெல்லாம் நல்ல சொற்களே ஆதலால் கேட்கவேண்டுவது அவசிய மென்பது கண்டுகொள்க. கற்றறிந்தாராயினும் ஒழுக்கமில்லாதவர் கற்றதனாற் பயனில்லையாதலாற் கற்றார்வாய்ச் சொற்கள்

கேட்க என்று கூறாமல் ஒழுக்கமுடையார்வாய்ச் சொற்கள் கேட்கவேண்டுமென்று நாயனாருளிச் செய்தனர்.

சு.

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

(416)

(இ-ம்) ஒருவன் சிறிதானாலும் உறுதிப்பொருள்களை உயர்ந்தோரிடத்துக் கேட்கவேண்டும். அக்கேள்வியானது சிறிதாயிருந்தாலும் மழைத்துளி போலப் பெருகி உயர்ந்த பெருமையைக் கொடுக்குமென்பதாம். இதனாற் கேள்வி சிறிதென்று இகழலாகாதென்பது கருத்து.

எ. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா
ரீண்டிய கேள்வி யவர்.

பிழைத்துணர்ந்

(417)

(இ-ம்) பலவகையாலும் உறுதிப்பொருள்களை நுட்பமாக ஆராய்ந்து நிறைந்த கல்வியறிவுடையவர் ஒருகால்

தாமதகுணத்தால் ஒன்றை மற்றொன் றாக மயங்கி யறிந்தாராலும் தமக்கு அறியாமையை உண்டாக்குஞ் சொற் களைச் சொல்லமாட் டார் என்பதாம். எனவே, மயங்கியறிதல் அறிவா லுயர்ந் தவர்க்கில்லை யென்பதே முக்கியமாகிய கருத்து.

அ. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.
(418)

(இ-ம்) காதுகள் சூமதறிவர்கிய ஓசையைக் கேட்குமானலும் கற்றறிந் தார் சொல்லும் நூற்பொருள்கள் நுழையப்படுதல் இல்லையானல் செவிடாந் தன்மை யுடையனவேயாம் என்பதாம். எனவே, காதுகள் கேள்வியால் துளைக்கப்படுந் துளையிலலாமல் முன்னிருந்த துளைகள் மட்டும் பெற்றிருத்த லாற் பயனில்லையென்பது கருத்து.

கூ. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
வாயின ராத லரிது.
(419)

·

ச்௲-ஆம் அதி.—அறிவுடைமை. கஉக

(இ-ம்) நுட்பமாகிய கேள்வியறிவில்லாதவர் பணிந்தவார்த்தை யுடைய

வாதல் இல்லை என்பதாம். பணிந்த வார்த்தை-பணிவை வெளிப்படுத்திய சொல். எனவே, அச்சொல்லில்லாமல் தம்மைத்தாமே மதித்துப் பேசுவ ரென்பதாயிற்று. அச்சொல்-பணிவை வெளிப்படுத்தியசொல்.

கo. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினு மென். (420)

(இ-ம்) காதாற் கேட்கப்படுஞ் சுவைகளை யறியாது, வாயாலுண்ணப் படுஞ் சுவைகளை யறியு மனிதர் செத்தாலும் பிழைத்தாலும் உலகத்துக்கு இடைப்ப தொன்றுமில்லை யென்பதாம். எனவே, செத்தா லிழப்பதும் பிழைத்தாற் பெறுவதும் இல்லை என்று கண்டுகொள்க. செவியாற் கேட்கப் படுஞ் சுவைகள்—சொற்சுவையும் பொருட்சுவையுமாம். வாயாலுணரப்படுஞ் சுவைகள்—தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு முதலியவை. கேள்வியறிவில்லாத வர் இருந்தாலுஞ் செத்தவரென்பது கருத்து.

---

## 43. ஆம் அதி.—அறிவுடைமை.

அஃதாவது, கல்வி கேள்விகளினாலாகிய அறிவோடு மெய்யறிவுடையவ னாதல்.

க. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண்.
(421)

(இ-ம்) அரசர்க்கு அறிவென்பது எதுவென்றால், இறுதி (கேடு) வாரா மற் றடுத்துக்கொள்ளுங் காரணமாகிய செய்கையாம். அதுவுமல்லாமல், பகைவர் உள்ளே வந்து அழிக்கக்கூடாத கோட்டையும் (காவலும்) ஆமென்ப தாம். இதனால், அரசர் பின்வரும் கேட்டை முன்னறிந்து தடுத்துக்கொள்ள வேண்டுமென்பதாயிற்று. பின்வருங் கேட்டை முன்னறிந்து தடுத்தல், தலைமைபற்றி அரசர்க்குச் சிறப்பாகச் சொன்னாலும் எல்லாருக்கும் பொதுவே யாகும்.

உ. சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.
(422)

(இ-ம்) ஒருவன் தன் மனத்தைப் போனவிடத்திற் போகவிடாமல் அவ்விடத்திலுள்ள நன்மை தீமைகளை ஆராய்ந்து தீமையைவிட்டு நீங்கச்

செய்து நன்மையினிடத்துச் செல்லவிடுதல் அறிவு என்பதாம். இதற்கோ ருதாரணம், குதிரையை நடாத்துகிறவன் அது போனபோக்கிற் போகவிடா மல் இடமும் வழியுமறிந்து நடக்கச் செலுத்துதல் போலும் என்பதாம். அப்படிச் செய்யாவிட்டாற் கேடு வருமென்பது கருத்து.

௩. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
நுண்பொருள் காண்ப தறிவு. (423)

(இ-ம்) ஒருவன் தான் சொல்லும் சொற்கள் அரிய பொருள்களை யுடையனவா யிருந்தாலும் அச்சொற்களைக் கேட்பவர்களுக்கு இலேசாக விளங்கும் விதம் தெளிவுபெறச் சொல்லிப் பிறர்வாயில் நின்று கேட்கும் சொற்களின் நுட்பமான பொருள்களைக் காண்பது அரிதாயிருந்தாலும் அவற்றை யெளிதாகக் காண வல்லமையுடையது அறிவு என்பதாம்.

௪. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு

மடமபாருள

மெய்ப்பொருள் காண்ப தறிவு .

(424)

(இ-ம்) யாதொரு பொருளை எவரெவர் வாயில் நின்று கேட்டாலும் சொல்வாரது குணத்தை நோக்காமல் சொல்லப்படும் அச் சொல்லின் பயனைக் காண வல்லமையுடையது அறிவு என்பதாம். எப்படி யென்றால், மூக்குண வசத்தால் முறைமறந்து உயர்ந்த பொருள் இழிந்தார் வாயிலும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயிலும், உறுதிப்பொருள் பகைவர் வாயிலும், கெடு பொருள் சிநேகர் வாயிலும் ஒவ்வோரிடங்களிற் கேட்கப்படுதலாற் சொல்வாரது குணத்தை நோக்காமல் சொல்லப்படுஞ் சொல்லின் பயனைக் கண்டறியு வல்லது அறிவு என்க. மூக்குணங்களாவன—இராசதம், தாமதம், சாத்துவிகம். பயன்-பிரயோசனம்.

ரு. உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(425)

(இ-ம்) உயர்ந்தோரைச் சிநேகமாக்குவது ஒளி பொருந்திய குணமாகும். அச்சிநேகத்தினிடத்து முன்னர் மகிழ்தலும் பின்னர் வெறுப்பது மில்லாமல் ஒரு நிலையுடையதாகி நிற்பது அறிவு என்பதாம். மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு என்பதற்குச் செல்வம் வந்த

காலத்து மகிழ்ச்சி யடைதலும், வறுமை வந்த காலத்து வருத்தமடைதலுமில்லா தொருநிலையில் நிற்பது அறிவு என்று பொருள் கூறுதலும் ஆகும். இக்கருத்துப் பற்றியே "கயப் பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை, நயப்பாரு நட்பாரு மில்" என்று

## ௪௩-ஆம் அதி.—அறிவுடைமை.

௪௱௨௰௬

பிறரும் கூறினர், (நாலடியார் 22-ம் அதி. 5.) கயப்பூ - நீரிலுள்ள தாமரை முதலியவைகள்.

௬. எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(426)

(இ-ம்) உலகம் எந்த முறையில் நடப்பதாயிற்றோ அந்த முறையில் தானும் அவ்வுலகத்தோடு பொருந்தி அரசன் நடப்பது அவனுக்கு அறிவு என்பதாம். உலகத்தை யெல்லாம் யானே நடத்திவருகிறேன், என்னை நடத்துவாரில்லை யென்று எண்ணித் தான் எண்ணியபடியே நடந்தால் பாவமும் பழியும் உண்டாகும்.

ஆதலால், அரசன் தானெண்ணியபடியே நடத் தல் அறிவு அல்ல என்பது கருத்து.

எ. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலார்
அஃதறி கல்லா தவர்.

(427)

(இ-ம்) அறிவுடையவர் பின்வருஞ் செயல்களை முன்னே யறிய வல்லவ
ராவர். அப்படி யறிய வல்லமையில்லாதவர் அறிவில்லாதவர் என்பதாம்.
முன்னே யறிதல் - காலம் இடம் முதலிய குறிப்புக்களை தெரிதல்.

எண்ணி ஆராய்ந்து

அ. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில் .

(428)

(இ-ம்) அஞ்சத்தக்கவைகளுக்கு அஞ்சாதிருப்பது அறிவில்லாமை
யாகும். ஆதலால், அஞ்சத்தக்கவைகளுக்கு அஞ்சுதல் அறிவுடையவரது
செய்கை என்பதாம். அஞ்சத்தக்கவைகள்-பாவம் பழி கேடு முதலியவை கள். அஞ்சுதல்-பயப்படுதல்.

கூ. எதிரதாக் காக்கும் அறிவினர்க் கில்லை
யதிர வருவதோர் நோய்.
(429)

(இ-ம்) பின்னே வரக்கடவதாகிய தீங்கை, காரணங்களால் முன்னே யறிந்து தடுக்க வல்லமையுடைய அறிவுடையவருக்கு அவர் நடுங்கும்படி வருவ தாகிய ஒரு துன்பமும் இல்லை என்பதாம். காரணங்கள்-காலம், இடம் முதலிய குறிப்புகள்.

கO. அறிவுடையா ரெல்லா முடையார் அறிவிலார்
என்னுடைய ரேனு மிலர்.
(430)



(இ-ம்) அறிவுடையவர் யாதொன்று மில்லாதவராயிருந்தாலும் எல்லாச் செல்வமும் உடையவராவர். அறிவில்லாதவர் எல்லாச் செல்வமும் உடையவ ராயிருந்தாலும் யாதொன்று மில்லாதவராவர் என்பதாம். எப்படியென்றால் செல்வங்களெல்லாம் அறிவினால் ஆக்கவும், ஆக்கியவற்றைக் காக்கவும் கூடு மாகையால் அறிவுடையவர் செல்வமுடையவரொன்றும் அச்செல்வங்கள் முன்னே யமைந்திருந்தாலும்

அவற்றைக்காக்கவும் தெய்வத்தால் (ஊழால்) அச்செல்வங்கள் அழிந்தவிடத்து மீள உண்டாக்கவும் காரணமாகிய அறிவில் லாதவர் ஒன்றுமில்லாதவரென்றுங் கண்டுகொள்க. எல்லாச் செல்வங்கள்-பொன், மணி, நெல், நிலம் முதலியவைகள்.

---

## 44-ஆம் அதி.—குற்றங்கடிதல்.

அஃதாவது காமம், கோபம், ஆசை, மானம், உவகை (மகிழ்ச்சி), மதம் என்ற ஆறு குற்றங்களையும் நீக்குதல்.

க. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து .
(431)

(இ-ம்) மதமும் கோபமும் காமமுமாகிய குற்றங்களில்லாத அரசரது செல்வம் மேம்பட்டுகிற்குந் தன்மையினையுடையது என்பதாம். மதம்-செல்வக் களிப்பு. காமம்-சிறியோர் செயல்களாலாகும் அளவிறந்த காமம். இதனால் தான், காமத்தைச் சிறுமையென்று நாயனார் மூலத்தில் அருளிச்செய்தனர். இக் குற்றங்களுடையவரது செல்வம் மேன்மையடையாதென்பது கருத்து. மேம்படுதல்-மேன்மையடைதல்.

உ. இவறலு மாண்பிறந்த மானமு மாணா
உவகையு மேத மிறைக்கு.
(432)

(இ-ம்) பொருள் செலவிடவேண்டிய வழியிற் செலவிடாமையும், நன்மையினின்று நீங்கியமானமும், அளவிறந்த மகிழ்ச்சியும் அரசனுக்குக் குற்றங்கள் என்பதாம். நன்மையினின்று நீங்கிய மானமாவது-அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், தனக்கு முன் பிறந்தோர், தந்தை, தாயென்ற இவரை வணங்காதிருத்தலும், தான் கருதியது செய்யக்கூடாததாயிருந்தாலும் பிறர் சிரிப்பாரென்று செய்தேவிடுதலு முதலானவைகள் . அளவிறந்த மகிழ்ச்சி-மிகுந்த தாக்ஷணியம். அஃதாவது, தன் தகுதிக்குத்தக்கபடி யல்லாமல் பிறரிடத்துத் தாக்ஷணியப்பட்டு ஒருகாரியஞ் செய்தல்.

௱௪-ஆம் அதி.—குற்றங்கடிதல்.

கீ௱௩

ந.

தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

(433)
(இ-ம்) பழிச்சொல்லுக்குப் பயப்படுபவர், தம்மிடத்துத் தினையளவு குற்றம்வந்தாலும் அதனைச் சிறிதென்று பொறுத்துக்கொள்ளாமல் பனையளவு பெரிதாக நினைத்து மேலுமேலுங் குற்றம்வாராமல் தடுத்துக்கொள்வர் என்பதாம். இக்கருத்துப்பற்றியே "தெருமந்து தேய்வ தொரு மாசுறின்" என்றார் பிறரும். (நாலடியார் 16-அதி. 3.)

ச. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
அற்றந் தரூஉம் பகை.

(434)
(இ-ம்) தனக்கு இறுதியை (கேட்டை)க் கொடுக்கும் பகையாவது குற்றமேயாதலால் அக்குற்றம் தன்னிடத்து வாராதிருப்பதே பொருளாக எண்ணிக் காத்துக்கொள்ளவேண்டும் என்பதாம். குற்றமில்லாத இடத்துப் பகைவர் வரமாட்டாராதலால், அரசன் யாதொரு குற்றமுஞ் செய்யாதிருக்க வேண்டுமென்பது கருத்து. இக்கருத்து சூரபன்மன், இராவணன் முதலோர் சரித்திரந் தெரிந்தவர்களுக்கு நன்றாகத்தெரியும். இதனால், குற்றமில்லா திருத்தலே குணமென்பதுங் கண்டுகொள்க.

ரு. வருமுன்னர்க் காவா தான் வாழ்க்கை யெரிமுன்னர்

வைத்தூறு போலக் கெடும்.

(435)

(இ-ம்) குற்றமானது வரக்கடவதாகிய முற்காலத்திலே தெரிந்து அக் குற்றத்தை வரவொட்டாமல் தடுக்காத அரசன் வாழ்வானது, அக்கினிக்கு முன்னேநின்ற வைக்கோற்குவியல்போல அழிந்துவிடும் என்பதாம். இதனல் சிறிய குற்றத்தால் பெரிய வாழ்வு கெடுமென்பது கருத்து.

சா. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு.

(436)

(இ-ம்) தன்னுடைய குற்றத்தை முன்னர்க்கண்டு நீக்கிப் பின்னர்ப் பிறர் குற்றத்தைக்காண வல்லமையுடைய அரசனுக்கு வரக்கடவதாகிய குற்றம் யாதொன்றுமில்லை யென்பதாம். எனவே, தன் குற்றத்தை நீக்காத அரசன் பிறர்குற்றத்தை நீக்க நினைத்தல் குற்றமென்பது கருத்து. இதனுல், தன் குற்றமில்லாத அரசனே நீதிசெலுத்தவல்லவனென்பது கண்டுகொள்க.

எ. செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்.

(43 7) காசு **திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.**

•

(இ-ம்) பொருளால் தனக்குச் செய்துகொள்ளப்படுவனவற்றைச் செய் யாமல் பொருள்மே லாசைவைத்த உலோபகுண முடையவனது செல்வமானது, பின்னர் நிலைக்குந் தன்மையில்லாமல் வீணே கெட்டுவிடும் என்பதாம். செய்துகொள்ளப்படுவன — அறம், பொருள், இன்பங்கள். பொருளால் அறஞ்செய்தலாவது—வறியவர்க்கு வேண்டுவன கொடுத்தல், மடம் குளம் தண்ணீர்ப்பந்தல் உண்டுபண்ணி வைத்தல் முதலியவைகள்; இவை முப் பத்திரண்டு வகைப்படும். பொருளாற் பொருள் செய்தலாவது — எந்த நல் வழியிற் சிறிது பொருள் செலவிட்டாற் பெரிது பொருள் வருமோ அந்த வழியாற் பொருளை விருத்திபண்ணுதல். பொருளால் இன்பஞ் செய்தலாவது—ஒழுங்காக அநுபவிக்குங் காமத்தின் பொருட்டுச் செலவிடுதல். உயற் பாலதின்றிக் கெடுமென்று மூலத்தைப் படிப்பாரு முண்டு.

அ. பற்றுள்ள மென்னும் இவறன்மை யெற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று. (438)

(இ-ம்) பொருளைச் செலவிடத்தக்க இடத்துச் செலவிடாமல் அதன் மே லாசைவைக்கும் உள்ள மாகிய உலோபத்தின் தன்மையானது குற்றத் தின் தன்மை

எல்லாவற்றுள்ளும் சேர்த்து எண்ணப்படாமல் மேலாக நிற்ப தொன்று என்பதாம். மேல் நிற்பது—தனக்குச் சமானமில்லாமல் உயர்ந்து நிற்பது. உலோபத்தன்மை யொன்றே எவ்வளவு உத்தம குணங்களையும் கெடுத்துவிடும். உதாரணமாக "உத்தம குணங்க ளெல்லா முலோபத்தா லழியு மாபோல்" என்ற செ ய்யுளைக் காண்க. (பரஞ்சோதிமுனிவர் திரு விளையாடற்புராணம் மூர்த்திவிசேடம் 14.)

சூ. வியவற்க எஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை .

(439)

(இ-ம்) எல்லாவற்றாலுந் தானுயர்ச்சியடைந்திருக்கிற காலத்திலும் மதத்தால் (கருவத்தால்) தன்னை நன்குமதித்தல் செய்யாதிருக்கவேண்டும்; அதுவுமல்லாமல் அறமும் பொருளும் இன்பமுமாகாத செயல்களை மனத்தி லும் விரும்பாதிருக்கவேண்டும் என்பதாம். ஏனென்றால், தன்னை மதித்த இடத்துத் தான் செய்யும் வினைக்கேற்ற இடமும், காலமும், வலிமையும் அறியப்படாதிருத்தலாலும், தருமமும், பொருளும், இன்பமும் தன்னை இகழ்ந்து புறத்தே போதலாலும், மானத்தால் நினைத்தது முடித்துவிடுவோமென்று நன்மையைக் கொடாத செயல்களை

விரும்பினுல் அவற்ருல் பாவமும், பழி யும், கேடும் வருதலாலும் என்க. இதனுல், அரசன் கருவத்தால் தன்னை

## சரு-ஆம் அதி.—பெரியாரைத் துணைக்கோடல்.

கரூடு மதித்தலும், மானத்தால் அறம் பொருள் இன்ப முண்டாகாத செய்ல்களைச் செய்தலும் ஆகா என்பது கருத்து.

கo . காதல காத் லறியாமை யுய்க்கிற்பின்
ஏதில ஏதிலார் நூல்.
(440)

(இ-ம்) தான் காதலித்த (இச்சித்த). பொருள்களைப் பகைவர் தன் காதலை யறியாமல் அநுபவிக்க வல்லவனுனல் அப்பகைவர் தன்னை வஞ்சிப்ப தற்கு எண்ணும் எண்ணம் பழுதாகிவிடும் (பயனில்லாமற் போய்விடும்) என்பதாம். தன்னை வஞ்சித்தல்—தான் இச்சித்த பொருள்களைப் பகைவர் தன்னை யறியாமற் கொண்டுபோதல். இதனுல், தான் செய்யுங் காரியம்

பகைவரறிந்தால் முடியமாட்டாதென்பது கருத்து. காமம், கோபம், உவகை (மகிழ்ச்சி) என்னு மூன்று குற்றமும் முழுவதும் நீக்குங்குற்றமல்ல. ஆத லால், மேற்கூறியபடி காமம் அநுபவித்தல் சிறுபான்மைக் குற்றமாம். இத னுல், பெரும்பான்மைக்குற்றம் பொதுவிதியால் கடியப்பட்டது (விலக்கப் பட்டது) கண்டுகொள்க. இச்சித்த பொருள்கள்—ஐம்பொறிகளுக்கு விஷய மாகிய பொருள்கள்; அவை, மாதரின்பங்கள்.

---

## 45-ஆம் அதி.—பெரியாரைத் துணைக்கோடல்.

அஃதாவது, தீயநெறியை விலக்க நல்ல நெறியிற் செலுத்தும் பெரியர் ரைத் துணையாகக்கொள்ளுதல். நெறி-வழி.

க. அறனறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல். (441)

(இ-ம்) அறத்தின் நுட்பத்தை யறிந்து, தன்னைப் பார்க்கிலும் உயர்ந்த அறிவுடையவரது சிநேகத்தை அரசன் அச்சிநேகத்தி னருமை யுணர்ந்து, கொள்ளுந் திற மறிந்துகொள்ளவேண்டும் என்பதாம்.

அறத்தி னது நுட்பம் நூல்வழி யறிவதல்லாமல் தன்னறிவாலும் ஆராய்ந்து அறிவ தாம். உயர்தல் — அறிவாலும் ஒழுக்கத்தாலுங் காலத்தாலும் உயர்தல். அறிவுடையவர்—நீதியையும், உலகியலையும் அறிதலுடையார். திறமறிதலா வது—அவ்வறிவுடைய பெரியாரது பெருமையைத் தான் நன்றாக அறிதல், அவரை மேன்மைப்படுத்தி உபசரித்தல், அவர் சொல்லிய அள வில் அடங்கி நிற்றல், அவர் தன்னிடத்து அன்புகொண்டு தன்னைவிட்டு நீங்காமற் கட்டுப் பட்டிருக்கும் வழி யை யறிந்து செய்தல் என்னு மிவைகளாம்.

கஙக திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

உ. உற்றநோய் நீக்கி உறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(442)

(இ-ம்) தெய்வத்தாலாவது மனிதராலாவது தனக்கு வந்த துன்பத்தை அததற்குரிய பரிகாரங்களால் நீக்கி, பின்னும் மேலேசொல்லிய இரண்டாலும் வருவனவாகிய துன்பங்களை முன்னேதெரிந்து வாராதவிதங் காக்கும் வலிமை யுடைய பெரியாரை அவர் மகிழ்ச்சி யடையும்வண்ணம் உபாயஞ்செய்து அரசன்

துணையாகக்கொள்ளவேண்டும் என்பதாம். தெய்வத்தால் வருந்துன் பங்களாவன-மழைமிகுதீலாலும் குறைதலாலும், காற்று, அக்கினி, பனி ஆகிய மூன்றாலும் வருகின்றவைகள். மனிதரால்வரும் துன்பங்களாவன-பகைவர், திருடர், சுற்றத்தார், ஏவற்றொழில் செய்வோர் ஆகிய நால்வரால் வருபவைகள்.
பரிகாரங்களாவன-தெய்வத்தால்வருந் துன்பங்களுக்குக் கடவுளரையும், பெரியோரையும் நோக்கிச் செய்யும் விசேட பூசை தானம் யாகம் சாந்தி முதலியவைகள். மனிதரால்வருந் துன்பங்களுக்குச் சாம பேத தான தண்டங்களாகிய நால்வகையுள் இடத்திற்கும், காலத்திற்கும், விஷயத்திற்கும் ஏற்றதொன்றைச் செய்தல். முன்னே தெரிதலாவது-உற்பாதத்தாலறிவது.
உற்பாதம்-பின்னேவருவதை முன்னேகாட்டும் அடையாளம். அது, பின் வரும் மழையைக் காட்டுதற்கு முன்னே தோன்றும் மின்னல் போல்வது. மனிதரால்வருந் துன்பங்களைக் காட்டும் உற்பாதங்களாவன-அம் மனிதரது குணம், இங்கிதம், ஆகாரம், செய்தொழில்கள்; இவற்றுள் இங்கிதம்-அம் மனிதர் அவயவத்திற் குறிப்பாயுண்டாகுந் தொழில். ஆகாரம்-குறிப்பில்லாமல் வெளிப்படையாக அவரது சரீரத்திற்றோன்றும் வேறுபாடு. இவையெல்லாம் அரசன் கூரிய புத்தியாற் காணத்தக்கவைகள். பெரியார் மகிழ்ச்சியடையும் வண்ணம் உபாயஞ் செய்தலாவது-அவர் எந்தெந்தப் பொருள்களில் விருப்ப முடையரோ அந்தந்தப் பொருள்களை நிரம்ப

அவருக்குக் கொடுத்தல். குறிப்பு என்பது முகம் கண் இருக்கின்ற இருப்பைக்கொண்டு அறிதலாம்.

௩. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

(443)

(இ-ம்) அறிவானுயர்ந்த பெரியாரை அவர் மகிழத்தக்க காரியங்களைச் செய்து தமக்குச் சிறந்தாராக வசப்படுத்திக் கொள்ளுதலானது பெறுதற்கரிய பேறுகளெல்லாவற்றுள்ளும் அரசற்குப் பெரியது என்பதாம். இதனால், எல்லாப்பேறுகளும் அப்பெரியாரால் கிடைக்குமென்பது கருத்து. பேறுகளாவன்-புகழ், கல்வி, வெற்றி, நன்மக்கள், பொன், நெல், நல்ல ஊர், நுகர்ச்சி, அறிவு, அழகு, பெருமை, இளமை, துணிவு, நோயில்லாதிருத்தல், வாழ்நாள் என்பனவாம். நுகர்ச்சி-அநுபவித்தல்.

௪௫-ஆம் அதி .—பெரியாரைத் துணைக்கோடல். க௱ள்

௪. தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(444)

(இ-ம்) அறிவு முதலிய நற்குண நற்செய்கைகளால் தமக்கு மேலாகிய பெரியோர் சிறந்தவராகத்

தம்மிடத்திலிருக்க அவர் சொல்வழி நடத்தலானது அரசர்க்கு எல்லாவலிமையுள்ளும் முதன்மையான வலிமையுடையது என்பதாம். எப்படியென்றால், அரசருடைய பொருளாலும் சேனையாலும் நீக்கப்படாமல் தெய்வத்தால்வருந் துன்பங்களைப் பெரியார் உபாயங்களால் நீக்குவர் ஆதலாலென்க. உபாயம்-அந்தந்தத் துன்பத்துக்கேற்ற பரிகாரங்கள்.

ரு. சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(445)

(இ-ம்) மந்திரிகளைக் கண்ணாகக்கொண்டு தன்னுடைய பாரத்தை அரசன் நடத்துதலால், நடத்துகிற முறைமை யறிந்த

இராச்சிய

மந்திரிகளை

ஆராய்ந்து தெரிந்தெடுத்துத் தனக்குத் துணையாக்கிக்கொள்ளல்வேண்டும் என்பதாம். அரசன் இராச்சியபாரத்தைத் தானே நடத்தவல்லவனானாலும் அளவில்லாத தொழில்களால் ஆகுலம் (துன்பம்) அடைதலால் இராச்சியத்தை நடத்துதல் மட்டுமே தொழிலாகக்கொண்ட மந்திரிகளில்லாமல் அத்தொழில் நடவாதென்பது கருத்து. ஆராய்தல், அமைச்சியலுள் (மந்திரிகளியலுள்) கூறிய இலக்கணங்கள் அவர்களிடத் திருக்கின்றனவா என்று தெரிதல்.

சு. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்

செற்றார் செயக்கிடந்த தில்.

(44 6)

(இ-ம்) அறிவொழுக்கங்களா லுயர்ந்த தகுதியுடையவர் கூட்டத்தினை யுடையவனாகித் தானுந் தருமசாத்திரங் கூறும்வழியிலே நடக்கும் வலிமை யுடைய அரசனுக்கு அவன் பகைவர் செய்தற்காகிய கேடு ஒன்றுமில்லை யென் பதாம். இதனால், தானுந்தெரிந்து தெரிந்தார் சொல்லையுங் கேட்டுக் காரியங் களை நடத்துகிற அரசனுக்கு ஒருகுறையு மில்லையென்பது கருத்து.

எ. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(447)

(இ-ம்) பாவமும் பழியுமாகிய தீயவிஷயங்களைக் கண்டால் நெருங்கி வந்து விலக்குந் துணையார் தன்மையுள்ள பெரியவரை இவர் நமக்குச் சிறந்தவ ரென்று கைவசஞ்செய்யும் அரசரைக் கெடுக்கும் பெருமையுடைய பகைவ

18

க்ஙடு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

ரெவர், ஒருவருமில்லை யென்பதாம்.
துணையார்தன்மை-பாவமும் பழியும் தம்மிடத்தில்லாமையும், அரசரிடத்து அன்புடைமையுமே. இவவிரண்டும் பெரியாரது இலக்கணமென்பது கண்டுகொள்க.

அ. இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.
(448)

(இ-ம்) கேடென்று தெரிந்தவற்றைத் தடுக்கவல்ல பெரியாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமையால் தன்னைப் பாதுகாத்தலில்லாத அரசன் தனக்குப் பகையாகவந்து கெடுப்பவரில்லாதிருந்தாலும் தானே கெட்டுப்போவான் என்பதாம். தானேகெடுத லெப்படியென்றால், பாகனில்லாத யானை மதங்கொண்டு வழியல்லாத வழியிற்சென்று கெடுதல்போலும் என்க. கெடுப்பாரில்லாமலிருந்தாலுமென்றதனல் இருப்பாரென்பதே நிச்சயம். இக்கருத்து நோக்கியே கவியரசாகிய கம்பர் "கடிக்கும்வல் லரவுங் கேட்கு மந்திரங் களிக்கின் றோயை, அடுக்குமீ தடாதென் றூன்ற வேதுவோ டெடுத்துக் காட்டி, இடிக்குந ரில்லை யுள்ளா ரெண்ணிய வெண்ணி யாங்கே, முடிக்குந ரென்ற போது முடிவன்றி மூடிவ துண்டோ" என்றார். (கம்ப ராமாயணம். நிந்தனைப்படலம் 59.)

௯. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ் சார்பிலார்க் கில்லை நிலை,

(449)

(இ-ம்) முதற்பொருளில்லாத வியாபாரிகளுக்கு இலாபப்பொருள் கிடைக்கமாட்டாது. அதுபோலத் தம்மைத் தாங்குஞ் சார்பாகிய பெரியா ரில்லாதவருக்குச் சலிப்பில்லாமல் நிற்கும் நிலை இல்லை என்பதாம். எனவே, முதலைப்பெற்றே இலாபம் பெறவேண்டுமென்பதும், பெரியாரை யடைந்தே சலனமில்லாத நன்னிலை யடையவேண்டுமென்பதும் பெறப்பட்டன. சலனம்- சலிப்பு. இதற்கு மனத்தளர்ச்சி யென்று பொருள்.

௰. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே நல்லார் தொட ர்கை விடல் .

(450)

(இ-ம்) அரசன் தான் தனியனாயிருந்துகொண்டு பல பேருடன் பகைத் துக்கொள்ளுதலைப் பார்க்கிலும் பத்துப்பங்கு அதிகமாகிய தீமையுடையது பெரியாரோடு சிநேகஞ்செய்யாமல் விட்டுவிடுதல் என்பதாம். எப்படி யென்றால், தனக்குப் பத்துப்பேர் பகைவர் இருந்தால் அவ ர்களுக்குள் ஒருவருக் கொருவர் துணையாய் நின்று

ஏவுதல்செய்யப் போருக்கு (சண்டைக்கு) வருமவர் ஒருவரோ யாவர். இதுவே முறை; இம்முறை கடந்து பத்துப்பேரும்

சசு-ஆம் அதி.—சிற்றினஞ்சேராமை.

கூசு

ஒன்றுகூடிப் போருக்கு வந்தாலும் அரசன் சாம பேத தான தண்டமென்னும் நான்கு உபாயத்துள் ஒரு உபாயஞ்செய்து தப்பிப் பிழைத்துக்கொள்ளக் கூடும். அப்படி யல்லாமல் நல்லாராகிய பெரியாரது சிநேகத்தைக் கைவிட்டால் ஒரு விதத்தாலும் பிழைக்கமுடியாது என்க. பத்துப்பங்கென்பதற்கு அளவில்லாத பல பங்கென்பது பொருள். இதை, 639-வது குறள் வசனத்தால் காண்க.

---

# 46-ஆம் அதி.—சிற்றினஞ்சேராமை.

அஃதாவது, நல்லதனுடைய நன்மையும், தீயதனுடைய தீமையுமில்லை யென்போராகிய சிறிய கூட்டத்தாரைச் சேராதிருத்தல். சிறிய கூட்டத்தார்—விடரும், தூர்த்தரும், நடரும் ஆகியவர். விடர்-விபசாரம் செய்பவர், தூர்த்தர்-வஞ்சகர். நடர்-நாடகமாடுபவர்.

க. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.
(451)

(இ-ம்) அறிவு கல்வி முதலியவற்றால் உயர்ந்த பெரியாராயினர், அறிவு கல்வி முதலியவற்றாற் குறைந்த சிறியார் கூட்டத்தைக் கண்டாற் பயப்படு வார். பயப்படாமல் நெருங்கினல் தம்மை அச் சிறியார் கூட்டம் தம்முடைய சுற்றத்தாராக வெண்ணிவ ந்து வளைந்துகொள்ளும் என்பதாம். எப்படி யென்றால், பெரியார் சிறியாரைச் சேர்ந்தால் அவரறிவோ டு தம்மறிவு கெடுத லுடன் துன்பமும் வந்துசேரும். அம்மட்டோ! தம்மை அவர் விடாது சூழ்ந்து தாம் செல்லும் நல்வழியிற் செல்லவொட்டாமல் தடுத்தலும் செய்வ ரென்க. இதனல், பெரியார்க்குச் சிறியார் உறவு கூடாதென்பது கருத்து. மூலத்தில் பெருமை யென்றது பெரியாரை, சிறுமை யென்றது சிறியாரை.

உ. நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.
(452)

(இ-ம்) ஆகாயத்திலே நின்று விழும் நீரானது தன்னியல்பு (குணம்) மாறித் தான்சேர்ந்த நிலத்தினது நிறம் சுவை குணங்களையுடையதாகும்; அதுபோல மனிதருக்குத் தாம் சேர்ந்த கூட்டத்தாரது கு

ணங்களே யாகித் தமது அறிவு வேறுபடும் என்பதாம். இதனால், பெரியாரது அறிவைச் சிறியாரது அறிவு மாறுபடுத்திவிடுமென்பது கருத்து.

•

## ௧௪௦ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௩. மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானும்
இன்னா னெனப்படுஞ் சொல். (453)

(இ-ம்) மனிதருக்குப் பொது அறிவு மனத்தாலுண்டாகும். இவன் இத்தன்மையுடையவனென்று உலகத்தாராற் சொல்லப்படுஞ் சொல்லானது தான் சேர்ந்த கூட்டத்தாரால் உண்டாகும். ஆகவே, தான் நல்லவனாயிருந் தாலும் தீயவர் கூட்டத்தைச் சேர்ந்தால் தீயவனாவனென்பது கருத்து.

பொது அறிவு— ஐம்பொறிக்கும் விஷயமாகிய சத்த பரிச ரூபங்களை யறியும் அறிவு. இவ்வறிவு ஐம்பொறிகளை மனஞ் சேராதவிடத்து இல்லையாம்.

எப்படியென்றால், மனம் கண்ணைப்பற்றாமல் வேறொன்றிற்

சென்றால் எதிரே

குழியிருப்பது தெரியாமல் அக்குழியில் வழி நடப்பவர் விழுவது யாவரு

மறிந்த விஷயம். இதுபோலவே, மற்றவையுங் கண்டுகொள்க. இக்கருத்துப் பற்றியே, "வழிநடப்பவர் பாமு கமாயிடின் மலர்ந்த கண்ணிருந்தாலும் குழி யில் வீழுவர்" என்றார் பிறரும்.

ச. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
இனத்துள தாகு மறிவு .

(454)

(இ-ம்) மேற்கூறிய அவ்விசேட அறிவானது ஒருவனுக்கு மனத்தி னிடத்து உள்ளதுபோலத் தன்னை வெளிப்படுத்தி, அவன் சேர்ந்த இனத்தி னிடத்தேயுள்ளது என்பதாம். ஒருவனுக்கு விசேட அறிவு தோன்றுதற்குக் காரணம்-தான் சேர்ந்த இனமென்பது கருத்து. ஆகவே, ஒருவனுக்கு விசேட அ றி வு இயற்கையாகத் தன் மனத்திலில்லை யென்பது கண்டுகொள்க. வெளிப்படுத்தலாவது - தோன்றச் செய்தல். விசேட அறிவு-தான் சேர்ந்த இனத்ாலுண்டாகும் அறிவு.

ரு. மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

(455)

(இ-ம்) அவ்விசேட அறிவு தோன்றுதற்கு

இடமாகும் மனமானது பரிசுத்தமாகுந் தன்மையும், சொல்லாலும் சரீரத்தாலும் செய்யும் நற்செய்கை யால் பரிசுத்தமாகுந் தன்மையுமாகிய இரண்டும் ஒருவனுக்குத் தான் சேர்ந்த நல்லினம், பற்றுக்கோடு (காரணம்) ஆக உண்டாகும் என்பதாம். மனம் பரி சுத்தமாதல்-அறியாமையினின்றும் நீங்குதல். சொல்லாற் செய்யும் நற்செய் கை-தீயவை சொல்லாமல் நல்லவை வயே சொல்லுதல். சரீரத்தால் செய்யும் நற்செய்கை-கடவுளர் பெரியோர் முதலியவரை வணங்கல். பற்றுக்கோடு-பற்றிக்கொள்ளுதல். தூவு-பற்றுக்கோடு. இது - கலித்தொகை, நெய்தல் 1-ஆம் பாடலிற்கண்டது.

## சகூ-ஆம் அதி.—சிற்றினஞ்சேராமை.

கசசு

சூ. மனந்தூயார்க் கெச்சநன் றாகு
மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

(456)

(இ-ம்) மனம் பரிசுத்தமுடையவருக்கு நல்ல மக்களைப் பெறுதல் உண் டாகும். பரிசுத்தமாகிய இனம் உடையவருக்கு நல்லதாகாத செய்தொழில் யாதொன்றுமில்லை யென்பதாம். எனவே நல்ல

பிள்ளைகள் பெறவேண்டு மானல் மனம் பரிசுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டுமென்பதும், தான் செய்யுந் தொழிலெல்லாம் நல்லனவாக இருக்கவேண்டுமானல் நல்லினத்தைச் சேர்ந்திருக்க வேண்டுமென்பதுங் கண்டுகொள்க. இதனல், நல்லினத்தைச் சேர்தலல்லாமல் சிற்றினத்தைச் சேரக்கூடாதென்பதாயிற்று.

எ. மனநல மன்னுயிர்க் காக்கம் இனநலம்
எல்லாப் புகழுந் தரும்.

(457)

(இ-ம்) நிலைபெற்ற உயிர்களுக்கு மனத்தினது நன்மையானது செல் வத்தைக் கொடுக்கும். இனத்தினது நன்மையானது செல்வத்தோடு எல்லாப் புகழையும் கொடுக்குமென்பதாம். மனம் நன்றாதலே அறமாதலால் அறத் தாற் செல்வமுண்டாகுமென்றும், புகழ்கொடுத்தற்குரிய நல்லோர் தாமே இனமாதலால் எல்லாப்புகழுங் கொடுக்குமென்றும் கண்டுகொள்க. அறம்-தருமம்.

பொருளை விரித்துக்

அ. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநலம் ஏமாப் புடைத்து.

(458)

(இ-ம்) மனநன்மையானது முன்செய்த நல்வினையாற் பெற்றிருந்தாராலும் அறிவாலுயர்ந்தவருக்கு இனத்தினது நன்மையானது அம் மனநன்மைக்குப் பலத்தையுண்டாக்குந் தன்மையுடையது என்பதாம். பலத்தை யுண்டாக்குதல்-விருத்திசெய்து வருதல். ஏமாப்பு-இவ்விடத்து வலிமை.

கூ. மனநலத்தி னாகு மறுமைமற் றஃதும்
இனநலத்தி னேமாப் புடைத்து.

(459)

(இ-ம்) ஒருவனுக்கு மனநன்மையினாலே மறுமைப்பயனுண்டாகும். அப்படிப்பட்ட சிறப்பும் தான் சேர்ந்த நல்லினத்தாராலே நிலைபெறுதலுடையதாகும் என்பதாம். நிலைபெறுதல்-உறுதியாக இருத்தல். எப்படியென்றால், மனநலமொருகாற் சோர்வு அடைந்தால் நல்லினத்தார் அம்மனத்தைத் திருத்தி நல்வழிப்படச் செய்வரென்க, இவ்வாறு செய்யும் நல்லினம்

கசஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும். போலச் சிற்றினஞ் செய்யமாட்டாமையால் எதிர்மறை முகத்தால் சிற்றினஞ் சேராமை கூறப்பட்டது கண்டுகொள்க. ஏமாப்பு-இவ்விடத்து நிலைபெறுதல்,

௰. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉம் இல். (460)

(இ-ம்) ஒருவனுக்கு நல்ல இனத்தைப் பார்க்கினும் உயர்ந்த துணையும் இல்லை; தீய இனத்தைப்பார்க்கினும் உயர்ந்த பகையும் இல்லை என்பதாம். தீயினம்-சிற்றினம். இதனால் அறியாமையினின்று நீக்குவது நல்லின மென்பதும், அறிவினின்று நீக்கித் துன்பஞ்செய்வது சிற்றினமென்பதுங் கண்டு கொள்க. ஊங்கு என்பது, இவ்விடத்து உயர்ந்த என்னும் பொருள்பட வந்தது.

---

## 47-ஆம் அதி.—தெரிந்துசெயல்வகை.

அஃதாவது, தான் செய்யும் வினைகளை யாராய்ந்து செய்யுந்திறம்.

க. அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து செயல். (461)

(இ-ம்) தொழில் செய்யுமிடத்து அப்பொழுது அதனாற் செலவாவதையும், செலவாயினபின் வரவாவதையும், அப்படியாகி நின்று பிற்காலத்துக்

கொடுக்கும் இலாபத்தையும் ஆராய்ந்து இலாபமிருக்குமாளுல் அத்தொழிலைச் செய்யவேண்டும் என்பதாம். இந்தப்படி ஆராய்ந்து செய்யாவிட்டால் கேடு வருமென்பது கருத்து. கேடாவது-செலவுக்கு வரவு குறைதல். எனவே, அவ்விரண்டுஞ் சமமாளுலும் கேடில்லை யென்பது கண்டுகொள்க.

உ. தெரிந்த இனத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில். (462)

(இ-ம்) தாம் தக்கவரென்று தெரிந்துகொண்ட இனத்துடனே ஆலோசித்துத் தாமுந்தெளிந்து ஒரு காரியத்தைச் செய்துமுடிக்க வல்லமையுள்ள அரசருக்குக் கிடைத்தலில்லாத பொருள் யாதொன்றுமில்லை. எல்லாம் கிடைக்கு மென்பதாம்.

ங. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார். (463)

சஎ-ஆம் அதி.—தெரிந்துசெயல்வகை. கச஗

(இ-ம்) பின்னே வரக்கூடியதாகிய இலாபப்பொருளை எண்ணி முன்னே பெற்றிருந்த முதற்பொருளையு மிழந்துவிடுவதற் கேதுவாகிய செய் தொழிலை அறிவுடையவர் மேற்கொண்டு

செய்யமாட்டாரென்பதாம். முதற் பொருளை இழந்துவிடும் செய்தொழிலாவது—காலமும் இடமும் வலிமையும் எண்ணுமல் பிறருடைய நாட்டைக் கைப்பற்றுதற்குப் போர் செய்து தம் முடைய நாட்டையும் இழந்துவிடுதல் போல்வது. மேற்கொள்ளல்—முனைப் புற்றுச் செல்லுதல்.

௪. தெளிவி லதனைத் தொடங்கார் இளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.

(464)

(இ-ம்) நல்வினத்தோடு தாமும் ஆராய்ந்து துணிதல் இல்லாத தொழிலை ஆரம்பித்துச் செய்யமாட்டார், தமக்கு இளிவரலென்னுங் குற்றம் வருவதைக்கண்டாற் பயப்படுகின்றவர் என்பதாம்.

ஏனென்றால், தெளிவில்லாத காரியத்தைச் செய்தால் அக்காரியங் கெட்ட இடத்து, அதன்பின் அறிவும் மானமும் இல்லாதவரென்று உலகத்தார் சொல்லும் இகழ்ச்சியுண்டாதலாலென்க. இதனுல், இன்னது செய்தால் இன்னதாகு மென்னுந் தெளிவுள்ள இடத்து ஒரு காரியத்தைச் செய்யவேண்டு மென்பது கருத்து. இளிவரல்—இகழ்ச்சி.

௫. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

(465)

(இ-ம்) ஒரு காரியத்திற் சென்றால் அதனுலுண்டாகும் திறங்கள் (விஷயங்களை) முழுவதும் எண்ணாது சில எண்ணிய பொழுதே அரசன் யுத்தஞ் செய்யத்தொடங்குதலானது தன் பகைவரை விருத்தியாகும் இடத்திலே நிலைபெற்று நிற்கச்செய்வதற்கு ஒரு வழியாகும் என்பதாம். திறங்களாவன—காலம், இடம், வலிமையாகிய மூன்றாலும் தனக்கும் தன் பகைவருக்கும் உள்ள நிலைமைகளும், போர்தொடங்கும் விதமும், அதற்கு வரும் இடையூறுகளும், அவற்றை நீக்கும் விதமும், வெல்லும் விதமும், வென்றாற் கிடைக்கும் பயனும் முதலானவைகள். இவைகளுட் சில குறைந்தாலும் தான் வெற்றி பெறாமல் தன் பகைவர் வெற்றி பெறுவரென்பது கருத்து.

அ. செய்தக்க அல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

(466)

(இ-ம்) அரசன் தான் செய்யுஞ் செயல்களுள்ளே செய்யத்தகாத காரியங்களைச் செய்தானால் கெடுவன்.

செய்யத்தக்க காரியங்களைச் செய்யா

கசசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

திருந்தானாலுங் கெடுவன் என்பதாம். செய்யத்தகாத காரியங்களாவன— தன்னுடைய வலி படை பொருள்

முதலியவைகளின் சத்திக்கு மிஞ்சிய தொழி ல்கள். செய்யத்தக்க காரியங்களாவன—மேற்கூறியவைகளின் சத் திக்குள் அடங்கிய தொழில்கள். மேற்கூறியபடி செய்தலாலும் செய்யாமை யாலும் அறிவு, ஆண்மை, பெருமை யென்னு மூவகை ஆற்றலுள் பொருள் படையென இருவகையினையுடைய பெருமை சுருங்கித் தன் பகைவருக்கு எளியவனாவனென்பது கருத்து.

எ. எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு.

(467)

(இ-ம்) செய்யத்தக்க கருமமும் (தொழில்களையும்) முடிக்கும் உபா யத்தை முன்னே யெண்ணித் தொடங்கவேண்டும். தொடங்கிவிட்டுப் பின்னே எண்ணுவோமென்று விட்டுவிடுதல் குற்றமாகும் என்பதாம். முடிக் கும் உபாயத்தையெண்ணி ஒருகாரியத்தைத் தொடங்கினால் அவ்வுபாயத்தால் அக்காரியம் முடியுமென்பது கருத்து. உபாயமாவன-சாம பேத தான தண் டங்கள். இதனால், இவ்வுபாயத்தை யெண்ணாமல் காரியஞ் செய்யத்தொடங் கினால் தன் பகைவனால் விலக்கப்பட்டு அக்காரியம் முற்றுப்பெறாமற் போத லாலும், இடையிலே விட்டுவிடுதலாகாமையாலும் அரசன் துன்பமுறுவ னென்பது கண்டுகொள்க.

அ. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று

போற்றினும் பொத்துப் படும்.

(468)

(இ-ள்) கருதிய கருமத்தை முடியும் உபாயத்தால் தொடங்காத முயற்சியானது துணைவர் பலர்கூடி வந்து நின்று காப்பாற்றினாலும் குற்றப்படுமென்பதாம். முடியும் உபாயங்களாவன - பொருளாசை யுடையவனுக்குப் பொருளைக்கொடுத்தலும், நல்லொழுக்க முடையவனுக்கும், முன்னே போரில் மெலிந்தவனுக்கும், சோம்புதலுடையவனுக்கும் இன்சொற் சொல்லுதலும், பகைவருக்கு உதவியாயிருக்கும் துணைப்படையாளனுக்கும் தன் கூட்டத்தோடு பொருந்ாதவனுக்கும் வேறுபாடுறச் செய்தலும், மேற்கூறியவைகளால் வசப்படாதவரையும், தெளியப்படாத கீழ்மக்களையும் தண்டஞ்செய் தலும் என்பவைகளாம். வேறுபாடுறச் செய்தல்-தன் பகைவரைவிட்டுப் பிரியச்செய்தல். துணைப்படை-துணையாயுள்ள சேனை. வருந்தாவருத்தம் என்பதற்குத் தொடங்காத முயற்சி யென்றது தாற்பரியப்பொருள்.

கூ. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

(469)

(இ-ம்) வேற்று வேந்தரிடத்து நன்றாகிய உபாயஞ் செய்யுமிடத்துங் குற்றமுண்டாகும். அவரவர்கள் குணங்களை யாராய்ந்தறிந்து அக்குணங்களுக்கு இணங்கச் செய்யாவிட்டால் என்பதாம். நன்றான உபாயம்-பொருள் கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும் ஆம். இவ்விரண்டும் எல்லார்க்கும் இனிமைதக்கத் தக்கவைகள். குணங்களையறிந்து இணங்கச் செய்யாமைபொருள்விருப்ப முடையாருக்கு இன்சொற் சொல்லுதலும், இன்சொல் விருப்ப முடையாருக்குப் பொருள்கொடுத்தலும் போல்வது. இதனால், யார் யாருக்கு எது எது விருப்பமோ அதையதை யறிந்து செய்யவேண்டு மென்ப தாயிற்று.

கம. எள்ளாத எண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.
(470)

(இ-ம்) அரசரானவர் தமது காரியமுடிதற் பொருட்டுத் தமது நிலைமை யொடு பொருந்தாத உபாயங்களைச் செய்வாரானால் உலகத்தார் தம்மை யிகழ்ந்து பேசுவர். ஆதலால், அவர் இகழப்படாத உபாயங்களை யாராய்ந்து செய்ய வேண்டும் என்பதாம்.
தம்மொடுபொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது- அரசரானவர் தாம்வலியராயிருந்து மெலியார் செய்தற்குரிய பொருள் கொடுத்தல், இன்சொற் கூறல், வேறுபடுத்தல் முதலியனவும், மெலியராயிருந்து வலியார் செய்தற்குரிய

ஒறுத்தல் (தண்டனை) செய்தலும் என்பனவாம். இதனால், அரசர் உலகத்தார் இகழாத உபாயங்களைச் செய்யாவிட்டால் அவ ரெடுத்த காரியம் முடியாமற்போவதுமல்லாமல் இகழ்ச்சியு மடைவரென்பது கருத்து.

---

## 48-ஆம் அதி.—வலியறிதல்.

அஃதாவது, அரசன் நால்வகை வலிமையும் அறிதல். நால்வகைவலி- வினைவலி, தன்வலி, பகைவன்வலி, துணைவலி என்பன.

௧.

வினைவலியும் தன்வலியும் மாற்றான் வலியும்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

(471)

(இ-ம்) தான் செய்ய நினைத்த தொழிலின் வலிமையும், அதனைச் செய்துமுடிக்கும் தன்வலிமையும், அதனைவிலக்கலுறும் பகைவன் வலிமையும் தனக்கும் தன்பகைவனுக்குமுள்ள துணைவலிமையும் ஒத்துப்பார்த்து இவை யெல்லாவற்றினும் தன்வலிமை மிகுமானால் அத்தொ

ாழிலே அரசன் செ ய்யத் தொடங்கல் வேண்டும். எனவே, இவைகளி லொன்று குறைந்தாலும் தாணெடுத்த காரியம் இடையூறில்லாமல் முடிதலாகாதென்பது கருத்து.

1 9

௩௭௰ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

உ. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லா த தில்.
(472)

(இ-ம்) தமக்குச் செய்யக்கூடிய தொழிலையும், அதற் கறியவேண்டிய சீரய துணைவலியையும் அறிந்து, எப்பொழுதும் மனம் வாக்குக் காயங்களாகிய மூன்றினையும் அறியவேண்டிய வகையிற் செலுத்திப் பகைவர்மேற் போர் புரியச் செல்லும் அரசர்க்கு முடியாதபொருள் இல்லை என்பதாம். இதனுல், ஒரு காரியம் முடிதற்கு இடைவிடாமுயற்சி செய்யவேண்டும் என்பதாயிற்று.

௩. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

(473)

(இ-ம்) தம்முடைய வலிமையின் அளவறியாமல் மனவெழுச்சியால் தம்மைப்பார்க்கினும் மிகுந்த வலிமையுடையவரோடு போர்செய்யத் தொடங்கி அவ்வலியார் நெருக்கலால் வெற்றியடையாமல் இடையிலே உலகத்திற்கெட்ட அரசர் பலர் என்பதாம். ஆதலால், அவரவர் சத்திக்கு மேற்பட்ட காரியங்களைச் செய்யலாகாதென்பது கருத்து. இதனால், தம் சத்திக்கு உள்ளடங்கிய காரியங்களைச் செய்வார் உலகத்திற் சிலரேயுள்ளா ரென்பதாயிற்று.

ச. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை

வியந்தான் விரைந்து கெடும். .

(474)

(இ-ம்) வேற்றரசரோடு பொருந்தி நட்பாக நடத்தலும் செய்யாது தன் வலிமையின் அளவையுமறியாது தன்னையே பெருமையாக மதித்து மகிழ்ந்த அரசன் சீக்கிரத்திற் கெடுவன் என்பதாம். இதனால், வேற்றரசர் தமக்குமேல் வலிமையுடையவரானால் அவரைப் பகைக்கலாகாதென்பதும், தன்பலமறியாது தன்னை மதித்துக்கொள்ளலாகாதென்பதும் கண்டுகொள்க.

ரு. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்

சால மிகுத்துப் பெயின்.

(475)

(இ-ள்) மயிலின் தோகையை யேற்றிய பண்டியும் அச்சுமுறிந்து கெடும். அத்தோகையை எந்று மளவறிந்து பாரமேற்றுமல் அளவுக்கு மிஞ்சிய பாரம் (சுமை) ஏற்றினல் என்பதாம். இதனல், அறியவேண்டும் பொருள் என்னவென்றுல், அரசன் தான் வலியவனயிருந்தாலும் எளியர் பலர் ஒன்றுசேர்ந்து தன்னேடு பகைத்துப் போர்செய்ய வந்தால் தான் கெடுவன் என்பதாம். இதனல், மாற்றன் வலியும், அவனுக்குத் துணையாயிருப்பவர் வலியும் அறியாத இடத்து வருங்கேடு கூறப்பட்டது காண்க

## சஅ-ஆம் அதி.—வலியறிதல்.

கசஎ

சு. நுனிக்கொம்ப ரேறினு ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும்.

(476)

(இ-ள்) ஒரு மரத்தின் கொம்பினது நுனியில் ஏறிநின்றவர் அம்மட்டில்
நில்லாது ஊக்கத்தால் மேலுமேலும்
ஏறத்தொடங்குவாரானல் அவரது

ஊக்கம், அவருயிர்க்குக் கேடாகி முடியு மென்பதாம். இதனாலறியவேண்டும் பொருள் என்னவென்றால், பகைவர்மேற் போர்செய்யத்தொடங்கிய அரசன் தான் செல்லுமளவுஞ்சென்று நில்லாமல் தன் வலிமையளவுக்கு மிஞ்சிச் செல்லுவானானால் நாசமடைவனென்பதாம். இதனால், போர்செய்யும் செயல் (வினை) வலிமையறியாத இடத்து வரும்கேடு கூறப்பட்டது காண்க.

எ. ஆற்றி னளவறிந் தீக அதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(477)

(இ-ம்) தமக்குள்ள பொருளின் அளவினையறிந்து அவ்வளவுக்கேற்பக் கொடுக்கவேண்டிய முறைப்படி கொடுக்கவேண்டும். அப்படிக் கொடுப்பது தம் பொருளைக் காப்பாற்றி நடக்கும் வழி என்பதாம். அள வுக்கேற்பக் கொடுத்தலாவது—தனக்குக் கிடைத்த பொருளின் றொகையை நான்கு பங்காக்கி ஒரு பங்கை இனிமேல் இடர் (துன்பம்) வந்தால் அதை நீக்குதற் காக வைத்துவிட்டு இரண்டுபங்கைத் தன் செலவுக்காக வைத்துக்கொண்டு நின்ற ஒரு பங்கைக்கொடுத்தல். இக்கருத்துப்பற்றியே "வருவாயுட் கால் வழங்கி வாழ்தல்" என்றார் பிறரும் (திரிகடுகம் 21.)

அ. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை

போகா றகலாக் கடை.

(478)

(இ-ம்) அரசருக்குப் பொருள் வருகின்ற வழியளவு சிறிது (கொஞ்சம்) ஆகியிருந்தாலும் அதனலொரு கேடுமில்லை. எப்படியென்றால், செலவழிக் கும் வழியினளவானது வருகிற வழியினளவுக்கு மேற்படாத இடத்து என்ப தாம். இதனல், வரவுக்கு மிஞ்சிய செலவு செய்தால் கேடுவருமென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "வரத்தினை மீறும் செலவுக்குத் தரித்திர மேறும்" என்றார் பிறரும். (முக்கூடற்பள்ளு 147 )

கூ . அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல

இல்லாகித் தோன்றாக் கெடும்.

(479) (இ-ம்) ஒருவன் தனக்குள்ள பொருளின் அளவறிந்து வாழாமல் அதிகச் செலவுசெய்து வாழ்கின்ற வாழ்க்கைகள் இருப்பனபோலத் தாணப்பட்டு கசடு



இல்லையாகி வாழ்க்கையென்னுந் தோற்றமும் இல்லாமற் கெட்டுப்போகும்

என்பதாம். தோற்றமும் இல்லாமற் கெடுதல்-முழுவதும் கெட்டுப்போதல். பொருளின் அளவறிந்து வாழ்தலாவது—வரவுக்குச் செலவு சுருங்க முடியா விட்டால் வரவுக்குஞ் செலவுக்குஞ் சமமாகவாவது பிறருக்கு ஈந்தும் தாமநுப வித்தும் வாழ்தல். இக்கருத்துப் பற்றியே, "சிந்து நெறிக ளகலாமற் சேரு நெறிகள் சுருங்கிடினும், சுந்த லிலதாம் ஒப்பினுமாம்" என்றார் ஒரு பெரியார். (விநாயகபுராணம் அரசியற் படலம் 66)

கo. உளவரை தூக்காத ஒப்புர வாண்மை
வளவரை வல்லைக் கெடும்.

(480)

(இ-ம்) தனக்குள்ள பொருளின் அளவை (தொகையை) யறிந்து அதற்கேற்ற முறையாகச் செய்யாமல் அம்முறை கடந்து கொடைத்தன்மையைச் செய்வாராளுல் அப்பொருளாகிய செல்வத்தினளவு சீக்கிரம் கெடும் என்பதாம். இதனல், பிறருக்குக் கொடுத்து உபகாரஞ்செய்தல் உயர்ந்ததா யிருந்தாலும் தன் தகுதிக்கு மிஞ்சிச் செய்யலாகாதென்பது கண்டுகொள்க. அறிவும் ஆண்மையும் பெருமையுமாகிய மூவகையாற்றலுட் பெருமையின் உட்பகுதியாதலால் பொருள் வலியறிதலையும் சிறப்பாக இங்கே கூறி யருளினர்.

---

## 49-ஆம் அதி.—காலமறிதல்.

அஃதாவது, வலிமை மிகுதியாற் பகைவர்மேற் போருக்குச் செல்லுத லுற்ற அரசன் அப்பகைவரை வெல்லுங் காலத்தையறிதல்.

க. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை இகல்வெல்லும்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. (481)

(இ-ம்) தன்னைப் பார்க்கிலும் பலமுடையதாகிய கூகையைக் காக்கையானது பகற்காலத்தில் வென்றுவிடும். அதுபோல, பகைவருடைய வலிமையை வெல்லுதற்கு ஏற்ற (பொருந்திய) காலமும் அவசியமாக அரசருக்கு வேண்டும் என்பதாம். காலமாவது—வெப்பமும் குளிர்ச்சியும் அதிகம் குறைவில்லாமல் சமமாய் நோய் செய்யாமல் தண்ணீரும் உணவும் பிறவும் உடைய தாய்த் தன் சேனை வருத்தப்படாமற் செல்லுந் தன்மையுடையது. சேனைபடை; அதாவது தேர், யானை, குதிரை, காலாள் என்பன. காலாள்-போர் செய்யும் வீரர்.

## சஅ-ஆம் அதி.—காலமறிதல்.

உ. பருவத்தோ டொட்ட வொழுகல் திருவினைத்
தீராமை யாக்குங் கயிறு.

(482)

(இ-ம்) அரசன் மேற்கூறிய காலத்தோடு பொருந்த வினைசெய்து (போர்செய்து) நடப்பது ஒருவரிடத்தும் நிலையாக நில்லாத செல்வத்தைத் தன்னிடத்து என்றும் நிற்கும்படி கட்டிவைக்கப்பட்ட கயிறாகும் என்பதாம்.

ங. அருவினை யென்ப வுளவோ கருவியாற்

கால மறிந்து செயின்.

(483)

(இ-ம்) அரசரால் செய்யமுடியாத காரியங்களென்று சொல்லப்படுவன இருக்கின்றனவோ அக்காரியங்களை முடித்தற்கேற்ற கருவியால் (காரணங்க ளால்) உடனே முடித்தற்கேற்ற காலத்தையறிந்து செய்வாரானால் என்பதாம். காரணங்களாவன — மூவகையாற்றல்களும், நால்வகை யுபாயங்களு மாம். மூவகையாற்றல்கள் - அறிவு, ஆண்மை, பெருமைகளின் புலங்கள், நால்வகை

யுபாயங்கள்-சாம பேத தான தண்டங்கள்.

ச. ஞாலங் கருதினுங் கைகூடும் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(484)

(இ-ம்) ஒருவன் உலகமுழுவதுந் தானே அவ்வுலகமுழுதும் அவன் கைவசப்படுவதாகும்.

ஆள நினைத்தான் ஆனாலும் எப்படி யென்றால், கைவச

மாவதற்குச் செய்யும் வினையை (செயலை)க் காலமறிந்து ஏற்ற இடத்தொடு பொருந்தச் செய்வானானால் என்பதாம். இவ்வாறு செய்தால் கைகூடாத காரியங்களெல்லாங் கைகூடுமென்பது கருத்து.

ரு. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(485)

(இ-ம்) தவறாமல் உலகமெல்லாம் தம் கைவசப்படவேண்டுமென்றெண் ணும் அரசர் தமக்குப் பலமிருந்தாலும் பகையை வெல்லுதற்கேற்ற காலம் வருமளவும் பொறுத்துக் காத்துக்கொண்டிருப்பர்

என்பதாம். இம்முறை தவறி நடந்தால் எடுத்தகாரியம் முடியாமற் போவதோடு தமக்குள்ளதுங் கெட்டுவிடும். இருத்தலாவது-யுத்தத்திற்குச் செல்லாதிருத்தல்.

௬. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(486) கருо திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) வலிமைமிகுதியாகவுடைய அரசன் (காலத்தைக்கருதிப்) பகைவர்மேல் யுத்தத்திற்குச்செல்லாமல் ஒடுங்கியிருக்கின்ற இருப்பானது சண்டை யிடுகின்ற ஆட்டுக்கடாவானது தன் பகையை வெல்லுதற்காகப் பின் வாங்கிச் செல்லுதல் போலும் என்பதாம். ஆதலால், வலியவன் அடங்கியிருப்பதை இலேசாக நினைக்கக்கூடாதென்பது கருத்து.

எ. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(487)

(இ-ம்) அறிவாலுயர்ந்த அரசர் தமது பகைவர்

அதிக்கிரமித் தொரு காரியத்தைச் செய்தால் அப்போதே அவரறியும்படி புறத்தே கோபஞ்செய்ய மாட்டார். அவரை வெல்லுதற்குரிய காலம் வருவதை எதிர்பார்த்துத் தம் மனத்துள்ளே கோபஞ் செய்துகொண்டிருப்பர் என்பதாம். ஏனென்றால், பகைவரறியும்படி கோபஞ்செய்தால் அவர் தப்பித்துக்கொள்ளுதற்கு வழி பார்ப்பார் ஆதலாலென்க. உள்ளே கோபஞ்செய்துகொண்டிருப்பது எதற் கென்றால், பகைவரை வெல்லுதற்கு ஒரு முயற்சியும் செய்யாமல் அடங்கி யிருத்தல் கூடாது. ஆதலால் அதற்கென்க.

அ. செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை .
(488)

(இ-ம்) தம்முடைய பகைவரை வெல்லக்கருதிய அரசர் அவரைக் கண்டால் தாம் அவருக்கு நாசகாலம் வரும்வரையும் கீழ்ப்படிந்துவரவேண்டும். அப்படிச்செய்தால் அப்பகைவர் கெடுங்காலம் வந்த இடத்து யாதொரு தடையுமில்லாமல் அவர் தலைகீழே விழும்படி கெடுவரென்பதாம். எப்படி யென்றால், வெல்லக்கருதிய அரசர் கீழ்ப்படிந்திருக்கும் உபாயத்தை யறியா மல், இறுமாந்து தற்காத்தலை மறந்து பகைவர் வலிமையிழந்து விடுதலா லென்க. தற்காத்தல்—தன்னைப்

பாதுகாத்தல். தலைகீழே விழுதலென்ப தற்கு—பகைவர் தலைவணங்கித் தோல்வியடைவரென்றும், தலை வெட்டுப் பட்டுக் கீழே விழுந்து கெடுவரென்றும், ஏற்றபடி பொருள் கூறிக்கொள்ளலாம்.

கூ. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(489)

(இ-ம்) பகைவரை வெல்ல நினைக்கும் அரசர் தமக்குக் கிடைத்தற் கரிதாகிய காலம் வந்து வாய்த்ததானால் அக்காலங் கழிந்துபோகு முன்னரே அக்காலமல்லாதபோது தம்மாற் செய்யமுடியாத செயல்களைச் செய்து முடித்

•

ருo-ஆம் அதி.—இடன றிதல் .

கருத் துக்கொள்ளல் வேண்டும் என்பதாம். இக்கருத்துப் பற்றியே "எய்தற் கரிய யாக்கைதனக் கெய்திற் றென்று வதுகொண்டு , செய்தற் கரிய வறங்கள்பல செய்து'' என்றார் பிறரும். (பிரபுலிங்கலீலை கொக்கிதேவர் வந்தகதி 12.) இதனால், எவ்வளவு பலமுடையவருக்கும் நினைத்தது முடிக்க அதற்குரிய காலம் அவசியம் வேண்டுமென்பதும், காலம் வாய்த்த இடத்துச் சோர்வா யிருக்கலாகாதென்பதுங் கண்டுகொள்க.

௪0. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்

குத்தொக்க சீர்த்த இடத்து .
(490)

(இ-ம்) அரசர் பகைவரை வெல்லுதற்குச் செல்லாதகாலத்துக் கொக்கு மீன் வந்தகப்படும்வரை எப்படியசையாமலிருக்குமோ அப்படி பகைவரைவெல் லுங்காலம் வரும்வரை யொடுங்கி யிருக்கவேண்டும். மீன் வந்து அகப்பட்ட இடத்து அக்கொக்கு அம்மீனைத் தவறவிடாமல் விரைந்து வந்து எப்படிக் குத்துமோ அப்படியே பகைவரை வெல்லுதற்குரிய காலம் வந்து வாய்த் த இடத்து அக்காலம் கழிந்துபோகும் முன்னமே அவ்வரசர் விரைவாகத் தம் பகைவர்மேற் சென்று யுத்தஞ்செய்து வெற்றியடையவேண்டும் என்பதாம்.

---

## 50-ஆம் அதி.—இடனறிதல்.

அஃதாவது, வலியும் காலமும் அறிந்து தம் பகைவர்மேற் செல்லுமரசன் அப்பகைவரை வெல்லுதற்கேற்ற நிலத்தை யறிதல்.

௧. தொடங்கற்க எவ்வினையு மெள்ளற்க்

முற்றும்
இடங்கண்ட பின் னல்ல து .
(491)

(இ-ம்) அரசர் பகைவரை வளைத்துக்கொள்ளுதற்காகும் இடத்தைக் கண்டபின் அல்லாமல் முன்னே அவரிடத்து யாதொரு வினையும் (தொழிலும்) செய்யாதிருக்கவேண்டும். அதுவல்லாமல் அப்பகைவரைச் சிறியரென்று இகழாதிருக்கவும் வேண்டும் என்பதாம். ஆகுமிடமாவது எப்படியிருக்கவேண்டுமென்றால், வாயில்களாலும் நுழைகளாலும் அப்பகைவர் உள்ளே செல்லுதலும், வெளியே சென்று ஓடிப்போதலுமில்லாத விதம் தம் கோட்டையைச் சூழ்ந்து ஒன்றுக்கொன்று துணையாய்த் தம்முள் வருத்தமில்லாத பல படைகள் இருப்பதற்கும், மதிலும், அகழும் முதலிய காவல் செய்யப்பட்ட அரசிருப்பிற்கும் ஏற்ற விசாலமான இடமும், நீரும் உடையதாயிருக்க வேண்டும் என்க. இப்படியிருக்குமிடங் கிடைத்தால், போர் தொடங்

கருஉ திருக்குறள்

மூலமும், தெளிபொருள் வசனமும்.

கலாம், பகைவரையு மிகழலாமென்பது கருத்து. நுழைகள் — நுழைந்து செல்லும் சிறு வழிகள். படை—சேனை, தேர், யானை, குதிரை, காலாள் கள். அரசிருப்பு-அரசனிருப்பிடம்.

உ. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கும்
அரண்சேர்ந்தாம்
ஆக்கம் பலவுந் தரும்.
(492)

(இ-ம்) உலகம் எல்லாருக்கும் பொதுவென்று நினையாமல் தமக்கே சொந்தமாக்க நினைக்கும்,மாறுபாட்டோடு கூடிய வலிமையுடைய அரசருக்கும் தமக்கு அரணென்று சொல்லப்படுங் காவலாம் இடத்தைச் சேர்ந்து ஆகின்ற ஆக்கமானது (வளைத்துக்கொள்ளுதலானது) பல பயன்களையும் கொடுக்கும் என்பதாம். பல பயன்களாவன—பகைவரால் தமக்கு வருத்தமில்லாதிருத்தலும், தாம் நிலைபெற்றிருந்து அப்பகைவரை வருத்தப்படுத்துதலும் முதலியவைகளாம்.

ந. ஆற்றாரும் ஆற்றி அடுப இடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.
(493)
(இ-ம்) பகைவரை வெல்லுதற்கேற்ற இடத்தைச் சேர்ந்து தம்மைக் காத்துக்கொண்டு, அப்பகைவரிடத்து யுத்தம் செய்வாரானால் வலிமையில்லாத வரும் வலிமையுடையவராய்ப் பகையைக் கெடுத்து வெற்றியடைவர் என்பதாம். இதனால், யுத்தஞ் செய்தற்கு வேண்டிய பெரிய சாதனம் (காரணம்) யுத்தஞ் செய்தற்குத் தக்க இடம் என்பது கண்டுகொள்க.

ச. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(494)

(இ-ம்) தாம் வினை (யுத்தம்) செய்தற்கேற்ற இடத்தினை யறிந்து நெருங்கிச்சென்ற அரசர் அரண்களால் (காவல்களால்) தம்மைக் காத்துக் கொண்டு நின்று அவ்வினையைச் செய்வாரானல் தம்மை திருந்த பகைவர் தம் வலிமை செல்லாமையால் தமது தோல்வியடைவரென்பதாம்.

வெல்லுதற்கு நினைத் நினைப்பை யிழந்து

ரு.

நெடும்புனலு[illegible] வெல்லு முதலை யடும்புனலி னீங்கி னதனைப் பிற.

(இ-ம்)

(495) நேல் மற்றைய

முதலையானது தான் நிற்கக்கூடிய ஆழமுடைய நீரினிடத்தா உயிர்களை வென்றுவிடும், அப்படிப்பட்ட முதலை அந்நீரை

மற்றைய உயிர்கள் நிற்கக்கூடிய நிலத்தில் வந்தால் மற்றைய உயிர்கள்

அம்முதலையை வென்றுவிடும் என்பதாம். இதனாற் காணவேண்டிய பொருள் என்னவென்றால், எல்லாரும்வரவரிருப்பிடத்தில் வலிமையுடையவராவர். ஆதலால், பகைவர் நிற்கமுடியாத இடனறிந்து தாம் சென்றால் அவர் தமக் குத் தோல்வியடைவரென்பதும், அவர் நிற்கக்கூடிய இடத்தில் தாம் சென் றால் தாம் அவர்க்குத் தோல்வியடைவரென்பதுமே யாம்.

சூ. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு

நாவாயு மோடா நிலத்து .

(496)

(இ-ம்) நிலத்தினிடத்து ஓடும் கால் வலிமையுள்ள தேர்கள் கடலி னிடத்து ஓடமாட்டா. கடலினிடத்து ஓடும் நாவாய்களும் (கப்பல்களும்) நிலத்தினிடத்து ஓடமாட்டா என்பதாம். இதனாற் காணவேண்டிய பொருளாவது—யுத்தத்துக்குச் சென்ற அரசர் பகைவர் இடங்களையறிந்து சென்று அவ்விடங்களுக்குத் தக்க கருவிக(சாதனங்க) ளால் யுத்தம் செய்யவேண்டும் என்பதாம். எனவே, பலமுடையவராயிருந்தாலும் பகைவரை

வெல்லுதற் கேற்ற இடமறிந்து செல்லாமற்போய்ப் போர்செய்தாரானல் வெற்றியடைய மாட்டா ரென்பது கண்டுகொள்க. கால்-தேர்க்கால் அல்லது உருள். இதனை இக்காலத்தார் ரோதையென்று சொல்லுவர். யுத்தம்-சண்டை.

எ. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா எஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.
(497)

(இ-ம்) பகைவரை வெல்லுமிடத்து அதற்கு வேண்டிய திறங்களை யெல்லாங் குறையாமலெண்ணி அத்திறங்களை அரசர் இடத்தொடு பொருந்தச் செய்வாரானல் அச்செயலுக்குத் தமது திண்மையே துணையாவதல்லாமல் வேறு துணை வேண்டுவதில்லை யென்பதாம். திறம் - உபாயம். திண்மை - கலங்காநிலைமை. இடத்தொடு பொருந்தல் - தாம் செய்யும் தொழிற்கு இடையூறு வராமல் ஏற்ற (தக்க) இடத்திற் சேர்தல். செய்யத்தகாத இடத் தில் ஒருகாரியமுஞ் செய்யலாகாதென்பது. கருத்து.

அ. சிறுபடையான் செல்லிடம் சேரி
னுறுபடையான்

ஊக்க மழிந்து விடும்.
(498)

(இ-ம்) தேர், யானை, குதிரை, காலாட்கள் நிறைந்த பெரிய சேனையை யுடைய அரசன் அந்த நான்குங் குறைந்த சிறிய சேனையையுடைய அரசன் புகலிடத்தைச் சேர்வானுனல் தன் பெரிய சேனை நின்று யோர் செய்தற்கு

20

கருசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

வசதி வாயாமையால் தன் பெருமையை யிழந்துவிடுவன் என்பதாம். தன் சேனைப்பெருமையை நோக்கி இடத்தை நோக்காமற் செல்லலாகாதென்பது கருத்து.
வசதி-நல்லிடம். பெருமையிழத்தல்-தோல்வியடைதல்.

கூ. சிறைநலனும் சீரு மிலரெனினு மாந்தர்
உறைநிலத்தோ டொட்ட லரிது.

(499)

(இ-ம்) அழித்தற்கரிதாகிய அரண் (கோட்டை) நலமும் மற்றைப் பெருமையுமில்லாராளுலும் யுத்தம் செய்தற்குரிய மனிதரை (வீரரை) அவ ரிருப்பிடத்திற் சென்று மோதுதல் கூடாதென்பதாம். எனவே, மற்றைச் சிறுமைநோக்கிப் போரில் வல்ல வீரரை அவரிருப்பிடத்திற் சென்று மோதி யவர் கெடுவரென்பது கண்டுகொள்க. வீரத்திற் சிறந்தவர் உயிர்கெடும்படி யான துன்பங்கள் வந்தாலும் புறங்காட்டமாட்டாரென்பது கருத்து. ஆத லால் அவர்க்குப் பெரும்படையும் உடைந்து போய்விடும்.

கO. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாள் முகத்த களிறு.

(500)

(இ-ம்) பாகர்களுக்கு அடங்காமல் வேலாட்களைக் கொம்பினாலே குத்தி மதங்கொண்டு திரியும் யானைகள் கால்கள் புதையு மியல்பினையுடையதாகிய சேற்று நிலத்துட் புகுந்தால் நரியாற் கொல்லப்படும் என்பதாம். இதனு லறியவேண்டிய தென் னவென்றால், ஒருவருக்கும் பயப்படாமல் போர்வீரரைக் கொன்று கருவமிகுந்திருக்கும் பெரிய சுத்தவீரும் தமக்குரியதல்லாத இடத் திற்சென்றால் அதனாற் பிரயோசனமில்லாமல் மிகவும் எளியரால் அழிந்து விடுவரென்பதுவே. பாகர்-யானையைச்

செலுத்துவோர். அவரை இக்காலத தார் மாவுத்தர் என்பர். வேலாள்-வேலேந்தித்திரியும் வீரர்.

---

## 51-ஆம் அதி.—தெரிந்துதெளிதல்.

அஃதாவது—அரசன் மந்திரி முதலானவரைப் பிறப்பு, குணம், அறிவு, செயல்களாகிய நான்கையும் ஆராய்ந்து தெரிந்து கைக்கொள்ளுதல். ஆராய்தல்-காட்சிப்பிரமாணம், கருத்துப்பிரமாணம், நூற்பிரமாணம் என்னும் மூன்று வகைகளானும் ஆழ்ந்து ஆலோசித்தல். காட்சிப் பிரமாணத்தாலறிதல்-நேராகக் கண்ணூற்பார்த்தறிதல். கருததுப் பிரமாணத்தாலறிதல்-காரியத்தைக் காணுதலாற் காரணத்தைக் காணுமலே யுண்டென்றறிதல். அஃதாவது, புகையைக்கண்டு தீயுண்டென்றறிதல்போல்வது. நூற் பிரமாணத்தாலறிதல்-தரும சாத்திரங்கள் சொல்லிய நெறியாலறிதல்.

### ரு௧-ஆம் அதி.—தெரிந்துதெளிதல்.

௧௫௫

௧. அறம்பொரு ளின்ப முயிரச்சம் நான்கின்
திறன்றெரிந்து தேறப் படும்.

(இ-ம்) அரசனால் தெளியப்படுவானொருவன் மனத்தின் இயற்கை நிலையை அறமும், பொருளும், இன்பமும், உயிரின் பொருட்டால்வரும் பயமும் ஆகிய நான்கு வகையாலும் சோதனைசெய்யும் திறத்தையறிந்து ஆராய்ந்தால் அதன்பின் அவன் தெளிதற்கு இடமாவன் என்பதாம். அறத் தாற் சோதனை செய்தலாவது-தெளியப்படுவானிடத்துப் புரோகிதரையும், அறவோரையும் (முனிவரையும்) அனுப்பி இவ்வரசன் தருமசித்த முடையவ னில்லை. இவனைநீக்கி வேறொரு அரசனை நியமிக்க வெண்ணுகிறோம். உன் கருத்து என்னவென்று உண்மையொடு கேட்டறிதல். பொருளாற் சோதனை செய்தலாவது-சேனைத் தலைவனையும், அவனொடு சம்பந்தப்பட்டவனையும் அனுப்பி அவரால் இவ்வரசன் பொருளுதவி செய்யாத உலோபகுணமுடையவனாயிருக்கின்றான். இவனைநீக்கி வேறொருவனை நியமிக்க எண்ணுகின்றோம். உன்கருத் தென்னவென்று உண்மையொடு கேட்டறிதல். இன்ப சோதனை யாவது-தொன்றுதொட்டுப் பழகிய உரிமையுடைய தவமுற்றிய விருத்த வயதுள்ளவளொருத்தியை யனுப்பி அன்புடைய இன்னாள் உன்னைக்கண்டு ஆசைப்பட்டு வருந்திக் கூட்டுவிக்கவேண்டுமென்று என்னை விடுத்தாள். அவளைச் சேர்வாயானால் நல்லின்பங்கிடைப்பதோடு பெரும்பொருளும் கிடைக் கும்.

உன்கருத்தென்னவென்று உண்மையொடு கேட்டறிதல். அச்சச் சோதனையாவது-ஒரு மந்திரியால் ஒரு விஷயத்தைமுன்னிட்டு வேறு சிலரை அவன் வீட்டுக்கு வரவழைக்கச்சொல்லி இவரெல்லாம் வஞ்சகமாகக் கேடு செய்தற்குக் கூடியிருக்கின்றாரெனக் காவல்செய்து மற்றொருவனால் இவ் வரசன் நம்மைக் கொலைசெய்ய எண்ணியிருக்கின்றான். அவன் நம்மைக் கொலைசெய்யுமுன்னமே நாமவனைக்கொன்று நமக்கு இனிய அரசனை வைத்துக்கொள்வதற்கு இ வருள் ளாரெல்லாருஞ் சம்மதிக்கின்றார்கள். உன் னபிப்பிராயமென்ன? சத்தியமாகச் சொல்லென்று கேட்டறிதல். இந்நான்கு சோதனைக்கு மாறுபடாதிருந்தால் அ வனைத் தெளியலாமென்பது கருத்து. சோத னையை வடநூலார் உபதையென்பர்.

உ. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு.
(502)

(இ-ம்) உயர்ந்த குடியிற்பிறந்து குற்றங்களைவிட்டு நீங்கி நமக்கு ஏதேனும் வடுவருமோவென்று பயந்துநிற்கும் நாணமுடையவனிடத்தே அரசனது தெளிவுள்ளது என்பதாம், குற்றங்களாவன-காமம் , குரோதம், உலோபம்,

மோகம், மதம், மாச்சரிய மென்பவைகள். சோம்பல், மறவி, செய்வன தவறுதல் முதலிய இவைகளும் குற்றங்களாம். நாணமாவது-இழி தொழில் களின் மனஞ்செல்லாதிருத்தல். இவைகளெல்லாம் பெரியார்வாய்க் கேட் டறிதலாகிய ஆகமப்பிரமாணமாம். இந்நான்கு முடையவனையே நல்லவனாகத் தெளிதல் வேண்டுமென்பது கருத்து. பரிதல்-பயப்படுதல்.

௫௩. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கால்
இன்மை யரிதே வெளிறு.
(503)

(இ-ம்) படித்தற்கருமையாகிய நூல்களைப்படித்து யாதொரு குற்றமும் இல்லாதவரிடத்தும் ஆராய்ந்து பார்த்தால் அறியாமை இல்லாதிருத்தல் இல்லை. ஆதலால், எவ்வளவு நுண்ணறிவாளரையும் நன்றாக ஆராய்ந்து கைக் கொள்ளவேண்டும் என்பதாம்.

## ச. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்.

(504)

(இ-ம்) குணம் குற்றங்களாகிய இரண்டில் ஒன்றையுடையார் உலகத்தி
லில்லாமையால் அவ்விரண்டையும் ஒருவனிடத்தில் ஆராய்ந்து பார்த்து எது
மிகுதியாயிருக்கிறதோ அதை யுடையவனை அரசனறிந்து குற்றமுடைய
வனைத் தள்ளல்வேண்டும், குணமுடையவனைக் கொள்ளல்வேண்டும் என்ப
தாம். இதனால், குணமே யுடையவருங் குற்றமே யுடையவரும் இல்லை
யென்பதும், எல்லாரும் இவ்விரண்டுங் கலந்தே இருக்கின்றாரென்பதுங் கண்டு
கொள்க. இவ்விதமானாலும், குணம் பெரிதும், குற்றம் சிறிதுமாக வுடைய ' வரும், குற்றம் பெரிதும் குணஞ் சிறிதுமாக வுடையவரும், குணமுங் குற்ற
மும் சமமாகவுடையவரும் என எல்லாரும் மூன்று பகுப்பினுள் அடங்குவரல்
லாமல் குற்றமில்லாதவ ரொருவருமில்லை. இக்கருத்தால் இக்காலத்துப்
பேரறிஞரொருவர் "பிழையிலான் கடவு ளின்றி மக்களிற் றப்பில் லாதார்

பிறருமுண்டோ'' என்றார். (நீதிநூலில், வேதநாயகம் பிள்ளை)

ரு. பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.
(505)

(இ-ம்) பிறப்பு, குணம், அறிவு என்பனவற்றால் மனிதர்களடையும் பெருமையாகிய பொன் மாற்றின் அளவறிதற்கும் மற்றைச் சிறுமையாகிய பொன் மாற்றின் அளவறிதற்கும் உரை கல்லாவது அவரவர் செய்யுந் தொழிலே என்பதாம். எனவே, நற்செய்கையினாலே பெருமையுந் துற்

ருக-ஆம் அதி .—தெரிந்துதெளிதல்.

கருள செய்கையினாலே சிறுமையும் அடைவரென்பது கண்டுகொள்க. உரைகல்— மாற்றறிய உரைக்குங்கல்.

சு. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்

பற்றிலர் நாணார் பழி .
(506)

(இ-ம்) சுற்றத்தாரில்லாதவரைத்

தேர்ந்தெடுத்துக்கொள்ள முயற்சி செய்யாதிருக்கவேண்டும். ஏனென்றால், அவர் உலகப்பற்று இல்லாதவர் ஆதலால் பழிபாவங்களுக்குப் பயப்படமாட்டார் என்பதாம். உலகநடை யியல்பு சுற்றமில்லாதவருக்கு இல்லாமையால் இவ்வாறு கூறியருளினர். மூலத்தில் ஓம்புதல் என்றது-ஒழிதலென்னும் பொருள்பட நின்றது.

எ. காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

(507)

(இ-ம்) தமக்கு அறியவேண்டிய விஷயங்களை அறியமாட்டாதவரை அவர்மேல்வைத்த அன்பு பற்றுக்கோடு (காரணம்) ஆகக்கைக்கொண்டு அவரிடத்துக் காரியங்களை ஒப்புவித்து நடத்தச்செய்தலானது எல்லா அறியாமை யையும் கொடுக்கும் என்பதாம். அறியாமையாவன-வினைசெய்தற்குரியவரை அறியாமை, பின்வருங் காரியமறியாமை முதலிய பலவுமாம். வினை-இராச காரியங்கள்.

அ. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா இடும்பை தரும்.

(508)

(இ-ம்) தன் குடியோடு சம்பந்தமில்லாதவனை ஆராய்ந்து பாராமல் நம்பி அவனிடத்துத் தன் காரியத்தை

நடத்தும் அதிகாரத்தைக் கொடுத்தால், அது தனக்குமட்டுமல்லாமல் தன் சந்ததியா ரெல்லாருக்கும் நீங்காத துன்பத் தைக் கொடுக்குமென்பதாம். இதனால், தெளியப்பட்டவனுக்குத் தன் குடிப்பிறப்புச் சம்பந்தமும் வேண்டுமென்பது கண்டுகொள்க. நீங்காத துன்பம்-தன்பகைவருக்குக் கீழ்ப்பட்டு வருந்துதல்.

சூ. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள்.

(509)

(இ-ம்) யாரையும் ஆராய்ந்து தெளியாமல் வினைக்குரியராக்குதல் கூடாது. ஆராய்ந்து தெளிந்தபின், தேர்ந்தெடுத்துக் கொள்ள ப்பட்டவர் செய்யும் வினைகளை (தொழில்களை)ச் சந்தேகப்படாதிருக்கவேண்டும் என்ப தாம், வினைக்குரியாக்குதல்-அந்தந்தத் தொழிற்குரிய அதிகாரங்கொடுத்தல்.

கருசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௧0. தேரான் தெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா இடும்பை தரும். (510)

(இ-ம்) அரசன் ஒருவனை ஆராயாது கைக்கொள்ளுதலும், ஆராய்ந்து தெளிந்து ஒருவனை நல்லவனென்று கைக்கொண்டபின் அவனிடத்துச் சந்தேகப்படுதலும் ஆகிய இவ்விரண்டும் அவ்வரசனுக்கு எப்போதும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும் என்பதாம். ஆதலால், இவ்விரண்டையும் நீக்க வேண்டுமென்பது கருத்து. ஐயுறவால் வருந் துன்பம் எப்படியென்றால், ஒரு காரியத்தை ஒருவன் தன்றுணையால் நடத்தும்போது ஒரு குற்றமும் உண்டாகாதிருக்கும்போது சந்தேகப்பட்டால் அதை அவனறிந்து அந்தக் காரியத்தை ஊக்கமாக நடத்தாமல் கைவிடுவன்; அதனாலாகுங் கேடு உண்டாவதல்லாமல் பகைவர் அவனைத் தன்னைவிட்டுப் பிரித்தற்கும் இடமுண்டாகும். இவவாறு பலவித துன்பமும் அரசன் அடைவன் என்க.

---

## 52-ஆம் அதி.—தெளிந்து வினையாடல்.

அஃதாவது, தெரிந்தெடுத்துக்கொள்ளப்பட்ட

மந்திரி முதலானவர்களை அவர் செய்யத்தக்க வினைகளையறிந்து அவவினைகளிடத்துச் செலுத்துந் திறம்.

க. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.
(511)

(இ-ம்) அரசன் பரிசோதனை செய்யும் பொருட்டுப் பொதுவாயதோர் காரியத்தைத் தன்னிடத்து ஒப்புவித்தால் அந்தக் காரியத்தில் உண்டாகும் நன்மையையும் தீமையையும் ஆராய்ந்து நன்மையே யுண்டாகச்செய்து அக் காரியத்தை நிறைவேற்றிய தன்மையுடையவன் அரசனால் தன் காரிய முடித் தற்காக அதிகாரங்கொடுத்து ஆளப்படுவன் என்பதாம். பொதுவாய காரியம்- அகத்திலுள்ளார்க்கும் புறத்திலுள்ளார்க்கும் நடுநின்ற காரியம்.

உ. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.
(512)

(இ-ம்) பொருள் வரும் வழிகள் பலவற்றைச் செய்து அப்பொருளாற் செல்வங்களை விருத்திசெய்து பொருள் வரும்வழிக்கும் பொருளுக்கும் செல் வங்களுக்கும் உற்ற இடையூறுகளைத் தினந்தோறும் ஆராய்ந்து நீக்க வல்ல

வன் அரசனுக்கு வினைசெய்யவேண்டும் என்பதாம். பொருள் வரும் வழிக ளாவன—385-வது குறள் வசனத்துட் கூறிய இயற்றலும் என்பதற்குச் சொல்லியவைகளும், உ ழவு, பசுக்காத்தல், வாணிகமும் என்பனவாம். செல் வங்கள்—பொருள், பொன், மணி, நெல் முதலியவையாம். இடையூறுகளா வன—அரசனுடைய வேலைக்காரர் சுற்றத்தார் பகைவர் திருடர் ஆகிய நால்வரால் வருந்துன்பங்கள்.

ங. அன்பறிவு தேற்றம் அவாவின்மை யிந்நான்கும்
நன்குடையான் கட்டே தெளிவு.
(513)

(இ-ம்) அரசனிடத்து அன்பும், அவனுக்கு ஆகும் காரியங்களை ஆராயும் அறிவும், காரியஙகள் செய்யுமிடத்துக் கலங்காத நிலையும், அக்காரியங்களாற் பொருள் கைவசப்பட்டபின் அப்பொருள்மேல் தனக்கு ஆசையில்லாமையும் ஆகிய நான்கும் நன்றாக உடையவனிடத்து நம்பிக்கைவைத்து வினைகளை (காரியங்களை) ஒப்புவித்து நடைபெறச்செய்தலே தெளிவு என்பதாம். இந் நான்குகுணமும் உடையவன் அரசனல்

சந்தேகிக்கப்படாதவனென்பது கருத்து.

ச. எனைவகையாற் றேறியக் கண்ணும்
வினைவகையால்
வேறாகு மாந்தர் பலர்.
(514)

(இ-ம்) அரசன் எல்லா வகையாலுந் தெளிந்து ஒருகாரியத்தை ஒப்பு வித்த இடத்தும் அக்காரியத்தின் இயல்பினாற் சுயநலம்பாராட்டி மாறுபடும் மனிதர் பலரிருக்கின்றார் என்பதாம். ஆதலால், தக்ககாரியங்களை ஒப்புவிக்கு முன்னர்ச் சிறிய ஒரு காரியத்தை ஒப்புவித்துச் சோதித்து ஒப்புவிக்கப் பட்டாரிடத்து மாறுபாடுகண்டால் அப்பொழுதே அவரை நீக்கிவிடல் வேண்டு மென்பது கருத்து. இவவாறு சோதியாமல் சச்சந்தன் என்னும் அரசன் கட்டியங்காரன் என்னும் மந்திரியினிடத்துத் தன்னரசாட்சியை ஒப்புவித்த லால் கட்டியங்காரன் இராசாங்க இன்பத்தை விரும்பி அரசனோடு மாறுபட்டு அரசனுக்குத் தீங்குசெய்த சரித்திரம் சீவகசிந்தாமணியில் வெளிப்படையாகக் கண்டுகொள்க. காரியத்தின் இயல்பு - அரசன் கொடுத்த அதிகாரத்தின் பெருமை.

ரு. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால்

வினை தான்

சிற ந்தா னென் றேவற்பாற் றன்று,

(515)

(இ-ம்) செய்யும் உபாயங்களையறிந்து செய்தலாலும், இடையூறுகளாலும் வருந்துன்பங்களைப் பொறுத்து ஒருகாரியத்தை முடிக்கவல்லவனை க்கா0



யல்லாமல் இவன் நம்மிடத்து அன்புடையானென்றமட்டில் ஒருவனை ஒரு காரியத்தில் ஏவக்கூடாதென்பதாம். 513 ஆவது குறளிற்கூறிய தன்மை யுடையவனு யிருந்தாலும் இங்கேகூறிய இரண்டு தன்மையும் வினை (காரியம்) செய்வானுக்கு வேண்டுமென்பது கருத்து. இரண்டு தன்மை-அறிதலும், செய்தலும். இத்திருக்குறளால் அன்புமாத்திரமுடையானுக்கு அதிகாரங் கொடுக்கலாகாதென்பது கண்டுகொள்க.

சா. செய்தானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

(516)

(இ-ம்) ஒரு காரியத்தைச் செய்வானது இலக்கணத்தை முதலிலே

யாராய்ந்து பின் செய்யத்தக்க காரியத்தின் தன்மையையாராய்ந்து அக் காரிய முடியுங்காலத்தைப் பொருந்த அவனையும் அக்காரியத்தின் தன்மையையும் அறிந்து அக்காரித்தை அவன் செய்யும்படி ஏவவேண்டும் என்பதாம். காலத்தோடு பொருந்த அறிதலாவது-இந்தக்காலத்து இத்தன்மையுடையவன் இக்காரியத்தை முடிப்பானென்று கூட்டி அறிதல் என்பதாம்.

எ. இதனை யிதனால் இவன்முடிக்கு மென்றாய்ந்
ததனை யவன்கண் விடல்.
(517)

(இ-ம்) இக்காரியத்தை இக்கருவியால் இவன் முடித்துவிடுவன் என்று நன்றாக ஆராய்ந்து தெளிந்து அக்காரியத்தைத் தெளியப்பட்டவனிடத்து ஒப்புவித்து முடித்துக்கொள்ளவேண்டும் என்பதாம். கருவி-துணை, இடம், பொருள், கால முதலியவை.

அ. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல் .
(518)

(இ-ம்) ஒருவனை அரசன் தன்வினை (காரியம்)

செய்தற்குரியவனுகை ஆராய்ந்து துணிந்தபின் அவனை அக்காரியஞ்செய்தற்குச் சுதந்திரனுகச் செய்யவேண்டும் என்பதாம். எனவே, அப்படிச் செய்யாவிட்டால் காரியங் கெடுமென்பது கருத்து. சுதந்திரனுகச் செய்வதாவது-அந்தந்த வினைக்கு ஏற்ப அதிகாரங்கொடுத்துக் குடிகளை அவனுக்குக் கீழ்ப்படியச்செய்தல்.

௬. வினைக்கண் வினையுடையான் கேண்மைவேறுக
நினைப்பானை நீங்குந் திரு.
(519)

(இ-ம்) எப்பொழுதுந் தன்காரியஞ் செய்யுமிடத்து முயற்சியுடையவன் அவ்வுரிமையால் அந்நியன்போலிராமல் தன் சுற்றத்தான்போல் நடக்குந்

௫௩-ஆம் அதி.—சுற்றந்தழால்.

கரு௧

தன்மையைப் பொருமையுடையார் சொல்லைக்கேட்டு மாறுபாடாக நினைக்கும் அரசனைவிட்டு இலக்குமியானவள் நீங்கிச் செல்வள் என்பதாம். எப்படியென்ருல், தன் சுற்றத்தார் செய்யும் உரிமையெல்லாம் செய்கிறவனைக்

கேள்விச்சொல்லால் வெறுத்துத் தண்டிக்கக்கருதினல் அது தெரிந்த மற்ற வர்களொருவரும் அரசன் காரியத்தை முற்பட்டுச் செய்யவரமாட்டா ராகை யால் அவன் காரியங் கெடும். ஆகவே, செல்வம்வருதற்கு வழியில்லாமற் போய்விடும் என்க.

கo. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(520)

(இ-ம்) அரசன் தன்னுடைய காரியத்தை நடத்துதற்கு நியமித்த அதிகாரிகள் நியாயமுறைப்படி நீதிசெலுத்துந் தன்மையைத் தினந்தோறும் தவறாமல் ஆராய்ந்துவரவேண்டும்; அப்படிச் செய்துவந்தால் உலகம் யாதொரு கேடுமில்லாமல் வாழ்ந்துவரும் என்பதாம். அரசன் ஆராய்ந்து வந்தால் சிறிது தவறி நடக்கவெண்ணும் அதிகாரிகளும் அக்கருத்தைவிட்டுப்பயந்து நீதி செலுத்துவரென்பது கருத்து. எனவே, அரசனுடைய நீதியினலே உலகம் சேமமடைய வேண் டுமென்பது கண்டுகொள்க.

---

## 53-ஆம் அதி.—சுற்றந்தழால்.

அஃதாவது, அரசன் தன் கிளைஞரைத் தன்னைவிட்டு நீங்காதிருக்கும்படி அணைத்தல். கிளைஞர்-சுற்றத்தார்.

அணைத்தல்-அவர்க்குச் செய்யவேண்டியவைகளைச் செய்தல்.

க. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.
(521)

(இ-ம்) ஒருவன் செல்வமெல்லாங் கெட்டுத் தரித்திரனாயிருந்த இடத்தும் விடாமல்வந்து அவன்செய்த உபகாரப் பெருங்குணத்தை யெடுத்துப் பேசிக் கொண்டாடும் இயல்புகள் சுற்றத்தாரிடத்தே யுள்ளனவாகும் என்பதாம். இயல்பு-தன்மை. சுற்றத்தார்-கிளைஞர். இத்தன்மையுடைய சுற்றத் தாரைக் கைவிடலாகாதென்பது கருத்து.

உ. விருப்பறாச் சுற்றம் இயையின் அருப்பறா

ஆக்கம் பலவுந் தரும்.
(522)

21

கக்உ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) அன்பு நீங்காத சுற்றத்தாரை ஒருவன் கிடைக் கப்பெறுவ ர் னால் அது மேல்மேலுங்

கிளைத்துவளருதல் நீங்காத பல பகுப்பாகிய செல்வங்க ளெல்லாவற்றையும் கொடுக்கு மென்பதாம். அப்படிக் கிடைக்கப் பெறுதல் பல பகுப்பு. அவை-பொன், மணி, நெல், விளைநில முதலிய வைகள். கிளைத்து வளருதல் என்றது - பலர்கூடி விருத்திப்படுத்தலால் உயர்தல்.

௩. அளவளா வில்லாதான் வாழ்க்கை
குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.
(523)

(இ-ம்) மேலே சொல்லிய சுற்றத்தாருடன் மனங்கலந்து மகிழ்ந்து வாழாதவன் வாழ்க்கையானது விசாலமான குளத்தில் கரையில்லாமல் நீர் நிறைந்து நின்றாற்போலும் என்பதாம். எப்படியென்றால், கரையில்லாத குளத்திற் பெருகிய நீர், நிலைத்து நில்லாமல் வெளியே யோடுதல்போல, சுற்றத்தாரில்லாதவன் வாழ்க்கை (செல்வம்) புறத்திலே போய்விடும் என்க. செல்வத்தைக் காப்பவர் அவன் சுற்றத்தாராதலால் இவ்வாறு கூறியருளினர்.

௪. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல்
செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன் .
(524)

(இ-ம்) ஒருவன் செல்வம் பெற்ற அதனாலாகிய

பிரயோசனமாவது தன் சுற்றத்தார் தன்னைச் சூழ்ந்து நிற்கும் விதமாக அவரை அணைத்துத் தன்னோடு சேர்த்து வாழுதல் என்பதாம். இப்படி வாழுதல் அரசன் அரசாட்சிக்குக் காரணமாமென்பது கருத்து. 2, 3, 4 திருக்குறள் வசனங்களால் சுற்றத்தாரைத் தழுவிடப்பது, செல்வத்திற்குக்காரணமும் காவலும் பயனும் ஆமென்பது கண்டுகொள்க.

ரு. கொடுத்தலும் இன்சொலும் ஆற்றி னடுக்கிய

சுற்றத்தாற் சுற்றப் படும்.

(525)

(இ-ம்) ஒருவன் சுற்றத்தாருக்கு வேண்டிய வெல்லாங் கொடுத்தலும், இனிய சொற்களை அவர் மகிழும்படி பேசுதலும் செய்ய வல்லவனானால் ஒன்றையொன்று தொடர்ந்த சுற்றத்தாரால் சூழப்பெற்றிருப்பன் என்பதாம். தொடர்ந்த சுற்றத்தார்-தன் சுற்றத்தாருக்குச் சுற்றத்தார்; அவருக்குச் சுற்றத் தார் என்பவர்; இப்படி இருப்பது அரசாட்சிக்கு உபாயமென்பது கருத்து.

சு. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்

மருங்குடையார் மாநிலத் தில்.

(526)

(இ-ம்) மிகுந்த கொடையுடையவனும் கோபத்தை விரும்பாதவனு மாய் அரசனிருந்தால் அவனைப்போலுங் கிளைஞருடையவர் பெரிய இப் பூமி யில் இல்லையென்பதாம். மிகுந்த கொடையாவது—ஒன்றாலும் வறுமை யில் லாமற் கொடுக்குங் கொடை. கோபத்தை விரும்பாமையாவது—அரசர்க்குக் கோபம் வேண்டுவது அவசியமென்று அளவுக்கு மிஞ்சிக் கோபமில்லாதிருத் தல், கிளைஞர் — தன்னை விருத்தி செய்யுங் கிளையாயுள்ள சுற்றத்தார். மருங்கு-கிளை.

எ. காக்கை கரவா கரைந்துண்ணும் ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே யுள.

(527)

(இ-ம்) காக்கைகள் தங்களுக்கு இரை (உணவு) கிடைத்த இடத்து அதை மறையாமல் தம் இனங்களை யெல்லாம் அழைத்து அவைகளோடு கூட இருந்து உண்ணும். அதுபோலப் பொருட்செல்வம் பெற்ற இடத்துத் தம் முடைய சுற்றத்தாரை யழைத்து அவரோடு கூட இருந்து உண்ணுங் குண முடையவருக்கே மேலுமேலும் எல்லாச் செல்வங்களும் உண்டாகும் என்ப தாம். எல்லாச் செல்வங்கள் — அறச்செல்வம்,

பொருட்செல்வம், இன்பச் செல்வம்.

அ. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின்

அதுநோக்கி வாழ்வார் பலர். (528)

(இ-ம்) அரசன் எல்லாரையும் ஒரு தன்மையராகக் கருதாமல் அவரவர் தகுதிக்கேற்ற விதம் சிறப்பாக உபசரித்து வருவான் ஆனால், அச் சிறப் பினைக் கருதி வாழுஞ் சுற்றத்தார் பலராவர் என்பதாம். இப்படியல்லாமல் சிறப் புடையாரையும், சிறப்பில்லாரையும் ஒன்றுபோல நினைப்பானானால் சிறப்பு டையாரெல்லாரும் அவனைக் கைவிடுவர் என்பது கருத்து.

கூ. தமராகித் தற்றுறந்தார் சுற்றம் அமராமைக்

காரண மின்றி வரும். (529)

(இ-ம்) முன் சுற்றத்தாராயிருந்து ஏதாவதொரு காரணத்தால் தன்னை விட்டுப் பிரிந்துபோயினவர் பின்னும் வந்து சுற்றத்தாராகுதலானது முன் பிரிந்துபோவதற்காகிய காரணம் தன்னிடத்திலில்லையாகத் தானேவரும் என் பதாம். எனவே, சுற்றத்தார் தன்னைப் பிரிதற்காகிய காரணந்தன்னிடத்தி லில்லாதிருந்தால் அவர் தாமே வருவர் என்பது கருத்து. காரணம்—அரசன் வரம்பு கடந்து நடத்தல், சுற்றத்தார் வெறுக்கத்தக்கவைகளைச்

செய்தல் முதலியவைகளாம்.

. கசுச **திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.**

**கo. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்தன்**

**இழைத்திருந் தெண்ணிக் கொளல்.**

**(530)**

(இ-ம்) தன்னிடத்தில் நின்றும் காரணமில்லாமற் பிரிந்துபோய்ப் பின்பு காரணத்தா ல் திரும்பித் தன்னிடத்தில் வந்த சுற்றத்தானை அரசன் அந்தக்காரணத்தை யறிந்து அவன் கருத்தை நிறைவேற்றி வைத்து இனி மேலுமவன் தன்னைவிட்டுப் பிரிந்துபோய்ப் பகைவருடன் கூடாதிருக்கும் வகையை ஆலோசித்து அவனைத் தழுவிக்கொள்ளல் வேண்டும் என்பதாம். காரணமில்லாமற் பிரிதலாவது—அரசன் செய்யவேண்டிய உதவியைச் செய் யப்பெற்றிருந்தும் அன்பில்லாமல் அவனைவிட்டுப் பிரிதல். காரணத்தால் திரு ம்பிவருதலாவது—அன்பில்லாமற் சென்றவன் தனக்குவேண்டிய சௌகரியங் கிடையாமல் வருந்தி அவ்வருத்தம் நீங்கும் பொருட்டு வருதல். இதனால் அரசன் சுற்றத்தாரை எந்த வகையாலுந் தன் பகைவரிடத்துச் சேரவொட் டாமல்

ஆதரிக்கவேண்டுமென்பது கருத்து.

---

## 54-ஆம் அதி.—பொச்சாவாமை.

அஃதாவது, செல்வ முதலிய செருக்கால் மகிழ்ந்து தன்னைக் காத்தலிடத்தும் பகைவரை அழித்தல் முதலிய காரியங்களிடத்தும் சோர்வில்லா திருத்தல். சோர்வு—மறத்தல்.

க. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
உவகை மகிழ்ச்சியிற் சோர்வு .
(531)

(இ-ம்) மிகுந்த சந்தோஷத்தின் கருவத்தால் வரும் மறவியானது அரச னுக்கு அளவு கடந்து செய்யுங் கோபத்தைப் பார்க்கினும் பெரிய தீங்கு என்பதாம். மிகுந்த சந்தோஷமாவது— பெருஞ் செல்வம், பேரின்பம், பெருமிதம் (எல்லாரும் நன்குமதித்தல்) என்ற இவைகளால் வருவது. அளவு கடந்த கோபமாவது—பகைவரையழித்தற்கும் கொடிய குற்றஞ் செய்தவரைத் தண்டித்தற்கும் வருங்கோபம். கொடியகுற்றம்—கொலை செய்தல், கோவிலை அழித்தல் முதலிய மகா பாவங்கள். அளவுகடந்த கோபம் தண்டித்தற்குரிய பகைவரையுங் கொல்லுமறவி. மறவியானது ஓரிடத்துத் தன்னையே கொல்லு மாதலால் இவ்வாறு

கூறியருளினர். மறவி-மறத்தல்.

உ. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்சம் நிரப்புக்கொன் றாங்கு.

(532)

•

## ருசு-ஆம் அதி.—பொச்சாவாமை.

கசுரு

(இ-ம்) ஒருவனுடைய அறிவினை நித்திய தரித்திரம் கெடுக்குமாறு போலப் புகழை அவன் மறவியானது கெடுத்துவிடும் என்பதாம். எப்படி யென்றால், நித்திய தரித்திரமானது யாசகஞ் செய்து வயிறு வளர்த்தலால் வரும் இழிவாலும், பாவத்தாலும் அவனுடைய அறிவைக் கெடுத்துவிடும். அதுபோல மறவியானது தன் காரியக் கேட்டையும், தன்னைக் காத்துக் கொள்ளும் விஷயத்திற் சோர்வையும் உண்டுபண்ணி நன்கு மதிப்பைக் கெடுத்துவிடுமென்று பொருளை விரித்துக் கண்டு கொள்க. மறவி-மறத்தல்.

ந. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பால்நூ லோர்க்குந் துணிவு.

(533)

(இ-ம்) செய்யத்தக்கவைகளைச் செய்யுங் காலத்தில் செய்யாமல் மறந்து, காலம் போக்குவார்க்குப் புகழ் ஆகிய செல்வங் கிடைக்கமாட்டாது. இந்த உண்மை இந்த நீதிநூலுடையார்க்கு மட்டும் அல்லாமல் உலகத்து எவ்
வகைப்பட்ட நீதிநூலுடையாருக்கும் சம்மதமாக இருப்பது என்பதாம். எவ் வகைப்பட்ட நீதிநூலாவன—அறம் பொருள் இன்பம் வீடு ஆகிய நான்கு பிரிவுபட்ட நீதிநூல்கள்.

ச. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(534)

(இ-ம்) காடு மலை முதலாகிய அரண் (காவல்) களுக்குள்ளே யிருந்தாலும் மனத்தினிடத்துப் பயமுடையவருக்கு அக்காவல்களாற் பயனில்லை.அது போல, எல்லாச் செல்வமுமுடையவராயிருந்தாலும் மனத்தினிடத்து மறவி யுடையவருக்கு அச்செல்வங்களாற் பயனில்லை
வர்கொண்ட அரண் (காவல்) அழியுமாறுபோல

யென்பதாம். அச்சமுடைய
மறவியுடையவர் பெற்ற செல்

வங்கள் அழிந்துவிடும் என்பது கண்டுகொள்க.
விய அரண்களாவன—அரசன் தானிருக்கும்

மறவி-மறத்தல். காடு முத
இடத்துக்கு வெளிப்புறத்தில்
பகைவர் நுழைந்து செல்வதற்கு முடியாத பெருங்காடு சூழ்ந்திருப்பது காட்டரண்; இவ்விதமே மலையும் ஒருபுறத்திலாவது வளைந்திருப்பது மலையரண். நீரரண்-அகழ்க்கிடங்கு. நிலவரண்-நிலஅறை.

ரு. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

(535)

(இ-ம்) தன்னால் காக்க (தடுக்க)க்கூடிய துன்பங்கள் பின்வருவ தறிந்து முன்னே தடுக்க மறந்திருந்த அரசன், பின்னே அத்துன்பங்களாகிய இடையூறு வந்தவிடத்து முன்னே தடுக்க மறந்திருந்த குற்றத்துக்கு மன .



மிரங்கி வருந்துவன் என்பதாம். பின் வருவதாகிய துன்பங்கள் — மறந்து சோர்ந்திருக்குஞ் சமையம்பார்த்துப் பகைவர் செய்யுங் கேடுகள்.

சா. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
வாயி னஃதொப்ப தில்.
(536)

(இ-ம்) தன் காரியஞ் செய்வாரிடத்தும் சுற்றத்தாரிடத்தும் அவரவர் செய்கைகளைத் தனக்குச் செல்வம் மிகுந்தகாலத்துங் குறைந்த காலத்தும் மறவாமற் கவனித்துக்கொண்டிருக்கும் குணம் வாய்த்தால் (கிடைத்தால்) அதைப்போலும் நன்மை அரசனுக்கு வேறொன்றில்லை என்பதாம்.

எ. அரியவென் றாகாத தில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(537)

(இ-ம்) மறவாத மனத்தினையுடையவனாய்க் காரியங்களை எண்ணிச் செய்ய வல்லவனானால் அவனுக்கு இக்காரியங்கள் செய்யமுடியா என்று சொல்லப்பட்டிருப்பது ஒன்றும் இல்லை என்பதாம். எனவே, எல்லாக் காரியங்களு முடியுமென்பது கருத்து. பொச்சாவாக் கருவியென்பதற்கு, மறவாமையாகிய கருவியாலென்று பொருள் கூறுதல் மிகச் சிறப்பாகும். இவ் வாறு பல நூலாசிரியர் கூறுவர். இதனால், ஒரு காரியஞ் செய்தற்குப் பல துணைக்காரணங்களிருந்தாலும்

மறவாமையாகிய துணைக்காரணம் இல்லா விட்டால் எடுத்த காரியம் இலேசாக முடிவுபெறுதென்று கண்டுகொள்க.

அ. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா

இகழ்ந்தார்க் கெழுமையு மில். (538)

(இ-ம்) நீதிநூலுடைய பெரியார் அரசர்க்குரிய செயல்கள் இவை யென்று உயர்வாகச் சொல்லப்பட்டவைகளை மறவாமல் உறுதியாகக் கடைப் பிடித்துச் செய்யவேண்டும். அப்படியல்லாமல் மறந்து இகழ்ச்சி செய்வார்க்கு மனத்தில்வருந் துன்பமே யல்லாமல் ஏழு பிறப்பிலும் நன்மையில்லை யென் பதாம். உரிய செயல்களாவன — மூவகை யாற்றலும், நால்வகை யுபாயமும், ஐவகைத் தொழில்களும், அறுவகைக் குணங்களும் முதலாய செயல்கள். இவற்றுள் மூவகையாற்றல்—அறிவு, ஆண்மை, பெருமை. நால்வகையுபாயம்-சாம,பேத,தான,தண்டம். ஐவகைத்தொழில்-அறங்காவல் கொண்ட அரசன், தன்னாலும்,தன் வேலைக்காரராலும்,பகைவராலும், திருடராலும், பிறவுயிர்களாலும்உண்டாகும் ஐந்து வித பயங்களையு நீக்குதல். இதனை, பெரியபுராணத் துள் மநுநீதிகண்ட புராணம் 38-வது "மாநிலங்காவலனாவான்" என்னுஞ் செய்யுளாலுமறிக. அறுவகைக்குணங்கள்-ஓதல்,ஓதுவித்தல்,வேட்டல்,வேட்பித்தல்,

ஈதல், ஏற்றல் என்பனவாம். சாதித்தருமமாகிய இவைகளில் தவறினவர்க்குக் கிடைப்பது நாகத்துன்பமாதலால் எழுபிறப்பிலும் நன்மையில்லையென்று கூறியருளினர்.

௯. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாம்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போது .
(539)

(இ-ம்) அரசர் தம்முடைய சகல சம்பத்தாலும் சந்தோஷமடைந்து தாம் செய்யத்தக்க காரியங்களைச் செய்யாமல் மறந்து வலிமையடைந்திருக்கும் போது இவ்விதம் முற்காலத்திலிருந்து கெட்டுப்போன அரசரை நினைக்க வேண்டும் என்பதாம். ஏனென்றால், அவ்விதம் நினைக்கவே, தாமும் அவ்வாறு கெடுவோமென்று அறிவு வந்து செய்யத்தக்க காரியங்களில் மறவாமல் வேண்டியவைதச் செய்வர் ஆதல ாலென்க.
வலிமை—இறுமாப்பு.

௧௦. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தான்
உள்ளிய துள்ளப் பெறின்.
(540)

(இ-ம்) அரசனுக்குத் தான் எய்த (பெற)

நினைத்தபொருளை நினைத்த படியே பெறுதல் எளிது (இலேசு) ஆகும். திரும்பவும் அப்பொருளை மறவாமல் நினைத்து முயற்சி செய்வானானால் என்பதாம். இதனால், மறவிவாராம லிருப்பதற்கு உபாயம் நினைத்தலென்பது கண்டுகொள்க. மறவி—மறத்தல்.



## 55-ஆம் அதி—செங்கோன்மை.

அஃதாவது, அரசனது முறையின் தன்மை. அம்முறை ஒரு பக்கம் சாயாமல் நேர்நிற்பதாகிய கோல்போலிருத்தலால் செங்கோலெனப்பட்டது. முறை-நீதி.

க. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்
தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை. (541)

(இ-ம்) தன்கீழ் வாழ்வாராகிய குடிகள் குற்றஞ்செய்தால் அக் குற்றத்தை ஆராய்ந்து யாரிடத்துந் தாக்ஷிணியமில்லாமல் நடுவுநிலையாக நின்று அக் குற்றத்துக்குச் சொல்லப்பட்ட தண்டனையை நீதிநூல்கற்றாரோடு கலந்து தெரிந்து செய்வதே அரசனுக்கு நீதியாகு மென்பதாம். யாரிடத்துமென்றது, தன்னுயிர்போன்றவரிடத்து மென்றபடியாம். இப்படிச் செய்வதே செங் கோலின் இலக்கணமென்பது காண்க.

உ. வானோக்கி வாழு முலகெலா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.
(542)

(இ-ம்) உலகத்துயிரெல்லாம் மழையுள்ளதானல் உண்டாகிநிற்கும் என்ருலும் அரசன்கீழ் வாழ்கின்ற குடிகள் அவன் செங்கோல் (நீதி) உள்ள தானல் வாழ்ந்திருக்கும் என்பதாம். இதனல் அரசனுடைய நீதி தவறின இடத்துக் குடிகள் பலவழியாற் கெடுமென்பது கண்டுகொள்க.

ந. அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்.
(543)

(இ-ம்) அந்தணர் முதலாயினர் ஓதும் வேதத்திற்கும் அவ்வேதத்திற் சொல்லப்பட்ட அறத்திற்கும் (தருமத்திற்கும்) காரணமாய் நின்றது அரசன் செங்கோல்

என்பதாம். அந்தணர் முதலாயினோர்-பிராமணர், க்ஷத்திரியர், வைசியர் என்னும் மூவருமாம். வேதமும் அறனும் அநாதியாயிருக்க அவ் விரண்டுக்கும் அரசன் செங்கோல் காரணமென்று கூறிய தென்னவென்றால், அரசன் செங்கோலில்லாத இடத்து அவ்விரண்டும் நடைபெறா ஆதலா லென்க.

௪. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்னன்
அடிதழீஇ வாழு முலகு.
(544)

(இ-ம்) பெரிய நிலவுலகத்தை ஆண்டுவரும் அரசன் தன்னுடைய குடிகளையும் அணைத்துக்கொண்டு நீதி செலுத்திவருவானானால் அவனுடைய அடியைத்தழுவி யுலகத்திலுள்ளாரெல்லாரும் வாழ்ந்திருப்பர் என்பதாம். அணைத்தல்—இனியவார்த்தை கூறுதல், ஆபத்து வந்த காலத்து வேண்டுவன கொடுத்து உதவி செய்தல் முதலியவைகளாம்.

௫. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.
(545)

(இ-ம்) நீதி நூல்கள் சொல்லிய முறைப்படி செங்கோல் செலுத்தி வரும் அரசனுடைய நாட்டில் பருவகாலத்து மழையும் உணவு முதலிய வற்றிற்கு வேண்டிய எல்லாப் பொருளின் விளைவும ஒருமிக்கக்கூடி நிறைந்துள்ளனவாகும் என்பதாம். இக்கருத்துப்பற்றியே "அறன்காளை யுறைநாடு மழையுண்டு விளைவுண்டு" என்று பாரதத்திற்கூறினர். (வில்லிபுத்தூராழ்வார். நிரை மீட்சிச் சருக்கம் 5)

## ருரு-ஆம் அதி.—செங்கோன்மை.

கசுகூ

சு. வேலன்று வென்றி தருவது மன்னவன்

கோலதூஉங் கோடா தெனின்.

(546)

(இ-ம்). அரசனுக்குப் போர்க்களத்தில் வெற்றியைக் கொடுப்பது அவன் கையிலுள்ள வேலாயுதமல்ல; வேறு எதுவென்றால், அவனுடைய செங்கோலே (நீதியே) ஆம். அந்நீதியும் "சமன் செய்து சீர்தூக்கும்" என்னுந்திருக்குறளின்படி ஒழுங்காகச் செலுத்தி வருவானானல் என்பதாம். இதனல், நீதி தவறியவரசன் எவ்வளவு படைப்பெருக்கமும் வலிமையுமிருந்தாலும் வெற்றி யடையமாட்டானென்பது கருத்து.

௭ எ. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.
(547)

(இ-ம்) உலகமெல்லாவற்றையும் அரசன்காவல் செய்வான். அவ்வரசனை அவனுடைய செங்கோல் (நீதி) காவல் செய்யும், அந்நீதியை முட்டுப்பாடு வந்த இடத்துந்தவறாமல் அவன் செய்வானானால் என்பதாம். முட்டுப்பாடாவது— தாய் தந்தை மைந்தர் முதலாயினோர் குற்றஞ் செய்தாரானால் அவரைத் தண்டியாமல் விட்டுவிடும் தாக்ஷணியம். முட்டுப்பாடுவந்த இடத்தும் தவறாமல் நீதி செலுத்தினோர் மநுநீதிகண்ட சோழனும், பொற்கைப் பாண்டியனும். இச்சோழன் சரித்திரம் பெரிய புராணத்திலுள்ள மநுநீதிகண்ட புராணத்திற் காண்க. இப்பாண்டியன் சரித்திரம திருவிளையாடற் புராணம் பழியஞ்சின படலத்தில் "தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ" என்னும் 17-ஆம் பாடலால் குறிப்பாகத் தெரிகிறது.

௮ அ. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும்.
(548)

(இ-ம்) தம்குறையைக் கூறி நீதிபெற வந்தவர்க்கு இலேசாகக் காணக் கூடியவனாய், அவர் சொல்லிய

விஷயங்களை நீதி நூலறிந்தவர் பலரோடும் ஆராய்ந்து தெரிந்த உண்மைக்கேற்ப நீதி செலுத்தாத அரசன் தாழ்ந்த பதவியிலே சென்று தானே கெடுவன் என்பதாம். நீதி நூலறிந்தவர்—மந்திரி மார்களும், சபைக்குரிய மற்றைப் பெரியாருமாவர். தாழ்ந்த பதவி— பாவமும் பழியும் எய்தி நிற்கும் நிலை. தானே கெடுதலாவது—பகைவரில்லாமற் கெடுதல்.

௯. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்,





தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) தன்குடிகளைப் பிறர் வருத்தஞ் செய்யாவிதங் காத்துத் தன்னையும்பேணி, அவரிடத்துக் குற்றம் உண்டானல் அக்குற்றம் நீக்குமாறு நீக்குதல் அரசனுக்குப் பழியல்ல. ஏனென்றால், அவன் செய்யுங்கடமை அதுவாதலால் என்பதாம். நீக்குமாறு நீக்குதல்--துன்பஞ் செய்தல், பொருளைக் கொள்ளுதல், கொல்லுதலாகிய தண்டனை மூன்றுள் குற்றத்திற்குத் தக்கபடி தண்டனை விதித்தல். தன் கீழ் வாழுங்குடிகளை மேற்சொல்லியபடி வருத்துதல் தருமமல்ல என்றால்,

அப்படிச் செய்யாவிட்டால் அக்குடிகள் குணத்துக்கு வரமாட்டாராகையால் செய்வது அரசனுக்குத் தருமமாம் என்க.

௰.

கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர்.
(550)

(இ-ம்) அரசன் கொடியவரைக் கொலைக்களத்திலே கொல்லச்சொல்லித் தண்டித்தல் எதுபோலுமென்றால், உழவர்கள் களையைப் பிடுங்கியெறிந்து பயிரை வளர்ப்பதற்குச் சமானம் என்பதாம். பயிரை வளர்விப்பதைப்போலத் தக்கவரைக் காத்தல் என்று பொருள் வருவித்துக்கொள்க. கொடியவராவார்— தீக்கொளுத்துவார், நஞ்சிடுவார், ஆயுதத்தாற் கொல்வார், திருடுவார், வழிப்பறிபுறிப்பார், பிறன் மனையாளை விரும்புவார் முதலானவர்கள்.

---

## 56-ஆம் அதி.—கொடுங்கோன்மை.

அஃதாவது, அரசன் நீதியில் தவறுந்தன்மை.

க. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே

யலேமேற்கொண்

டல்லவை செய்தொழுகும் வேந்து.

(551)

(இ-ம்) பகைமைபற்றிக் கொல்லுதற்றொழிலைத் தமக்காகக் கொண்டு காலங்கழிப்பவரைப் பார்க்கினும், பொருளை விரும்பிக் குடிகளை வருத்தப் படுத்துந்தொழிலைத் தனதாகக் கொண்டு நீதியல்லாத செயல்களைச் செய்து வாழுமரசன் கொடியவன் என்பதாம். எப்படியென்றால், கொலைசெய்வார் செய்யுந்துன்பம் அப்பொழுதுமட்டுமேயுள்ளது. அரசன் குடிகளை நீதி யல்லவை செய்து வருத்துந் துன்பம் எப்பொழுதும் உள்ளதாதலாலென்க.

உ. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்

கோலொடு நின்றா னிரவு.

(552)

## ருசு-ஆம் அதி.—கொடுங்கோன்மை.

கனஉ

(இ-ம்) வருத்துதலாகிய தண்டத் தொழிலை மேற்கொண்டு நின்ற அரசன், குடிகளிடத்து வரிப்பொருளைத் தவிர, வேறு வழியாக யாசித்துப் பொருள் கேட்டலானது, வழிப்பறி பறிப்பவன், வேலேந்திக்கொண்டு தனியே நின்று, வழி நடப்பவர்களைப் பார்த்து, உமது

கையிலுள்ள பொருளைக் கொடுமென்று கேட்டு வாங்குதலுக்குச் சமானமாகும் என்பதாம். வேலேந்திக் கொண்டு நிற்றல், பொருளைக் கொடாவிட்டால் கொல்வேனென்னும் பயந் தோன்றுதற்கென்க. இதனால், அரசன் குடிகளிடத்து வரிப்பொருளல்லாமல் வேறு வழியாற் பொருளை வாங்குதல் கொடுங்கோலென்பது கண்டுகொள்க.

ந. நாடோறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடோறு நாடு கெடும்.
(553)

(இ-ம்) அரசன் தன்னுடைய நாட்டில் உண்டாகுந் தீமைகளைத் தினந் தோறும் தன்னாலும் கேள்வியாலும் ஆராய்ந்து அவற்றை நீக்கி நீதி செலுத்தா விட்டால் தினந்தோறுஞ் சிறிது சிறிதாக நாட்டிலுண்டாகும் பயனை இழந்து விடுவன் என்பதாம். எனவே, அரசனுடைய நீதி குறைந்தால் மழைவளங் குறைந்து விளை பயன் குறையுமெனக் கண்டு கொள்க. விளைபயன்களாவன-உணவுக்கும் மற்றவற்றிற்கும் வேண்டும் எல்லாப்பொருள்களும்.

ச. கூழுங் குடியு மொருங்கிழக்குங்
கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.
(554)

(இ-ம்) மேல் வருவதை எண்ணாது நீதி தவறும்படி

செய்யும் அரசனானவன் முன் சம்பாதித்து வைத்திருந்த பொருளையும் பின் சம்பாதித்தற்கேதுவாகிய குடிகளையும் ஒருமிக்க இழந்து விடுவன் என்பதாம். ஆதலால், செய்யுங் கருமங்களை யெண்ணிச் செய்யவேண்டுமென்பதாயிற்று. எண்ணிச் செய்தலாவது—இன்னது செய்தால் இன்னதாகுமென ஆழ்ந்து யோசித்துத் தீமை வருவதை விலக்கி நன்மை வருதலைச் செய்தல்.

ரு. அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(555)

(இ-ம்) அரசனானவன் நீதிசெலுத்தாமையால் குடிகள் துன்பப்பட்டு அழுத கண்ணீரல்லவா அவ்வரசனது செல்வமாகிய தருவை (மரத்தை) அறுத்துத்தள்ளும் ஆயுதம் என்பதாம். எனவே, அரசன் செங்கோலே அவன் செல்வம் வளர்தற்குக் காரணமும், கொடுங்கோலே அச்செல்வம் கெடுதற்குக் காரணமும் ஆமென்பது கண்டுகொள்க,

களஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௬. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னுவா மன்னர்க் கொளி.
(556)

(இ-ம்) அரசர்க்கு வெற்றி, கொடை முதலியவற்றால் எய்தும் புகழ்கள் செங்கோலினாலுண்டாகி நிலைபெற்றுநிற்கும். அத்தன்மையுடைய செங்கோல் இல்லாவிட்டால் அவ்வாசர்க்கு மேற்கூறிய புகழ்கள் உண்டாகமாட்டா என்பதாம். ஆகவே, புகழ் நிலைபெற்று நிற்கமாட்டாமையால் அவ்வாசரும் நீடித் திருக்கமாட்டாரென்பது கருத்து. எப்படியென்றால், செங்கோல் செலுத் தாமற் கொடுங்கோல் செலுத்தும் அரசருக்குக் குடிகளெல்லாம் பகைவராவர்; அப்பகைபற்றி எந்தவிதத்தாலாவது விரைந்து கொல்லப்படுவாரென்க. இதனை "ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும்" என்று ஔவையாரருளிச் செய்த திருவாக்காற் கண்டு கொள்க. (ஆத்திசூடி) இக்கருத்தால் "கொடிய மன்னர்க்குக் குடிகளே ஒன்னார்" என்று இக்காலத்து அறிஞரொருவர் கூறினர். (நீதி நூல்.)

௭. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்தன்
அளியின்மை வாழு முயிர்க்கு.
(557)

(இ-ம்) மழையில்லாதிருத்தலானது உலகத்தில் வாழு முயிர்கட்கு எவ்வகைத்துன்பந் தருமோ அவ்வகைத் துன்பத்தை அரசன் குளிர்ந்த கருணையில்லாதிருத்தலானது அவனாட்டில் வாழுங் குடிகளுக்குத் தரும் என்பதாம்.

அ. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.
(558)

(இ-ம்) நீதி செலுத்தாத அரசனது கொடுங்கோலின் கீழே வாழுங் குடிகளுக்குச் செல்வமில்லாமையை (தரித்திரத்தை)ப் பார்க்கினும் செல்வம் துன்பமுடையது என்பதாம். எப்படியென்றால், தனக்குரிய வரிப்பொருளைத் தவிர வேறு வழியாகப் பொருளைக் குடிகளிடத்துப் பெற விரும்பும் கொடுங் கோல் அரசனுடைய நாட்டில் பொருள் கொடாவிட்டால் கைவருந்தும்படி கட்டிவைத்து அடிக்குந்துன்பம் செல்வமுடையவர்க்கேயல்லாமல் வறுமை யுடையவருக்கு இல்லை என்க. இதனால், கொடுங்கோலரசன் கீழ் வாழுஞ் செல்வமுடைய குடிகள் துன்பத்தையடைவரென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "கொடுங்கோலரசன்

வாழுநாட்டிற் கடும்புலி வாழுங் காடுநன்றே" என்றார் பிறரும். (வெற்றிவேற்கை)

## ருஎ-ஆம் அதி.—வெருவந்த செய்யாமை.

கஎரு

சு . முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
யொல்லாது வானம் பெயல்.
(559)

(இ-ம்) அரசன் தான் செய்யும் நீதியை முறைதப்ப(தவற)ச் செய்வானுல் பெய்யவேண்டிய காலத்துப் பருவமழை இல்லாமற் போக மேகம் பெய்யமாட்டாதென்பதாம். எனவே, அரசனுடைய நீதியானது மழை பெய்தற்குக் காரணமாதல் காண்க. "நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை" என்றார் பிறரும். (விவேகசிந்தாமணி.) உறை-பருவகாலத்து மழை.

கo .

ஆபயன் குன்றும் அறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

(இ-ம்) காத்தற்குரிய அரசன் காக்குமுறைப்படி உயிர்களைக் காவா ஞனல் தரும மில்லாத அவனுடைய நாட்டில் பசுக்களிற் பயனுகிய பால் பெருகாது சுருங்கிவிடும். ஆறு தொழில்களுடைய அந்தணரும் அவரோதற் குரிய வேதங்களை மறந்து விடுவர் என்பதாம். அறுதொழிலாவன-ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்களாம். பசுக்களிற் பால் குறைந்தவிடத்து யாகங்கள் வளம்பெற நடக்கமாட்டாவாகையால் வேத மந்திரங்கள் ஓதப்படாமைபற்றி மழைவளங் குறையுமென்பது கண்டுகொள்க. இதனுல், வேதமோதுதல் மிகுதியால் மழைபெய்யுமென்பதாயிற்று. "வேத மோதிய வேதியர்க் கோர்மழை" என்ருர் பிறரும். (விவேக சிந்தாமணி.)

---

## 57-ஆம் அதி.—வெருவந்த செய்யாமை.

அஃதாவது, குடிகள் அஞ்சுவதும் தான் அஞ்சுவதுமாகிய தொழில்களை அரசன் செய்யாதிருத்தல்.

க. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்

ஒத்தாங் கொறுப்பது வேந்து.

(561)

(இ-ம்) தனக்குத் தாழ்ந்தவரிடத்து நீதி செலுத்தச் சென்றபோது குற்றத்தினை நடுவு நிலைமையாக நின்று ஆராய்ந்து குற்றத்திற்குத் தக்கபடி தண்டனையை இனிமேலும் அக்குற்றம் செய்யாதிருக்கும் விதமாக விதிப்பவ னொருவனே அரசனாவான் என்பதாம். இதனால், குற்றத்திற்குத்தக்க தண்டனையை ஆராயாதிருத்தலும், வேறு காரணம்பற்றி அளவுக்கதிகமாகத் தண்டித்தலுங் குடிகள் பயப்படுந் தொழிலென்று கண்டுகொள்க. தக்காங்கு- நடுவு நிலையாக நிற்றல். ஒத்தாங்கு-குற்றத்திற்குத் தக்க தண்டனை.

களசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

உ. கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

(562)

(இ-ம்) தமக்கு நீண்ட செல்வம் பெறவேண்டிய எண்ணமுடைய அரசர் தம் குடிகள் செய்த குற்றத்திற்குத் தண்டனை செய்யுங்காலத்து அளவு கடந்து கொடுந்தண்டனை செய்வதுபோல ஆரம்பித்துப்

பின்பு அக்குற்றத்துக்குத் தக்க (விதித்த) தண்டனையே செய்யவேண்டும் என்பதாம். கொடுந்தண்டனை செய்வதுபோல் ஆரம்பித்தல் எதற்கென்றால், குற்றஞ் செய்தவர் மேலும் மேலும் அக்குற்றஞ் செய்யாமற் பயப்படும் பொருட்டு என்க.

ந. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும். (563)

(இ-ம்) குடிகள் அஞ்சிய (பயப்பட்ட) செயல்களைச் செய்து கொடுங் கோல் (அநீதி) செய்து நடப்பானானால், அவ்வரசன் நிச்சயம் (உறுதி) ஆகச் சீக்கிரத்திற் கெட்டுப்போவன் என்பதாம்.

ச. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்தன்
உறைகடுகி யொல்லைக் கெடும். (564)

(இ-ம்) குடிகள் நம்முடைய அரசன் கொடுங்கோல் (அநீதி) உடையவ னென்று சொல்லப்படுந் துன்பச் சொல்லையுடைய அரசனானவன் ஆயுளுங் குறைந்து செல்வத்தையும் சீக்கிரமிழந்துவிடுவன் என்பதாம். இதனால், ஒருவன் காரணமில்லாமல் பிறர் மனம் நோகும்படியாக ஒரு செயலையும் செய்யலாகாதென்பது

கருத்து. இக்கருத்துப்பற்றியே "மனமுற வுருகி நின் றழுத கண்ணீர், முறையுறத் தேவர் மூவர் காக்கினும், வழிவழி யீர்வதோர் வாளா கும்மே" என்றார் பிறரும். (வெற்றிவேற்கை.)

௫. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
பேஎய்கண் டன்ன துடைத்து. (565)

(இ-ம்) தன்னைக் காணவருவார்க்குச் சமயங் கொடாதிருப்பவனுய்க் காணவந்தவர் காத்திருந்து பின்பு கண்டால் அவர் வெறுக்கும்படியாகக் கொடுமை (துன்பம்) முகங்காட்டும் அரசனது பெருஞ்செல்வம் பேயாற் கைக்கொள்ளப்பட்டது போன்றதாகிய ஒரு குற்றமுடைய தென்பதாம். எப்படியென்றால், பேயினுற் கைக்கொண்டு காத்திருக்கும் பொருள் பிற ரெடுத்துக்கொண்டு போக முடியாமைபோலத் தன்னைக் காணவருவாருக்கு ௫எ-ஆம் அதி.—வெருவந்த செய்யாமை. களரு

இனியமுகங்காட்டாமல் வெறுப்புமுகங் காட்டியவனிடத்துப் பெருஞ்செல்வம் ஒருவரும் பெற்றுக்கொள்ளமுடியாது என்க. இதனுல், கொடுப்பதற்கு இனியமுகம் அறிகுறிபோலக் கொடாமைக்கு அறிகுறி கோணிய வெறுப்பு முகமென்பது தெளிவாகத் தெரிந்தது.

அறிகுறி-அடையாளம்.

௬. கடுஞ்சொல்லன் கண்ணில னாயின்
நெடுஞ்செல்வம் நீடின்றி யாங்கே கெடும்.
(566)

(இ-ம்) அரசனானவன் கொடியசொல்லையுமுடையவனாய்த் தாக்ஷணியமும் இல்லாதவனானால் அவனுடைய பெருஞ்செல்வம் நீடித்து நில்லாமல் சீக்கிரத்தில் (சிறிது காலத்துக்குள்ளே) நீங்கும் என்பதாம். கொடுஞ்சொல்- யாருக்கும் வெறுப்புவரப் பேசுதல்.

௭. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்தன்
அடுமுரண் தேய்க்கு மரம்.
(567)

(இ-ம்) கொடிய சொல்லும், குற்றத்தின் அளவுக்குமிஞ்சிய தண்டனை செய்தலும் அரசனுடைய பகையைவெல்லும் வலிமையாகிய இரும்பினை யராவிக் குறைத்துத்தள்ளும் அரம் என்பதாம். கொடியசொல்லாற் சேனையும், அளவுக்குமிஞ்சிய தண்டனையால் தேசமுங் கெடுமாதலால் இவ்விரண்டும் குடிகள் பயப்படுதற்குக் காரணமாம். எப்படியென்றால், இனியவார்த்தையில்லாமையால் அன்பில்லாமற் சேனை அரசனைவிட்டு நீங்கவே, பகைவர் நெருங்கிவந்து வருத்துவர்; அவ்வருத்தத்தை மாற்றுதற்குச் சேனை துணையாக

நில்லாமையால் அரசன் பலங்குறையும். அது குறையவே, பகையை வெல்ல முடியாமையால் தேசம் செல்வமிழந்து சேமமடையாமல் துன்பமடையும் என்க.

அ.

இனத்தாற்றி யெண்ணாத வேந்தன்
சீறிற் சிறுகுந் திரு.

சினத்தாற்றிச்

(568)

(இ-ம்) தான் செய்யவேண்டிய காரியத்தைப்பற்றி வந்த எண்ணத்தை மந்திரிமாருடன் கலந்து ஆலோசித்துச் செய்யாத அரசன் அக்குற்றத்தால் எடுத்தகாரியம் இடையூறாய் முடிந்தஇடத்துத் தன்னைக் கோபமாகிய குற்றத் தினுள்ளே புகுத்தி மந்திரிகளைக்கோபிப்பானானால் அவ்வரசன் செல்வமானது தினந்தோறும் சிறிதுசிறிதாகக் குறைந்துவிடுமென்பதாம். எப்படியென்றால், தான் செய்த குற்றத்திற்குத் தன்னை நொந்துகொள்ளாமல் மந்திரிகளைக் கோபித்தலால் அவர் இவ்வரசன் அறிவில்லாதவனென்று அவனைவிட்டு நீங்குவர். அவர் நீங்கவே, அரசன் தான்செய்த குற்றம் நீங்கும் விதமும், க்ஷீ

திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

இராச்சிய பாரத்தை இனி நடத்துமாறும் இல்லாமற்போகும். அது பற்றிப் பொருள் வரவு சுருங்கும். வரவு சுருங்கிச் செலவுசெய்தால் உள்ளதுகுறையு மாதலாலென்க. எனவே, அரசன் குற்றத்தை நீக்குவதும், பொருள்வளம் பெருக்குவதும் மந்திரிகளே யென்பது கண்டுகொள்க.

கூ. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்,
(569)

(இ-ம்) யுத்தம் வருவதற்குமுன்னே தற்காப்புக்கு வேண்டியதோர் அரண்செய்து வைத்துக்கொள்ளாத அரசன், யுத்தம்வந்தகாலத்தில் தன்னைக் காப்பதற்கு இடமில்லாமற் பயந்து சீக்கிரத்திலே கெடுவன் என்பதாம். இதனால், பகைவருக்கஞ்சித் தன்னைவிட்டுத் தன்சேனை நீங்கும். அப்போது தானும் தனியே நின்று பயந்து அப்பகைவர்கையி லகப்படுவனென்பது கருத்து. இக்கருத்துப்பற்றியே, "வெள்ளம் வருவதற்கு முன்னர் அணை கோலி வையார், பெருகுதற்கண் என்செய்வார் பேசு" என்றார் சிவப்பிரகாச சுவாமிகள் (நன்னெறி 30).

கO. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.
(570)

(இ-ம்) கொடுங்கோலரசன் நீதிநூல் முதலிய நூல்களைக் கல்லாதவர் கூட்டத்தைக் கைவசப்படுத்துவன். அக்கூட்டம்போல, எல்லாவற்றையும் தாங்கும் பூமிக்குப் பெரும்பாரம் வேறில்லை என்பதாம். எனவே, கொடுங் கோலரசனிடத்துக் கற்றறிவுடைய மந்திரிகள் நிலையாக இருக்கமாட்டா ரென்பதும், கல்லாதவர் கூட்டம் பூமிக்குப் பெரும்பாரமென்றதனால் அவருயிரோடிருப்பதனால் யாதொரு பயனுமில்லையென்பதுங் கண்டுகொள்க.

---

## 58-ஆம் அதி.—கண்ணோட்டம்.

அஃதாவது, தன்னோடு பழகியவரைக் கண்டால் அவர் சொன்ன காரியங்களை மறுக்கமாட்டாமை.

க. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை

யுண்மையா னுண்டிவ் வுலகு. (571)

(இ-ம்) கண்ணோட்டம் (கருணை) என்று சொல்லப்படும் மிகுந்த அழகானது அரசனிடத்து

உண்டாயிருத்தலால் இந்த உலகம் விருத்தி

## ருஅ-ஆம் அதி —கண்ணோட்டம்.

கஎஎ

யடைகின்றது என்பதாம். விருத்தியடைகிறதாவது—நிலை பெற்றிருப்பது.

இதனால், அரசனுக்குப் பொன்மணியாற் செய்த ஆபரணங்களாலாகும் அழகு சிறப்பல்லவென்பது கண்டு கொள்க. மிகுந்த அழகு—சிறப்புடைய அழகு.

உ. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலார்
உண்மை நிலக்குப் பொறை.
(572)

(இ-ம்) உலக நடையானது கருணையினிடத்து உள்ளது ஆதலால் அக்கருணையில்லாதார் தமக்கும் பிறர்க்கும் பயனில்லாராவர். அவரிருப்பது பூமிக்குப் பாரமாதற்கேயல்லாமல் வேறொன்றுக்கில்லை என்பதாம். உலக நடையாவது—உபகாரஞ்செய்தல், காத்தல், குற்றம் பொறுத்தல் முதலாயின.

ங. பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாங்
கண்ணோட்ட மில்லாத கண்.
(573)

(இ-ம்) பாடுதற்றொழிலோடு பொருத்தமில்லையானால் பண் (இசைப் பாட்டு) என்ன பிரயோசனத்தையுடையதாகும்; அதுபோல, கண்ணோனது கருணையில்லாதவிடத்து என்ன பிரயோசனத்தை யுடையதாகும்; இவ் விரண்டாலும் ஒரு பிரயோசனமும் இல்லை என்பதாம். பண்களின் வகை யாவன: பாலையாழ் முதலிய நூற்றுமூன்று. பாடுதலின் தொழில் (வகை) ஆவன-வீணையிடத்து வார்தல் முதலாகிய பதினாறு. கண்டத்தினிடத்து எடுத் தல் முதலிய எண்பத்தொன்று. இவற்றின் பெயர்களையும் பாடுதலின் செயல் களை யும் இசைநூலறிந்து பயின்றாரிடத்துக் கேட்டறிந்துகொள்க. அவை களை இ ந்நூலுள் விரித்துக்கூறவேண் டிய அவசரமில்லை.

ச. உளபோல் முகத்தெவன் செய்யு மளவினாற் கண்ணோட்ட மில்லாத கண்.

(574)

(இ-ம்) செய்யவேண்டிய அளவுக்குத் தக்கபடி கூடாமலுங் குறையாம லுங் கருணை செய்யாமலிருக்குங் கண்ணானது எதிர்கண்டவருக்கு முகத்தி லுள்ளதுபோலத் தோன்றுதல் மட்டும் அல்லாமல் வேறு என்ன பயனைச் செய்யும்? ஆதலால், ஒரு பயனுஞ் செய்யாதென்பதாம்.

ரு. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்

புண்ணென் றுணரப் படும்.
(575)

(இ-ம்) ஒருவன் கண்ணுக்கு ஆபரணமாவது, கருணையென்னுந் தாக்ஷண்யமாம், அந்த ஆபரணமில்லாவிட்டால் அக்கண்ணனது அறிவுடையோ
23




கள்ஃ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

ரால் புண்ணென்று ஆராய்ந்து சொல்லப்படும் என்பதாம். ஏனென்றால், தாக்ஷண்யமில்லாத கண்ணால் அக்கண்ணுடையவன் முகத்தை யலங்காரஞ் செய்யப்படாமையோடு பிறருக்குப் பிரயோசனமும் இல்லை ஆதலாலென்க. அப்படியானாலும் புண்ணென்று சொல்வானேனென்றால், கருணையில்லாத கண்ணுடையானைக் கொடியவனென்று இகழ்வார் சொல் அவனுக்குப் புண் போலத் துன்பஞ் செய்தலாலென்க.

சு. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ. டியைந்துகண் ணோடா தவர்.
(576)

(இ-ம்) கருணை செய்தற்குரிய கண்ணோ டிருந்து கருணை செய்யாதவர் சஞ்சரித்துத் திரிவாராலும் மண்ணோடு பொருந்தி நிலையிலே நிற்கின்ற மரத்துக்குச் சமானமாவர் என்பதாம். மரத்தனையரென்றது எதனாலென்றால், மரமுங் கண்ணிருந்தும் கருணை செய்யமாட்டாதாகையால் என்க. மரத்தின் கண்ணை இக்காலத்தார் கணுவென்று சொல்லுவர்.

எ. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
கண்ணோட்ட மின்மையு மில்.
(577)

(இ-ம்) கருணையில்லாதவர் கண்ணுமில்லாதவராவர். கண்ணுடையவர் கருணையில்லாதவராதலுமில்லை என்பதாம். அப்படியானால், கண்ணுடையவர் கருணையில்லாதவராகச் சிலரிருக்கின்றாரே என்றால், அவர் தாம் மேற்சொல்லிய மரத்தையொத்தவர் என்க. இதனால், கருணையுள்ளகண்ணே பயனுடையது. கருணையில்லாத கண் பயனில்லாதது என்று கண்டுகொள்க.

அ . கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.
(578)

(இ-ள்) நீதிசெலுத்துதலாகிய தம்முடைய தொழிலழியாமல் கருணை
(தாட்சணியம்) செய்ய வல்லமையுடைய அரசருக்கு இந்த உலகம் நீண்ட
காலம் சொந்தமாகும் என்பதாம். இதனால், தம்முடன் பழகினோர் பிறரைத்
துன்பஞ்செய்தவிடத்து அவரைத் தாட்சணியத்தால் தண்டனைசெய்யாத
அரசருக்கு இராசநீதி குறையுமாதலால் அக்குறைவு வாராதபடி நீதி செலுத்து . வதே உலகம் அவர்வசம் நிற்பதற்குக் காரணமென்பது கண்டுகொள்க.

௯. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடி
ப் பொறுத்தாற்றும் பண்பே தலை.

(579).

௫௯-ஆம் அதி.—ஒற்றாடல். ௧௭௯

(இ-ம்) தம்மை மிகத் துன்பஞ்செய்யும் தன்மையுடையவரிடத்தும் கண்ணோட்டமாகிய கருணை செய்யும் இயல்புடையவராகி அவர் குற்றத்தைப் பொறுத்துக்கொள்ளுமியல்பே அரசருக்குத் தலைமையாகிய இயல்பு என்பதாம். மிகத்துன்பஞ்செய்வார்-தன்னோடு பலநாட் பழகிய சிநேகர். இது, அடுத்தகுறளுரையால் தெரிந்தது. எனவே, தமக்குத் துன்பஞ்செய்தவர் நட்புடையவரா யிருந்தால் பொறுத்துக்கொள்ளலே தகுதியென்றாயிற்று.

இயல்பு-குணம்.

௫௦. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க

நாகரிகம் வேண்டு பவர்.

(580)

(இ-ம்) எல்லாராலும் விரும்பத்தக்க நாகரிகத்தை (கண்ணோட்டமாகிய கருணையை) விரும்புவார் தம்மோடு பழகியவர் உணவில் நஞ்சிடக் கண்டாலும் தாட்சணியத்தை மறுக்கமாட்டாமல் அவ்வுணவையுண்டு பின்னும் அவரோடு நட்புறுவர் என்பதாம். தாட்சணியத்தின் குணத்தைச் சிறப்பித்து இவ்வாறு கூறியருளினர். இதனால், தமக்குச்செய்த குற்றத்திற்கே இவ்வாறு தாட்சணியங் கொள்ளவேண்டுமேதவிரப் பிறர்க்குச்செய்த குற்றத்திற்கு ஒரு சிறிதும் தாட்சணியமில்லாமல் நீதி செலுத்தவேண்டு மென்பது கருத்து.

---

## 59-ஆம் அதி.—ஒற்றாடல்.

அஃதாவது-சிநேகரிடத்தும், பகைவரிடத்தும், இவ்விருவரு மல்லாதவ ரிடத்தும் நடக்கின்ற செய்கைகளை அறிதற்கு ஒற்றரை ஆளுதல். ஒற்றர்- மேற்சொல்லிய மூவரிடத்தும் நடக்கின்ற விஷயங்களைப்போ யறிந்துவந்து சொல்லுகின்றவர்.

க. ஒற்று முரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்.

(581)

(இ-ம்) ஒற்றனும் புகழ்நிறைந்த நீதிநூலுமாகிய இரண்டினையும் அரசன் தன்னுடைய இரண்டுகண்களாகத் தெரிந்து கைக்கொள்ளவேண்டும் என்பதாம். எப்படியென்றால், அரசன் தன்னுடைய கண் செல்லாத நிலப் பரப்பெல்லாம் ஒற்றனவன்சென்று அங்கங்கே நடந்த விஷயங்களை யெல் லாங் கண்டுவந்து சொல்லுதலாலும், அவ்விஷயங்களுக்குத் தக்க செயல் களைச்செய்யத் தன்னறிவு தெரியமாட்டாமையால் நூல் இதற்கிது செய்ய வேண் டுமென்று சொல்லுதலாலும், ஒற்றனை ஊனக்கண்ணாகவும், நூலை

ஞானக்கண்ணுகவும் கொள்ளவேண்டுமென்க. கிலப்பரப்புநில உலகத்தின் விரிந்த இடம்.

௨. எல்லார்க்கு மெல்லாம் நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். (582)

(இ-ம்) உறவினர், பகைவர் இவ்விருவருமல்லாதவராகிய மூவரிடத்தும் உண்டாகும் நன்மையுந் தீமையுமாகிய சொற்களையும் செயல்களையும் தினந்தோறும் ஒற்றனால் விரைவாயறிந்து நன்மைக்கேற்ற உபகாரமுந் தீமைக் கேற்ற தண்டனையும் அப்போதப்போது செய்வது அரசனுக்குத் தொழில் என்பதாம். இவ்விதஞ்செய்தல் அரசன் பகையில்லாதிருப்பதற்குக் காரணமென்பது கருத்து.

௩. ஒற்றினு னொற்றிப் பொருள்தெரியா மன்னவன்
கொற்றங் கொளக்கிடந்த தில். (583)

(இ-ம்) மேல் வசனத்திற் கூறிய மூவரிடத்தும் நடந்த நன்மை தீமை களை ஒற்றனலறிந்துவாச் செய்து அந்நன்மை தீமைகளால் பின்வரும் பயனை ஆராயாத அரசன் வெற்றியடைதற் கிருந்ததாகிய மார்க்கம் இதுவல்லாமல் வேறொன்றில்லை என்பதாம். இது என்றது ஒற்றனால் அயலிடத்து நடந்த செயல்களை யறிந்துவாச்

செய்தல். இவ்வாறல்லாமல் 'கொற்றங் கொளக் கிடந்த தில்' என்பதற்கு, அடையக்கூடிய வெற்றியில்லை யென்றும் பொருள் கூறலாம்.

ச. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்

கனைவரையும் ஆராய்வ தொற்று. (584)

(இ-ம்) அரசருடைய காரியஞ்செய்வார், சுற்றத்தார், பகைவர் ஆகிய மூவகையாரிடத்தும் நடக்குஞ் சொற்களையும் செயல்களையும் ஆராய்ந்து தெரிய வல்லவனே ஒற்றனென்று சொல்லப்படுவான் என்பதாம். ஆராய்ந்து தெரிதல் எதற்கென்றால், இம்மூவகையாரும் ஒவ்வொரு காலத்து அரசனுக்குத் தீங்குசெய்ய நினைப்பாதலால், அவற்றை முன்னறிந்து விலக்கும் உபாயத்தால் அரசன் விலக்குவதற்கென்க.

ரு. கடாஅ உருவொடு கண்ணஞ்சா தியாண்டும்

உகாஅமை வல்லதே யொற்று. (585)

(இ-ம்) மேலே சொல்லிய மூவரும் தன்னைக் கண்டாற் சந்தேகப் படாத வடிவத்தோடு பொருந்தி அவர் சந்தேகித்துக் கண்டு கோபித்துப்

பார்த்தால் அதற்குப் பயப்படாமல் நின்று தன்னுடைய எண்ணத்தைச் சொல் லாதிருக்க வல்லவனே ஒற்றன் ஆவானென்பதாம். இவ்வல்லமையில்லாத ஒற்றனால் அரசனுக்குப் பயனில்லை யென்பதும் அம்மட்டோடு கேடுவரு மென்புதுங் கருத்து. சந்தேகப்படாத வடிவு—பார்ப்பார், வணிகர் முதலாயி னோர் வடிவு. எனவே, ஒற்றுதற்குரியார் அவரென்பதாயிற்று. ஒற்றுதல் - பகைவர் நண்பர் இவ்விருவருமல்லாதவராகிய மூவரிடமும்போய்க் காரியங்களை யறிந்து வருதல்.

௬. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினும் சோர்வில தொற்று.
(586)

(இ-ம்) முற்றத்துறந்தவராயும் விரதசீல ஒழுக்கமுள்ளவராயும் செல்லத் தகாத இடங்களிலெல்லாம் சென்று புகுந்து அங்கு நடக்கின்ற சொற்களையும் செயல்களையும் மிக ஆராய்ந்து அங்குள்ளார் கண்டு கடினமாகிய தண்டனை செய்து துன்பப்படுத்தினாலும் தன்னை இன்னனென்று வெளிப்படுத்திக் கொள்ளாத வலிமையுடையவனே ஒற்றன் என்பதாம். துறந்தவரையும் விரதசீல வொழுக்கமுள்ளவரையும்

உலகத்தார் நன்கு மதித்துக்கொண்டாடுதலால் இவ்வாறு கூறியருளினர். முற்றத்துறந்தவர்—அகப்பற்றும் புறப்பற்றும் விட்ட மெய்ஞ்ஞானிகள்.

எ. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
ஐயப்பா டில்லதே யொற்று.

(587)

(இ-ம்) தன்னால் ஆராயப்பட்டார் இரகசியமாகச் செய்த காரியங்களை அவர்க்கு உரிமையுடையவரால் கேட்டுத் தெரிந்துகொள்ளத் தக்கவனாய்த் தெரிந்துகொண்ட விஷயங்களிற் சந்தேகமில்லாதிருப்பவனே ஒற்றனாவான் என்பதாம். ஏனென்றால், சந்தேகமாக விஷயங்களை யுண்மையறியாமல் வந்து ஒற்றன் அரசனிடம் சொல்வானானால் அரசன் வரக்கடவதாகிய துன்பங் களை விலக்கும் உபாயம் அறியாமல் மயங்குவன் ஆதலாலென்க. ஆராயப் பட்டார்-பகைவர் முதலாயினோர். அவர்-584-ஆம் வசனத்திற் கூறப்பட்ட மூவர்.

அ. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோர்
ஒற்றினா லொற்றிக் கொளல்.

(588)

(இ-ம்) ஒரு ஒற்றன் தெரிந்துவந்து சொல்லிய காரியங்களையும் மற்றொரு ஒற்றனால் ஆராய்ந்து

தெரிந்துவரச்சொல்லிக் கேட்டுத் தெரிந்த உண்மையை அவவிருவர் சொல்லும் ஒத்திருக்குமானல் நைக்கொள்ளவேண்டு

## ௯௰௨ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

மென்பதாம். ஒற்றன் புகைவரிடத்தில் தன்னயங்கருதி மாறுபாடாகச் சொல்வதும் உண்டு. ஆதலால், ஒருவனுல்மட்டும் தெளியலாகாதென்பது கருத்து. எனவே, தனித்தனியே ஒருவனையொருவ னறியாத விதமாக ஒற்றனை யனுப்பவேண்டுமென்பது கண்டுகொள்க,

௯. ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

(589)

(இ-ம்) அரசன் ஒற்றரையாளுமிடத்து ஒருவரை யொருவர் தெரியா மல்வைத்து ஆளவேண்டும். அவ்விதம் ஆளப்பட்ட ஒற்றர் மூவரை ஒரு காரியத்தின்மேல்

செலுத்தினல் அம்மூவருந் தெரிந்துவந்து சொல்லிய சொற்கள் பயனல் ஒத்திருக்குமானல் அச்சொற்கள் மெய்யென்று கொள்ளப் படும் என்பதாம். எனவே, பயனல் சொற்கள் ஒத்திராவிட்டால் பின்னும் ஆராயவேண்டுமென்பது கருத்து. பயன்-பிரயோசனம்.

௬0. சிறப்பறிய ஒற்றின்கட் செய்யற்க செய்யிற் புறப்படுத்தா ஞகு மறை.

(590)

(இ-ம்) உலகத்தில் இரகசியமாக நடக்குங் காரியங்களை யறிந்து வந்து சொல்லிய ஒற்றனுக்கு அரசன் மகிழ்ச்சியாற் செய்யும் வரிசைகளைப் பிறர் அறியும்படி செய்யாதிருக்கவேண்டும். அப்படியல்லாமல் பிறரறியும்படி செய் வானுனல் தன்னுடைய மறைபொருளாகிய இரகசியத்தைத் தானே வெளிப் படுத்தினவனுவன் என்பதாம். பிறரறிந்தால் வருங்கேடு என்னவென்றல், வரிசை பெற்றவன் ஒற்றனென்று தெரிந்தால் அவனைக் கண்டவுடன் எல்லா ரும் இரகசியத்தை மறைத்துக்கொள்வாதலால் ஒற்றனறிந்துவந்து சொல்ல முடியாது ஆதலாலென்க.

---

## 60-ஆம் அதி.—ஊக்கமுடைமை.

அஃதாவது, வினை செய்யுமிடத்து மனந்தளராமல் உற்சாகம் உடைய தாதல். வினை-தொழில். உற்சாகம்-உள்ளத்தின் மிகுதியாய வலிமை.

க. உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லார்
உடைய துடையரோ மற்று.

(591)

(இ-ம்) பொருளுடையரென்று சொல்லச் சிறந்து நின்றது ஊக்கமாம். அவ்வூக்கமில்லாதவர் முன்னெய்தி நின்ற அப்பொருளும் உடையராவரோ? ஆகார் என்பதாம்.

எனவே, பொருள்பெற்று நின்றவர் அதனைக் காக்கும்

## சுo-ஆம் அதி.—ஊக்கமுடைமை.

க.அ.நீ

வலிமையடைந்தால் மட்டும் அப்பொருள் நிலைக்குமென்பது கருத்து. ஊக்கம்—உற்சாகத்தாலாகிய வலிமை.

உ. ஊக்க முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

(592)

(இ-ம்) ஊக்கமாகிய செல்வமே நிலைநின்ற உடைமையாவது. மற்றைப் பொருளாகிய உடைமையே நிலைநில்லாது நீங்கிவிடுமென்பதாம். எப்படி யென்றால்,

ஊக்கமென்பது மனத்தின் பண்பு (குணம்) ஆதலால் அது நீங் காது. செல்வமாவது உடம்புக்கு வேருயழியப்பட்டதொன்று ஆதலாலென்க.

௩. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்கம்
ஒருவந்தங் கைத்துடை யார்.
(593)

(இ-ம்) நிலைபெற்ற ஊக்கத்தைக் கைப்பொருளாக உடையவர் தாம் பெற்றிருந்த செல்வத்தை யிழந்துவிட்டாராலும் அதற்காக மனஞ்சுழன்று துன்பமடையமாட்டா ரென்பதாம். இதை வருகின்றகுறளால் தெளிவாகத் தெரிந்துகொள்க.

௪. ஆக்கம் அதர்வினாய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை.
(594)

(இ-ம்) தனக்கு எவ்விதத்துன்பம் வந்த காலத்தும் தளர்ச்சியில்லாத ஊக்கமுடையவனிடத்துச் செல்வமானது வழி எதுவென்று கேட்டறிந்து தானே வந்து சேரும் என்பதாம், ஊக்கம் - மனத்திலெழும் உற்சாகம், அசைவது கலங்காத வலிமை.

௫. வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்

உள்ளத் தனைய துயர்வு.

(595) (இ-ம்) ஒரு தடாகத்தில் நின்ற நீரின்னளவு அந்நீர்ப் பூக்களின் தண்டு (தாள்) நீளமுடையதாம். அதுபோல, மனிதருடைய ஊக்கத்தினளவாச் செல்வம், கல்வி, படைகளால் உயரும் உயர்ச்சி உண்டாகும் என்பதாம்.
இதனால் ஊக்கமாகிய மனக்கிளர்ச்சி குறைந்த இடத்து மெனிபது கருத்து. படை-சேனை.

எல்லாங் குறைபு

சு. உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல் மற்றது

தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(596)

கஅசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) அரசரானவர் எண்ணுவதெல்லாம் ஊக்கத்தாலாகிய உயர்ச்சியை யெண்ணவேண்டும். அவவுயர்ச்சி ஊழ்வினையாற் கூடாமற்போனாலும், உயர்ச்சியை எண்ணுவார் (கருதுவார்). கருத்தானது

இவர் முயற்சி யிற் குற்றமுடையாரென்று பழிக்கப்படாத தன்மையுடையது என்பதாம். ஊழ்வினையாற் கூடாமற்போனாலுமென்றது கூடுதலே பெரும்பாலுமாமென் பதே கருத்து.

எ. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்

பட்டுப்பா டூன்றுங் களிறு.
(597)

(இ-ம்) யானையானது புதையாகிய பாணத்தால் துளைபட்டுப் புண் பட்ட இடத்துத் தன்னிலைகலங்காது தன் பெருமையை நிலை நிறுத்தும். அதுபோல ஊக்கமுடையவர் தாங்கருதிய உயர்ச்சிக்கு அழிவு வந்தாலும் அவ்விடத்துத் தளராமல் நின்று தம் பெருமையை நிலைநிறுத்துவர் என்ப தாம். புதை-அம்புக்கட்டு. அஃதாவது, அம்பின் வலி குன்றாதிருக்கச்செய்வ தொரு தொழில். புதையம்பென்பதற்குத் தன்மேலே பதிந்த அம்பென்றும் பொருள் கூறலாம்.

அ. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

(இ-ம்) ஊக்கமில்லாத அரசர் இவ்வுலகத்தில் யாம் வண்மையுடையோ மென்று தம்மைத்தாம் மதித்தலைப் பெறமாட்டார் என்பதாம். ஊக்கமில்லர் மையால் முயற்சி கொடை செருக்கு ஆகிய இவைகள் முறையே (வரிசை யாக) இல்லையாம். ஆதலால், இவையெல்லர்வற்றையும் ஆக்குங் காரண மாகிய ஊக்கம் அரசர்க்கு அவசியம் வேண்டுமென்பது கருத்து.

ஆ. பரியது கூர்ங் கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.



(இ-ம்) யானையானது மற்றை எல்லர் மிருகங்களினும் பெரியதும் கூர்மை மிகுந்த கொம்புடையதும் ஆனாலும் தன்னைப் புலிவந்து எதிர்த்து மோதும்போது பயப்படும் என்பதாம். ஏனென்றால், யானையைப் பார்க்கினும் சிறிய உருவமுடைய புலிக்குள்ள ஊக்கம் யானைக்கில்லர்மையால் என்க. அதுபோல ஊக்கமில்லாத பேரரசர் ஊக்கமுடைய சிற்றரசருக்கும் பயப்படுவரென்பது கண்டுகொள்க.

கo. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு. (600)

(இ-ள்) ஒருவனுக்குப் பலமான அறிவானது ஊக்கமிகுதியாம். அவ் வூக்கமில்லாதவர் மனிதராகார். வேறென்னவென்றால், மரங்களாவார். இயற்கையாகிய மரங்களோடு செயற்கையாகிய இம்மரங்களுக்கு வேற்றுமை என்னவென்றால், மனித வடிவமொன்றே யல்லாமல் வேறில்லை என்பதாம். வேறில்லை யென்றது பழம், காய், மலர் உண்டாதலும், ஆலயம், தேர், நாவாய் (தோணி) முதலியவற்றிற்கு உறுப்பாதலும் இல்லை என்பதை. வெறுக்கை-ஊக்கமிகுதி.

---

## 61-ஆம் அதி.—மடியின்மை.

அஃதாவது, எண்ணியகாரியம் செய்யுமிடத்துச் சோம்பல் இல்லா திருத்தல்.

௧. குடியென்னும் குன்றா விளக்கம்
மடியென்னும்
மாசூர மாய்ந்து கெடும்.
(601)

(இ-ம்) ஒருவன் தான் பிறந்த குடியென்று சொல்லப்படும் கெடாத் விளக்கானது சோம்பலென்று சொல்லப்படும் இருள்வந்து நெருங்கினால் கெட்டொழிந்துபோம் என்பதாம்.
சோம்பல்-தாமதகுணத்தால் வருவதாம்.
கெட்டொழிந்துபோதல்-குடியென்னும் பெயருமில்லாமற்போதல். உலகமுள்ளவரையும் தன்னுட்பிறந்தாரை விளக்கிக்காட்டி நிற்றலால் குடியைக் குன்றாவிளக்கென்று கூறியருளினர்.

௨. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.
(602)

(இ-ம்) தாம்பிறந்த குடியை மேலுமேலு நல்லகுடியாக விரும்புவார் சோம்பலாகிய தீமையைக் கொடிய தீமையாகவே நினைத்து நீக்கி முயற்சி செய்துகொண்டேயிருக்கவேண்டும் என்பதாம்.

எப்படியென்றால், சோம்ப
லில்லாது இடைவிடாமல் முயற்சிசெய்தால்
அதனாற்பயனடைந்து தாமுயர் வார். தாமுயரவே
தம்குடியுயரும் என்க. குடியுயர்தலும் தாமுயர்தலும்
பிறர் நன்குமதித்தலாம். மூலத்தில் மடி என்பதற்குக்
கெடுத்தென்று
பொருள் கூறுவாருமுண்டு.
24



௩. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடி யுந் தன்னினு முந்து. (603)

(இ-ம்) விடத்தகுவதாகிய சோம்பலைத் தன்னுள்ளே யடக்கிக்கொண்டு காலங்கழிக்கும் அறிவில்லாதவன் குடி அவன் கெடுதற்குமுன்னே கெட்டுப் போகும் என்பதாம். தம்மாற் காக்கப்பட வேண்டிய குடியானது சோம்பலால் தாமின்னாரென் றறியப்படாது கெடும்படியான நிலையடைந்தாற் காக்கமுடியாது. ஆதலால், குடி முன்னேயழியுமென்று கூறியருளினர். காத்தலாவது- விளங்கச்செய்தல். குடியென்றாலுங் குலமென்றாலு மொருபொருள்.

ச. குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு .

(604)

(இ-ம்) சோம்பலினிடத்தே தடுமாறி வீழ்தலால் திருத்தமாகிய நன் முயற்சியில்லாராயினர்க்குத் தாம் பிறந்த குடியுங்கெட்டுக் குற்றமும் அதிகப் படும் என்பதாம். குற்றம் அடுத்தகுறள் வசனத்திற்காண்க. முயற்சி-முயற்சிசெய்து செய்யுந்தொழில். மூலத்தில் மடிமடிந் தென்பதற்குச் சோம் பலினிடத்து வீழ்தலாலென்பது பொருள்.

ரு. நெடுநீர் மறவி மடிதுயில் நான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

(605)

(இ-ம்) விரைந்து செய்யுங் காரியத்தை வீண்காலம்போக்கிப் பின்னர்ச் செய்தலும், மறத்தலும், சோம்பலும், அளவுக்குமிஞ்சிய நித்திரையும் ஆகிய நான்கும் இறக்குந் தன்மையுடையார்விரும் பி ஏறுகின்ற மரக்கலம் (தோணி) என்பதாம். குற்றமுடையதோணி தன்னிடத்தேறுவாரைக் கடலில்வீழ்த்திக் கெடுத்துவிடுதல்போல மேலேசொல்லிய நான்குசெயல்களையு முடையாரை அச்செயல்கள் கெடுத்துவிடுமென்று பொருளைவிரித்துக் கண்டுகொள்க.

சு. மடியுடையார் மற்றடைந்தக் கண்ணு
மடியுடையார்
மாண்பய னெய்த லரிது.
(606)

(இ-ம்) உலகமுழுவதும் ஆண்ட அரசரது செல்வம் தானே வந்து கிடைக்கப்பெற்ற இடத்தும், சோம்பலுடையவர் அச்செல்வத்தாலரும் பெரும்பயனடைதல் இல்லை என்பதாம். எப்படியென்றால், பெருஞ்செல்வ மானது அச்செல்வமுடையார் சோம்பலாற் காவாவிட்டால் அழிந்துவிடும். அழியவே, அச்செல்வத்தாலாகும் பயனுமில்லையென்க. பெரும்பயன்-பெரிய பிரயோசனம்.

சுக-ஆம்-அதி.—மடியின்மை. கஅஎ

எ. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர்
மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.
(607)

(இ-ம்) சோம்பலை விரும்புதலால் மேம்பட்ட முயற்சி இல்லாதவரானவர் தம்முடைய சிநேகரிடத்துத் தம் துன்பத்தினை முன்னே மிகச்சொல்லி அதனால் ஒரு பிரயோசனமும் அடையாமல் பின்னே அவர் இகழ்ந்துசொல்லும் சொல்லைக்கேட்பர் என்பதாம். கேட்பர்

என்றது-தம்குற்றத்தை மறுத்துச் சொல்லுதற்கிடமில்லாமல் ஊமைபோலிருப்பரென்றபடி.

* அ. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்

கடிமை புகுத்தி விடும். (608)

(இ-ம்) சோம்பலின் குணமானது, தன்குடியை யுயரச்செய்யும் அரச னிடத்துத் தங்குமானால் அது, அவ்வரசனை அவனுடைய பகைவரிடத்து வேலையாளாக்கிவிடும் என்பதாம். இதனால், ஊக்கமில்லாமற் சோம்பலடைந் திருக்கும் அரசனது நாடு பகைவராற் கொள்ளப்பட்டுத் தானும் மிகத் தரித்திரத்தையடைவன் என்பது கருத்து. சோம்பலின் குணம்-காரியக்கேடு.

சூ. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்

மடியாண்மை மாற்றக் கெடும். (609)

(இ-ம்) ஒருவன் சோம்பலானது தன்னை ஆளுந்தன்மையை நீக்கவே, அவன் குடியினுள்ளும் வீரத்தினுள்ளும்வந்த குற்றங்களாகிய கேடுகள் நீங்கும் என்பதாம். சோம்பலாளுந்தன்மை-சோம்பலுக்குக் காரணமாகிய தாமத குணம். குடியுள்வந்த குற்றம் - தன்குடியை உயர்த்துவதற் கேதுவாகிய முயற்சி

இல்லாதிருத்தல். வீரத்தினுள் வந்த குற்றம்-பகைவரிடத்து எதிர்த்து நின்று போர்செய்யாமல் சோம்பலாயிருத்தல்.

கO. மடியிலா மன்னவ னெய்தும் அடியளந்தான் றாஅய தெல்லா மொருங்கு. (610)

(இ-ம்) தன்னுடைய காலால் எல்லா உலகத்தையும் அளந்த திருமால் (விஷ்ணுபிரான்) கடந்துசென்ற விசாலமான இடமுழுவதும் சோம்பவில்லாமல் தொழிலினிடத்து முயற்சிசெய்கின்ற அரசன் சிறிது சிறிதாக அடையாமல் ஏககாலத்தில் ஒருமிக்க அடைந்துவிடுவான் என்பதாம். இதற்குச் சாட்சியாக "முயற்சி திருவினை யாக்கும்" என்ற அடுத்த அதிகாரத் திருக்குறளை நோக்குக.

---

## கஅஅ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

### 62-ஆம் அதி.—ஆள்வினையுடைமை.

அஃதாவது, இடைவிடாத மெய்ம்முயற்சி யுடையனாகுதல்.

க. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும். (611)

(இ-ம்) தம்முடைய பலக்குறைவையெண்ணி, இக்காரியம் நம்மால் முடிக்கக்கூடாததென்று மனத்தளர்ச்சியில்லாதிருக்கவேண்டும். அக்காரியத்தை முடித்தற்கேற்ற பெருமையை (சாதனங்களை) முயற்சியானது கொடுக்கும் என்பதாம். விடாமுயற்சி செய்வார் சிறியராயிருந்தாலும் பெரியராவர். ஆகவே, அரியகாரியமும் எளிதாய் முடியுமென்பது கருத்து.

உ. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு. (612)

(இ-ம்) பயனுடைய எந்தக்காரியத்தினுஞ் செய்யவேண்டிய முயற்சி செய்யாதிருந்தவரை உலகம் நன்குமதியாமற் கைவிட்டது. ஆதலால், வினை செய்யுமிடத்துச் செய்யவேண்டிய முன்முயற்சியை மறவாமற் செய்ய வேண்டும் என்பதாம். வினை-தொழில்.

ங. தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு. (613)

(இ-ம்) எல்லார்க்கும் உபகாரஞ் செய்தலென்னு மேம்பாடானது முயற்சியென்று சொல்லப்படுகிற உயர்ந்த குணத்தினிடத்தே தங்கியது என்பதாம். எனவே, முயற்சியுடையார்க்கே உபகாரஞ்செய்தல் கூடுமென் பதும், அம்முயற்சி இல்லார்க்கு அவ்வுபகாரஞ்செய்தல் கூடாதென்பதுங் கண்டுகொள்க. மேம்பாடு-மேன்மை.

ச. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
வாளாண்மை போலக் கெடும். (614)

(இ-ம்) ஒன்றிலுமுயற்சியில்லாதவன் பிறருக்கு உபகாரியாகுந் தன்மை யானது பகைவர் சேனையைக்கண்டாற் பயப்படும் பேடி (வீரமில்லாதவன்) கையினிடத்து ஆயுதத்தை வைத்துக்கொண்டிருக்குந் தன்மைபோலப் பயன் படாமற் கெடுமென்பதாம். இதனால், முயற்சியால் செல்வத்தை வளர்விப்பவனுக்கே உபகாரஞ்செய்யுந் தன்மை கூடுமென்பது கண்டுகொள்க. பேடி.

௪௬௯ யென்பது பெண்பாற்கும் ஆண்பாற்கும்
லுக்கிசையப் பொருள் கூறப்பட்டது.

பொதுப்பெயர். ஆதலால் ஆண்பா ரு. இன்பம்

விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண். (615)

(இ-ள்) தன்னுடைய சுகத்தைக் கருதாதவனுகி முயற்சியை விடாது செய்து வருகிறவன் தன்னுடைய சுற்றத்தார் சிநேகர் முதலாயினுர் ஆகிய பாரத்தின் துன்பத்தினை நீக்கி அப்பாரத்தைத் தாங்கும் தாணுவனென்ப

தாம். முயற்சியுடையவன் சுற்றத்தார் முதலியவர் துன்பத்தை நீக்கிச் சுகஞ் செய்வன். எனவே, தன் துன்பம் நீக்கித் தான் சுகமடைவனென்பது சொல்

லாமலே

வானே

யமையும். இதனுல் காரியத்தை விரும்பாமல் காரணத்தை விரும்பு

எல்லா நலங்களும் எய்துவனென்பது கருத்து. பாரத்தைத் தாங்

குதலாவது—துன்பத்தை நீக்கிச் சுகத்தைச்
பது—ஆதாரமாயிருப்பன் என்பதாம்.

செய்தலாம். துணைவனென்

சு. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

(616).

(இ-ம்) அரசரிடத்து உண்டாகிய முயற்சியானது அவருடைய செல்வத்தைத் தினந்தோறும் வளரச்செய்யும்; அம்முயற்சி இல்லாதிருத்தலானது மேற்சொல்லிய செல்வத்தைக் குறைத்து அவ்வரசரைத் தரித்திரத்துக்கு ஆளாக்கிவிடும் என்பதாம். அரசர்க்குச் செல்வம்—படை, குடி, பொருள், மந்திரி, நட்பு, கோட்டை என்னும் ஆறுமாம்.

எ. மடியுளாள் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளாள் தாமரையி னாள்.

(617)

(இ-ம்) கரியமூதேவி ஒருவன் சோம்பலினிடத்து வந்து குடியிருப்பள். இலக்குமி, சோம்பலில்லாதவன் முயற்சியினிடத்து வந்து குடியிருப்பள் என்று சொல்வர் அறிந்தோர் என்பதாம். இதனால், தரித்திரம் வருதற்குக் காரணம் சோம்பலென்பதும் செல்வம் வருதற்குக் காரணம் முயற்சி யென்பதுங் கண்டுகொள்க. மூதேவி - தரித்திரம். இலக்குமி - செல்வம். கரியமூதேவி யென்றது பாவமாகிய மூதேவி யென்றபடி.

அ. பொறியின்மை யார்க்கும் பழியன்று அறிவறிந்
தாள்வினை யின்மை பழி. (618)



(இ-ம்) பயனைக் கொடுப்பதாகிய ஊழில்லாதிருத்தல் யாருக்கும் பழி யாகமாட்டாது. அறியவேண்டிய விஷயங்களை யறிந்து அந்தந்தச் சமயத்தில் முயற்சி செய்யாதிருத்தலே உலகம் பழிக்கப்படுவதென்பதாம், ஊழொத்துவாராத இடத்து முயற்சியாற் பயனில்லை யென்பாரை நோக்கி உலகம் அந்த ஊழைப் பழிக்கமாட்டாது. இவ்விடத்து முயற்சியில்லாதிருத்தலையே பழிக்கும் ஆதலால் இவ்வாறு கூறியருளினர். ஊழ் - முன்செய்த வினை.

கூ தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

(619)

(இ-ம்) முயற்சி செய்தவினை ஊழில்லாமையால் முயற்சி செய்தவன் கருதிய பயனை க் கொடாதானும் அம்முயற்சியானது வீண்போகாமல் தனக் கிடமாகிய உடம்பு வரு ந்திய வருத்தத்தின் அள வு சிறிது பயனையாவது கொடுக்கும் என்பதாம். எனவே, ஊழுள்ள இடத்துத் தன்னளவுக்கு மிஞ் சிய பயனைக் கொடுக்குமென்பதாயிற்று. ஆதலால், எந்த வகையாலும் முயற் சியைக் கைவிடக்கூடாதென்பது கருத்து. முயற்சி - இவ்விடத்து மன எழுச்சி.

கo. ஊ ழையும் உப்பக்கங் காண்ப ருலைவின் றித்
தா ழா துஞற் று பவர்.

(620)

(இ-ம்) செய்த வினை க்குத் தக்கதாம் பயனை விலக்குவதாகிய ஊழை யும் எதிர்த்து நிற்கவொட்டாமல் புறங்காட்டிப் போகச்செய்து வெற்றியடை வர், ஊழ் விலக்குதலாற் சோர்வடையாமல் ஆராய்ச்சியினும் வலி முதலி யவை அறிதலினும் செயலினும் குற்றமற முயற்சி செய்தலையுடையவர் என்பதாம். ஊழானது ஒருதரம் இருதரம் விலக்குமல்லாமல் பலதரம் முயற்சி செய்தால் விலக் கமாட்டாது. ஆதலால் இவ்வாறு கூறி அருளினர்.

## 63-ஆம்

## அதி.—இடுக்கணழியாமை.

அஃதாவது, ஒரு தொழில் செய்வான் ஊழாலாவது பொருளில்லாமை யாலாவது சரீர வருத்தத்தாலாவது துன்பம் வந்த இடத்து மனங்கலங்கா திருத்தல்.

க. இடுக்கண் வருங்கால் நகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(621)



(இ-ம்) ஒருவன் ஒரு காரியத்தைச் செய்து முடிக்குமிடத்து அதற் கிடையூறாகிய துன்பம் வந்தால் மனமகிழவேண்டும்; அத்துன்பத்தைக் கெடுத்து மேற்காரியத்தைச் செய்தற்குக் கருவி அம்மகிழ்ச்சியைப்போல வேறு யாதொன்றுமில்லை என்பதாம். இவ்வாறு மனமகிழாவிட்டால் எடுத்த காரியம் அத்துன்பத்தால் முடியாமற் போம் என்பது கருத்து.

உ. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையான்

உள்ளத்தி னுள்ளக் கெடும்.

(622)

(இ-ம்) வெள்ளம்போல அளவுபடாதனவாகிய துன்பங்களெல்லாம் அறிவுடையவன் தன்னுள்ளத்திலே அத்துன்பமானது மனத்தின் கோட் பாடு (கொள்கை) அல்லாமல் வேறில்லை யென்று நினைத்த மாத்திரத்திலே நீங்கும் என்பதாம். இதனால், துன்பம் நீங்குதற்கு உபாயம் கூறியவாறு கண்டுகொள்க. ஆகவே, துன்பத்தைச் சுகமாக நினைத்து அநுபவிப்பவனுக்கு அத்துன்பம் இல்லை யென்பது கருத்து.

௩. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

(623)

(இ-ம்) வினை (தொழில்) செய்யுங்காலத்து அதற்கிடையூறாக வந்த துன்பத்துக்காக மனத்தளர்ச்சியடையாதிருப்பவர் அத்துன்பமாகிய இடையூற்றுக்குத் தாம் துன்பத்தை யுண்டாக்குவர் என்பதாம். எப்படியென்றால், எடுத்த காரியம் முடிக்க எண்ணுவார் இடையிலே வந்த இடையூற்றுக்கு அஞ்சாமல் விடாமுயற்சி செய்தால் எண்ணியபடி முடியும். முடியவே வந்த இடையூறு முனைத்து நில்லாமல் வருந்தி ஓடிப்போகும் என்க.

௪. மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
இடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

(624)

(இ-ம்) தான்சென்ற இடமெல்லாம் பண்டியை யிழுக்கும் பகடுபோல் பவனுகிய ஒருவன் செய்யுந் தொழிலுக்கு வந்த இடையூறு நிலைநில்லாமல் அழிந்துவிடுமென்பதாம். பண்டியிழுக்கும் பகடு (கடாமாடு) நடக்கும் போது சேற்றுநில முதலிய இடையூறுகள் வந்தாலும் பக்கத்தில் விலகியும் மூக்கை யூன்றியும் காலால் தவழ்ந்தும் அந்தந்த இடங்களைக் கடந்து செல்லுதல்போலக் காரியஞ்செய்வான் அதைத் தடுக்கவரும் இடையூறுகளைப் பல முயற்சியாற் கடந்து கண்டுகொள்க.

அக்காரியத்தை முடிப்பனென்னு பொருளை விரித்துக்

க்கூஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

ரு. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற

இடுக்கண் இடுக்கட் படும்.
(625)

(இ-ம்) மனத்தின் கொள்கையை விடாமல் இடைவிடா முயற்சி செய் பவனுக்கு மேலும் மேலும் ஒன்றாவது பலவாவது துன்பங்கள் அடுக்கடுக்காக வந்தாலும் அவையெல்லாம் நிலைநில்லாம லழிந்துவிடும் என்பதாம். இத் திருக்குறளாலும் இதன் முன்னிரண்டு திருக்குறளாலும் ஊழால்வரும் இடை யூற்றுக்குப் பயப்படக்கூடாதென்பது கூறப்பட்டது.

சு. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புதல் தேற்றா தவர்.
(626)

( இ -ம் ) வறுமை வந்த காலத்துப் பொருளில்லாமையால் நாம் இனி யென்செய்வோமென்று துன்பப்படுவரோ, அப்பொருள் பெற்ற முற் காலத்து இறுமாப்புற்று இன்பமடைதலை யறியாதவர் என்பதாம். தரித்திர மும் செல்வமும் நிலைநில்லாத பொருள்களென்று கண்டவருக்குத் துன்பம் இல்லையென்பது கருத்து. இவை இரண்டும் நிலையற்றவை யென்று அநு பவத்தாற் காணுதலல்லாமலும் அச்சொற்பொருள்களாலும் காணலாம். எப்படியென்றால், த ரித்திரம் உன் னிடத்தில் தரித்திருக்கமாட்டோம். செல் வம் உன்னைவிட்டுச்

செல்வோம் (போவோம்) என்னும் பொருளோடு கூடி யிருத்தலை யறிதல் என்க.

எ. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல். (627)

(இ-ம்) எல்லா வகுப்புக்களிலுமுள்ள உடம்புகள் துன்பம் வந்து சேர்தற்கு இலக்கு (இடம்) என்று தெளிந்து, தம்மிடத்துவந்த கலக்கத்தை (துன்பத்தைத்) துன்பமாக அறிவுடையார் கொள்ளமாட்டாரென்பதாம். எனவே, துன்பத்தைத் துன்பமாக நினையாதவரே விடாமுயற்சி செய்வரென் பது கண்டுகொள்க.

அ. இன்பம் விழையான் இடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன். (628)

(இ-ம்) தன்னுடம்பிற்கு இன்பமாகியவைகளை விரும்பாமல் தானெடுத்த காரியத்துக்கு இடையூறு வந்தவிடத்து இது தீவினையால் வந்ததென்று அறிபவன் துன்பத்தை யடையமாட்டான் என்பதாம். அப்படிப்பட்டவனே முயற்சியிற் சோர்வில்லாதவனென்பது கருத்து.

கூ. இன்பத்து ளின்பம் விழையா தான்
றுன்பத்துள்
துன்ப முறுத லிலன்.
(629)

(இ-ம்) தான்செய்த வினையால் இன்பம் வந்த இடத்து, அதனைப் புறத்தே யநுபவித்துக்கொண்டே மனத்தால் விரும்பாதவன் துன்பம் வந்த இடத்தும் அதனை அவ்வாறநுபவித்துக்கொண்டு மனத்தால் வருத்தப்பட மாட்டான் என்பதாம். இதனால் இன்பத்தையும் துன்பத்தையும் சமமாக நினைப்பவனுக்கு ஒருகேடு மில்லையென்பது கருத்து.

கo.

இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

(630)

(இ-ம்) ஒருவன் வினை (தொழில்) செய்யுமிடத்து அதற்கிடையூறாய் வரும் துன்பத்தையே தனக்கு இன்பமாகப் பாவித்துக்கொள்வானானால் அதனால் அவன் பகைவர் நன்கு மதித்தற்குக் காரணமாகிய சிறப்புண்டாகும் என்பதாம்.

துன்பமென்பது, உயிர்க்கியல்பாகிய குணமல்லாமல் க்ஷணநேர முடையதாய் மனத்திலுண்டாகும் கொள்கையாதலால் அதனை யின்பமாகப் பாவிக்கவே, அத்துன்பத்துக்கு வருந்தாமல் மனமகிழ்ச்சி யுடையவனாய்த் தொடங்கிய வினையை முயற்சியிற் சோர்வில்லாமல் முடித்தே விடுவனென் பது கருத்து. இத்திருக்குறளும் இதன் முன் மூன்று திருக்குறளும் மெய் வருத்தத்தாலாகிய துன்பத்துக்கு வருந்ாதிருத்தலும் வருந்தாதிருத்தற்கு உபாயமு ங் கூறப்பட்டன தெரிந்துகொள்க.

அரசியல் முற்றிற்று.

---

## அங்க இயல்.

அஃதாவது, அரசியல் நடத்துங்கால் ஒன்றற்கொன்று துணையாகிய அங்கங்கள் ஆறு; அவற்றினியல்பு முப்பத்திரண்டு அதிகாரத்தாற் சொல்லத் தொடங்கி, அவ்வாறனுள்ளும் காவலாகிய பண்டியை நடாத்துமிடத்து அவ் வரசனுக்கு இணையாகிய மந்திரியினியல்பு பத்ததிகாரத்தாற் சொல்லத் தொடங்கி, முதலாவது அமைச்சுக் கூறுகின்றார்.

அமைச்சு-மந்திரியின் தன்மை.

### 64-ஆம் அதி.—அமைச்சு.

அஃதாவது, மந்திரியின் தன்மை;

தன்மை-குணங்களும் செயல்களும்.

க. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யும்
அருவினையு மாண்ட தமைச்சு.

(631)

25

கக௩ச திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) ஒரு தொழில் செய்யுமிடத்து அதற்குவேண்டுஞ் சாதனங் களும், அதற்கேற்ற காலமும் அது செய்யும் உபாயமும் (வழியும்), அவ் வழியிற் செய்யப்படும் அரிய செய்கையும் பொருந்த ஆலோசிப்பவனே மந்திரி யாவான் என்பதாம். சாதனங்கள்-சேனையும், பொருளும்.

உ. வன்கண் குடிகாத்தல் கற்றறிதலாள்வினை யோ
டைந்துடன் மாண்ட தமைச்சு.
(632)

(இ-ம்) தொழில்செய்யுமிடத்துச்

சோர்வில்லாமையும், குடிகளைக் காத்தலும், நீதிசாத்திரங்களை யறிந்து, கொள்ளத் தக்கதையும் தள்ளத்தக்க தையும் தெரிவதும், முயற்சியும் ஆகிய நான்கும் மேற்கு ரளிற்கூறிய அங்கங் கள் ஐந்துடனே மாட்சிமைப்பட்டிருப்பவன் மந்திரியாவான் என்பதாம். மாட்சிமைப்பட்டிருத்தல்-மேன்மையடைந்திருத்தல்.

ந. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.
(633)

(இ-ம்) வினை (யுத்தம்) சம்பவித்த இடத்துப் பகைவர்க்குத் துணை யாய் நின்றவரை அவரைவிட்டுப் பிரிக்கவேண்டுமானாற் பிரித்தலும், தம் மிடத்திலுள்ளவரைப் பகைவர் பிரியாதிருக்கக் கொடையாலும் இனிய வார்த் தையாலும் பேணிக் காத்தலும் , முன்னே தம்மிடத்திருந்தும் தம்மைச் சேர்ந்தவரிடத்திருந்தும் பிரிந்துபோனவரைத் தம்மோடு பொருத்தவேண்டி யிருந்தாற் பொருத்தலும் வல்லவனே மந்திரியாவான் என்பதாம்.

ச. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.
(634)

(இ-ம்) ஒரு காரியத்தின் செய்கை பலவாறாகத் தோன்றினால் அவற்றுள் உண்மையை ஆராய்ந்தறிதலும், அக்காரியத்தைச் செய்யும்போது கைகூடும் வகையை நாடிச்செய்தலும், சிலரைப் பிரித்தலும் பொருத்தலுஞ் செய்யுமிடத்து அவர்க்கு இதுவே செய்யத்தக்கதென்று துணிவு பிறக்கும்படி சொல்லுதலும் வல்லவனே மந்திரியாவான் என்பதாம்.

ரு. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்

திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

(635)

(இ-ம்) அரசனாற் செய்யப்படுந் தருமங்களையறிந்து தனக்கேற்ற கல்வி யறிவால் நிறைந்து அமைந்த சொல்லுடையவனாய் எந்தக் காலத்தும் காரியம்

கூசு-ஆம் அதி.—அமைச்சு. கூரு

செய்யும் வகையை யறிந்தவன் அரசனுக்கு ஆராய்ச்சித்துணையாகிய மந்திரி யாவன் என்பதாம், எக்காலத்தும் என்றது-அரசன்வளஞ் சிறந்த காலத்தும் சுருங்கிய காலத்தும் இவ்விரண்டுக்கும் மத்திய காலத்தும் என்பதாம்,

௬. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.
(636)

(இ-ம்) இயற்கையாகிய நுட்ப அறிவைச் செயற்கையாகிய நூலறி வோடு உடையராகிய மந்திரிகளுக்குமுன் பகைவர்செய்யுஞ் சூழ்ச் சிகள் அம் மந்திரிகள் சூழ்ச்சியால் அழிந்துவிடாமல் எதிர்த்துநிற்பவைகள் இல்லை என்ப தாம்.
மதிநு ட்பம்-ஊழால் வாத்தக்கது.
சூழ்ச்சி-எடுத்துக்கொண்ட வினை முடிக்கும் உபாயச்செய்கை.

௭. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
தியற்கை யறிந்து செயல்.
(637)

(இ-ம்) நூல் முறைப்படி வினை (தொழில்) செய்யுந் திறத்தையறிந்த இடத்தும், அப்போதப்போது நடக்கின்ற உலக நடையையறிந்து அதனோடு பொருந்துமாறு செய்யக்கடவதைச் செய்யவேண்டும் எ ன்பதாம். அப்படிச் செய்யாவிட்டால் உலகம் பழிக்குமென்பது கருத்து.
உலகநடை-உயர்ந்தோர் ஒப்புக்கொள்ளச் செய்யுஞ் செய்கை.

௮. அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந் தான் கூறல் கடன்.
(638)

(இ-ம்) கற்றறிந்து சொல்லியவர் அறிவையுங் கெடுத்து, அரசன் தானும் அறியாதவனுயிருந்தாலும் அதுபற்றி வெறுத்துவிடாது அவ்வாச னுக்கு உறுதியான காரியங்களைப் பக்கத்திலிருக்கு மந்திரியானவன் சொல்லுதல் முறை (கடமை) என்பதாம். சொல்லாவிட்டால் அக் குற்றத்தால் வருங் கேட்டை உலகத்தார் அரசன்மேலேற்ருமல் மந்திரிமேலேற்றிப் பழி (நிந்தை) கூறுவர். ஆதலா லிவவாறு கூறியருளினர்.

சூ. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும். (639)

(இ-ம்) அரசனுக்கு எழுபதுகோடி பகைவர் புறத்திலிருப்பதைப் பார்க்கினும் பக்கத்தில் வஞ்சகமாகக் குற்றத்தைச் செய்ய நினைக்கும் ஒரு மந்திரியிருப்பது மிகக்கொடியது என்பதாம். ஏனென்ருல், புறப்பகைவர்



செய்யும் வினைக்குத் தப்பினுலும் தப்பலாம். உட்பகைக்குத் தப்ப முடியாது ஆதலாலென்க. இக்கருத்தை நாயனர் 889 ஆவது திருக்குறளில் நன்கு விளக்கியிருக்கின்றனர். கண்டுகொள்க. எழுபதுகோடி யென்றது, எண்ணி

நந்தகோடி யென்னும் பொருள்படப் பெருந்தொகையுளொன்று காட்டிய தாம்.

கo. முறைபடச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலாஅ தவர்.

(640)

(இ-ம்) செய்யப்படுங்காரியங்களை முன்னமே அடைவுபட (முறையாக) எண்ணி வைத்திருந்தும் அக்காரியங்களை முற்றுப்பெறச் செய்யமாட்டார் யாரென்றால், வினைவந்த காலத்துச் செய்தற்கேற்ற கூறுபாடில்லாதவர் என்பதாம். கூறுபாடாவன-வந்த வந்த இடையூறுகட்குத் தக்க தக்க பரிகாரங்கள் செய்தலும் திடசித்தமுடைமையுமாம். இத்தன்மையில்லாத மந்திரிகளை நீக்கிவிடவேண்டுமென்பது கருத்து.

---

## 6 5-ஆம் அதி.—சொல்வன்மை.

அஃதாவது, தானெண்ணிய காரியம் முடியும்விதம் வார்த்தை சொல்ல வல்லவனாதல்.

க. நாநல மென்னும் நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(641)

(இ-ம்) மந்திரிகளுக்கு அவசியமாகவேண்டும் குணமாவது, பேரறி வுடையோரால் நாநலமென்று நன்குமதித் துச் சொல்லப்படும் நலத்தினை

யுடையராகுதலாம். அ ந்நலமானது மற்ற எல்லா நலத்துள்ளும் அடங்குவ தில்லாமல் மிக உயர்ந்தது என்பதாம். இந்நலம் மேலே மந்திரிகளுக்குக் கூறிய குணமெல்லாவற்றுள்ளும் சிறந்ததாதலால் இதை யறிவுடையாரெல் லாருமே விடாது கைக்கொள்ளவேண்டுமென்பது கண்டுகொள்க. நாநலம்-நாவாலுண்டாகிய நலம்.

உ. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.
(642)

(இ-ம்) தம்முடைய அரசனுக்கும் அவனுடைய அங்கங்களுக்கும் ஆக்கமுங் கேடும் தம் சொல்லால் வருதலால் அத்தன்மையுடையதாகிய தம் சொல்லினிடத்துச் சோர்வு (குற்றம்) வராமல் தடுத்து மந்திரிகள் காத்துக்

கூரு-ஆம் அதி.—சொல்வன்மை.

கக௯எ

கொள்ளவேண்டும் என்பதாம். எனவே, நல்லசொல்லால் நன்மையும், தீய சொல்லால் தீமையும் வருமென்பதாயிற்று. அங்கங்கள்-படை, குடி முதலிய வைகள்.

ந. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்

வேட்ப மொழிவதாஞ் சொல்.

(643)

(இ-ம்) தம்மோடு சிநேகமாயுள்ளவரைப் பின்னர் வேறுபடாமல் தம் வசப்படுத்துங் குணங்களை விரும்பித் தமக்குப் பகையாய்த் தம்சொல்லை யேற்றுக்கொள்ளாதவரும், பின்னர்ப் பகைமை நீங்கி யேற்றுக்கொள்ளும் விதமாகச் சொல்லப்படுவதே மந்திரிகளுக்குச் சொல்லாவது என்பதாம். குணங்களாவன-சுருங்கச்சொல்லி விளங்கவைத்தல் , இனியவாதல், சிறந்த பயன் தருதல் முதலியவைகள்.

ச. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளும் அதனினூஉங் கில்லை.

(644)

(இ-ம்) மேலேகூறிய அத்தன்மை யுடையனவாயும் கேட்பாருடையன வாயுமுள்ள குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவம் என்பவைகளால் வரும் தகுதியளவின் ஏற்றத்தாழ்வுகளை யறிந்து அந்தந்த முறைமைக்குப் பொருத்தமாகச் சொல்லவேண்டும். அப்படிச் சொல்லுதற்கு மேற்பட்ட தருமமும் பொருளும் இல்லை என்பதாம். எப்படியென்றால், மேற் சொன்ன முறைப்படி பேசினால் உலகத்தோடொட்ட ஒழுகுதலும் இனிமையும்

ஆகுமாதலால் தருமமாயிற்று, தம் காரியமுடிதலால் பொருளாயிற்று என்க.

௫. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
வெல்லுஞ்சொல் இன்மை யறிந்து.
(645)

(இ-ம்) மந்திரிகள் தாம் சொல்லக்கருதியசொல் எப்படிப்பட்டதா யிருக்கவேண்டுமென்றால் தம் சொல்லைப் பகைவர் மறுத்துப் பேசுதற்கிட மில்லாததாயிருக்கவேண்டும். அத்தன்மையான சொற்களைத் தெரிந்தெடுத் துப் பேசக்கடவர் என்பதாம். இவரே நுண்ணறிவிற் சிறந்தாரென்று நன்கு மதிக்கப்படுவர்.

௬. வேட்பத்தாம் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்.
(646)



(இ-ம்) பிறருக்குத் தாம்சொல்லும்போது அவர் பின்னும் விரும்பிக் கேட்கும் விதமாகச்சொல்லி, அவர் தமக்குச் சொல்லும்போது அச்சொல்லின் பயனை

மாத்திரங்கொண்டு பயனில்லாதவைகளை விட்டுவிடுதலே மந்திரித் தனத்திற்குற்ற மற்றவாது துணிவு என்பதாம். தமக்குச் சமமானவர் சொல் லுங்கால் ஏதேனுங் குற்றமிருந்தால் அதுபற்றி அவரைத் தாம் இகழ்ந்து பேசுதல் தகுதியல்ல ஆதலால் இவ்வாறு கூறியருளினர். துணிவு-இவ் விடத்துக்கொள்கை.

எ. சொலல்வல்லன் சோர்விலன் அஞ்சா னவனை

யிகல்வெல்லல் யார்க்கு மரிது.

(647)

(இ-ம்) தாம் எண்ணிய காரியங்களைப் பிறருக்குப் பொருந்தச் சொல்ல வல்லவனுய்ச் சொல்லவேண்டியவைகள் மிகப் பலவாகியஇடத்தும் ஒன்றினும் மறப்பு இல்லாதவனுய்ச் சபையிலிருந்து பேசுதற்குப் பயப்படாமலிருப்பவனை விரோதித்து வெல்லுதல் யாருக்கும் முடியாது என்பதாம்.

அ .

விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

(648)

(இ-ம்) சொல்லப்படுங் காரியங்களை

வரிசையாகக்கோத்து (இசைத்து) இனிமையாகச் சொல்லுதல் வல்லவரை அடையப்பெற்றால் உலகம் அச்சொற்களை விரைந்து ஏற்றுக்கொள்ளும் என்பதாம். வரிசையாகக் கோத்த லாவது-முன் சொல்லப்படுவதைமுன்னும் பின் சொல்லப்படுவதைப் பின்னும் முறைதவறாமல் பொருத்திப் பேசுதல். இனிமையாக-கேட்பவருக்கு இன்ப முண்டாக. இவ்விதம் பேசுதல் நூற்றொருவனுதலால் இவனை வல்லானென்று அருளிச்செய்தனர். இக்கருத்துப்பற்றியே "ஆர்த்தசபை நூற் றொருவன் ஆயிரத்தொன் றாம் புலவன்" என்றார் பிறரும். உலகம்-உயர்ந்தோர்.

சுூ. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
சிலசொல்லல் தேற்றா தவர்.

(649)

(இ-ம்) குற்றமற்றவைகளாய்ச் சில வார்த்தைகளை மேலே வசனத்திற் சொல்லியபடி உறுதியாக இணக்கிப்பேசத் தெரியாதவரே பலவாய்த் தொடுத்து விரிவாகப் பேசுதற்கு விரும்புவரென்பதாம். குற்றமாவன-இதன் மு ந்திய திருக்குறளிற்கூறிய குணங்களுக்கு மறுதலையாகியவைகள்; அவை, சொற்களை வரிசைப்படுத்திப் பேசத்தெரியாமை, கேட்பவர்க்கு இன்ப முண்டாகப் பேசத்தெரியாமை என்பனவாம். இதனுல், சுருங்கச்சொல்லி விளங்கவைத்தலே அழகென்பது பெறப்பட்டது.

௬௦. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணரா விரித்து ரையா தார்.
(650)

(இ-ம்) தாம் கற்றறிந்த நூற்பொருளைப் பிறரறியும்படி விரித்துச் சொல்லத் தெரியாதவர், பூங்கொத்தில் மலர்ந்திருந்தும் பிறருக்குப் பிரயோசனமாகும்படி மணஞ்செய்யாத முருக்கம் பூவை ஒப்பாவரென்பதாம். அப் பூவை ஒருவரும் விரும்பாத விதம்போலத் தாம் தெரிந்ததைப் பிறரறியும்படி விரித்துப் பேசத்தெரியாத மந்திரிகளை யாரும் மகிழ்ந்து பூசிதை செய்ய மாட்டார்களென்று விரித்துப் பொருளைவிளக்கியறிந்துகொள்க. இங்கே மந்திரிகளுக்குச் சொன்னது வித்துவான்களுக்கும் ஆகும்.

---

## 66-ஆம் அதி.—வினைத்தூய்மை.

அஃதாவது, தாம் செய்யப்படுங் காரியங்கள் பொருளே யல்லாமல் புண்ணியமும் புகழுந் தந்து நன்மையுடையனவாதல்.

க. துணைநலம் ஆக்கந் தரூஉம் வினை நலம்
வேண்டி ய எல்லாந் தரும்.
(651)
(இ-ம்) ஒருவனுக்குத் துணையாயுள்ளாரது நன்மை (உதவி) யானது செல்வமொன்றுமாத்திரங் கொடுக்கும். வினை (தன்செய்கை) யினதுநன்மை (உதவி) யானது செல்வங்கொடுப்பதோடு அவன்விரும்பிய எல்லாப்பயனையுங் கொடுக்குமென்பதாம். எல்லாப்பயனென்றது, இம்மையில் அறம்பொருளின் பங்களையும் மறுமையில் தான்விரும்பிய தேவர் இந்திரன்முதலியோர் பதவி களையுமென்று கண்டுகொள்க. இதனால், காணப்படும் துணையாயினார் நலத் தைப் பார்க்கிலுங் கருதப்படும் வினைநலஞ் சிறந்ததென்பது கருத்து.
உ. என்று மொரீஇதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.
(652)
(இ-ம்) தம்மரசனுக்கு இம்மையில் புகழும் கொடாத வினை (செய்கை) களை எப்பொழுதும்

மறுமையில் புண்ணியமும்
மந்திரிகள் நீக்கவேண்டும்
என்பதாம். வேண்டுமென்றது அவசியமென்னும்

பொருள் குறித்து நின்றது.

௩. ஒழிதல் வேண்டும் ஒளிமாழ்குஞ் செய்வினை
ஆஅது மென்னு மவர்.

(653)



(இ-ம்) நாம் மேன்மையடைய வேண்டுமென்று நினைப்பவர், தம் முடைய ஒளி கெடுதற்குக் காரணமாகிய வினை (செய்கை) களைச் செய்யா திருக்கவேண் டும் என்பதாம். அரசனை விளங்கச்செய்வது புகழாதலால் அப் புகழை ஒளியென்று கூறியருளினர். "உறங்கு மாயினு மன்னவன் றன் னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்றார் பிறரும். (சீவக சிந்தாமணி நாமகளிலம்பகம் 219) ஒளியென்பது—எல்லாராலும் நன்கு மதிக் கப்படும் புகழ்.

ச. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

(654)

(இ-ம்) தாம் துன்பத்திலே யகப்படுங் காலம் வந்தாலும் அத்துன்

பத்தை நீக்கும்பொருட்டு இழிவான காரியங்களைச் செய்யமாட்டார், சலித்த லில்லாத பேரறிவினையுடையவர் என்பதாம். ஏனென்றால், சிறிது நேரத் திலே நீங்குந் துன்பம் நோக்கி நெடுங்காலம் நிற்கும் பழி எய்தக்கூடாதென் றும், என்ன செய்தாலும் வருவது வந்தே தீருமென்றும் அறிந்தாராதலா லென்க.

ரு. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று. (655)

(இ-ம்) ஒருவன் தான் செய்தது எத்தன்மையுடையதென்று, செய்த பின் தானே வருந்தத்தக்க செயல்களை ஒருபோதுஞ் செய்யாதிருக்கவேண்டும். அப்படியல்லாமல் மயங்கிச் செய்வானானால் அதன்மேல் அவ்விதஞ் செய்ததற்காக வருத்தப்படாதிருத்தல் நல்லது என்பதாம். ஏனென்றால், தான் செய்யத்தகாத செய்கைகளைச் செய்ததற்காக வருந்துவானானால் அச் செய்கைகளை நீக்கும் வழியறிந்திலனெனவும் திடசித்தமில்லாதவனெனவும்

பயனில்லாதன செய்கின்றானெனவும் தன்குற்றத்தைத் தானே வெளிப் படுத்துகின்றானெனவும் எல்லாரும் இகழ்ந்து பேசுதற்கு இடமாம் ஆதலா லென்க.

௬. ஈன்றாள் பசிகாண்பா ளாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

(656)

(இ-ம்) தன்னைப் பெற்றதாய் பசியோடிருக்க வறுமையால் அப்பசியை நீக்கமாட்டாமல் பார்த்து வருந்திக்கொண்டிருப்பானாலும் அறிவுடையோர் பழித்துச் சொல்லும் தொழிலை ஒருவன் செய்யாதிருக்கவேண்டும் என்பதாம். தீய தொழிலைச் செய்தாவது தாய், கற்புடைய மனைவிமக்களைப் பார்

௬௬-ஆம் அதி.—வினைத்தூய்மை.

உ0௭

காக்க வேண்டுமென்பது தரும சாத்திரங்கூறும் விதியானாலும், பொருள் நூல் வழி நடத்தலும் அரசர் தொழிற்கு உரியாதலும் நன்கு மதிப்பும் உடைய மந்திரிகளுக்கு அவ்விதி கூடாமையால் சான்றோர் பழிக்குஞ் செய்கையைச் செய்வது மந்திரிகளுக்கு ஆகாதென்பது தோன்ற இவ்வாறு கூறியருளினர். சான்றோர்-எல்லாக்குணங்களும் நிறைந்தவர். மேற்கூறிய

தாய் முதலியோரைத் தீயதொழில் செய்தாவது காக்கவேண்டுமென்றதனால் நல்ல தொழில் செய்து காக்கவேண்டுமென்பதே தகுதியென்று நுட்பமாகத் தெரிந்து கொள்க.

எ. பழிமலைந் தெய்திய ஆக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

(657)

(இ-ம்) இழிந்தோர் தீத்தொழிலைச் செய்து அதனாற் பழியைத் தலைமேற் சுமந்துகொண்டு பெற்ற செல்வத்தைப் பார்க்கினும், அத்தொழிலைச் செய்யாத மேலோர் அநுபவிக்கும் மிகுந்த தரித்திரமே உயர்ந்ததென்பதாம். இதனால் நிலையில்லாத செல்வத்தின் பொருட்டு நிலைநிற்பதாகிய பழிச்செய்கையைச் செய்யக்கூடாதென்று கண்டுகொள்க.

அ கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

(658)

(இ-ம்) நூலறிவுடையோரால் விலக்கப்பட்ட செய்கைகளைத் தாமும் விலக்கவேண்டியதல்லாமல் பொருளாசையால் செய்த மந்திரிகளுக்கு அச் செயல் தீயதாகையால் முற்றுப்பெறமாட்டாது. ஒருகால் முற்றுப்பெற்றாலும் பின்பு அது துன்பத்தையே கொடுக்கும் என்பதாம்.

கூ. அழக்கொண்ட எல்லாம் அழப்போ மிழப்பினும்
பிற்பயக்கும் நற்பா லவை,
(659)

(இ-ம்) ஒருவன் பிறருக்குத் தீவினைகளைச் செய்து, அவரழுது வருந் .தும்படி அவரிடத்துப் பறித்துக்கொண்ட எல்லாப்பொருள்களும் இம்மையிலே தானும் அவரைப்போல அழுது வருந்தும்படி தன்னைவிட்டுப் போய்விடும். நல்வினையாற் சம்பாதித்த பொருள்களோ ஊழ்வினையா லிழந்துவிட்டானு ஞாலு.ம் பின்னர் வந்து, அவனுக்குப் பயனைக் கொடுத்துவிடும் என்பதாம். பின்னரென்பது தீய ஊழ் நீங்கி நல்லூழ்வரும் சமயம். அவைதாவது, இம்மை யிலும் ம றுமையிலுமாம்.





கO. சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று.
(660)

(இ-ம்) மந்திரி தீச்செய்கையாற் பொருளையுண்டாக்கி அரசனுக்கு இன்பஞ் செய்தலானது பச்சை மண்பாத்திரத்தில் நீரை நிறையவிட்டு, அந்நீர் வெளியே போகாமற் காவல் செய்ததுபோலு மென்பதாம். எனவே, பச்சை மண்குடத்தில் நீர் தானுங் கெட்டுக் குடத்தையும் கெடுத்தல்போலத் தீய வழியால் வந்த பொருள் தானும் சிதறப்பட்டுத் தன்னையடைந்தவனையுங் கெடுக்குமென்பது தெளிவாகக் கண்டு கொள்க.

---

## 67-ஆம் அதி.

### —வினைத்திட்பம்.

அஃதாவது, மேற்சொல்லிய நல்லகாரிய முடிப்பவனுக்கு வேண்டுவதாகிய மனவலிமை.

க. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய எல்லாம் பிற. (661)

(இ-ம்) வினை (யுத்தம்) செய்யுமிடத்து வலிமையென்று சொல்லப் படுவது, அவ்வினையை முற்றுப் பெறச் செய்வானொருவன் மனத்தின் வலிமையேயாகும். மற்றைச் சேனை அரண் (கோட்டை) நட்பு

முதலியவெல்லாம் வினை முடித்தற்குச் சாதனமாயிருந்தாலும் வலிமையென்று சொல்லப்படா என்பதாம். ஏனென்றால், வினை முடிப்பான் மனவலிமையிற் சோர்ந்துவிட்டால் சேனை முதலியவற்றால் பயன்படுதலில்லையாதலாலென்க.

௨. ஊறொரா லுற்றபி னொல்கார்மை யிவ்விரண்டின்
ஆறென்ப ராய்ந்தவர் கோள். (662)

(இ-ம்) நீதி நூல்களை முன்னேயாராய்ந்து தெளிந்த மந்திரிகளது துணிபாவது, குற்றப்படும் காரியங்களைச் செய்யாதிருத்தலும், குற்றப் படாதென்றறிந்து செய்யுங்காரியங்கள் ஊழால் இடையூறு வந்து பயன் படாமற் போனால் அதற்கு மன்தளராதிருத்தலுமாகிய இந்த இரண்டின் வழியேயுள்ளதென்று நூலறிவுடையவர் சொல்லுவர் என்பதாம்.

௩. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கின்
எற்றா விழுமந் தரும்.

உ0ங

(இ-ம்) ஒருவன் செய்யப்படுந் தொழில் முடிந்தபின் பிறருக்குத் தெரி யும்படி முன்னெல்லாம் மறைத்துச் செ ய்வதே அத்தொழிலுக்குப் பலமுடைய த ாகும். அப்படியல்லாமல் மத்தியிலே வெளிப்படுமானால் அத்தொழில்செய் வானுக்கு நீங்காத துன்பத்தை அவ்வெளிப்படுதல் கொடுக்கும் என்பதாம். எப்படியென்றால், தான் செய்யுந் தொழிலைத் தன் பகைவரறிந்தால் அத் தொழில் முடியவொட்டாமல் தடுப்பராதலாலென்க.

ச. சொல்லுதல் யார்க்கு மெளிய அரியவாஞ் சொல்லிய வண்ணஞ் செயல்.

(664)
(இ-ம்) நாம் இத்தொழிலை இவ்வழியாற் செய்து முடித்துவிடுவோ மென்று வரிசையாகச் சொல்லுதல் எல்லாருக்கும் இலேசாகும். அவ்வாறு செய்து முடிப்பதே பெரியதாகும் என்பதாம். இதனால் சொல்லுதலைப் பார்க்கிலும் சொல்லியபடி செய்தலே வலிமையுடையதென்பது வெளிப் படையாகக் கண்டுகொள்க.

ரு. வினைத்திட்பம் மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
ணூறெய்தி யுள்ளப் படும்.

(665)

(இ-ம்) ஒவ்வொன்றையும் ஆராயும் எண்ணத்தாற் சிறப்படைந்து மற்றை வேண்டிய செய்கைகளாலும் மாட்சிமைப்பட்ட மந்திரிகளது மன வலிமையானது அரசனுக்குப் புகழும் பொருளும் பொருந்தச் செய்தலால் எல்லாராலும் நன்கு மதிக்கப்படும் என்பதாம். மாட்சிமைப்படல் - குணத் தாற் சிறப்படைதல்.

சு. எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.

(666)

(இ-ம்) தாம் அடைய நினைத்த எல்லாப் பொருள்களையும் நினைத்த படியே யடைவர், நினைத்தவர் நினைத்த பொருள் வருவதற்குக் காரண மாகிய வினையினிடத்துக் கலங்காத (சோர்வில்லாத) வலிமையுடையவரா யிருந்தால் என்பதாம். இதனால், விடாத முயர்சி ஒவ்வொரு காரியத்துக் கும் அவசியம் வேண்டுமென்பதாயிற்று.

எ. உருவுகண் டெள்ளாமை வேண்டு

கச்சாணி யன்ன ருடைத்து.

முருள்பெருந்தேர்க்

(667)

(இ-ம்) உருண்டு நடக்கின்ற தேருக்கு அச்சினிடத்துள்ள ஆணியைப்போல வடிவாற்

அந்நடத்தலைச் செய்விக்கும்

சிறத்துத் தொழிலினிடத்து 

வலிமையுடையவரை இவ்வுலகமுடையதாதலால் அவருடைய அறிவின் வலிமையை நோக்காமல் வடிவின் சிறுமையை நோக்கி இகழ்ச்சி செய்யா திருக்கவேண்டும் என்பதாம். இக்கருத்து நோக்கியே "சிற்றுளியாற் கல்லுந் தகரும்" என்றார் குமரகுருபர முனிவர். (நீதிநெறிவிளக்கம் 14)

அ. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது

தூக்கங் கடிந்து செயல்.

(668)

(இ-ம்) மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த தொழிலினிடத்துப் பின்னர்ச் சலனமில்லாமல் காலத்தை வீண்போக்காது விரைந்து செய்ய வேண்டும் என்பதாம். இவ்வாறு செய்தால் கருதிய பயன் இலேசாகக்

கைகூடுமென்பது கருத்து.

௯. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை .
(669)

( இ-ம் ) முதலாவது ஆரம்பிக்கும்போது மெய்ம்முயற்சியால் தமக்குத் துன்பம் அதிகமாக வருமானாலும் அதனாலே தளர்ச்சியடையாமல் துணிந்து இன்பத்தைக் கொடுக்குந் தொழிலைச் செய்யவேண்டும் என்பதாம். சற்று நேரத்தில் நீங்கும் முயற்சித்துன்பத்தை நோக்கி என்றும் நிலைநிற்பதாகிய இன்பத்தைச் செய்யாதிருக்கக்கூடாது. ஆதலாலிவவாறு கூறியருளினர்.

௧0. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.
(670)

(இ-ம்) மனத்தின் வலிமையை இது நமக்குச் சிறந்ததென்று கொள்ளாத மந்திரிகளை வேறு எந்த வலிமையடைந்திருந்தாலும் உலகத்தார் நன்கு மதிக்கமாட்டார் என்பதாம். எந்த வலிமை என்றது -- சேனை கோட்டை நட்பு முதலியவற்றின் வலிமை. இதனால் மனவலிமையுள்ளவரே , மந்திரித்தனத்துக்கு உரியராவரென்பது கருத்து.

---

6 8-ஆம்
அதி.—வினைசெயல்வகை.

அஃதாவது, மேற்கூறிய மனவலிமையுடைய மந்திரி காரியங்களைச் செய்யும் திறம்.

க. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குதல் தீது,

(671)

கூ௰௮-ஆம் அதி.—வினைசெயல்வகை.

௨௫

(இ-ம்) ஒரு காரியத்தை ஆராய்ந்து அளவிடுதற்கு அளவாவது ஆராய்ச்சி செய்கிறவன் இனி இது தப்பமாட்டாதென்னும் துணிவையடையும் காலம்வரையுமேயாம், அப்படித் துணியப்பட்ட காரியத்தை விரைந்து செய்து முடியாமல் காலதாமதஞ் செய்திருத்தல் குற்றம் என்பதாம். காரியம்-தொழில்,

உ. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

(672)

(இ-ம்) கால தாமதஞ் செய்யும் பகுப்புடைய தொழில்களினிடத்துத் தாமதித் திருக்கவேண்டும். அவ்விதந் தாமதஞ் செய்யாது விரைந்து செய்யுந் தொழில்களினிடத்துத் தாமதித்திருக்கக் கூடாது என்பதாம். இம்முறை தவறிச்செய்தால் எடுத்த காரியம் பயன்படாதென்பது கருத்து. தாமதித்துச் செய்யுந் தொழிலிது தாமதியாமற் செய்யுந் தொழிலிது என்பதை எப்படி யறியலாமென்றால், காலத்தாலுந் தன்னுடைய நிலைமையாலும் அறியலாம் என்க.

௩. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
செல்லும்வாய் நோக்கிச் செயல். (673)

(இ-ம்) தன்கருத்து முடிக்க வினைசெய்யுமிடத்து இயலுமிடமெல்லாம் யுத்தத்தாற் செய்துமுடித்தலே நல்லதாகும். அப்படிச் செய்துமுடிக்க இயலாத இடத்து மற்றைச் சாம பேத தான தண்டமென்னும் மூன்றினுள் இயலுவதாகிய ஒரு உபாயத்தால் செய்துமுடிக்கவேண்டும் என்பதாம். வினை-தொழில். இயலுமிடம்-செய்யக் கடவதாகிய இடம். அஃதாவது—பகைவன் வலியினும் தன் வலி மிகுந்தகாலம். இயலாத இடம்-பகைவன் வலியும் தன் வலியும் ஒத்தகாலமும், பகைவன் வலிக்குத் தன்வலி தாழ்ந்த காலமும் ஆம்.

௪. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
றீயெச்சம் போலத் தெறும்.

(674)

(இ-ம்) செய்யத்தொடங்கிய வினையிலும் (போரிலும்) கெடுக்கத் தொடங்கிய பகையிலும் மிச்சமாய் நின்ற சிறியபாகமும் ஆராயுமிடத்துத் தீயினது மிச்சமாய்நின்ற சிறிய பாகம்போல மேலோங்கி வளர்ந்து கெடுக்கும் என்பதாம். ஆதலால் இவ்விரண்டையும் சிறிதென்றெண்ணாமல் பற்றறக்களைய வேண்டுமென்பது கருத்து.

ரு. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்தும்
இருள்தீர வெண்ணிச் செயல்.

(675)

உ0ரு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்,

(இ-ம்) ஆகும் பொருளும் அழியும் பொருளும் தன் படையும் பகைவர் படையும் தனக்காகுங்காலமும் பகைவர்க்காகுங்காலமும் தன் செயல் வலிமை யும் பகைவர்செயல் வலிமையும் தான் வெல்லும் இடமும் பகைவர் வெல்லும் இடமுமாகிய ஐந்தும் மயக்கமற ஆலோசித்துப் பார்த்து இவ்வைந்தும் தனக்கு அதிகமாயிருந்தால் யுத்தம் செய்யவேண்டும் என்பதாம். யுத்தம்- போர்.

௬. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்,
(676)

(இ-ம்) வினை (போர்) செய்யுமிடத்து அவ்வினை முடிதற்குள்ளதாகிய முயற்சியும், அதற்கு வரும் இடையூறும், அவ்விடையூறு நீங்கித் தானடையும் பெரும் பயனும் சீர்தூக்கிச் செய்யவேண்டும் என்பதாம். சீர்தூக்கல் - முயற்சி, இடையூறுகளினளவுக்குப் பயனளவு அதிகமாயிருத்தலை ஆராய்தல், இவ்வாறு செய்த லே இன்பந்தருமென்பது கருத்து.

எ. செய்வினை செய்வான் செயல்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்.
(677)

(இ-ம்) மேற்சொல்லியபடி செய்யப்படும் வினையை (காரியத்தை)த் தொடங்கினவன் செய்முறையாவது, அவ்வினையை முடிக்கும் உபாயத்தை யறிந்து செய்துமுடித்தவன் கருத்தினைத் தான் அறிதல் என்பதாம். அக் கருத்தினையறிந்தால் தானும் அவன்செய்த உபாயத்தின் முறையைச் செய்து

பயனடைவனென்பது கருத்து.

௮. வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள்
யானையால் யானை யாத் தற்று.

(678)

(இ-ம்) தான் செய்யத்தொடங்கிய வினையாலே அதுபோன்றதாகிய வேறுமோர் வினையை முடிக்கும் உபாயமறிந்து முடித்துக்கொள்ளவேண் டும். அப்படி முடித்துக்கொள்வது மதத்தால் நனைந்த கன்னத்தையுடைய யானை யால் அதுபோன்ற மற்றொரு யானையைக் கட்டி நிறுத்துதல்போலுமென்ப தாம். முடிக்கும் உபாயத்தை யறிந்து செய்தால் எல்லாவினையு முடியு மென்பது கருத்து.

௯. நாட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
யொட்டாரை யொட்டிக் கொளல்,

(679) சாகூ-ஆம்



(இ-ம்) வினை செய்வான் தன்னுடைய நண்பருக்கு இனிமையான காரியங்களைச் செய்வதைப்பார்க்கிலும் தன் பகைவரோடு சேராதிருக்கும் வீரரைச் சீக்கிரமாகத் தனக்கு நண்பாராக்கிக் கொள்ளவேண்டும் என்பதாம். சீக்கிரமாக நண்பரா க்காவிட்டால் பகைவர் அவரை நண்பாராக்கிக் கொள்வர். அப்பொழுது அவருக்குப் பலமுண்டாகும்,

தனக்கு மெலிவு உண்டாகு மென்பது கருத்து. வினை—போர்.

௬௦. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(680)

(இ-ம்) தாம் ஆட்சி செய்யும் நாடும் அரணும் சிறியனவாயிருக்கும் அமைச்சர் (மந்திரிகள்) தம்மைப்பார்க்கிலும் வலிய பகைவர் எதிர்த்துப் போர் செய்யுங்காலத்துத் தம் சேனைப் பகுப்பு நடுங்குதலுக்குப் பயந்து சமாதானங் கிடைத்தால் அப்பகைவராகிய பெரியாரைத் தாழ்ந்து ஒப்புக்கொள்வர் என்பதாம். இதனால் மெலியாரது செயல் கூறப்பட்டது. சேனைப்பகுப்பு-ரத கஜ துரக பதாதிகள். அரண்- பாதுகாப்பு.

---

## 69-ஆம் அதி.—தூது.

அஃதாவது, வேற்றரசரிடத்துச் சமாதானங் கருதியாவது சண்டை கருதியாவது போய்த் தன்னரசன் சொல்லியவைகளைச் சொல்லி வருபவர் தன்மை. இவர் அரசன் சொல்லியவற்றை மட்டும் சொல்பவரும் சமயத்துக்குத் தக்கவாறு பொருந்தும் விதம் தாமே வகுத்துச்

சொல்பவரும் என இருவகைப் படுவர்.

௧. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு. (681)

(இ-ம்) தன் சுற்றத்தாரிடத்து அன்புடையவனாயிருத்தலும் மந்திரித் தனஞ் செய்தற்கமைந்த குடியிற் பிறத்தலும் அரச சாதியார் விரும்பும் குணமுடையவனாயிருத்தலும் வேற்றரசரிடத்துத் தூதுபோய்ச் சொல்வானுக்கு இலக்கணம் (அடையாளம்) என்பதாம். மந்திரித்தனஞ் செய்தற்கேற்ற குடியிற் பிறத்தலென்றது மந்திரிகள் தூதருமாவரென்பதறிவித்தற்கு; இதனை "தூதுமாகுவன் அமைச்சனுமாகுவன்" என்னும் செய்யுளிற் காண்க. (கந்த புராணம் இரண்டாநாட் சூரபன்மன் யுத்தப்படலம் 125) அரசசாதியார் விரும்புங் குணமாவது-மன்னரைச் சேர்ந்தொழுகல் கண்டுகொள்க.

என்னும் அதிகாரத்திற் ௨௦௪

உ. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்
கின்றி யமையாத மூன்று.
(682)

(இ-ம்) தம்முடைய அரசனிடத்து அன்புடைமையும் அவனுக்கு ஆகும் நலங்களை ஆராயும் அறிவும் அவவன்பையும் அறிவையும் வேற்றரசரிடத்துச் சொல்லும்போது அவர் கேட்டமாத்திரத்தில் தம் வசப்படும்படி பேசுந்திறமையுமாகிய மூன்று குணங்களும் தூது சொல்வானுக்கு அவசிய 'மிருக்கவேண்டும் என்பதாம். இம்மூன்றுமில்லாதவன் தூது சொல்வதற்கு ஏற்றவனில்லையென்பது கருத்து. இம்மூன்றும் அவசியம் வேண்டுமென்றதனால் மற்றைக்குணங்களும் பொதுவாக இருக்கவேண்டுமென்பது கண்டுகொள்க.

ஈ. நூலாருள் நூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.
(683)

(இ-ம்) வேலாயுதத்தையுடைய வேற்றரசரிடத்துப் போய்த் தன் னுடைய அரசனுக்கு வெற்றியைத்தரும் வினையைச் சொல்லுந் தூதனுக்கு இலக்கணம் (அடையாளம்) ஆவது, நீதி நூல்களை யறிந்த மந்திரிகளிடத்துப் பழகி அந்நூல்வழி யறிந்துகொள்ளும்

விஷயங்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் வல்லவனாகுதல் என்பதாம். வல்லவனாதல், வேற்றரசரிடத்து வகை யாக விஷயங்களை எடுத்துச் சொல்லுதலில் திறமையுடையவனாதல்.

ச. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(684)

(இ-ம்) இயற்கையறிவும் கண்டார் விரும்பும் காட்சிப்பொலிவும் பல்லா ரோடும் பலதாமும் பழக்கப்பட்ட கல்வியும் என எல்லாராலும் நன்கு மதித்தற்கு ஏதுவாகிய இம்மூன்றின் பெருக்கமுடையான் வேற்றரசரிடத்துத் தூது சொல்லுதற்குச் செல்லக்கடவன் என்பதாம்.

ரு. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

(685)

(இ-ம்) தன்னரசனுக்குக் காரியசித்தியாகும்படி வேற்றரசரிடத்துப் பல காரணங்களை எடுத்துச்சொல்லியும், அவர் உடன்படாவிட்டால் அவர்க்கு விளையுந் துன்பங்களைச் சுருக்கமாக எடுத்துச் சொல்லுமிடத்து அவர் வருந் தும் கொடிய சொற்களைச் சொல்லாமல் அவர் மனமகிழும்படி இனிய சொற் களைச் சொல்லியும் தன்னரசனுக்கு

ஈன்மையுண்டாக்குகிறவனே தூதனுவான் என்பதாம்.

## சுகூ-ஆம் அதி.—தூது.

உ0கூ

சூ. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
றக்க தறிவதாந் தூது.
(686)

(இ-ம்) நீதி நூல்களைப் படித்தறிந்து வேற்றரசரிடத்துப் பேசும் போது தான் கருதிய காரியமுடியும்படி அவர் மனம் ஒப்புக்கொள்ளும் வகை யாகச் சொல்லி அவர் கோபித்துப் பார்த்தால் அப்பார்வைக்குப் பயப்படாதவனாய் அப்போது காரியமுடியாவிட்டால் முடியுங்காலத்தை நோக்கி அக்காலத் திற் செய்யத்தக்க உபாயங்களை யறிபவனே தூதனுவான் என்பதாம்.

எ. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.
(687)

(இ-ம்) வேற்றரசரிடத்துப் போய் அவர் நிலைமையும் தன்னரசன் நிலைமையும் தன்னிலைமையும் சீர்தூக்கிப் பார்த்து இம்மூன்றிற்கும் பொருத்தமான மரியாதையோடு

அவரைக் கண்டு அவரது சமயம் பார்த்து தான் கருதிச்சென்ற காரிய முடிதற்கேற்ற இடத்தைத் தெரிந்து தன் சொல் பழுது போகாமல் ஆலோசித்துப் பேசவல்லவனே தூதருக்குள் முதன்மையுடைய தூதன் என்பதாம். இடத்தைத் தெரிதலாவது, தனக்குத் துணையாகப் பேசுகின்றவர் வேற்றரசருடனிருக்குமிடத்தைத் தெரிதல். ஆலோசித்தலாவது, தான் சொல்லுதலும், அதற்கு அவர் சொல்லுதலும், அவர் உடன்படாமற் சொன்னால் அதை மறுத்துச் சொல்லுதலு முதலாயினவைகளை முன்னமே தான் அழுத்தமாக எண்ணுதல்.

அ. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு. (688)

(இ-ம்) தன்னரசன் சொல்லிய வார்த்தையை அவன் சொல்லிய படியே வேற்றரசரிடத்துப்போய்ச் சொல்லுகின்றவனுக்கு இலக்கணங்களென்னவென்றால், பொருள் காரணமாகவேனும் காமம் (இன்பங்) காரணமாகவேனும் தன் மனம் நீதிக்கு விரோதமாகாமல் பரிசுத்தனாயிருத்தலும், தன்னுடைய வார்த்தையை மதியாமல் அவர் கோபித்த இடத்து அதைச் சாந்தஞ் செய்தற்கு அவர் மந்திரிகளிலொருவரைத் துணையாக வசப்படுத்திக் கொள்ளும் தன்மையும், தன்னரசன் சொல்லிய வார்த்தைகளுள் இந்த வார்த்தை சொன்னால்

அவர் தன்னைத் துன்பஞ் செய்வாரென்று பயப்படா மற் சொல்லும் துணிவுடைமையும் ஆகிய இம்மூன்றோடு கூடிய உண்மை (மெய்)யும் என்பதாம்.



கூ. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.
(689)

(இ-ம்) தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குப் போய்ச் சொல்லுதற்கு உரியவன், வேற்றரசரால் வருந் துன்பத்திற்குப் பயந்து தன்னரசனுக்குத் தாழ்வு வரும்படியான வார்த்தையை வாய்வழுவி யாவது சொல்லாதிண்மை (உறுதி) யுடையவன் என்பதாம். வழுவி-தவறி.

க0. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.
(690)

(இ-ம்) தன்னரசன் சொல்லியனுப்பிய வார்த்தை தனக்குக் கேடு விளைப்பதானாலும் அதற்குப் பயந்து விடாமல் தன்னரசன் சொல்லியபடியே தன்னரசனுக்குள்ள

மேம்பாட்டை வேற்றரசரிடத்துச் சொல்பவனே தூதனுவான் என்பதாம்.

---

## 70-ஆம் அதி.—
## மன்னரைச்சேர்ந்தொழுகல்.

அஃதாவது, மந்திரிகள் அரசரைச் சேர்ந்து ஒழுகும் விதம். ஒழுகுதல்- காலத்துக்குத் தக்கவாறு நடத்தல்.

க. அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார். (691)

(இ-ம்) ஒரு சமையம் அன்பும் மறுசமையங் கோபமுங் கொண்டு மாறு படுதலுடைய அரசரைச் சேர்ந்து காரியஞ்செய்யும் மந்திரிகள், அக்கினியிற் குளிர்காய்பவர் நெருங்காமலும் நீங்காமலும் எப்படி இருப்பார்களோ அப்படி, நெருங்கிப் பழகாமலும் நீங்கிப் பிரியாமலும் இருக்கவேண்டும் என்பதாம். இதனுல் நெருங்கினுற் கோபத்துக்கு ஆளாவரென்பதும், நீங்கினுல் வெறுப் புக்கு ஆளாவரென்பதுங் கண்டுகொள்க. ஆதலால் இவ்விரண்டுக்கும் பொது வாகப் பழகல் வேண்டுமென்பது கருத்து.

உ. மன்னர் விழைப விழையாமை மன்னரால்

மன்னிய ஆக்கந் தரும்.

(692)

(இ-ம்) தம்மாற் சேரப்பட்ட அரசர் விரும்புவனவாகிய உணவு, ஆடை, அணி, அலங்காரம், மேன்மை முதலியவைகளை விரும்பாமல் மந்திரிகளிருக்க

## ௭௰-ஆம் அதி.—மன்னரைச்சேர்ந்தொழுகல்.



வேண்டும். அப்படி இருத்தலே அவ்வரசரால் நிலைபெற்ற செல்வத்தை அம் மந்திரிகளுக்குக் கொடுக்கும் என்பதாம். எப்படி யென்றால், இப்படி யிருக் கும் மந்திரி நமக்குக் கீழ்ப்படியுங் குணமுள்ளவனென்று அரசர் மகிழ்ச்சி யுற்றுத் தாமே எல்லாச் செல்வமுங் கொடுப்பரென்க. இதனால் கீழ்ப்படியுங் குணமுள்ளவரே சகல நன்மையுமடைவரென்பது கண்டுகொள்க.

௩. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
றேற்றுதல் யார்க்கு மரிது.

(693)

(இ-ம்) மந்திரிகள் தம்மைக் காக்கநினைத்தால் தம்மிடத்தில் அரிய குற்றங்கள் வராமற் காக்கவேண்டும். அக்குற்றங்கள் வந்தனவாகக் கேட்டு அரசர் சந்தேகித்துக் கோபித்தால், அக்கோபத்தை மாற்றி அவரைத் தெளி

வித்தல் யாவராலும் முடியாது என்பதாம். அரிய குற்றங்களாவன—அரசர்க் குரிய இரகசியத்தை வெளிப்படுத்தல், அவருரிமைப்பொருளைத் தழுவுதல், அவர் திரவியங்களை அபகரித்தல் முதலியவைகள்.

ச. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுகல்
ஆன்ற பெரியா ரகத்து.
(694)

(இ-ம்) பெருமையாலுயர்ந்த அரசர் பக்கத்தில் மந்திரிகளிருந்தால் அவ்வரசர் காணப் பிறனொருவனிடத்தில் இரகசியம் பேசுதலும், ஒருவன் முகத்தைப் பார்த்துச் சிரித்தலுமில்லாமலிருந்து வரவேண்டும் என்பதாம். ஏனென்றால், இவ்விரண்டையும் அரசர்கண்டால் நம்மைப்பற்றி ஏதேனும் பேசுகிறான்போலும், அவமதித்துச் சிரிக்கிறான்போலும் என்று சந்தேகித்து வெறுத்தற்கு இடமாம் ஆதலால் என்க.

ரு. எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.
(695)

(இ-ம்) அரசன் பிறரொடு இரகசியம் பேசும்போது மந்திரிகள் அவர் பேசிய பொருள் தாமும்

பேசப்படுவதாகிய இராசகாரியமாயிருந்தாலும் ஒன்றையும் தாம் செவிகொடுத்துக் கேளாதவராகியும், அவனை விரைந்து சேளாதவராகியுமிருந்து, அவ்வரசன் தானே தன்னுளடக்கமாட்டாமற் சொன்னால் அப்போது கேட்கவேண்டும் என்பதாம்.

சு. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.



(இ-ம்) அரசனுக்குக் காரியஞ் சொல்லுமிடத்து அவன் குறிப்பினை யறிந்து சொல்லுதற்கேற்ற காலத்தை நோக்கி வாய்த்தவிடத்து அவனுக்கு வெறுப்பில்லாதனவாயும் விரும்பத்தக்கவைகளாயுமுள்ள காரியங்களை மேலு மேலும் அவன் கேட்கும் விதமாக மந்திரிகள் சொல்லவேண்டும் என்பதாம். ஏனென்றால், அரசனுடைய எண்ணம் காமம் கோபம் முதலியவற்றிலிருக்கும் போதும் தன்னோடு உடன்பாடில்லாதவர் அரசனோடிருக்குங் காலத்தும் சொல்லிய காரியங்கள் பயன்படாமற் போகும் ஆதலாலென்க. இக்கருத்துப்பற்றியே "பொன்பிதிர்மென் சுணங்கார்ந்த பொம்மலிள முலையினர்பால், அன்புறநல் லமையத்தும்" "மாற்றரசர் பால்வெகுளும் அமையத்தும்

வகுத் துரையேல்'' என்றார் பிறரும். (நைடதம் அன்னத்தைத் தூதுவிட்ட படலம் 103, 104)

எ. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றும்
கேட்பினுஞ் சொல்லா விடல்.
(697)

(இ-ம்) அரசன் விரும்புவனவும் பயன் அதிகமாயும் உள்ள காரியங்களை அவன் கேளாதிருந்தாலும் மந்திரிகள் சொல்லவேண்டும். எந்தக் காலத்தும் பயனில்லாத காரியங்களை அவன் கேட்டாலுஞ் சொல்லாதிருக்கவேண்டும் என்பதாம். எந்தக்காலத்து மென்றதனால் வறுமை வந்த காலத்தும் பய னில்லாத காரியங்களைச் சொல்லுதலும் செய்தலும் ஆகாவென்பது கருத்து.

அ. இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்.
(698)

(இ-ம்) மந்திரிகள் மன்னரை இவர் நமக்குச் சிறியர் இன்னமுறை உடையவர் என்று அவமதியாமல் அவரிடத்திலிருக்கும் ஒளி (உலகங்காக்கும் கடவுள் தன்மை)க்குப் பயந்து காரியங்கள் செய்துவரல்வேண்டும். ஏனென்றால், அவரும் நாமும் மனிதராயிருந்தாலும் அவர்

உறங்கும்போதும் அவருடைய செங்கோல் (ஆணை) உலகத்தைக் காத்தலால் அவர் தெய்வத்துக்குச் சமானமாவர். ஆதலால் தெய்வத்துக்குப் பயப்படுதல்போல் நாம் அவருக்குப் பயந்து நடக்கவேண்டும் என்க.

சு. கொளப்பட்டே மென்றெண்ணிக்
கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்.
(699)

(இ-ம்) சலனமற்ற அறிவுடையவர் அரசனால் நாம் நன்கு மதிக்கப் பட்டோமென்று, அவன் விரும்பாத காரியங்களைச் செய்யமாட்டார் என்பு

## எக-ஆம் அதி.—குறிப்பறிதல்.

உகரு

தாம். ஏனென்றால், விரும்பாத காரியங்களைச் செய்தால் அரசனது நன்கு மதிப்புத் தம்மைவிட்டுப் போய்விடும் ஆதலாலென்க.

கO. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.
(700)

(இ-ம்) அரசனுக்கு நாம் பரம்பரையாய் நீண்டகாலந் தொடர்ச்சி யுடையோமென்று நினைத்து,

தமக்கு இயல்பல்லாத காரியங்களைச் செய்யு முரிமையானது மந்திரிகளுக்குக் கேட்டினையுண்டுபண்ணும் என்பதாம். எப்படியென்றால், அரசன் பொறுக்கக்கூடாத காரியங்களைச் செய்யும்போது அவன் தாட்சணியமில்லாமல் உயிரை வாங்கிவிடுவனாதலாலென்க. இத் திருக்குறளும் இதன் முன்னிரண்டு திருக்குறளும் அரசன் பொறுப்பனென்று வெறுப்பன செய்யக்கூடாதென்பது கூறப்பட்டது. இயல்பு - ஒழுக்கநெறி நிற்றல்.

---

## 71-ஆம் அதி.—குறிப்பறிதல்.

அஃதாவது, அரசனெண்ணிய காரியத்தை அவன் சொல்லாமலே அறிதல்.

க. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா
னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.
(701)

(இ-ம்) அரசன் தன் மனத்திலெண்ணிய காரியத்தை அவன் வாயாற் சொல்லாமல் அவன் முகத்தாலுங் கண்களாலும் அறிபவன் எந்தக்காலத்தும் வற்றாத கடலாற் சூழப்பட்ட உலகத்தார்க்கு ஓராபரணமாவன் என்பதாம். முகத்தாலுங் கண்களாலுமறிதல்- அவவிரண்டி லு ந் தோன்றுந் தோற்றத்தா லறிதல். இப்படியறியும்படி

அவவிரண்டுங் காட்டுதல் அவற்றை அறியும் அறிவுடையார்க்கேயாம். இக்கருத்தை "பகைமையுங் கேண்மையுங் கண் ணுரைக்குங் கண்ணின், வகைமை யுணர்வார்ப் பெறின்" என்ற 709ம் திருக் குறளில் நாயனாருளிச்செய்தனர்.

உ. ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல் .

(702)

(இ-ம்) ஒருவன் மனத்தினிடத்து உண்டாகுஞ் செயல்களைச் சந்தேக மில்லாமல் நிச்சயமா கத் தெரிந்து சொல்லவல்லவனை மனிதனுயிருந்தாலும் 

அவனைத் தெய்வத்துக்குச் சமானமாக நன்கு மதிக்கவேண்டும் என்பதாம், ஏனென்றால், பிறர் நினைத்ததை அவர் சொல்லாமலறிதல் தெய்வசத்தியாத லால் என்க.

ந. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்
யாது கொ டுத்துங் கொளல்.

(703)

(இ-ம்) தம்மனத்திலுண்டாகுஞ் செய்கையாலே பிறர் மனத்திலுண் டாகும் நிகழ்ச்சி (செயல்)களை அவர் சொல்லாமலே யறியவல்லவரை அரசன் தன்னுடைய

உறுப்புக்களுள் ஏதேனும் ஒன்றைக் கொடுத்தாயினும் தன் வசமாக்கிக்கொள்ளவேண்டும் என்பதாம். உறுப்புக்களாவன-பொருள், நாடு, யானை, குதிரை இந்நான்கும் அரசனுக்குப் புறத்துறுப்புக்களாம்.

ச. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

(704)

(இ-ம்) ஒருவன் மனத்தில் எண்ணியதை அவன் சொல்லாமலே அறிய வல்லவரோடு அவ்விதம் அறியமாட்டாதார் கண் கை கால் முதலிய அவயவங்களால் ஒரு தன்மையராக ஒத்திருந்தாராஞலும் அறிவினல் அவர் ஒப்பாகாமல் வேறுவர் என்பதாம். வேறென்றது விலங்கு என்றபடி. விலங்கு - மிருகம்.

ரு. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

(705)

(இ-ம்) அவயவங்களுள்ளே சிறந்த கண்கள் ஒருவன் நினைத்ததைக் காண வல்லமையுடைய தம் காட்சியால் அறியமாட்டா ஆனல் ஒருவனுக்கு அக்கண்கள் என்ன பிரயோசனத்தைச் செய்யும் என்பதாம். அறிதல் உயிரா யிருந்தாலும் உயிருக்குக் கண் அறிதற்குத் துணைக்கருவி யாதலாலிவ்வாறு கூறியருளினர். காட்சி-காணுதல்.

௬. அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சங்
கடுத்தது காட்டும் முகம்.
(706)

(இ-ம்) தன்னையடுத்த பொருளினிறத்தைத் தான் கொண்டு பிற ருக்குக் காண்பிக்கின்ற பளிங்குக்கல்லைப்போல,ஒருவன் மனத்தின் மிகுதியாக உண்டாகின்ற எண்ணத்தை அவன் முகந் தானேயறிந்துகொண்டு பிறருக்குக் காண்பிக்கும் என்பதாம். இக்கருத்துப்பற்றியே ''எல்லாம், முகம்போல முன்



னுரைப்பதில்'' என்றார் பிறரும். (நான்மணிக்கடிகை 45) கடுத்தது-கடி யென்னு முரிச்சொல்லடியாகப் பிறந்த மிகுதிபற்றியது.

௭. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவபினுங்
காயினுந் தான்முந் துறும்.
(707)

(இ-ம்) உயிரானது ஒருவனை மகிழ்தலினும் கோபித்தலினும் பொருந்து மானால் தான் அவ்விரண்டினையுமறிந்து அவ்வுயிர்க்கு முற்பட்டு

(முர்தி) மகிழ்தலை முகமலர்ச்சியாலும், கோபித்தலை முகங் கருகுதலாலுங் காட்டும். ஆதலால் முகம்போல அறிவுமிகுந்தது வேறொன்று உண்டோ? இல்லை என்பதாம். உயிர்க்கே அறிவுள்ளது, பஞ்சபூதங்களாகிய முகத்திற்கில்லை யென்பாரை மறுத்தலும் இதனாற் கண்டுகொள்க. பஞ்சபூதங்கள் - நிலம் நீர் தீ காற்று ஆகாயம் என்பனவாம். இந்த ஐந்தின் மயமே உடம்பாதலால் உடம்பினுள் ஒருறுப்பாகிய முகமும் அவற்றின்மய மென்பது தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம்.

அ. முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(708)

(இ-ம்) ஏதாவதொரு குறையடைந்தவன் தன் மனத்தைக் குறிப்பா லறிந்து அக்குறையைத் தீர்ப்பாரைக் காணப்பெற்றால் தானும் அவர் தன் முகத்தை நோக்கும் வகை அவர் முகத்தை நோக்கி நின்றாற்போதும். வாயினா லொன்றுஞ் சொல்லவேண்டுவதில்லை என்பதாம். ஏனென்றால், ஒருவன் மனத்திலுற்ற குறையை முகக்குறிப்பாலறிந்துகொள்ள வல்லவர்க்கு வாயினாற் சொல்லவேண்டியது அவசியமில்லை யாதலாலென்க.

௯. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்

கண்ணின்

வ கைமை யுணர்வார்ப் பெறின் .

(709)

(இ-ம்) அரசரது பார்வையின் வேறுபாட்டை யறிய வல்லவராகிய மந்திரிகளை யடையப்பெற்றால், அம்மந்திரிகளுக்கு வேற்றரசர் மனத்திலிருந்த விரோதத்தையும் சிநேகத்தையும் அவர் சொல்லாமற் போனாலும் அவருடைய கண்களே சொல்லிவிடும் என்பதாம். இதனால் அக்கண்கள் தம் குறிப்பினை யறியத்தெரியாத மந்திரிகளுக்குச் சொல்லமுடியாதென்று கண்டுகொள்க. கண்கள் சொல்லுதல்-வெறுத்த பார்வையும், மகிழ்ந்த பார்வையும் உளவாதல்.

௩௰. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல்

காணுங்கால்

கண்ணல்ல தில்லை பிற.

(710)



(இ-ம்) நாம் நுட்ப அறிவுடையோமென்று தம்மைத் தாமே மதித் திருக்கும் மந்திரிகள் அரசர் மனத் தை அளந்துபார்க்குங் கோலாவது, ஆராயுமிடத்து அவ்வரசரது கண்ணேயல்லாமல் வேறில்லை என்பதாம். பிறர்

மனத்தை யளக்குங் கருவிகளாக இங்கிதம், வடிவு, தொழில், சொல் முதலிய வைகளிருந்தாலும் அவைகளெல்லாம் அவரால் ஒருகால் மறைக்கப்பட்டாலும் படும். அப்படியல்லாமல் நோக்கம் (பார்வை) மனத்தொடு கலந்ததாதலால் மறைக்கப்படாது. அதுபற்றிக் கண்ணையே சிறப்பாக வேறெடுத்துக் கூறியது கண்டுகொள்க.

---

## 72-ஆம் அதி.—அவையறிதல்.

அஃதாவது, அரசனோடிருந்த சபையினியல்பை யறிதல். க.

அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
 றொகையறிந்த தூய்மை யவர்.

(711)

(இ-ம்) செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச்சொல் என்னு மூவகைச் சொற்கூட்டங்களை யறிந்த பரிசுத்தமுடையவர் (தமக்காகாதனவற் றைத் தள்ளி ஆகுமவற்றை யறிபவர்) தாமொன்று பேசத்தொடங்கும்போது அச்சமையத்திலிருக்கிற சபையின் ஒப்பு உயர்வு தாழ்வு என்னு மூவகை அளவையுமறிந்து "சீர்தூக்கி இவ்விடத்துச் சொல்லுங்காரியம் இது, சொல்லும் வழி இது, சொன்னாற் பயன் இது" என்று ஆராய்ந்து பேசவேண்டும் என்பதாம். செஞ்சொல்-ஓர்பொருளுணர்த்துஞ் சொல்; அவை நிலம், நீர், தீ

போல்வன. இலக்கணச்சொல்-ஊரெல்லாம் ஒன்ற வெறுத்தாலும் என்ற விடத்து, ஊராரெல்லாமென்றறிதல் போல்வது. குறிப்புச்சொல்-"கற்கறித்து நன்கட்டாய்" என்ற இடத்து நன்றாகச் சமையல் செய்யவில்லை எனப் பொருள் படுவது போல்வது. கறித்து-கடித்து. அட்டாய்-சமைத்தாய்.

உ. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லி
னடைதெரிந்த நன்மை யவர். (712)

(இ-ம்) மேலே சொல்லிய மூவகைச்சொல்லின் ஒழுக்கத்தை (நடையை) ஆராய்ந்த நன்மையுடையவர் சபையார் விரும்பி யேற்றுக்கொள் ளுஞ் சமையம் தெரிந்து தம் சொல் குற்றப்படாமல் மிகவுந் தெளிந்து பேச வேண்டும் என்பதாம். இதுபற்றியே "சொற்சோர்வு படேல்" என்றார் ஔவையார். (கொன்றைவேந்தன்)

எ௨-ஆம் அதி.—அவையறிதல்.

௨கஎ

௩. அவையறியார் சொல்லல்மேற் கொள்பவர் சொல்லின்

வகையறியார் வல்லதூஉ மில். (713)

(இ-ம்) அவை (சபை) யினது நிலைமையை யறியாமல் ஒரு காரியத்தைப் பேசத்தலைப்பட்டவர் சொல்லுதலின் முறையுந் தெரியார். அதுவல்லாமலும் நூல்களைக் கற்ற வல்லமையில்லாதவரு மாவர் என்பதாம். எனவே அவர் எல்லாராலும் இகழப்படுவரென்பது கருத்து.

௪. ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்

வான்சுதை வண்ணங் கொளல். (714)

(இ-ம்) நூலறிவாலும் இயற்கையறிவாலும் பிரகாசப்பட்ட பெரியா ரிருந்த சபையினிடத்துப் பேசப்புகுந்தவர், தாமும் அவரைப்போல விரித்துப் பேசுந் திறமையுடையராயிருக்கவேண்டும். மற்றை, பேசத்தெரியாராகிய அறிவில்லாதவர் சபையினிடத்தில் சென்றால், தாமும் பேசத்தெரியாத அவரைப் போலவே யிருக்கவேண்டும். ஏனென்றால், பேசினல் தந்திறமை அவரறியமாட்டார் ஆதலால் என்க.

ரு. நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருள்

முந்து கிளவாச் செறிவு.

(715)

(இ-ம்) ஒருவனுக்கு நன்மையென்று சிறப்பித்துப் புகழ்ந்து கொண் டாடப்பட்ட எல்லாக் குணங்களுள்ளும் உயர்ந்த குணமாவது எதுவென்றால், தன்னைப் பார்க்கிலும் உயர்ந்த பேரறிவாள ரிருந்த சபையில் ஒரு காரியத்தை அவர் பேசுதற்கு முன் தான் எழுந்து பேசாதிருக்கும் அடக்கமுடைமை என்பதாம். எனவே, அவர் பேசும்போதும் பேசியபின்னும் பேசலாமென்பது கண்டுகொள்க.

சு. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புலம்
ஏற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(716)

(இ-ம்) விரிந்த நூற்பொருளைத் தன்னுள்ளடக்கி அப்பொருளின் உண்மை உணர வல்லமையுடையார் சபையினிடத்து , வல்லவனொருவன் சொற்குற்றமடைதலானது, மோக்ஷமடைய நல்வழியில் நின்றவனொருவன் அவ்வழி தவறிக் கீழே விழுந்ததுபோலும் என்பதாம். எப்படியென்றால், ஞான மாகிய தோட்டியால் ஐம்பொறிகளாகிய யானைகளை யடக்கி நின்றவன் காமத் திற்

கருத்தழிந்து கெட்டதுமன்றிப் பிறராலிகழப்படுதலும் பெறுதல் போலு மென்க.

28

உகஅ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

எ. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.
(717)

(இ-ம்) குற்றப்படாமல் சொற்களை ஆராய்ந்தறியவல்ல பெரியார் கூடி யிருந்த சபையினிடத்துப் பல நூல்களைக்கற்று அந்நூலின் பயன்களறிந்தவர் கல்வியானது எல்லாருக்கும் விளங்கித் தோன்றும் என்பதாம். எனவே, கற்றாரிருந்த சபையினிடத்தே பேசவேண்டுமென்பது கண்டுகொள்க.

அ. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியுள் நீர்சொரிந் தற்று.
(718)

(இ-ம்) பிறர் சொல்லாமலே எல்லாப் பொருள்களையுந் தாமே தெரிந்து கொள்ள வல்லவரிருந்த சபையினிடத்துக் கற்றவர் ஒரு விஷயத்தைச் சொல்லுதல்

எதுபோலுமென்றால், தானே வளர்வதாகிய ஒரு பயிர் நின்ற பாத்தியுள் நீரைப் பாய்ச்சியதுபோலும் என்பதாம். இதனால் தானே வளர்தற் குரிய கல்வியானது கற்றாரோடு பழகினால் மிக வளருமென்பது கருத்து. இவ்விதம் சொல்லுதல் தம்மோடு சமானமானவரிருந்த சபையினிடத் தென்பது கண்டுகொள்க.

௯. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள்
நன்கு செலச்சொல்லு வார். (719)

(இ-ம்) நல்லார் (கற்றார்) இருந்த சபையினிடத்து, அவர் மனமகிழும் படி நன்மையான சொற்களைச் சொல்லவல்லவர், நற்பொருள்களை யறியாத புல்லர் (கீழோர்) இருந்த சபையினிடத்து மறந்தாயினும் அப்பொருள்களைச் சொல்லாதிருக்கவேண்டும் என்பதாம். ஏனென்றால், சொன்ன பொருள் பயன் படாமற் போகுமாதலா லென்க.

௰. அங்கணத் துளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்தர்
அல்லார்முற் கோட்டி கொளல். (720)

(இ-ம்) நூல்களைக் கற்றவர், தம்மினத்தாரல்லாத சபையினிடத்து ஒன்றையுஞ் சொல்லாதிருக்கவேண்டும்; அப்படியல்லாமல் ஏதாவது சொன்னால் அச்சொல்லானது

அசுத்த நீர் செல்லும் சலதாரையிலே கொட்டிய அமிழ்தம்போலும் என்பதாம். உண்டால் சாவாத அமிர்தம் சலதாரையிற் பயன்படாமற் போனதுபோலக் கேட்டாற் பயனுகுஞ் சொல் கல்லாதார் சபையினிடத்துப் பயன்படாதென்று பொருளை விரித்துக் கண்டுகொள்க.

# 73-ஆம்

## அதி.—அவையஞ்சாமை.

அஃதாவது, சொல்லுதற்குரிய சபையினையறிந்து சொல்லுங்கால் அச் சபைக்குப் பயப்படாதிருத்தல்.

க. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர். (721)

(இ-ம்) நூல்களைக் கற்றறிந்த பெரியாரிருக்கின்ற சபையும் ஒன்றையுங் கல்லாதவரிருக்கின்ற சபையுமாகிய இரண்டனையுமறிந்து கற்றறிந்த வல்லவாது சபையில் ஒன்று சொல்லுங்கால் அச்சத்தால் குற்றப்படும்படி சொல்லமாட்டார். எல்லாச் சொற்பொருளுந் தெரிந்த அறிவுடையோர் என்பதாம். எல்லாச் சொல்லென்றது 711வது வசனத்திற் கூறிய மூவகைச் சொற்களை, அவ்விடத்திற் கண்டுகொள்க.

உ. கற்ருருட் கற்ரு ரெனப்படுவர் கற்ருர்முற்
கற்ற செலச்சொல்லு வார்.

(722)

(இ-ம்) நூல்களைக் கற்றவர் கூடிய சபையினிடத்துப் பயப்படாமல் தாம் படித்த நூற்பொருளை அவரொப்புக்கொள்ளும்படி பேசவல்லவர் கற்றவ ரெல்லாரைப் பார்க்கினும் இவர் நன்ருகக் கற்றவரென்று எல்லாராலும் புகழ்ந்து பேசப்படுவர் என்பதாம். உலகமறிந்து புகழப்படுபவரே கற்றவ ராதலால் இவ்வாறு கூறியருளினர்.

ங. பகையகத்துச் சாவா ரெளிய ரரியர்
அவையகத் தஞ்சா தவர்.

(723)

(இ-ம்) பகைவர் வந்து நெருங்கும் போர்க்களத்திற் பயப்படாமற் புகுந்து யுத்தஞ்செய்து புறங்காட்டாமல் வீரத்தால் இறப்பவர் பலராவர். கற்ருர் கூடிய சபையினிடத்துப் புகுந்து பயப்படாதிருந்து சொற்குற்றம் வாராமற் பேசவல்லவர் சிலர் என்பதாம். இதனல் கற்ருரது சபையில் குற்ற மில்லாமற் பேசுந் திறமை வாய்ப்பது மிகப் பெரியது என்பது கருத்து.

ச. கற்ருர்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

(724)

(இ-ம்) பல நூல்களையுங் கற்று உயர்ந்தவர்

கூ டியிருந்த சபையினிடத் துச் சென்று தாங்கற்ற நூற்பொருள்களை அவர் மனம் ஒப்புக்கொள்ளும் வித மாகச் சொல்லித் தாம் கல்லாதிருந்த அரும்பொருள்களை அவர் சொல்லக்

## ௨௫௦ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்,

கேட்டறிந்துகொள்ளல்வேண்டும் என்பதாம். இதனால் எல்லா நூல்களையும் எல்லாருங் கற்கமுடியாதாகையால் தாம் கற்றறியாத நூற்பொருள்களை அந் நூல் கற்றறிந்தார் வாயில் நின்றுங் கேட்டறிந்து கொள்ளவேண்டு மென்பு தாயிற்று,

ரு. ஆற்றி னளவறிந்து கற்க அவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.
(725)

(இ-ம்) சொல்லிலக்கணநூலைக் கற்றறிந்தபின் அதன்வழியே அளவை நூலை உட்புகுந்து மந்திரிகள் கற்கவேண்டும்;அப்படிக் கற்றல் எதற்கென்றால், வேற்றரசர் சபையினிடத்துப் பயப்படாமல் அ வர் சொல்லிய சொல்லுக்கு உத்தரம் (மறுமொழி) சொல்லுதற்காக என்பதாம். ஏனென்றால், அளவை நூல் கற்றார்க்கே வேற்றரசர் சொல்லிய சொல்லை வெல்லுதல் ஆவதொரு

சொல்லச் சொல்லமுடியுமாதலாலென்க. இவ்விஷயம் அளவைநூல் கற்ரு ரிடத்து விரிவாகத் தெரிந்துகொள்ளலாம். அளவைநூலென்றது - தருக்க நூலே.

சு. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
 னுண்ணவை யஞ்சு பவர்க்கு. (726)

(இ-ம்) வீரத்தில் வைராக்கியமில்லாதவருக்கு வாளாயுதத்தோடு என்ன சம்பந்தமுண்டு? அதுபோல நுட்ப அறிவுடையார் சபையைக்கண்டு பயப்படுபவர்க்கு அவர் கற்ற நூலோடு என்ன சம்பந்தமுண்டு? ஒன்றுமில்லை யென்பதாம். இதனுல் எவ்வளவு கற்றிருந்தாலும் கற்றறிந்தார் சபையிற் பேசுந் திறமையில்லாதார் கல்வியாற் பயனில்லை யென்பதும், வீரமில்லாதவர் கையில் வாளாயுதமிருந்தாற் பயனில்லையென்பதுங் கண்டுகொள்க.

எ. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
 தஞ்சு மவன்கற்ற நூல். (727)

(இ-ம்) கற்றவாது சபைநடுவிலிருந்து அச்சபையைப் பார்த்துப் பேசுதற்குப் பயப்படுமொருவன்

படித்த நூலானது, போர்க்களத்தின் நடுவே நின்று பகைவரைக் கண்டு பயப்படும் பேடியானவன் கையிற்பிடித்த கூர்மை யுள்ள வாளாயுதத்தை யொக்குமென்பதாம். சண்டைசெய்யும் இடமும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்தாலும் சண்டைசெய்யுந் திறமில்லாதவன் கையிலகப்பட்ட வாள் பயனற்றதுபோல, பேசப்படுஞ்சபையும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்தேயானாலும் பேசத் தெரியாதவனிடத்து அகப்பட்ட



நூலும் சிறப்பில்லையாயிற்றென்று பொருளை விரித்துக் கண்டுகொள்க. பேடி- பெண்ணியல்பு மிகுந்து ஆணியல்பு முடையவன்.

அ. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையுள்
நன்கு செலச்சொல்லா தார்.
(728)

(இ-ம்) கற்றுயர்ந்த நல்லவரிருந்த சபையினிடத்து, நல்ல சொற்பொருள்களை (அச்சபையார் ஒப்புக்கொள்ளும்படி சபையைக் கண்டு பயப்படுத லால்) சொல்லமாட்டாதார் பல நூல்களைக் கற்றிருந்தாலும் உலகத்திற்குப் பிரயோசனப்படுதல் இலராவரென்பதாம்.

கூ. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்தும்

நல்லா ரவையஞ்சு வார்.
(729)

(இ-ம்) நூல்களைக் கற்றறிந்து அந்நூற்பயன்களை யறிந்திருந்தும் நல்லாரிருந்த சபையைக்கண்டு பேசுதற்குப் பயப்படுகின்றவரை உலகத்தார் கல்லாத மூடரைப்பார்க்கினும் கீழானவரென்று சொல்லுவார் என்பதாம். படித்திருந்தார் சபையிலே பேசத் தெரியாவிட்டால் அவரை உலகத்தாரிகழ்ந்து பேசப்படும் இழிவு கல்லாதவருக்கில்லை யாதலாலிவ்வாறு கூறி யருளினர்.

கo. உளரெனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.
(730)

(இ-ம்) சபையினிடத்துள்ள கற்றோரைக்கண்டு பயந்து தாங்கற்ற நூற்பொருள்களை அவர் மனமொப்பும்படி சொல்லத் தெரியாதவர், உடலோடு கூடி வாழ்வாரானலும், உலகத்தார் நன்கு மதிக்கப்படாமையால் இறந்தாரோ டொப்பாவர் என்பதாம்.

அங்கவியலில் அமைச்சியல் முற்றிற்று.

---

# 74-ஆம் அதி.— நாடு.

அஃதாவது, அரசனாலு மந்திரியாலுங் கொண்டு நடத்தப்படுவதாகிய அரசனுடைய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்புடையதாகிய நாடு ஓரதிகாரத்தாற் கூறுகின்றார். அங்கம்-தேர், யானை, குதிரை, காலாள் முதலியவை. நாடு-பல நகரங்களையுள்ளிட்டது.

**௨௨௨ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.**

க. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
செல்வருஞ் சேர்வது நாடு,
(731)

(இ-ம்) குறையாமல் எல்லாப் பொருள்களும் விளைவு செய்வோரும் அறிவாலுயர்ந்தோரும் கேடில்லாத செல்வமுடையோரும் ஒன்றுசேர்ந்து வாழ்ந்திருப்பதே நாடென்று சொல்லப்படுவதாம். விளைவுசெய்வோர் - உழு தொழிற்குரியராவார். கேடில்லாச் செல்வம்-கொடுக்கக்குறையாத செல்வம்.

உ. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.
(732)

(இ-ம்) அளவில்லாத பொருளுடைமையால் பிறதே சத்தாரெல்லாரும் விரும்பப்படும் இடத்தையுடையதாய்,நாட்டினிடத்து வருங்கேடு எட்டுமில்லாமல் மிகுந்த விளைவுடையது நாடு என்பதாம். கேடு எட்டாவன-தன்னரசனாலும், வேற்றரசராலும், விட்டிலாலும், யானையாலும், கிளியாலும், மழைக்குறைவாலும், மழை மிகுதியாலும், விளைவு குறைதலாலும் வருவன.

௩. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு. (733)

(இ-ம்) அன்னிய நாடுகள் சுமந்த பாரமெல்லாம் தன்னிடத்து வந்தபோது அவைகளையுந் தாங்கி அதன்மேற் றன்னரசனுக்கு இறை (வரி)ப் பொருள் முழுவதையும் சம்மதித்துக் குடிகள் கொடுக்கவல்லது நாடு என்பதாம். பாரஙகள்-மனிதர் கூட்டமும், பசு, எருமை முதலிய விலங்குக் கூட்டமுமாம். இவைகள் தன்னிடத்து வருதற்குக் காரணம் - இவைகளிருந்த நாட்டிற் பகைவர் வந்து செய்யுந் துன்பத்தாலும், அரசன் நீதிதவறியதனாலும், உணவில்லாமையாலும் உண்டாகுந் துன்பங்கள். தாங்கள்-மேற்கூறிய காரணங்களால் வந்தவைகளை அக்காரணங்களாகிய துன்பங்கள் நீங்க வேண்டியவைகளைக் கொடுத்தல். வரிப்பொருளைச் சம்மதித்துக்கொடுத்தல் - தங்களுக்கு வேண்டிய பொருள்களைக் குறைவின்றி நாடுகொடுக்குஞ் செயலால்,

வந்த குடிகள் வரிப்பொருளுக்கு வருத்தமில்லாமல் அரசன் கேட்குமுன்னரே வழக்கப்படி தாமே கொடுத்தல்.

ச. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.
(734)

(இ-ம்) மிகுந்த பசியும், நீங்காத நோயும், அயலிடத்திருந்து வந்து வருத்துகின்ற புகைவருமில்லாமல் நிகழ்வது (இருப்பது) நாடு என்பதாம்.

எச-ஆம் அதி.—நாடு.

உ௰

மிகுந்த பசி சேராததற்குக் காரணம்-உழவருடைமையும், மிகுந்த விளைவுடை மையுமாம். நீங்காதநோய் சேராததற்குக் காரணம்-தீக்காற்றும், மிக்க குளிரும், மிக்க வெப்பமும், உண்ணப்படு பொருள்களது தீமையுமில்லாமையாம். அயலிடத்துப் பகைவர்வ ந்து வருத்தாமைக்குக் காரணம்-அரசனது வலிமை யும், சேனையும், அரணும், (கோட்டையும்) காடும் உடைமையாம். காடு எதற் கென்றால், பகையரசர் வ ந்து வளை ந்துகொள்ளுதற்கு வசதியில்லாமைக் கென்க.

ரு. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
கொல்குறும்பு மில்லது நாடு.

(735)

(இ-ம்) சாதிபற்றியும் மதம்பற்றியும் மாறுபட்டுக் கூடும் பலவிதமான கூட்டமும், கூட இருந்தே கேடு நினைத்துப் பாழ் செய்யும் உட்பகையும், சமையம் வாய்த்தபோது அரசனை வருத்தப்படுத்துங் கொலைத்தொழிற் குறும்பரும், வழிப்பறி பறிப்பாரும், திருடரும், வஞ்சகம் பொய்பேசும் மனிதரும், புன் காடி முதலிய துட்டமிருகங்களும் இல்லாமலிருப்பதே நாடு என்பதாம். எனவே, இம்மூவகைக்கேடு மில்லாமல் அரசனாற் காக்கப்படும் நாடென்பதாயிற்று.

சூ. கேடறியாக் கெட்ட இடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டின் றலை.

(736)

(இ-ம்) பகைவர் வந்து அழித்தலாற் கேடறியாததாய் ஒருகாற் கெட்டதானலும் அப்பொழுதும் வளங்குறையாதிருக்கும் நாட்டினை எல்லா நாட்டினிலு முதன்மையான நாடென்று கற்றறிந்தார் சொல்லுவர் என்பதாம். கேடறியாதிருத்தற்குக் காரணம்-அரசனது வலிமையும், கடவுட்பூசை முதலிய மற்றைய அறங்களெல்லாங் குறைவின்றி நிறைதலுமே என்க. வள மாவன்-நிலத்திலும் சோலையினும் விளைபொருள் மிகுதி என்க.

எ. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்

(737)

(இ-ம்) கீழ்நீர் மேல்நீர் என்னப்பட்ட இரண்டுவகை நீரும், வாய்ப் புடையதாகிய மலையும், அம்மலையினிடத்து நின்று வருகின்ற ஆற்றுவெள்ளமும், வலிய நகரமும் நாட்டிற்கு அவயவங்கள் என்பதாம். நீர் அங்கமாவது எப்படி யென்றால், அந்நீர் நிறைந்தகேணி, ஏரி, பொய்கை முதலியவை என்க. இவைகளே மழையில்லாத காலத்தும் வளர்த்தக்கவைகள். வாய்ப் புடையதாகிய மலையென்றது, மாரிக்காலத்துப்பெய்த நீரை யுட்கொண்டு ட்ச



கோடைக்காலத்தில் தருதலால் என்க. கீழ்நீர்-ஊற்றுநீர். மேல்நீர்-வானம் பெய்கின்ற நீர். வலியநகரம்-அழியாத நகரம்.

அ. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

(738)

(இ-ம்) நோயில்லாதிருத்தல், செல்வம், விளைவு, இன்பம், காவல் என்ற ஐந்தும் நாட்டிற்கு அழகென்று சொல்லுவர் கற்றறிந்தோர் என்பதாம்.

பிணியில்லாமை-நிலநலத்தால் வருவது. செல்வம்-மணி பொன் நெல் முதலியவை. இன்பம்-விழவும்

(உற்சவமும்) யாகமும் சான்றோரும் (அறிவா லுயர்ந்தோரும்) உடைமையாலும், உண்ணப்படு பொருள்களுடைமையாலும், நிலம் நீர்களது நன்மையாலும், வாழ்வாருக்கு மனத்தினிடத்து உண்டாகும் நிகழ்ச்சி. (ஒருவகைச்செயல்) காவல்-அரசனாலும் நாட்டில் வாழ்வாராலும் அரண் (கோட்டை) களாலும் காத்தல்.

௯. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரும் நாடு.

(739)

(இ-ம்) தன்னிடத்து வாழ்வார் தேடி வருந்தாமல் சிறு முயற்சியாற் செல்வத்தை அவரிடத்துச் சேரச்செய்யும் நாட்டினையே நாடென்று நூலாராய்ச்சியுடையவர் சொல்லுவார். அப்படியல்லாமல், பெருமுயற்சி செய்து தேடி வருந்திச் செல்வத்தையடையச்செய்யும் நாடுகள் நாடாகமாட்டா என்பதாம். இக்கருத்துப்பற்றியே "பொருள் செய்வார்க்கும் அஃதிடமாய்" என்றார் பிறரும். (சீவகசிந்தாமணி நாமகளிலம்பகம் 48)

௰. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(740)

(இ-ம்) அரசனோடு குடிகள் ஒத்து வாழ்தலில்லாத நாடானது மேலே சொல்லிய எல்லா நலங்களுமுடையதாயிருந்தாலும், அந்நலங்களால் ஒரு பிரயோசனமும் அடையமாட்டாது என்பதாம். எனவே,

குடிகள் அரச னிடத்து அன்பில்லாமையால் அரசனும் அக்குடிகளிடத்து அருளில்லாதவனாவன். இவவிரண்டுமில்லாத நாடு என்ன சிறப்படையும்? ஒரு சிறப்பு மடையாதென்பது தெளிவாக விளங்கப்பட்ட பொருள். ஆகவே, இவ் விரண்டுமுடைய நாடே சிறப்புடைய நாடென்பது கண்டுகொள்க.

## 75-ஆம் அதி.—அரண்.

அஃதாவது, பகைவரால் போர் (யுத்தம்) வந்தபோது அரசனையும் சேனைகளையுங் காத்தற் சிறப்புடைய மதில் இன்னவிதமாயிருக்கவேண்டுமென்பது.

க. ஆற்று பவர்க்கும் அரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.
(741)

(இ-ம்) மூவகை ஆற்றலை (வலிமை) யுமுடையவராய்ப் பகைவர்மேல் யுத்தத்துக்குச் செல்லும் அரசர்க்கும், அம்மூவகை வலிமையுமிழந்து தம்மேல்வரும் பகைவர்க்குப் பயந்து தன்னையே யடைந்து தம்மைப் பாதுகாத்துக்கொள்வார்க்கும் மதில் அவசியமாகச் சிறந்திருக்கும் பொருள் என்பதாம். எப்படியென்றால், போர்க்குச்செல்லு மாசர் தமது மனைவி பொருள் முதலியவற்றைப் பகைவர் கொண்டுபோகாமற் காப்பதற்கும்,

போர்க்குச் செல்ல வலிமையில்லாமல் தம்மேல் வந்த பகைவர்க்குப் பயந்து தம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்கும் அரண் சிறந்ததென்று பொருளை விரித்துக் கண்டுகொள்க. மூவகையாற்றல்-அறிவு, ஆண்மை, பெருமை யென்பது. 465-வது வசனத்திற் காண்க.

உ. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

(742)

(இ-ம்) தெளிந்த நீரும் (அகழும்) வெளியிடத்தையுடைய நிலமும் (நீரும் நிழலுமில்லாத இடமும்) மலையும் குளிர்ந்த நிழலையுடைய காடும் உடையதே அரண் (மதில்) என்பதாம். இந்த நான்கும் கோட்டைக்கு வெளியே ஒன்றன்பின் ஒன்றாக உள்ளனவா யிருக்கவேண்டும். வெளியிடத்தை மறுபூமி யென்பர். அஃதாவது, பிராணிகள் வந்தால் தாகத்தாலும் சோகத்தாலும் மரணமடையத்தக்க இடமென்பது.

ங. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின்
அமைவர ணென்றுரைக்கு நூல்.

(743)

(இ-ம்) உயர்ச்சியும், அகலமும், வலிமையும், அருமையுமாகிய இந் நான்கின் மிகுதியையுடைய மதிலை அரணென்று கற்றறிந்தோர் சொல்லுவர் என்பதாம். உயர்வாவது-ஏணிவைத்தேறுதற்கு எட்டக்கூடாதது. அகல மாவது-புறத்தே பகைவர் வந்து ஆயுதங்களால்

இடித்துத் தோண்டமுடியா அடியகலமுள்ளதும் உள்ளிடத்துள்ளார் உச்சியில் நின்று போர் செய்யக் கூடியதுமாயிருப்பது. வலிமை-கல் செங்கல்களாற் செய்யப்பட்ட மதில்





முள்ளது. அருமையாவது-மதில்களில் வைக்கப்பட்ட பலவித யந்திரங்களாற் பகைவர் நெருங்கி வரமுடியாதது. இக்கருத்தால் அயோத்திநகரத்து மதிலை "எய்தற் கருமையா லீசனை யொக்கு" மென்றார் கவிச் சக்கரவர்த்தி யாகிய கம்பர். (கம்பராமாயணம் நகரப்படலம்)

௪. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
ஊக்க மழிப்ப தரண்.

(744)

(இ-ம்) மலை காடு அகழால் காக்கவேண்டும் இடஞ் சிறியதாய் அகத்தே யுள்ளார் வருத்தமில்லாதிருக்குமிடம் பெரியதாய் தன்னை வந்து வளைந்து கொண்ட பகைவரிப்பொழுதே யழித்துவிடுவோமென்னு மனவெழுச்சியை (ஊக்கத்தை) அழித்துவிடுவதே அரண்

(மதில்) என்பதாம். ஊக்கத்தை அழித்துவிடுதலாவது - பகைவர் காட்சிக்குப் பலமுள்ளதாகத்தோன்றுதல்.

ரு. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளி தாநீர தரண்.
(745)

(இ-ம்) காவற்காடு, அகழ், யந்திரஙகளால் பகைவர் நெருங்கிவந்து கைப்பற்றிக்கொள்ளுதற்கு அரியதாய் அகத்தோர்க்கு வேண்டும் உணவுப் பொருள்களுடையதாய் உள்ளே நின்று போர் செய்தற்கு வசதியாகிய மதிலுள்மேடைகள் உடையதாகிய குணமுடையதே அரண் (மதில்) என்பதாம். நின்று போர்செய்தற்கு வசதியாவது, அரணுக்குள்ளிருப்பார்விட்ட பாணம் வெளியே நிற்பாரிடத்து இலேசாகச் சேறலும் வெளியே நிற்பார் விட்ட பாணம் உள்ளே நிற்பாரிடஞ் சேரமுடியாமையு மென்பன.

சு. எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவும்
நல்லா ளுடைய தரண்.
(746)

(இ-ம்) உள்ளே வசிப்பவர்களுக்கு வேண்டும் பொருள்களெல்லா முடையதாய்ப் புறத்தே வந்து வெல்லவல்ல பகைவரால் அழிவு வருமிடத்து, அவ்வழிவு

வாரமற் காத்து உதவிசெய்யும் நல்ல வீரரையும் உடையது அரண் (மதில்) என்பதாம். நல்லவீரர்-அரசனிடத் தன்பும் மானமும் ஊக்கமும் உடையவர்.

எ. முற்றியு முற்று தெறிந்து மறைப்படுத்தும்
பற்றற் கரிய தரண்.

(747)

(இ-ம்) உள்ளே புகுதலும் வெளியே போதலும் இல்லாத வகை நெருங்கிச் சூழ்ந்தும் அவ்விதஞ் சூழாமல் இடம் வாய்த்தால் போர்செய்தும்

எடு-ஆம் —அதி அரண்.

௨உஎ

அகத்தோரை அவர் சிநேகரால் வசப்படுத்திக் கீழேயுள்ள நுழைவாயிலைத் திறக்கும்படி செய்தும் புறத்தோரால் பற்றப்படாததே அரண் (மதில்) என்ப தாம். இடம் வாய்த்தல்-காவல் முதலிய சோர்ந்திருக்கும் சமையம். அகத் தோர்-மதிலுள்ளே யிருப்போர். புறத்தோர்-பகைவர். கீழேயுள்ள நுழை வாயில்-கோட்டையிற் கள்ளவழி.

அ. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

(748)

(இ-ம்) சேனையைப் பெருக்கிக்கொண்டு தன்னைப் புறத்தே வளைந்து கொண்ட பகைவரையும் தன்னைப்பற்றிய உள்ளிடத்திலுள்ளவர் தாம் நின்ற இடத்திலே நின்று யுத்த

ஞ்செய்து வெல்லத்தக்கதே அரண் (கோட்டை) என்பதாம்.

சு. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து வீறெய்தி மாண்ட தரண்.

(749)

(இ-ம்) யுத்தம் ஆரம்பித்த பொழுதே (காலத்திலே) பகைவர் கெட்டுப் போகும் விதமாக யுத்தகளத்தில் அகத்தோர் செய்யும் வினை வேறுபாடுகளால் பெருமைபெற்று மற்றைய மாட்சியுமுடையதே அரண் (கோட்டை) ஆவது என்பதாம். போர் ஆரம்பித்தபோதே கெட்ட பகைவர் பின்னும் படையைச் சேர்த்துவந்து போர் செய்யமாட்டாராதலால் அவ்வாறு போர் செய்தலே சிறப்பென்பது கண்டுகொள்க. மாட்சி - குணம். வினை வேறுபாடுகளாவன—பகைவர் செய்யும் போர் நிலையறிந்து எந்தெந்தச் சமையத்தில் எதெது செய்யவேண்டுமோ அதையதை அறிந்து செய்தல். அவையாவன—எறிதல், வெட்டல், குத்தல் முதலாயின. மற்றை மாட்சியாவது-பகைவரறியாமல் வெளியே போதல் உள்ளே வருதலுக்குரிய சுருங்கை வழி யமைந்திருத்தல். சுருங்கை வழியை இக்காலத்தார் கோட்டையிற் கள்ள வழி என்பர்.

கo. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி இல்லார்க ணில்ல தரண்.

(750)

(இ-ம்) அரண் (கோட்டையானது) மேற்சொல்லப்பட்ட எல்லாக் குணங்களு மிருந்தாலும்,

பகைவர் நெருங்கிச் சூழ்ந்த விடத்துப் போர் செய் யுங் குணமில்லாரிடத்து அக்குணங்களாற் பயனில்லை என்பதாம். குண மில்லாமையாவன-போர் வாய்த்த இடத்துச் சும்மா இருத்தலும் அளவறி யாது ஒன்றைச் செய்தலும் தம்மாலாகாத காரியத்தைச் செய்தலுமே யாம்,

---

௨௨௮ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

## 76-ஆம் அதி.—பொருள் செயல்வகை.

அஃதாவது, நாட்டினும் மதிலினும் ஆக்கவுங் காக்கவும் படுவதாகிய பொருளினைச் செய்யுந்திறம்.

க. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள். (751)

(இ-ம்) ஒரு பொருளாக நன்குமதிக்கப்படாத கீழோரையும் மதிக்கும் படி செய்யும் பொருள் (பொன்) அல்லாமல் வேறு பொருள் இல்லையென்பதாம். கீழோர்-அறிவில்லாதவர். மதிக்கும்படி செய்தல்-அறிவுடையாரும் உயர் குலத்தாரும் மேற்சொல்லிய கீழோரிடத்திற்போய் நிற்கச் செய்தல். இதனல் பொருள்

அவசியம் சம்பாதிக்கவேண்டுமென்பதாயிற்று.

உ. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. (752)

(இ-ம்) எல்லா நன்மையும் உடையவராயிருந்தாலும் பொருளில்லாதவரை எல்லாரும் இகழ்ந்து பேசுவர்; எல்லாத் தீமையு முடையராயிருந் ாலு பொருளுடையவரை எல்லாரு மேன்மையாக மதித்து மரியாதை செய்வர். அஃதாவது, அவருக்குத் தாம் தாழ்ந்துநிற்றல் என்பதாம்.

ந. பொருளென்னும் பொய்யா விளக்கம் இருளறுக்கும்
எண்ணிய தேயத்துச் சென்று. (753)

(இ-ம்) பொருளென்று எல்லாராலும் சிறப்பித்துச் சொல்லப்படும் கெடாத விளக்கானது தன்னைச் செய்தவராகிய அவரெண்ணிய தேசத்திலே போய் அவருடைய பகைவராகிய இருளைக் கெடுத்துவிடும் என்பதாம். மனை விளக்குக்கும் பொருளாகிய விளக்குக்கும் வேற்றுமை இதனாலறிந்துகொள்க.

ச. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். (754)

(இ-ம்) ஆக்கும் வழியை யறிந்து கொடுங்கோல் செலுத்தாமல் செங் கோல் (நீதி) செலுத்தி அரசன் சம்பாதித்த பொருளானது தருமத்தையும் இன்பத்தையுங் கொடுக்கும் என்பதாம். தருமமாவது-கடவுட் பூசை, தானங்கள் முதலியவை செய்தல். இன்பமாவது-நெடுங்காலம் நல்லவை யெல்லாவற் றூலுங் காமமநுபவித்தல். நல்லவை - காமமநுபவித்தற்கு வேண்டிய அசனம் சய னம் சந்தனம் புட்ப முதலியவை. அசனம்-உணவுப்பொருள்கள்.

## எகூ-ஆம் அதி.—பொருள் செயல்வகை.

உஉகூ

ரு. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.
(755)

(இ-ம்) தாம் குடிகளிடத்துச் செய்யும் அருளோடும், குடிகள் தம்மிடத் துச் செய்யும் அன் போடு ங்கூடி வராத பொருட் பெருக்கத்தை அரசர் பொருந் தாமல் நீங்கும்படி விட்டுவிடவேண்டும் என்பதாம். மேற்கூறிய இரண் டோடுங் கூ டி வருதலாவது-குடிகள் விளைவிலப்பொருளில் ஆறிலொரு பங்கு வாங்குதல். அவ்வாறு செய்யாமல் அதிகமாக வாங்கிச் சேர்க்கும் பொரு ளானது பசியமட்பாத்திரத்தில் விட்ட தண்ணீர் போலத் தானுங் கெட்டுத் தன்னைச் சேர்ந்தவனையுங் கெடுத்து விடுமென்பது

கண்டுகொள்க. இது 660-ஆம் திருக்குறளின் கருத்து.

சு. உறுபொருளும் உல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள். (756)

(இ-ம்) மக்களில்லாமலும் தாயத்தாரில்லாமலும் இறந்து போனவர் தேடிவைத்த பொருளும், நாவாயிலும் பண்டியிலும் மாடு முதலியவற்றிலும் பிற இடங்களில் நின்று வரும் பொருளுக்கு வாங்குதம் சுங்கப் பொருளும், பகைவரிடத்துத் திறை (கப்பமாக) வாங்கும் பொருளும் அரசனுக்கு உரிய பொருள் என்பதாம். நாவாய்-மரக்கலம். சுங்கப்பொருள்-வரிப்பொருள்.

எ. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண் டு. (757)

(இ-ம்) அன்பினலே பெறப்பட்ட அருளென்னும் பிள்ளையானது பொருளென்று உயர்த்திச் சொல்லப்பட்ட சிறப்புடைய செவிலித் தாயால் வளர்ந்துவரு மென்பதாம். யாதொரு சம்பந்தமு மில்லாமல் வருத்தமுற்றவரிடத்துச் செல்வதாகிய ஒருவரது மன நெகிழ்ச்சி (இளகுதல்) ஆகிய அருள் ஏதேனும் ஒரு சம்பந்தம் பற்றிச் செல்லும் அன்பு

அதிகப்பட்ட இடத்து உண்டாவது. ஆதலால் அவ்வருளை அன்பாற் பெறப்பட்ட பிள்ளையென்றார். அப்படிப்பட்ட அருள் யாதொரு சம்பந்தமுமில்லாமல் தரித்திரர் மேற் செல்வது, அத்தரித்திரத்தைப் போக்கவல்ல செல்வவான்களிடத்தே யுண்டாதலால் அச்செல்வமே அவ்வருளை விருத்திபண்ணுதற்குக் காரணமாயிருத்தல் பற்றி அச்செல்வத்தைச் செவிலித்தாயாகக் கூறியருளினரென்பதை நுட்ப அறிவாலறிந்துகொள்க. செவிலித்தாய்-ஐந்துவிதத் தாயார்களுக்குள் வளர்க்குந்தாய்,

௨௫௦ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

அ. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
றுண்டாகச் செய்வான் வினை,
(758)

(இ-ம்) தன் கைவசம் பொருளுண்டாயிருக்க ஒரு தொழிலைச் செய்ய முற்பட்டவன் அதைச் செய்தலானது மலைமேலேறி நின்று தரையிலே யானையோடு யானை சண்டை செய்வதைப் பார்த்தாற் போலும் என்பதாம். அஃதாவது, மலையிலேறி நிற்பவனொருவன் பூமியில் யானையும் யானையும் தாக்கும் போரைப் பயமும்

வருத்தமுமில்லாமல் தான் சுகமாக இருந்து பார்ப்பதுபோலக் கைப்பொருளுடையவனும் ஒரு தொழிலைச் செய்ய முயன்றால் பயமும் வருத்த முமில்லாமல் அத்தொழிலில் வல்லவரைக் கொண்டு காரியத்தை முடித்துக்கொள்வன் என்க.

௯. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரிய தில்.
(759)

(இ-ம்) தமக்கொருகாரியம் உண்டாக நினைப்பவர் பொருளைச் சம்பாதித்துச் சேர்க்கவேண்டும். அப்பொருளானது தம் பகைவரது கருவத்தைப் பங்கப்படுத்தும் வேலாயுதமாகும். அதைப்போலக் கூரிய ஆயுத மொன்று மில்லை யென்பதாம். எப்படி யென்றால், ஆயுதங்களெல்லாம் உருவப் பொருளை அறுக்குமேயல்லாமல் அருவப்பொருளை அறுக்கமாட்டா, பொருள் உருவப்பொருளையும் அருவப்பொருளையும் அறுக்குமாதலாலென்க. அறுத்தல் என்பதற்குப் பொருள், பிளத்தலுங் கெடுத்தலுமென்று கொள்க.

௧0. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொருள்
ஏனை யிரண்டு மொருங்கு.

(760)

(இ-ம்) நீதியால் சம்பாதித்த பொருள் மிகவும் அதிகமாகச் சம்பா தித்தவருக்கு மற்றைத் தருமமும் இன்பமும் மிகவும் எளியபொருள்கள் என்பதாம். எனவே, பொருளொன்றிருந்தால் அப்பொருளால் தருமத்தை யும் இன்பத்தையும் ஆக்கிக்கொள்ளலாமென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே "கல்விற் பிறக்குங் கதிர்மணி காரிகை, சொல்விற் பிறக்கு முயர் மதம்-மெல்லென், அருளிற் பிறக்கும் அறநெறி யெல்லாம், பொருளிற் பிறந்து விடும்." என்றார் பிறரும்.

## 77-ஆம் அதி.—படைமாட்சி.

அஃதாவது, பொருளினாலாவதாகி வெல்வதாகிய சேனையினது நன்மை. சேனையாவது-தேர், யானை, குதிரை, காலாள் (போர்வீரர்) ஆகிய நான்கின் கூட்டமாம்.

க. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.
(761)

(இ-ம்) தேர் யானை குதிரை காலாள்கள் என்னும் நான்கு அங்கங்க ளோடு கூடி நிறைந்து யுத்தகளத்திலே

வரும் இடையூறுகளுக்குப் பயப்படாமல் நின்று சண்டைசெய்து வெற்றியடைகின்ற சேனையானது அரசனுக்கு அவன் செல்வத்துளெல்லாம் முதன்மையான செல்வம் என்பதாம். அரசனுக்கு வெற்றியை உண்டாக்கி மற்றைச் செல்வங்களை வளர்த்தலால் இவவாறு கூறியருளினர்.

உ. உலைவிடத் தூறஞ் சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.
(762)

(இ-ம்) தன் வலிகுறைந்த காலத்தும் அரசனுக்குப் போரினிடத்துத் தளர்ச்சி வந்தால் பகைவர் ஏவிய ஆயுதங்களை யெதிர்த்துத் தன்மேல் தாங்கும் வன்கண்மை (வைராக்கியம்) அரசனுக்குத் தொன்றுதொட்டு வரும் மூலபடைக்கு உண்டாகுமே யல்லாமல் மற்றவர்க்கு உண்டாகமாட்டாது என்பதாம். தொன்றுதொட்டு வருதல்-அரசன் தகப்பன் பாட்டன் முதலியோர் காலந்தொடங்கி யுள்ளதாதல். படையாவது - மூலப்படை, கூலிப் படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படை யென ஆறு வகைப்படும். படை-சேனை. பகைப்படை -பகைவரை வென்று அவரிடத் துள்ள படையைத் தன்படையாக்கி வைத்துக்கொண்ட படை.

ந. ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(763)

(இ-ம்) எலியாகிய பகை அநேகங் கூடிக் கடல்போல முழங்கினால் பாம்புக்கு என்ன துன்பமுண்டாகும். அப்பாம்பு பெருமூச்சு விட்டால் அவ்வளவிலே அவ்வெலிகள் தாமே கெடுமென்பதாம். இதனால், வீரரல்லா தவர் பலர் திரண்டு ஆரவாரஞ்செய்து எதிர்த்தாலும் வீரமுடையவனொருவன் அதற்குப் பயப்படாமல் வெளிவந்த அளவிலே அவர் கெடுவரென்பது கண்டு

திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

கொள்க. இக்கருத்துப்பற்றியே, "காகமானதுகோடி கூடிநின்றாலுமொரு கல்லின்முன்னெதிர் நிற்குமோ" என்று தாயுமான சுவாமிகள் அருளிச் செய்தனர். (எங்குநிறைகின்ற 4)

ச. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(764)

(இ-ம்) போர்க்களத்தில் வீரமும் மானமும் கெடுதலில்லாமல் நின்று பகைவர் இரகசியங்களைக் கேட்டால் அவற்றை வெளிப்படுத்தாததாகித் தொன்றுதொட்டு வந்த அஞ்சாமையுடையதே அரசனுக்குச்

சேனை (படை) என்பதாம். தொன்றுதொட்டு வருதல் 762-வது வசனத்திற் காண்க. அஞ்சாமை-பயப்படாதிருக்தல். படை-சேனையிலுள்ள வீரர்.

ரு. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை.
(765)

(இ-ம்) யமன் தானே கோபித்து எதிர்த்து வந்தாலும் மனமொத்து நேரே நின்று யுத்தஞ் செய்யும் வலிமையுடையதே படை (சேனை) என்பதாம். மனம் ஒத் தென்றது, மனவலியில்லாவிட்டால் வலியார்முன் னெதிர்த்துச் சண்டை செய்ய முடியாததலால் என்க. மிகப் பலர் மனமொத்துப் போர் செய்தற்குக் காரணம் அரசன்மேல் வைத்த அன்பு.

சு. மறமான மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே யேமம் படைக்கு.
(766)

(இ-ம்) பகைவர் சேனைப் பெருக்கத்தைக் கண்டு பயப்படாது நிற்கும் வீரமும் அரசனுக்குத் தோல்விவராமற் காக்கு மானமும் தமக்கு முன் னிருந்த வீரர்கள் சென்ற வழியே நடத்தலும் அரசனுக்குள்ள இரகசியத்தை வெளிப் படுத்தாதிருக்குந் தெளிவும் ஆகிய நான்குமே சேனை வீரர்களுக்குக் காவல் என்பதாம். முன்னிருந்த வீரர்கள்

சென்றவழி-பகைவர் புறங்காட் டியோடினால் ஆயுதங்களை அவர்மேற் பிரயோகஞ் செய்யாதிருத்தல் முதலியன. இதனால் வீரர்கட்கு வேறு காவல் வேண்டியதில்லையென்பது கண்டுகொள்க.

எ. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

(767)

(இ-ம்) பகைவரால் வரிசை வரிசையாக வகுக்கப்பட்டுத் தன்மேல் வந்த சேனையின் போரை விலக்கும் வகுப்பு அறிந்து தானும் அதற்கிணங்க

•

# எஎ-ஆம் அதி.—படைமாட்சி.

உ௱௲

வகுத் துக்கொண்டு, அப்பகைவர் தூசிப் படையைத் தன்மேல் வாவொட்டா மல் தடுத்துத் தான் அதன்மேற் செல்வதே சேனை என்பதாம். போர்-யுத்தம். வகுப்பு-யானை, 'குதிரை, தேர் என்னு மிவைகளை எந்தெந்த முறைப்படி யெப்படி யெப்படி நிறுத்தவேண்டுமோ அந்தந்த முறைப்படி யப்படி யப்படி நிறுத்துதல். இதன் தொகை வகை விரி யெல்லாம் யுத்தநூல் முழுதும் படித் திருந்தால் மட்டும் நன்கு தெரியும். இவ்விடத்திலே சுருக்கமாக எழுதிக் காட்டினால் விளங்காது; தெரிந்தமட்டும்

போதுமென்பார் பரிமேலழகர் உரையைப் படித்தறிந்துகொள்க. தூசிப்படை-முதற்படை. சேனை-படை.

அ. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.
(768)

(இ-ம்) சேனையானது எப்படியிருக்கவேண்டுமென்றால், பகைவர்மேல் தான் சென்று யுத்தஞ் செய்தற்குப் பயப்படாதிருத்தலும் பகைவர் சேனை யானது தன் மேல் வந்து யுத்தம் செய்து வருத்தப்படுத்தினால் பொறுத்துக் கொள்ளும் வலிமையையுமுடையதா யிருக்கவேண்டும். இவ்விரண்டுமில்லா மற் போனாலும் தன்னுடைய தோற்றத்தின் அழகினாற் பெருமையடையும் என்பதாம். தோற்றத்தின் அழகாவது-யானை குதிரை தேர்களை அலங் காரஞ் செய்துகொள் ளுதலாலும் கொடி குடை பலவகை வாத்தியங்கள் சாமரம் எக்காளம் முதலியவற்றின் பெருக்கத்தாலுமாகிய காட்சிச்சிறப்பு.
பெருமை-இவவிதமாகிய படைச்சிறப்பைக் கண்டவுடனே பகைவர் பயப்படும் பெருந்தன்மையாம்.

கூ. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையும்

இல்லாயின் செ வல்லும் படை.
(769)

(இ-ம்) சுருங்கிக்குறைதலும் மனத்தினிடத்து நீங்காத வெறுப்பும் தரித்திரமும் இல்லையானல் சேனையானது பகைவர் போரை (யுத்தத்தை)க் கெடுத்து வெற்றியடையும் என்பதாம். நாளுக்குநாள் விருத்தியடையாமல் உள்ள அளவிற் சுருங்கிக் குறைதலானது அரசன் பொருள்கொடுத்து ஆதரியாமையால் வருவதாம். மனத்தினிடத்து நீங்காத வெறுப்பு - பிறர் பெண் களைக் கவர்தல், இளிவரவு (இழிவு) ஆன செயல்களைச் செய்தல் ஆகியவற் றால் வருவது. இவ்விரண்டு செய்கையுடையார்க்கும் அரசனிடத்து அன்பு நிகழமாட்டாது ஆதலால் நீங்காத வெறுப்பென்று அருளிச்செய்தனர்.

௧௦. நிலைமக்கள் சால வுடைத்தெனினும் தானை
தலைமக்க ளில்வழி யில்,
(770)

30

(இ-ம்) போரினிடத்து நீங்காத வீரர்கள் பலரிருந்த ராராலும் தன க்கு முதன்மையாகிய சேனைத்தலைவரில்லாத இடத்து அச்சேனை போர்க்களத் தில் நில்லாது கலைந்து போய்விடும் என்பதாம். இதனுல் நிலையுடைய சேனு திபதியில்லாமல் யுத்தம் செய்யப்போனுல் பகைவரை வெல்லமாட்டா ரென் பது கருத்து. சேனைத்தலைவர்-சேனுதிபதி.

---

7 8-ஆம்

அதி.—படைச்செருக்கு.

அஃதாவது, சேனையின் வீரமிகுதிச் சிறப்பு.

க. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
முன்னின்று கல்நின் ற வர்.
(771)

(இ-ம்) பகைவர்களே என்னுடைய அரசனேடு எதிர்த்துப் போர் செய்து தோற்று, அவன் வேலாலிறந்து கல்லினிடத்தே நின்ற வீரர் அநேக ராவர், ஆதலால் நீங்கள் உங்களுடலினிடத்தே நிற்கவேண்டுமானுல் என்னு டைய அரசன்முன் னில்லாமற் போய்விடுங்கள் என்பதாம். அப்படியல்லா மல் எதிர்த்து நிற்பீரானுல் இறந்து போவீரென்பது கருத்து. இது அரசன் சேனைவீரர்களி லொருவன் அ ரச னிடத்தும் பகைவரிடத்தும்

அன்புபற்றிச் சொல்லியது. கல்லினிடத்தே நிற்பதாவது-போரிலே புறங்காட்டி யோடா மல் நின்று இறந்த வீரனை அவனது ஞாபகச்சின்னமாகக் கல்லில் வரைந்து நட்டு வைத்தல். இது பழையகாலத்து வழக்கம். சின்னம்-அடையாளம்.

உ. கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(772)

(இ-ம்) மரங்கள் நெருங்கிய காட்டினிடத்து ஓடு முயலைத் தவறாம லெய்த அம்பைக் கையிலே தாங்குதலைப் பார்க்கினும் வெளியிடத்திலே நின்ற யானையை வைத்த குறிதவறிப்போக வீசிய வேலாயுதத்தைக் கையிலே தாங்குதல் நன்மை என்பதாம். இதனால் வீரமில்லாதாரோடு போர்செய்து வெல் லுதலைப் பார்க்கினும் வீரமுடையவரோடு போர்செய்து தோற்றுப்போதல் நல்லதென்பது கண்டுகொள்க. இது பகையரசன் சேனையோடு போர்செய்த வீரனொருவன் அச்சேனை புறங்காட்டியோடவும் இப்படிப்பட்ட சேனையோடு பொருதல் இழிவென்று நாணிப் பின் அவ்வரசனோடு பொரும்படி செல்ல லுற்றவனைச் சொல்லியது.
அவ்வரசன்-பகையரசன்.

ந. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றத னெஃகு.

(773)

(இ-ம்) யுத்தம் செய்யும்போது பகைவரிடத்துத் தாக்ஷிணியமில்லாமல் செய்யும் வீரத்தை ஒருவனுக்கு உயர்ந்த ஆண்மைத் தன்மையென்று கற்றறிந்தோர் சொல்லுவர். அப்பகைவர்க்கு யுத்தகளத்தில் ஏதாவது ஒரு குறை வந்தபோது அது நீங்குதற்பொருட்டு அவரிடத்துத் தாக்ஷிணியம் வைத்து ஊராண்மை (உபகாரியாந்தன்மை)யைச் செய்வது அத்தாக்ஷிணியத்துக்குக் கூர்மை (விளக்கம்) என்பதாம். இதற்குதாரணமாக, இராவணன் யுத்தகளத்தில் சேனையெல்லா மிழந்து நிற்கும்போது இராமபிரான் அவனிடத்து இரக்கம் வைத்து இன்றையத்தினம்போய் நாளையத்தினம் உன் சேனையோடு வாவென்று விடுத்ததை "இன்றுபோய்ப் போர்க்கு, நாளை வாவென நவின்றனன் நாகிளங் கமுகின், வாளை தாவுறுங் கோசல நாடுடை வள்ளல்" என்னும் செய்யுளாலறிக. (கம்பராமாயணம் முதற்போர்ப்படலம் 256)

ச. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.
(774)

(இ-ம்) தன் கையிலிருந்த வேலாயுதத்தைப் பகைவர்விட்ட யானை மேல் எறிந்து பின்னும்

வெறுங்கையோடு நின்று தன்மேல் வருகின்ற யானைமேலெறிவதற்கு வேல் தேடித்திரிகின்ற ஒரு வீரன் தன் மார்பின்மேற் பட்டழுந்தி நிற்கும் வேலைக்கண்டு அதைப் பிடுங்கி நின்று மகிழ்ச்சியடைவன் என்பதாம். இதில் கோபமும் வீரமும் மிகுதலால் முன்னமே பகைவரா லெவப்பட்டு மார்பிற்பட்டுருவிய வேலை யறியாமல் வேல்தேடித் திரிந்தா னென்பதும் அவ்வேலைப் பறித்துத் தேடியபொருள் வருந்தாமற் கிடைத்ததே என்று மகிழ்ந்தானென்பதும் இவ்வளவு வருத்தப்பட்டு நிற்கும்போதும் பின் னும் போரில் விருப்பமுற்றிருந்தானென்பதும் யூகித்தறிந்துகொள்க.

ரு. விழித்தகண் வேல்கொண் டெறிய
அழித்திமைப்பி
ஞேட்டன்றோ வன்க ணவர்க்கு.
(775)

(இ-ம்) பகைவரைக் கோபித்துப்பார்த்த கண்ணானது அப்பகைவ ர் தம் மேல் வேலாயுதத்தை யெறிய அதைத் தாங்கமாட்டாது பயந்து பார்வையை விட்டு இமைக்குமானால் வீரராயினோர்க்குப் புறங்காட் டி யோடும் குற்றத்துக் குச் சமானம் அல்லவா என்பதாம். இமைத்தல்-மூடுதல்.

௬. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.
(776)

(இ-ம்) வீரனானவன் போர்கிடைத்த காலத்தில் தன் முகத்திலு மார்பிலும் புண்படும்படி சண்டை செய்யாத நாள்களை யெல்லாம் எடுத்தெண்



ணிப் போரிடையாமல் வீணே கழிந்த நாள்களோடு சேர்த்துவைத்து வருத்தப்படுவேன் என்பதாம். இதுபற்றியே, "அமராபுரணன்" என்றார் பிறரும். (நன்னூற்பாயிரம்)

எ. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.
(777)

(இ-ம்) சொர்க்கலோகத்துக்குத் தம்மோடு கூடவாராமல் இவ்வுலகத்தைச் சூழ்ந்துநிற்கும் புகழை விரும்பி உயிர்வாழ்தலை விரும்பாத வீரர்கள் தம்முடைய கால்களில் கட்டிய வீரக்கழலே அலங்காரகுணமுடைய தென்பதாம். இதனால் புகழை விரும்பாமல் உயிரை விரும்பிப் புறங்காட்டியோடுவார் வீரக்கழலைக் கட்டிக்கொள்வதாற் பயனில்லையென்பது விளங்கியது

மல்லாமல் வீரானவர் இம்மையிற் புகழும் மறுமையில் சொர்க்கமும் இ லே சிலே யடையலாமென்பது கண்டுகொள்க. இந்தச் சொர்க்கமே வீரசொர்க்கம் என்று சொல்லப்படுவது. வீரத்தாலுண்டாவது வீரசொர்க்கம்.

அ. உறினுயிர் அஞ்சா மறவர் இறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.
(778)

(இ-ம்) யுத்தம் வந்து வாய்த்தால் தம்முயிரிறந்துபோமென்று பயப் படாமல் பகைவர்மேற் செல்லும் வீரர், தம்மரசன் அப்போர் வேண்டா என்று கோபித்தாலும் அவ்வீரத்தின் செருக்கு (மிகுதி ) குறையமாட்டார் என்பதாம். இக்கருத்தால் "போரென்ன வீங்கும், பொருப்பன்ன புயம்" என்றார் பிறரும். (கம்பராமாயணம் பூக்கொய்படலம் 18) போர்-யுத்தம்.

கூ. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.
(779)

(இ-ம்) தாம் சொல்லிய சபதம் தவறாதிருக்கும்பொருட்டு யுத் தகளத் திற் சென்று பொருது இறக்கவல்ல வீரரைச் சொல்லிய

சபதமுடியாமற் போயினுரென்று இகழ்ந்து பேசுதற்குரியார் யாரிருக்கின்றார்? ஒருவருமில்லை என்பதாம். ஏனென்றால், அவ்வீரர் போர்க்குப் பயப்பட்டு உயிரோடிரா மையாலென்க. பொருது-சண்டை செய்து. போர்-யுத்தம். சபதமாவது, இன்று சூரியன் அத்தமிக்குமுன் சயத்திரதனைக் கொல்லாவிட்டால் அக்கினி யில் விழுந்திறந்துபோவேனென்று அருச்சுனன் சொன்னதுபோல்வது. (பாரதம் 13ஆம் போர்ச்சருக்கம்)

## ளக௯-ஆம் அதி,—நட்பு,

உ௱ள

கo. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகற்பிற் சாக்கா டிரந்துகோட் டக்க துடைத்து. (780)

(இ-ம்) தமக்குப் பலநாளுஞ் செய்த நன்றியை நினைத்துத் தம்மை ஆதரித்து ஆண்டு வந்த அரசர் கண்களிலிருந்து நீரொழுகும்படி வீரரானவர் போரினிடத்து மரணமடைவது கிடைத்தால் அம்மரணம் யாசித்தாயினும் வாங்கிக்கொள்ளுந் தகுதியுடையது என்பதாம். புரந்தார் கண்ணீர் மல்கல்- இப்படிப்பட்ட வீரர் இனிக் கிடைப்பது அரிதென்றழுதல். சுற்றத்தாரழ வீட்டினில் நோயாலிறத்தல் பழவினைப்பயனே ஆமல்லாமல் வேறில்லை. போரினிடத்து அரச னுக்காகப்

பொருது இறத்த ல் வீரசொர்க்கந் தருதலால் அதைப்பார்க்கினும் இது சிறந்ததென்று நாயனாருளிச்செய்தனர்.

---

## 79-ஆம் அதி.— நட்பு.

அஃதாவது, அரசனுக்குப் போரினிடத்துப் படைபோல உதவிசெய் யும் சிநேகத்தின் சிறப்பு.

க. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

(781)

(இ-ம்) நட்புச் செய்துகொள்ளுதல்போல வேறு செய்து கொள்ளும் அருமையுடைய பொருள்கள் எவையிருக்கின்றன. நட்புச்செய்துகொண் டால் அதைப்போலப் பகைவர் வந்து நுழைதற்கிடமில்லாத காவல்கள் எவை யிருக்கின்றன என்பதாம். நட்பு அரிய பொருளென்றது எதனாலென்றால், நட்புடையார் ஒரு காலத்திலு மாறுபடாதிருத்தலாலெங்க. அத்தன்மை யுடையாரைப் பலமுறை யாராய்ந்தே நட்புச்செய்யவேண்டும். அப்படி யாரா யாமல் நட்புச்செய்தால் நட்புச்செய்தவர் முடிவிலே சாகும்படியாகிய துன்ப முண்டாகும். இக்கருத்தை இந்நூலாசிரியரே 792-ஆவது திருக்குறளிலரு

ளிச்செய்திருக்கின்றனர். இனி நட்பாவது இயற்கை செயற்கை யென இருவகைப்படும். அவற்றுள் இயற்கை யென்பது தான் பிறந்த குடிப்பிறப்பின் முறையினாலும் தேசத்தின் முறையினாலும் ஆவதாம். குடிப்பிறப்பின் முறையால் நட்பாவார் சுற்றத்தார்; அவர் செய்கையை சுற்றந்தழாஅல் என்னும் அதிகாரத்திற் கண்டுகொள்க. தேசத்தின் முறையால் நட்பாவார், பகையிடை இட்டதேசத்தில் நின்றுந் துணையாவார். அவர் செய்கையைத் • துணைவலியெனக் கூறும் வலியறிதலென்னும் அதிகாரத்துட் கண்டுகொள்க. இவ்விடத்துச் சொல்லப்படுவது முன் செய்த உதவிபற்றி வரும் செயற்கை ஊஉஅ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

நட்பென்பதாம். பகையிடையிட்ட தேசம்-பகைவரிருக்கும் நாட்டுக்கு அப்பாலுள்ள நாடு. நாடு-தேசம். நட்பு-சிநேகம்.

உ. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(782)

(இ-ம்) நிறைந்த குணத்தையுடைய அறிவுடையார் இருவர் செய்யும் நட்புக்கள் பிறைச் சந்திரன்போல ஆரம்பத்தில் சிறியதாயிருந்து நாள்தோறும் வளர்ந்து நிறையும் தன்மையுடையன. அறிவில்லாதவர் இருவர் செய்யும்

நட்புக்கள் பூரணசந்திரன் போல ஆரம்பத்தில் நிறைந்திருந்து தினந்தோறும் குறைந்துவிடும் தன்மையுடையன என்பதாம். இக்கருத்துப்பற்றியே ' 'பெரியவர் கேண்மை பிறை போல நாளும், வரிசை வரிசையா நந்தும்வரிசை சயா, வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு.'' என்றார் பிறரும் (நாலடியார் தீவினையச்சம் 5)

ந. நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும்
பண்புடை யாளர் தொடர்பு.
(783)

(இ-ம்) நற்குணமுள்ள மனிதர் தங்களுக்குள் செய்துகொள்ளும் சிநேகம் அவருக்கு இன்பஞ்செய்தல் எதுபோலுமென்றால், படிக்குந்தோறும் நூற்பொருள் படிப்பவருக்கு இன்பஞ் செய்தல் போலும் என்பதாம்.

ச. நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.
(784)

(இ-ம்) ஒருவரோ டொருவர் சிநேகஞ் செய்தலானது தங்களுக்குள் சந்தோஷித்தற்கு இயைந்த வார்த்தைகளைப் பேசிச்சிரித்தற்கு அல்ல. அவ் விருவருக்கும் செய்யத்தகாத செய்கையுண்டாகிய இடத்து

முற்பட்டு ஒரு வருக்கொருவர் அச்செய்கையைத் தடுத்தற்பொருட்டு என்பதாம். செய்யத் தகாத செய்கை—பழிபாவமுதலிய தீமைகள்.

ரு. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும். (785)

(இ-ம்) ஒருவரோடொருவர் சிநேகமாவதற்கு ஒருதேசத்தாயிருத் தலும் அடிக்கடி கண்டுபேசுதலும் காரணமாயிருந்தாலும் அவ்விரண்டும் வேண்டுவன இல்லை. அவ்விருவருக்கும் ஒத்தமனவுணர்ச்சியே உடனுயிர் நீங்குஞ் சிநேகமாமுரிமையைக் கொடுக்கும் என்பதாம். இதற்குதாரணமாகக்

எஅ-ஆம் அதி.—நட்பு

உள்ளக

கோப்பெருஞ் சோழமகாராசன் மதுரையிலிருக்கும் பிசிராந்தையாரென்னும் புலவர் பெருமானுடன் உணர்ச்சியொத்த நட்பினனுயிருந்த காலத்தில் கோப்பெருஞ் சோழன் இவவுலகவாழ்வைத் துறந்து மேலுலக இன்பத்தை விரும்பி உயிர் நீங்க எண்ணி, வடக்கிருக்கும்போது பிசிராந்தையாரை நினைக்க அவரதையறிந்து மதுரையை விட்டுச் சென்று தானும் வடக்கிருந்து உயிர் நீத்தனர். இச்சரிதத்தின் விரிவைப் புறநானூறு 216-முதல் 228-வரை

யுள்ள பாடல்களிற் பார்த்துக் கொள்க.
வடக்கிருத்தலாவது—மேலுலகத்தை யடைய விரும்பினோர் இவ்வுலகவாழ்வை நீங்கி விரதத்தால் சரீரத்தை மெலியச் செய்து யோகப்பயிற்சியால் உயிர்விடுதற்குத் தாம் இருந்த இடத்தைவிட்டுப் புண்ணியதிசையாகிய வடதிசையிற் சென்று தங்குதல். இதனை மகா பிரஸ்தானம் என்றும் உத்தர கமனமென்றுங் கூறுவர்.

சு. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.
(786)

(இ-ம்) கண்டவுடனே முகமாத்திர மலர்ந்து காட்டிப் பேசுஞ் சிநேகம் சிநேகமாகமாட்டாது. அன்பால் மனமுமலரும்படி மகிழ்ந்து பேசுதலே சிநேகம் என்பதாம். எனவே, சிநேகத்துக்கு முகமும் அகமும் மலர்ந்து பேசுதலே வேண்டும் என்பதாயிற்று.

எ. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதா நட்பு.
(787)

(இ-ம் ) கேட்டினைத் தரும் தீயவழிகளிற் செல்லுமிடத்து, அவற்றை விலக்கி மற்றை நல்வழிகளிற் செல்லாதபோது அந்நல்வழிகளிலே செல்லச் செய்து ஊழாற் கேடுவந்த இடத்து அக்கேட்டினை விலக்கக்

கூடாமையால் அப்போது உண்டாகும் துன்பத்தைக்கூட இருந்தனுபவிப்பதே ஒருவனுக்குச் சிநேகமாவது என்பதாம். இத்திருக்குறளுக்கு வேறுமொரு பொருள் கூறு வாருமுண்டு; அஃதாவது:-போர் அழிந்து கெட்ட இடத்தும செல்வம் அழிந்து கெட்ட இடத்தும் வந்த துன்பத்தை நீக்கி யென்பதாம். இப்பொருளுக்கு அழிவின் நவையென்று பதம் பிரித்துக் கொள்க. கூட இருந்து துன்பத்தை அநுபவிப்பதற்கு உதாரணமாக "அக்குளத்திற், கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே, ஒட்டியுறுவா ருறவு" என்றார் (மூதுரை 17) ஔவையாரும்.

அ. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

(788)

உ௫௦ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

( இ-ம் ) இடை யினிடத்துள்ள ஆடையவிழ்ந்து கீழேவிழப்பட்டவனுக்கு அப்பொழுதே அவன் கைசென்று அவமானத்தை நீக்குதல் போல,

சிநேகி தனுக்குத் துன்பம் வந்த இடத்து அப்பொழுதே போய் அத்துன்பத்தைப் பே ாக்குவதே சிநேகமாவது என்பதாம்.

சு. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
யொல்லும்வா யூன்று நிலை.
(789)

(இ-ம்) சிநேகத்துக்கு அரசிருக்கை எதுவென்று கேட்டால், ஒரு வனுக்கு அறம் பொருள் ஆக்குமிடத்துத் தளர்ச்சிவந்தால் எந்தக் காலத்து மாறுபாடில்லாமல் கூடியமட்டும் அத்தளர்ச்சி வாராமல் தாங்கும் திண்மை (வலிமை ) என்பதாம். அரசிருக்கை-உன்னதமான இடத்திலிருப்பது. தளர்ந்த காலத்தில் நட்பைப்போலத் தாங்குவது வேறொன்றில்லாமையா லிவ்வாறு நாயனார் கூறியருளினர்.

கo. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
புனையினும் புல்லென்னும் நட்பு.
(790)

(இ-ம்) இவர் நமக்கு இவ்வளவு அன்புடையவர்; நாம் இவருக்கு இத் தன்மையுடையோமென்று ஒருவரை யொருவர் உபசாரமாகப் புகழ்ந்து சொன்னாலும் நட்பானது புல்லிதாய் (அற்பமாய்த்) தோன்றும் என்பதாம். எனவே

உண்மைச் சிநேகத்துக்கு ஒருவரை யொருவர் புகழ்ந்து பேசவேண்டுவதில்லை யென்பது கருத்து. ஒருவரை ஒருவர் புகழ்ந்து பேசினும் நட்பு, புல்லிதா மென்றால் இகழ்ந்துபேசினல் அற்பமாய்த் தோன்றுமென்பது சொல்லாமலே விளங்குதல் காண்க. நட்பு-சிநேகம்.

---

## 80-ஆம் அதி.—நட்பாராய்தல்.

அஃதாவது, சிநேகஞ் செய்தற்கு உரியவரை நன்றாகத் தெரிந்தெடுத்தல்.

க. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(791)

(இ-ம்) குணமுஞ் செய்கையும் ஆராயாமல் ஒருவனைச் சிநேகித்தால் அதைப்போலுங் கேடு வேறேயில்லை. ஆதலால் மேற்சொல்லிய அவ்விரண்டையும் நன்றாகத்தெரிந்து சிநேகித்தால் சிநேகஞ்செய்பவர்க்குச் சிநேகஞ் செய்

யப்பட்டவனை விட்டுவிடுதலுண்டாகமாட்டாது என்பதாம். எனவே, நல்லவனோடு சிநேகஞ் செய்யவேண்டுமென்பது கருத்து.

உ. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.
(792)

(இ-ம்) குணமும் செய்கையும் நன்மையாக வுடையானென்பதும் அவ்விரண்டும் தீமையாக வுடையானென்பதும் பலதரம் பலவிதத்தால் ஆராய்ந்து நன்மையுடையானென்று தெளிந்து அங்கீகரிக்கப்படாதவனுடைய சிநேகமானது முடிவிலே தானிறக்கும்படியான துன்பத்தைக் கொடுத்துவிடும் என்பதாம். ஆதலால் முன்னமே ஒருவனைத் தெரியாது சிநேகஞ்செய்தால் கேடு வருமென்பது கருத்து.

ங. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
இனனு மறிந்தியாக்க நட்பு.
(793)

(இ-ம்) ஒருவன் குணத்தினையுங் குடிப்பிறப்பினையுங் குற்றத்தினையுங் குறைவில்லாத சுற்றத்தாரையும் நன்மையாக உடையவனும் என்று மிகத் தெளிந்துகொண்டு, அதன்மேலவனைச் சிநேகஞ்

செய்யவேண்டுமென்பதாம்.

குற்றம்-பொறுத்துக்கொள்ளக்கூடிய குற்றம். ஏனென்றால், ஒரு குற்றமும் இல்லாதார் உலகத்திலில்லையாதலால் என்க. இக்கருத்தால் தற்காலத் தறி வுடையாரும் "பிழையிலான் கடவுளன்றி மக்களிற் றப்பில்லாதார் பிறரு முண்டோ" என்றார். (வேத நாயகம்பிள்ளை நீதிநூல்) நல்ல குடிப்பிறப்புச் சார்பால் நன் மையுண்டாதலும் சுற்றத்தாரது தொடர்புடையார் சிநேகிதரோடுந் தொடர்புடையார் ஆதலும் உண்மையால் இவ்விரண்டும் சிநேகஞ் செய்தற்குக் காரணமாயின என்று யூகித்தறிந்துகொள்க. தொடர்பு - சம்பந்தம்.

ச. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக் கொடுத்துங் கொள்ல்வேண்டு நட்பு.

(794)

(இ-ம்) உயர்ந்த குடியிற் பிறந்து தன்னிடத்தி உலகத்தார் சொல்லும் பழிச்சொல்லுக்குப் பயப்படுகின்றவனை விலையாகப் பொருள் கொடுத்தாலும் சிநேகஞ் செய்யவேண்டும் என்பதாம். குடிப்பிறப்பால் தான் குற்றஞ் செய்யாமையும் பழிக்குப் பயப்படுதலால் பிறர்செய்த குற்றத்தைப் பொறுத் தலும் அவனிடத்துக் காணப்பட்டன ஆதலா லவனது சிநேகத்தை விலை கொடுத்தாவது வாங்கவேண்டுமென்று நாயனார்

அருளிச்செய்தனர். .



ரு. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.
(795)

( இ-ம்) ஒருவர் தாம் உலக வழக்குக்கு மாறுபட்ட செய்கையைச் செய்தால் அச்செய்கையைத் தண்டிப்பதற்கு அழும்படி கண்டித்துச் சொல்லி விலக்கியும் கேளாமல் அதன்மேலும் அச்செய்கை செய்தால் பின்னும் அதிகமாக நெருக்கிச் சொல்லியும், அவ்வுலக வழக்கினை யறிந்து செய்யாவிட்டால் பின்னும் பற்பல நியாயங்கள் எடுத்துச்சொல்லி அவவுலக வழக்கத்தின் அருமையை யறியும்படி செய்விக்க வல்லவரைப் பல வழியாக ஆராய்ந்து நட்பு (சிநேகஞ்) செய்ய வேண்டுமென்பதாம். உலக வழக்காவது-உயர்ந்தோர் தொன்று தொட்டுச் செய்துவருஞ் செய்கை.

சுா. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.
(796)

(இ-ம்) ஒருவனுக்குக் கேடென்பது தன்னுடைய சிநேகராகிய வயல் களைக் குறையாமல் கணக்குப்படி அளக்குங்கோலாகும். ஆதலால் அந்தக் கேட்டினிடத்தும் அதனாலாவதோர் நல்லறிவு உள்ளது என்பதாம். அஃதாவது, தன்னிடத்துப் பொருள் பெருகிய காலத்து நெருங்கிவந்தும் சுருங்கிய காலத்துக் கைவிட்டுச் சென்றும் ஆபத்துக்குத் துணையாக மாட்டாரென்பதை யறிதல். இதனால் இத்தன்மையுடையோரைச் சிநேகஞ் செய்யக்கூடாதென் பது கருத்து. இக்கருத்தால் "உற்றுழித்தீர்வா ருறவல்லர்" என்றார் ஒளவை யாரும். (மூதுரை 18)

ஏ. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(797)

(இ-ம்) ஒருவனுக்குப் பேறு (இலாபம்) என்று சொல்லப்படுவது எது வென்றால், அறிவில்லாதவனைத் தெரியாமல் சிநேகஞ் செய்திருந்தால் அச் சிநேகத்தை மறந்து அவனைவிட்டு நீங்குதல் என்பதாம். அப்படி நீங்கா விட்டால் தீப்பற்றிய காட்டைச் சேர்ந்த சந்தன மரமும் வெந்து கெடுதல் போலத் தானுங் கெடுவன். ஆதலால் அறிவில்லாதவர் சிநேகம் ஒருபோதுங் கூடாதென்று கண்டுகொள்க. இதற்குதாரணமாக "வெறிகமழ் சந்தனம் வேங்கையும் வேமே, எறிபுனந்

தீப்பட்டக் கால்" என்னுஞ் செய்யுளைக் காண்க. (நாலடியார்-நல்வினஞ் சேர்தல் அதி 10)

அ. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
அல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.
(798)

அக-ஆம் அதி.—பழைமை.

உசுரு

(இ-ம்) தம்முடைய மனவூக்கம் (உற்சாகம்) குறைதற்குக் காரணமாகிய செய்கைகளை நினையாதிருத்தல் வேண்டும். அதுபோல ஆபத்து வந்த காலத்தில் வந்து உதவி செய்யாமல் கைவிடுவார் நட்பை (சிநேகத்தை)ச் செய்யாதிருக்கவேண்டும் என்பதாம். எனவே, செய்தால் ஒருபயனுமில்லை யென்பது கருத்து. ஊக்கங் குறைதற்குக் காரணமான செய்கைகள்-தம்மினும் வலியவரோடு தாமும் அவர்செய்யும் செய்கைகளைச் செய்யத் தொடங்குதலும், பயனற்றகாரியங்களும் என்று ஆசிரியர் பரிமேலழகர் கூறினர்.

சு. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.
(799)

(இ-ம்) ஒருவன் தனக்குக் கேடுவந்த காலத்துக் கைவிட்டுப் போவாருடைய சிநேகத்தை அவன் தன்னை யமன் கொண்டுபோகுங் காலத்து நினைத்தாலும் நினைத்த அவனுள்ளத்தை அச்சிநேகம் சுடும்என்பதாம். எனவே, ஆபத்துக் காலத்திற் கைவிடுவார் சிநேகம் யமன் செய்யும் துன்பத்தைப் பார்க்கிலுங் கொடிய துன்பமென்பது கண்டுகொள்க.

கூo. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்தும்
ஒருவுக ஒப்பிலார் நட்பு.
(800)

(இ-ம்) உயர்ந்தாரோடொத்துக் குற்றமற்றவருடைய நட்பை (சிநே கத்தை)யே கொள்ளல்வேண்டும். அவ்விதம் உயர்ந்தாரோடொத்த குணம் இல்லாதவருடைய சிநேகத்தைத் தெரியாமல் கொண்டிருந்தால் ஏதாவது விலைப் பொருள் கொடுத்தாலும் நீக்கிவிடல் வேண்டுமென்பதாம். நீக்கா விட்டால் கேடுவருவது நிச்சயம்.

---

## 81-ஆம் அதி.—பழைமை.

அஃதாவது, சிநேகரான பழையராந்தன்மையை யுத்தேசித்து அவர் செய்த பொறுக்கக்கூடிய குற்றங்களைப்

பொறுத்துக் கொள்ளுதல். பழைமை யென்பது-ஆகுபெயர்.

க. பழைமை யெனப்படுவ தியாதெனின்
யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.
(801)

(இ-ம்) பழைமையென்று சொல்லப்படுவது எதுவென்றுகேட்டால், பழை மையோர் உரிமையாற் செய்தவற்றை விலக்காமல் அவற்றிற்கு உடம்படும் உசசு

# திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

நட்பு என்பதாம். உரிமையாற் செய்வன எவையென்றால், ஒரு காரியத்தைக் கேளாது செய்தல், பொருள் கெடும் வகை செய்தல், தமக்கு வேண்டுவன வற்றைத் தாமே வாங்கிக்கொள்ளுதல், பணிவும் பயமுமில்லாமல் நடத்தல் முதலியவையாம். பழைமையோர்- நீண்டகாலம் நட்புடையோர்.

உ. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
குப்பாதல் சான்றோர் கடன்.
(802)

(இ-ம்) சிநேகத்துக்கு அவயவம் (அங்கம்) ஆவன சிநேகரானவர் உரிமைபற்றிச் செய்யும் செய்கைகள். அதனால் அச்சிநேகத்துக்கு இனிமை யுடையாகுதல் அச்சிநேகத்தைப் பொருந்திய நல்லவர்க்கு முறைமை

என்ப தாம். அதனுலென்றது உரிமையாற் செய்தலாலென்றபடி. இதனுல்,பழைமை என்றதற்குக் காலஞ் சென்றதல்ல. இங்கே சொல்லிய உரிமையை எற்றுக் கொள்ளும் நட்பு என்று தெரிந்து கொள்க.

௩. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.
(803)

(இ-ம்) தமக்குச் சம்மதமில்லாத காரியமாறுலும் தம்முடைய சிநேகர் உரிமைபற்றி ஒரு செய்கையைச் செய்தால் அதற்குத் தாம் செய்தாற்போல உடம்படாராஞல் அவரோடு முன் பழகிய பழைமையான சிநேகம் என்ன பயனைத் தரும் என்பதாம். பயன்-பிரயோசனம்.

௪. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
கேளாது நட்டார் செயின்.
(804)

(இ-ம்) தாம் செய்யவேண்டுங் காரியத்தைத் தம் சிநேகர் உரிமையால் தம்மைக் கேளாமற் செய்து முடிப்பாராஞல் அக்காரியத்தினது விரும்பப் படுந் தன்மைபற்றி அதனை யறிவுடையார் ஒப்புக்கொள்வாரென்பதாம். இதனுல், தாம் செய்யவேண்டிய காரியத்தைத் தம் சிநேகர் செய்து முடித் தால் நன்மையென்று எற்றுக்கொள்ளுதல் அறிவுடையார்க்

கல்லாமல் மற்ற வர்க்கு இல்லை யென்பது கருத்து. மற்றவர்-அறிவில்லாதவர்.

ரு. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
நோதக்க நட்டார் செயின். (805)

(இ-ம்) தம் சிநேகர் தாம் வெறுக்கத்தக்க காரியத்தைத் தமக்குச் செய்தாரானல் அப்படிச் செய்தற்குக் காரணம் அறியாமை யென்றாவது

அக-ஆம் அதி.—பழைமை.

உ௪ரு

மிகுந்த உரிமையென்றாவது நினைத்துக்கொள்ள வேண்டும் என்பதாம். எப்படி யென்றால், ஊழ்வினையால் தமக்கு நேரே வரவேண்டிய துன்பம் தம் சிநேகிதர் மூலமாக வந்ததென்று சமாதானப்படுத்திக்கொள்வது என்க.

சா. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்றார் தொடர்பு. (806)

(இ-ம்) சிநேகத்தினது அளவு நீங்காமல் நின்றவர் பழைமையினின்றும் நீங்காதிருந்தவரது சம்பந்தத்தை அவராற் பொருட்கேடும் போர்க்கேடும் வந்தவிடத்தும்

கைவிடமாட்டாரென்பதாம். இதனால் சிநேகத்தின் முறை தெரிந்தவர் சிநேகர் செய்த காரியங்களைப் பொறுக்குமளவும் பொறுப்பரென் பதே கருத்து. சம்பந்தம்-தொடர்ச்சி.

ஏ. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.
(807)

(இ-ம்) அன்புடனே பழையதாய் வந்த நட்பினையுடையவர் தம் சிநே கர் தமக்கு அழிவுவந்த காரியத்தைச் செய்தாராகுலும் அவரிடத்து அன்பு நீங்கமாட்டாரென்பதாம். அப்படியானல் பழைமையாகிய நட்பின் பெருமை யெவ்வளவு சிறந்ததென்பது அறிவுடையார் யூகித்தறியவேண்டும். அழிவு- பலவிதமான காரியக்கேடு.

அ. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்கம் நட்டார் செயின் .
(808)

(இ-ம்) தம் சிநேகிதர் செய்யுங் குற்றத்தைத் தாமாகத் தெரிந்தாலும் பிறர்வந்து சொல்லத்தெரிந்தாலும் உட்கொள்ளாதிருக்கும் உரிமையறிய வல்லவர்க்குச் சிநேகிதர் குற்றமான காரியத்தைச் செய்வாராகுல் அக்குற்றஞ் செய்த நாள் பிரயோசனமுடைய நாள் என்பதாம். எப்படியென்றால், அவர் செய்த குற்றத்தைப் பொறுக்கும் தம்முடைய பொறுமைக்குணம் வெளிப்

படுதலாமென்க. குற்றமாவன-கேளாது நம் பொருளை எடுத்துக்கொள்ளுதல், பணிவில்லாமை, பயப்படாமை முதலியனவாம்.

௯. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.
(809)

(இ-ம்) உரிமை நீங்காமல் தொடர்ச்சியாக வந்த நட்பினையுடையாரது சிநேகத்தை, அவர் செய்த குற்றத்தை யெண்ணிக் கைவிடாதவரை உலக உசசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

மானது நட்புக்குறித்து விரும்பும் என்பதாம், எதனாலென்றால், நம்மிடத் தும் குற்றங்காணப்பட்டால் இவவிதம் பொறுத்துக்கொள்ளுவரென்ற எண்ணத்தாலென்க. உலகமென்பதற்கு, உலகத்திலுள்ளாரென்பது பொருள்.

௧௦. விழையார் விழையப் படுப பழையார்கட்
பண்பிற் றலைப்பிரியா தார்.
(810)

(இ-ம்) நெடுநாட் பழகிய பழைய சிநேகிதர் தமக்குக் குற்றஞ் செய்தா ராயினும் முன்புபோல் அவரிடத்து அன்பு பாராட்டுங் குணத்தில் தவறாதவர் தம் பகைவராலும்

விரும்பப் படுவர் என்பதாம். ஏதனாலென்றால், குணஞ் செய்தாலொன்றுங் குற்றஞ்செய்தாலொன்றுமாக மாறுபடுங் குணமில்லாமல் எக்காலத்தும் நற்குணமாறா திருத்தலால் என்க.

---

## 82-ஆம் அதி.—தீ நட்பு.

அஃதாவது, தீய குணத்தார் சிநேகம் தீயதே என்பது. தீயகுணம்= பொறுக்கக்கூடாத குற்றஞ் செய்தல்.

க. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது . (811)

(இ-ம்) பசிமிகுதியால் உணவைக் கண்டவுடனே உண்பாரைப்போல ஆசை மிகுதியினாலே தம்மைக் கண்டவுடனே விரும்பப்படுந் தோற்றத்தை யுடையவராயிருந்தாலும் நற்குணமில்லாதவரானல் அவருடைய சிநேகம் நாளுக்கு நாள் விருத்தியடைவதைப் பார்க்கினும் குறைந்து போவது இன்ப முடையதென்பதாம். ஏனென்றால், நற்குணமில்லாதவர்(தீக்குணமுடையவர்) சிநேகம் வளர வளரத் துன்பத்தையே கொடுக்கும். அது தேயத் தேய அத் துன்பமும் தேய்ந்து குறைந்துபோம் ஆதலாலென்க.

இங்கே இன்பமாவது, துன்பமில்லாதிருத்தலேயாம்.

உ. உறினட் டறினொருஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.
(812)

(இ-ம்) தமக்குப் பிரயோசனமுள்ள காலத்தில் நெருங்கி வந்து சிநே கித்துப் பிரயோசனமில்லாத காலத்தில் தம்மை விட்டு நீங்கும் ஒத்த குண மில்லாதவரது சிநேகத்தைப் பெற்றால் வரும் நன்மை எது. இழந்தால் வரும் தீமை எது என்பதாம், எனவே இவவிரண்டினாலும் ஒன்றுமில்லை யென்பது.

௮௨-ஆம் அதி —தீ நட்பு.

உசிள்

தாயிற்று. ஒத்தகுணம்-செல்வம் பெற்ற காலத்தும் பெறாத காலத்தும் ஒரே தன்மையாகச் சிநேகித்தல்.

ந. உறுவது சீர்தூக்கும் நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.
(813)

(இ-ம்) சிநேகத்தினளவு நோக்காது சிநேகத்தாற் கிடைத்த பொருள் முதலியவற்றின் அளவையே கருதிச் சிநேகிக்கும் சிநே கிதரும், விலை கொடுப் பாரை மகிழாமல்

விலைப்பொருளையே மகிழும் பொதுமாதரும் (வேசியரும்) பிறருடைய கேடு கருதாமல் அவருடைய சோர்வு (சமையம்) பார்க்குந் திருடரும் ஆகிய மூவரும் ஒருவருக் கொருவர் சமானமாவர் என்பதாம். இம் மூவரும் தாம் பெறுவதை மட்டுங் கருதுவதல்லாமல் வேறொன்றுங் கருதா ரென்பது கண்டு கொள்க.

ச. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை.
(814)

(இ-ம்) யுத்தம் வருதற்கு முன்னெல்லாம் தாங்குவது (சுமப்பது) போல இருந்து யுத்தம் வந்த இடத்துப் போர்க்களத்தில் தன் தலைவனைக் கீழே தள்ளிவிட்டு ஓடும் மூட்டாட் குதிரையை யொத்தவர் துணையா யிருப்பதிலுந் தனிமையாயிருப்பது சிறப்புடையது என்பதாம். எப்படி யென்றால், போர்க்களத்தில் துணையாகுமென்று தேடிவைத்திருந்த குதிரை போர் வந்தவிடத்துக் கைவிட்டோடுதல்போல ஆபத்து வந்த காலத்தில் சகாயமாவார் போல இருந்து ஆபத்துக் காலத்தில் சகாயஞ் செய்யாமற் கை விட்டோடுந் தீய சிநேகரைச் சேர்த்து வைத்திருப்பதினும் தனியே யிருப்பது நல்லதென்று பொருளை விரித்துக் கண்டுகொள்க. இப்படிப்பட்ட தீயவர் சிநேகத்தால்

வருங்கேடு அத்தீயவர் சிநேகமில்லார்க்கு இல்லை யாதலால் இவ்வாறு கூறியருளினர். முட்டாட் குதிரையாவது-தான் படித்துக்கொள்ள வேண்டிய கதி ஐந்து சாரி பதினெட்டு முதலியவைகளின் பழக்கமில்லாத குதிரை. கதி, சாரி முதலியவற்றி னிலக்கணங்களை அசுவலக்கணங் கற்றாரிடத்துக் கேட்டறிந்து கொள்க.

ரு செய்தேமஞ் சார்பாச் சிறியவர்
புன்கேண்மை
யெய்தலி னெய்தாமை நன்று.
(815)

(இ-ம்) சிநேகஞ் செய்து வைத்திருந்தும் தனக்கு காலத்தில் உதவியாகாத
ஆபத்து வந்தா யார்க்கினும் அச்சிநேகம்

சிறியவரது தீய சிநேகம் ஒருவனுக்கிருப்பதைப் இல்லாதிருப்பது நல்லது என்பதாம். எப்படி

உசுவு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

யென்றால், இவர் சகாயமிருக்கிறதென்று ஒரு

காரியத்திலிறங்கிச் சமையத்தில் இவர் உதவி செய்ய மாட்டாமையால் வருங்கேடு அச்சிநேக மில்லாதவருக்கு இல்லையாதலாலென்க.

சு. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடை யார்
ஏதின்மை கோடி யுறும். (816)

(இ-ம்) அறிவில்லானது மிக நெருங்கிய சிநேகத்தைப் பார்க்கினும் அறிவுடையாரது பகைமை கோடி பங்கு நன்மையுடையது என்பதாம். அறிவில்லானது சிநேகம் எல்லாத் தீமையுங் கொடுக்கும். அறிவுடையார் பகைமை ஒரு தீங்கையுங் கொடாது ஆதலால் இவவாறு கூறியருளினர்.

எ. நகைவகைய ராகிய நட்பிற் பகைவரால்
பத்தடுத்த கோடி யுறும். (817)

(இ-ம்) தாமறியவேண்டியவைகளை அறியும் வகையாராகாமல் பல வகையால் மகிழ்வித்தற் கேதுவாய வகையுடையார் சிநேகத்தால் வரும் இன்பங்களைப் பார்க்கினும் பகைவரால் வருவனவாகிய பத்துக்கோடி துன்பங்கள் மிக நன்மையுடையன என்பதாம். எப்படியென்றால், பலவகையால் மகிழ் வித்தற்கு ஏதுவாகிய வகையுடையாராகிய விடமரும் தூர்த்தரும் வேழம்பரும் பல வகையால் மகிழச் செய்து செல்வத்தைக்

கைப்பற்றிக்கொண்டு போவார். பகைவரோ அப்படியல்ல. போர்புரிந்து பொருளைக் கைப்பற்ற எண்ணிப் பல துன்பங்களைச் செய்வர். அத்துன்பங்களுக்குத் தப்பிச் செல்வத்தை இழந்துவிடாமலொருக்காலிருக்கலாம். ஆதலால் நகைவகையார் இன்பத்தினும் பகைவகையார் துன்பம் நன்மை என்று நாயனாருளிச் செய்தனரென்க. விடமர்-கடுங்காமமுடையவர். தூர்த்தர்-வியபிசார மிகச்செய்வோர். வேழம்பர்-கழைக்கூத்தாடுவார். இம்மூவகையார்போல்வார் நட்பும் தீ நட்பென்பது கண்டுகொள்க.

அ. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

(818)

(இ-ம்) தம்மால் முடியுங் காரியத்தை முடியாததாகக் கடத்திச் சொல்லுவார் சிநேகத்தைத் தெரிந்துகொண்டால் அதன்பின் அவரறியாமல் நாளுக்குநாள் குறையும்படி நெகிழவிடல் (கைவிடல்) வேண்டும். ஏனென்றால், அவர் செய்வார் செய்வாரென்று நம்பிக் காலம் வீணேகழிய வேறொருவரால் தம் காரியமுடிப்பதும் தவறிப்போம் ஆதலாலென்க. அவரறியாமல் நெகிழவிடவேண்டுமென்பது எதற்கென்றால், அவரறிந்தால் அப்போதைக்

குத்த க்கபடி ஒரு சமாதானஞ் சொல்லிப் பின்னும் நெருங்கிச் சிநேகிக்க வருவர். இப்படிச் சொல்கின்றாரே யென்று நம்பி மேலும் மோசம்போக நேருமாதலாலென்க. இதனால், செய்யக்கூடிய காரியத்தைச் செய்தற்குச் சமையம் வாய்த்தபோதும் செய்யாமற் கடத்திவிடுவார் நட்பானது தீநட் பென்பது கண்டுகொள்க.

கூ. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.
(819)

(இ-ம்) செய்கையுஞ் சொல்லும் ஒத்திராமல் மாறுபட்டவருடைய சிநேகமானது சாக்கிரத்தில் (தெளிவாய் விழித்திருக்கிற காலத்தில்) அல்லா மல் சொப்பனத்தினும் இன்பஞ் செய்யமாட்டாது. துன்பஞ் செய்யும் என்ப தாம். சொப்பனத்தினு மின்பஞ்செய்யாதென்றதனால் சாக்கிரத்திலின்பஞ் செய்யாதென்பது சொல்லவும் வேண்டுமோ. சாக்கிரம்-விழித்திருக்குங்காலம்.

கo. எனைத்துங் குறுகுத லோம்பல் மனைக்கெழீஇ
மன்றிற் பழிப்பார் தொடர்பு.
(820)

(இ-ம்) தனியே வீட்டிலிருந்த இடத்து அளவளாவிச் சிநேகஞ் செய் திருந்து ஒரு சபையிற் பலரோடுங் கூடியிருந்த இடத்து வசை (நிந்தை) பேசுவாருடைய சிநேகம் சிறிதாணலும் தம் சமீபத்தில் வரவொட்டாமல் காத்துக்கொள்ள வேண்டும் என்பதாம். இப்படிப்பட்டவர் சிநேகத்தை அறவே ஒழித்துவிட வேண்டுமென்பது கருத்து.

---

## 83-ஆம் அதி.—கூடா நட்பு.

அஃதாவது, பகையினால் மனத்திற் கூடாதிருந்து, தமக்குச் சமயம் வாய்க்கும்வரை வெளித்தோற்றத்தில் நன்மையுடையார்போல நடிப்பார் சிநேகம் ஆகாதென்பது.

க. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.

(821)

(இ-ம்) மனத்திலே பகைமையை நினைத்து வெளித்தோற்றத்தால் காலம் இடம் சமையம் வாய்க்கும் அளவும் அன்புடையார்போலப் பழகுகின்ற வரது நட்பு (சிநேகம்) ஆனது காலம் இடம் சமையம் வாய்க்கப் பெற்றால் காய்ச்சிய இரும்பைத தாங்குதல்போலச் சுமந்திருந்து சம்மட்டியால் அடிப்

பவருக்குப் பட்டடைக்கல் துணையாயினாற்போல, தமக்கு வருங் கேட்டுக் கெல்லாம் உதவியாயிருப்பர் என்பதாம். இதனால் அகத்திலே யொன்றும் புறத்திலே யொன்றுமாக நினைப்பவரது நட்புக் கூடாதென்பது கருத்து. பட்டடைக்கல்—கொல்லனுலையில் இரும்பை வைத்தடிக்குங்கல்.

உ. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும். (822)

(இ-ம்) தம்முடைய இனத்தார் போல வெளிப்பார்வையிற் காணப் பட்டு மனத்தினிடத்தே இனத்தார்க்குரிய குணமில்லாதவருடைய நட்பானது பெண்களுடைய மனம்போல மாறுபட்டு ஒரு நிலையில் நில்லாது என்பதாம். அஃதாவது, காலமும் இடமும் வாயாத போது கற்புடையார்போலக் காணப் பட்டு, அவ்விரண்டும் வாய்த்தபோது தங்கள் கற்பை இழந்து விடும் பெண்கள் போல வெளிவேஷத்தால் நட்புப்போல நடித்துக் காட்டுஞ் சிநேகர், சமையம் வாய்த்தபோது சிநேகத்தை யிழந்து கேடு செய்வர் என்க. பெண்கள் மன மாறுபடுமென்பதற்கு உதாரணமாக "எண்ணப்பத் தங்கை யீந்தா லிந்திரன் மகளு

மாங்கே வெண்ணெய்க்குன் றெரியுற் றூற்போல்
மெலிந்துபின் னிற்கு மன்றே'' என்னும் செய்யுளைக்
கண்டுகொள்க. (சீவகசிந்தாமணி 597) பொதுப்பட
மகளிர் குணமாறு மென்றதே யல்லாமல் சிறப்பாக
ஏகதேச மாறுபடாதிருப்பதும் உண்டு.

ரு. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதல் மாணார்க் கரிது.

(823)

(இ-ம்) நல்லநூல்கள் பலவற்றைக் கற்றிருந்த
இடத்தும் மாட்சிமையர்ன் குணமில்லாத பகைவரானவர்
மனத்தால் நன்மையுடையராவது இல்லை என்பதாம்.
இதனால் மனத்துள்ளே பகைமையுடையாரைப்
படித்தவரென்று நம்பலாகாதென்பது கருத்து. நல்ல
நூல்கள்-மனக்குற்றத்தைக் கெடுக்கும் சாத்திரங்கள்.
நன்மை-இவ்விடத்துக் கோபத்தை விட்டிருத்தல்.

சா. முகத்தி னினிய நகாஅ அகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

(824)

(இ-ம்) கண்டபொழுது முகத்தா லினிமையுண்டாகச்
சிரித்து மனத்தால் அதற்கு மாறுபாடுகொண்ட
நினைப்புடைய வஞ்சகருக்குப் பயப்படவேண்டும்;
இப்படியல்லாமல் சிரித்துப் பேசுகின்றாரே யென்று
நம்பிச் சிநேகஞ் செய்தால் பெரிய துன்பத்திலே
யழுத்திவிடுவர் என்பதாம். ஆதலால் இவர் நட்புக்
கூடாதட்பென்று கண்டுகொள்க.

ரு. மனத்தி னமையா தவரை யெனைத்தொன் றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று. (825)

(இ-ம்) மனத்தால் தம்மோடு ஒத்த அன்பில்லாதவரை அவர் மேற் போக்காகச்சொல்லும் சொல்லை நம்பித் தெளிந்து யாதொரு காரியத்திலுஞ் செலுத்தல் ஆகாதென்பதாம். பகைமையை மறைத்தற்பொருட்டுச் சொல்லிய வஞ்சனைச்சொல்லை நல்லசொல்லென நினைத்துத் தெளிந்து நம்பினால் காரியக்கேடு உண்டாமென்பது கருத்து.

சு நட்டார்போல் நல்லவை சொல்லினும் ஒட்டார்சொல்
ஒல்லை யுணரப் படும். (826)

(இ-ம்) சிநேகமுற்றவரைப்போல நன்மையைத் தரும் சொற்களைச் சொன்னாராலும் பகைவர் சொற்கள் நன்மையைத் தரமாட்டா என்று சீக்கிரத்தில் அறியப்படும் என்பதாம். எப்படி யென்றால், அவருடைய மனப்

பகைமையானது வேறு குறிப்புக்களால் வெளிப்படுத்திவிடுதலாமென்க.

எ. சொல்வணக்கம் ஒன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.
(827)

(இ-ம்) வில்லினது வளைவானது எதிர்த்தவருக்குத் தீமையை விளைவிப்பதுபோலப் பகைவரிடத்து உண்டாகும் சொல்லினது வணக்கமானது கேட்டையுண்டுபண்ணும். ஆதலால் அதனை நன்மையென்று நம்பாதிருக்க வேண்டும் என்பதாம். சொல்வணக்கம்-இனிமையாகப் பணிந்து பேசுதல்.

அ. தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுதகண் ணீரு மனைத்து.
(828)

(இ-ம்) பகைவர் வந்து கும்பிடுங் கைக்குள்ளும் ஆயுதத்தை வைத்துக்கொண்டு சமயம் பார்த்து நிற்பர்; அல்லாமலும் அவர் நமக்குப் பயந்தவர் போல நடித்துக்காட்டி யழுதகண்ணீரும் அவ்வாயுதத்தை மறைத்தற்கு இடமாகுமென்பதாம். எப்படியென்றால், அழுதலைக்கண்டு நாம் கோபஞ்செய்யாமல் அவர் வஞ்சகத்தை அறியாதிருத்தலால் அவர் வைத்திருக்கும் ஆயுத மறைதற்கு இடமாதல் நுட்பமாகக்கண்டுகொள்க.

"தொழுத கையுளும் படையுள சூழ்ச்சியும் பெரிதால்"
என்றார் பிறரும். (பாரதம் வாரணவதச் சருக்கம் 117)

கூ. மிகச்செய்து தம்மெள்ளு வாரை
நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று. (829)



(இ-ம்) பகைமை வெளிப்படா விதம் புறத்திலே இதமாகப் பேசி நட்புச்செய்து அகத்திலே (மனத்திலே) தம்மை இகழ்ச்சியாக நினைக்கும் பகைவரைத் தாமும் அவரைப்போல நடித்துக்காட்டும் நட்பினுள் நின்று, அவர் மகிழும்படி பேசி, அகத்தினிடத்தே அந்நட்புக் கெடும்படி பொருந்தி இராசநீதி யிருக்கவேண்டும் என்பதாம். அகத்திலொன்று புறத்திலொன்று நினைப்பது கூடாதாயினும் பகைவரிடத்துக் கூடுமென்பதாயிற்று. இதனால் பகைவர் செய்யும் வஞ்சகத்தைத்தெரிந்து அததற்குத் தக்கபடி தாமும் பழகி வரவேண்டுமென்பது காண்க.

கo. பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்
டகநட் பொரீஇ விடல்.
(830)

(இ-ம்) தம் பகைவர் ஏதேனும் ஒரு காரணம்பற்றி உறவினராய் நடக் குங் காலம் வந்தால் தாமும் அவரோடு முகத்தால் வெளித்தோற்றத்தில் நட் புச்செய்து, அகத்தால் அந்நட்புச்செய்தலைவிட்டுப் பின்னர் முகத்தால் நட் புச்செய்தலையும் விட்டுவிடவேண்டு மென்பதாம். நட்புச்செய்தல்-சிநேகஞ் செய்தல்.

---

## 84-ஆம் அதி.—பேதைமை.

அஃதாவது, கோபத்துக்கும் காமத்துக்கும் காரணம் அறியாமை, புல் லறிவாண்மை என இரண்டு வகைப்படும். அவற்றுள் முதலாவதாகிய அறி யாமையின் தன்மை.

க. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
டூதியம் போக விடல்.
(831)

(இ-ம்) அறியாமை யென்று சொல்லப்படுவது ஒருவனுக்கு மற்றைக் குற்றங்களெல்லாவற்றினும் பெரியதொரு குற்றமாகும்; அதுதான் எது வென்றால், தனக்குக் கேடு தருவனவாகிய தரித்திரம், பழி. பாவங்களைக்

கைப் பற்றிக்கொண்டு, இலாபந்தருவனவாகிய செல்வம், புகழ், புண்ணியங்களை விட்டுவிடுதல் என்பதாம். இதனால் பேதைமையுடையவனுக்கு இம்மைப் பயனும் மறுமைப்பயனு மில்லையென்பது கண்டுகொள்க.

உ. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

(832) அசு-ஆம் அதி.—பேதைமை. உருரு

(இ-ம்) ஒருவனுக்கு அறியாமை யெல்லாவற்றுள்ளும் உயர்ந்த அறி யாமையாவது எதுவென்றால், கூடாதென்று விலக்கப்பட்ட ஒழுக்கத்தினிடத்து விருப்பஞ்செய்தல் என்பதாம். கூடாதென்று விலக்கப்பட்ட ஒழுக்கம்-பழி பாவ முதலிய தீயவழியிலே மனம் செல்லுதல்.

ந. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

(833)

(இ-ம்) நாணமடையவேண்டியவைகளுக்கு நாணாதிருத்தலும், விரும்ப வேண்டியவற்றை விரும்பாதிருத்தலும், யாரிடத்தும் அன்பில்லாமற் பேசுதலும், ஒன்றைச் செய்தலும், பேணவேண்டியவற்றுள் யாதொன்றையும் பேணாதிருத்தலுமாகிய இவைகளே

அறிவில்லாதவாது தொழில்கள் என் பதாம். நாணமடைய வேண்டுமவை-பழி பாவங்கள். விரும்பவேண்டியவை- புகழ் புண்ணியம். பேணவேண்டியவை-குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், கடவுட்பூசை முதலியவை. பேணுதல்-காப்பாற்றல்.

ச. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.
(834)

(இ-ம்) மனம் வாக்குக் காயமாகிய மூன்றும் அடங்குதற்குக் காரண மாகிய நூல்களைப் படித்தும் அப்படியடங்குதலால் வரும் பயனை யறிந்தும் அறிந்தவைகளைப் பிறருக்கு அறியும்படி போதித்தும் தான் மேற்குறித்த மூன்றும் அடங்குதலில்லாத அறிவில்லானை (மூடனை)ப்போல மற்றொரு அறிவில்லான் இல்லை என்பதாம். எனவே, அவனுக்கு அவனே சமான முடையானென்பதாயிற்று; முழுமூடனென்றபடி.

ரு. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
தான்புக் கழுந்து மளறு. (835)

(இ-ம்) அறிவில்லாதவனாகிய ஒருவன் இனிவரும் சனனந்தோறும் போய் அழுந்தும் நரகத்தை இப்போது பிறந்திருக்கிற ஒரு பிறப்பிலே செய்துகொள்ள வல்லவனாவன் என்பதாம். எப்படியென்றால், அறிவில்லாதவன் பிராயச்சித்தம் (பரிகாரம்) இல்லாத பழிபாவங்களையே செய்தலால் ஒரு காலத்தும் நரகத்தைவிட்டு நீங்காத துன்பத்தை அநுபவிப்பன் என்க.

சு. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்,
(836)



(இ-ம்) செய்யு முறையறிந்து செய்யத் தெரியாத அறிவில்லாதவன் ஒரு தொழிலைச் செய்யத் தொடங்குவானானால் அத்தொழிலுங் குற்றப்பட்டுக் கெட்டழிந்து போகும்; அது மட்டுமோ? அத்தொழிலைச் செய்த தானும் இராச தண்டனையால் கையிலே தளை (விலங்கு) மாட்டப்படுவன் என்பதாம்.

எ. ஏதிலா ரார்த் தமர்பசிப்பர் பேதை

பெருஞ்செல்வ முற்றக் கடை.
(837)

(இ-ம்) அறிவில்லாதவன் ஊழ்வினைப் பயனாகப் பெருஞ் செல்வம் பெற்ற இடத்து அவனோடு யாதொரு சம்பந்தமும் இல்லாதவர் நெருங்கி வந்து வேண்டிய எல்லா நலமும் அநுபவிப்பர். தன்னோடு சகல உரிமையும் உடைய சுற்றத்தார் உணவும் பெறாமல் பசியால் வருந்தி வாடி நிற்பர் என்பதாம். இதனால் அறிவில்லாதவன் பெற்ற செல்வத்தால் புகழ் புண்ணியமில்லாமல் பழி பாவங்களை பெருதமென்று தெரிந்து கொள்க.

அ. மையல் லொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.
(838)

(இ-ம்) அறிவில்லாதவனானவன் தன் கையினிடத்தில் ஒரு பொருளைத் தனக்குச் சுதந்திரமாகக் கிடைக்கப் பெற்றானானல் அவன் மயங்குதலானது எப்படியென்றால், முன்னே பித்தினை (பயித்தியத்தை) யுடையானொருவன் அதன்மேல் கள்ளுண்டு மயங்கினாற் போலும் என்பதாம். எப்படியென்றால், அறியாமையாகிய மயக்கத்தின்மேற் செல்வக்களிப்பு வந்தால் பின்னு மயக்கத் துக்குக் காரணமாகுமல்லாமல் நன்மைக்குக் காரணமாகாதென்று கண்டு கொள்க.

௯. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். (839)

(இ-ம்) அறிவில்லாதவர் இருவர் சிநேகம் மிக இனிமையுடையது. ஏதனாலென்றால், அவ்விருவரும் ஒருவரையொருவர் விட்டுப் பிரியுங் காலத்து அவ்விருவருக்குந்துன்பமில்லை ஆதலால் என்பதாம். ஏனென்றால், அவ்விருவர் நட்பும் நாளுக்கு நாள் தேய்ந்து வருதலாலென்க. இக்கருத்துப் பற்றியே "வானூர் மதியம்போல் வைகலுந் தேயுமே, தானே சிறியார் தொடர்பு" என்றார் பிறரும். (நாலடியார் தீவினையச்சம் 5)

௰. கழாஅக்கா ல் பள் ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். (840) ௮௫-ஆம் அதி.—புல்லறிவாண்மை.



(இ-ம்) அறிவுடைய பெரியாரிருந்த சபையினிடத்து அறிவில்லாதவன் புகுதல் எதுபோலுமென்றால், பரிசுத்தமில்லாத கெட்டதை மிதித்தகாலை ஒருவன் சுகந்த மலர் பரப்பிய மெத்தையினிடத்து வைத்தல் போலும்

என்ப
தாம். எனவே, அசுத்தமான காலாற் படுதலாற் சுத்தமான மெத்தை கெடுதல் போல அறிவுடையார் சபையும் அறிவில்லாதவன் புகுதலாற் பெருமை கெடு மென்பது கண்டுகொள்க. அறிவில்லாதவன் அசுத்தத்தை மிதித்த காலுக்கு ஒப்பாவானென்றால் எவ்வளவு இழிந்தவனென்று கண்டுகொள்க.

---

## 85-ஆம்

## அதி.—புல்லறிவாண்மை.

அஃதாவது, தான் சிற்றறிவுடையவனாயிருந்தே தன்னைப் பேரறிவுடையவனாக மதித்து உயர்ந்தோர் சொல்லும் உறுதிச்சொற்களைக் கேளாதிருத்தல்.

க. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு. (841)

(இ-ம்) ஒருவனுக்கு இல்லாமை (தரித்திரம்) பலவற்றுள்ளும் அதிகத் தரித்திரமாவது அறிவில்லாமையாம்; இதைத்தவிர வேறு பொருளில்லாமை யெல்லாவற்றையும் அறிவில்லாமையை இழிவாக மதித்தல்போல இழிவாக உலகம் மதிக்கமாட்டாது என்பதாம். ஏனென்றால், அறிவுடையார் தரித்திர மடைந்த காலத்தும் இம்மை மறுமைப் பயன்களை இழந்துவிடமாட்டார். அறிவில்லாதவர் செல்வமடைந்த காலத்தும் இம்மை மறுமைப் பயன்களை யிழந்துவிடுவர் ஆதலாலென்க. அறிவென்பது தலைமைபற்றிய வழக்கால் நல்லறிவென்று பொருள்கொள்க.

உ. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்
இல்லை பெறுவான் றவம்.

(842)

(இ-ம்) புல்லறிவுடையான் மனமகிழ்ந்து ஒருவனுக்கு ஒரு பொருளைக் கொடுத்தல் கூடுமானால் அதற்குக் காரணம் அப்பொருளைப் பெற்றுக்கொள்

வானுடைய தவமே யல்லாமல் வேறொன்றுமில்லை
துப் புல்லறிவாளரும் மனமகிழ்ந்து கொடுத்தலால்

யென்பதாம். ஒரோஇடத்
நல்வினை செய்வர் என்றால்;

தெருவிலொருபொருளைக் கண்டெடுத்தல் போல்வதல்லாமல் இம்மை மறு மைப் பயன்களை நோக்கிக் கொடுக்கின்றிலராதலால் அதிற் பயனில்லை யென்க.

ங. அறிவிலார் தாம்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.
(843)

(இ-ம்) அற்ப அறிவுடையார் தாமே தம்மை வருத்தப்படுத்தும் வருத் தம் அவ்வருத்தத்தைத் தமக்குச் செய்தற்குரிய பகைவர்க்குஞ் செய்ய முடி யாது என்பதாம். ஏனென்றால், பகைவர் காலம், இடம், சமையம் பார்த்தே வருத்தஞ்செய்ய நினைப்பர். அப்படியல்லாமல் அறிவில்லாதவர், பழிபாவ முதலிய வருத்தத்தைத் தமக்கு நினைத்தபோதெல்லாஞ் செய்துகொள்வ ராதலாலென்க.

ச. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.
(844)

(இ-ம்) புல்லறிவுடைமை யென்று சொல்லப்படுவது எதுவென்று கேட்டால், தம்மைத்தாமே நல்லறிவுடையோமென்று நன்கு மதித்தலாகிய மயக்கம் என்பதாம். நன்குமதித்தலை மயக்கமென்றது எதனாலென்றால், உலகத்தார் தம்மை அறிவில்லாதவனென்று இகழ்ந்து பேசுதலை யறிந்திருந் தும் தம்மை நன்கு

மதித்தலாமென்க.

ரு. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉம் ஐயந் தரும்.
(845)

(இ-ம்) புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையும் கற்றனவாக மதித்துப் பெருமை பாராட்டிக்கொண்டு திரிதலானது சந்தேகமில்லாமற் கற்றதொரு நூலிருந்தால் அந்த நூலையும் இவர் கற்றாரோ கற்கவில்லையோ என்னும் சந்தேகத்தைப் பிறர்க்கு விளைவிக்குமென்பதாம். எப்படியென்றால், கல்லாத நூற்பொருளை உண்மை தெரியாமல் பிழைபடப் பேசக்கண்டார் கற்ற நூற்பொருளை உண்மைதெரிந்து சொன்னாலும் அதுவும் இப்படித்தானிருக்குமோ என்று பிறர் நினைத்தல் என்க.

சு. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.
(846)

(இ-ம்) புல்லறிவாளர் தம்மிடத்து உண்டாகுங் குற்றங்களைத் தெரிந்து மறைக்க (நீக்க)மாட்டாரானால் தம்முடைய அவயவத்தில் மறைக்கவேண்டிய அவயவத்தை ஆடையால் மறைத்தவாக எண்ணுதலும் அற்ப அறிவு என்பதாம். எப்படியென்றால், மறைக்கவேண்டிய குற்றங்கள் பலவற்றுள்ளும் உயர்ந்த குற்றங்களை மறையாமல் தாழ்ந்ததாகிய ஒன்றை மறைத்து அவவள

விலே தம்மை உயர்ந்த ஒழுக்கமுடையாராக மதித்துக்கொண்டு திரிதல் என்க. அதாவது, கோவணங்கட்டி வஸ்திரத்தை உடுத்திக்கொண்டு திரிதல் என்றபடி. இது உலகத்தில் சகசமாதலால் இதைப் பெரிதென்று மதிப்பது புல்லறிவென்று மதிநுட்பத்தால் அறிந்துகொள்க. மறைக்கவேண்டிய குற்றங்கள்- பழி பாவங்கள் முதலியவை. தாழ்ந்ததாகிய ஒன்று-குய்யஸ்தானம், ஆண் அடையாளம்.

எ. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.
(847)

( இ-ம் ) பெறுதற்கரிய இரகசியமாகிய உபதேசப் பொருளைப் பெற்றாலும் மன அடக்கமாக உள்ளே வைத்துக்கொள்ளாமல் வாய்சோர்ந்து வெளியேபோக்கிவிடும் புல்லறிவாளன் அப்பொருளின் உறுதியாகிய உண்மையையறியாமல் தானே தனக்கு மிகுந்த குற்றமாகிய கொடுந் துன்பத்தைச் செய்து கொள்ளுவன் என்பதாம்.

அ. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்

போஒ மளவுமோர் நோய்.
(848)

(இ-ம்) அறிவில்லாதவனாகிய புல்லறிவாளன் தனக்கு நன்மையுண்டாகத்தக்க காரியங்களை அறிவுடையார் சொன்னாலும் செய்யமாட்டான்; தானாகவும் இவை நல்லவையென்று அறிந்துகொள்ளவு மாட்டான்; அவனுடைய உயிர் உடம்பைவிட்டு நீங்குமளவும் அவ்வுடம்பு பூமிதேவிக்கு ஒரு வியாதியாயிருக்கும் என்பதாம். மலை முதலிய பெரிய சுமையைத் தாங்கும் பூமி தேவிக்கு இப் பாவசரீரத்தைத் தாங்குதல் முடியாதாதலால் நோயென்று இகழ்ந்து கூறியருளினர்.

சு. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்

கண்டானாந் தான்கண்ட வாறு.
(849)

(இ-ம்) தன்னை எல்லா மறிந்தானாக மதித்துக்கொள்ளுதலால் பிறர் போதிக்கும் ஒன்றையும் அறியுந்தன்மை இல்லாதவனுக்கு ஏதாவது போதிக்கப்புகுவான் அவனால் நிந்திக்கப்பட்டுத் தான் அறியாதவனாவன்; இதுவல்லாமல் அவ்வறியுந் தன்மையில்லாதவனாகிய புல்லறிவாளன் தான் கொண்டது

விடாத மூர்க்ககுணத்தால் பிறர் போதித்தலையும் தன் கருத்தின்படியே அறிந்தவனுவன் என்பதாம். இக்கருத்துப்பற்றியே "மூர்க்கரு முதலையுங் கொண்டது விடா" என்றூர் பிறரும். (நன்னூல் விருத்தியுரை) தன் கருத்



தின்படியே யறிதலாவது, தன்னுடைய அறியாமையின் அளவாக அறித ல். இதனுல் அறிவில்லாதவனை எவ்விதமாவது திருத்தமுடியாதென்பது கருத்து.

௧0. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்

தலகையா வைக்கப் படும். (850)

(இ-ம்) உலகத்தோர் பலரும் உண்டென்பதோர் பொருளைத் தன்னுடைய அறியாமையால் இல்லையென்று சொல்பவன் மனிதனேயாலுைம் அவன் இப்பூமியிடத்துப் பேயோடொன்றாக வைத்து எண்ணப்படுவான் என்பதாம். ஏனென்றால், உயர் ந்தோரைப் புல்லறிவாளன் வடிவத்தாலொத் திருந்தாலும் அறிவால் ஒவ்வாமையால்

என்க. அறிவாலொவவாமையாவது- உயர்ந்தோர் கூறுவதை ஒப்புக்கொள்ளாமல் பேய்பிடிக்கப்பட்டவன்போல மாறுபடப்பேசுதல். உண்டென்பதொரு பொருளாவது - கடவுள், புண்ணியம், பாவம், மறுபிறப்பு, சுவர்க்கம், நரக முதலியவற்றி லொன்று.

---

## 86-ஆம் அதி.—இகல்.

அஃதாவது, இருவர் தம்முட் போர்செய்து வலிமை கெடுதற்குக் காரண மாகிய மாறுபாடு.

க. இகலென்ப எல்லா உயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய் .

(851)

(இ-ம்) எல்லா உயிர்களுக்கும் பிற உயிர்களோடு சிநேகமாகச் சேர்த லில்லாத தீயகுணத்தை வளர்க்குங் குற்றமாகிய நோயை இகலென்று கற்ற றிந்தோர் சொல்லுவர் என்பதாம். ஒருவனுக்குத் தீயகுணமிருந்தால் அது வியாதிபோலத் துன் பஞ்செய்யுமாதலால் அக்குணத்தை நோயென்றருளிச் செய்தனர்.

உ. பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
யின்னாசெய் யாமை தலை.

(852)

(இ-ம்) தம்முடன் கூடாமை (சிநேகமர்காமை)யை எண்ணி ஒருவன் தமக்கு வெறுக்கத்தக்க கேடுகள் செய்தானாலும் தாமும் அப்பகைமையைக் கருதி அவனுக்குத் துன்பந் தரத்தக்க ஒன்றையுஞ் செய்யாதிருப்பதே முதன்மையாகிய நன் மையென்பதாம். ஏனென்றால், தீமை செய்தவனுக்குத் தாமுந் தீமைசெய்தால் பகை மேலும் மேலும் வளர்ந்து தாம் தாழ்ந்து வருவ

அகூ-ஆம் அதி.—இகல்.

உ௫௩

தாகும். செய்யாதொழிந்து பொறுமையாயிருந்தால் தாம் ஓங்கித் தம் பகை தணியும் ஆதலாலெனக.

ந. இகலென்னு மெவ்வநோய் நீங்கிற் றவவில்லாத்
தாவில் விளக்கந் தருமட.
(853)

(இ-ம்) பகையென்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச் செய்யும் வியாதியை ஒருவன் தன்மனத்தில் நீங்கப் பெறுவானானால் அவனுக்கு அப்படி நீங்கி இருத்தலானது எந்த நாளும் இருத்தற்குக் காரணமாகிய புகழைக் கொடுக்கு மென்பதாம். இதனால் பகையில்லாதவனுக்கு எல்லாரும் நண்ப ராவர்; ஆகவே,

எல்லாச் செல்வங்களும் பெற்றுக் கொடை முதலிய காரணங் களாற் புகழ் எய்துவனென்பது கருத்து.

ச. இன்பத்து ளின்பம் பயக்கும் இகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.
(854)

(இ-ம்) துன்பமெல்லாவற்றினுமுயர்ந்த துன்பமாகிய மாறுபாடு என்னும் பகை இல்லையானல் அவ்வில்லாமையானது இன்பம் எல்லாவற்றினும் உயர்ந்த இன்பத்தைக் கொடுக்கும் என்பதாம். இதனுல், ஒருவரோடும் பகை கொள்ளலாகாதென்பது கருத்து. இக்கருத்துப்பற்றியே "யாரொடும் பகை கொள்ளிலனென்றபின், போரொடுங்கும் புகழொடுங்காதுபின், சீரொடுங்கல் செல்லாது" என்று கவிச்சக்கரவர்த்தியாகிய கம்பர் கூறியருளினர். (கம்ப ராமாயணம் மந்தரை சூழ்ச்சிப்படலம் 13)

ரு. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.
(855)

(இ-ம்) தம்மனத்துள் மாறுபாடு தோன்றிய இடத்து அதனை ஒப்புக் கொள்ளாமல் அடங்கி நடக்க வல்லவரை வெல்லக் கருதுங் குணமுடையவர் யாவர்? ஒருவரும் இல்லையென்பதாம். இதனுல், பொறுமையால் பகையை வெல்லக் கருதியிருப்பாரைப் போர் செய்து வெல்ல

வல்லவர் இல்லையென்று கண்டுகொள்க. இதை அரசர் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். பகையில்லாத வருக்கு வரும் நன்மை இதன் முன்மூன்று திருக்குறளாலும் இத்திருக் குறளாலும் ஆராய்ச்சி செய்வார்க்குத் தெளிவாகத் தெரியும்.

௬. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(856) ௨௬௦ **திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.**

(இ-ம்) பிறரொடு பகைத்துப் போர் மிகுதியாகச் செய்வதே எனக்கு இனியதென்பவன் வாழ்க்கையானது குறைதலும் கெடுதலும் சிறிதுகாலத்தில் உண்டாகும் என்பதாம். எனவே, பகைமையே பாராட்டுவான் விரைந்து கெடுவனென்பது கருத்து. குறைதல்-பொருட்கேடு. கெடுதல்-உயிர்க்கேடு. இனியது-வெற்றியே கொள்வேனென்பது.

௭. மிகன்மேவல் மெய்ப்பொருள் காணா ரிகல்மேவல்
இன்னா அறிவி னவர்.

(857)

(இ-ம்) பகையோடு பொருந்துதலை யுடைய (தமக்கும் பிறர்க்குந்) துன்பத்தைக் கொடுக்கும்

அறிவினையுடையவர் வெற்றியடைதற்குரிய நீதி நூற்பொருளை யறியமாட்டா ரென்பதாம். ஏனென்றால், பகைத்துப் போர் செய்தலே ஞாபகமுடையாரதலால் பகையாமற் பொறுமையோடிருந்து பகையை வெற்றியடையும் நியாயம் சொன்னாலும் அவர் கருத்துக்கு ஏற மாட்டாதாதலாலென்க.

அ. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(858)

(இ-ம்) தன் மனத்தினிடத்து மாறுபாடாகிய பகைமை தோன்றிய இடத்து அப்பகையை எதிர்த்துப் போர்செய்தலை நீங்கியிருத்தல் ஒருவனுக்கு ஆக்கமாகும். அப்படிச் செய்யாமல் போர் செய்தலையே விரும்பி மேற்செல் வானானல், கேடும் தன்னிடத்து வருதற்குப் புறப்பட்டு நெருங்கும் என்ப தாம்.

கூ. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு .

(859)

(இ-ம்) ஒருவன் தன்னிடத்து நன்மையுண்டாதற்குக் காரணமிருந்தா லும் அதுபற்றிப் பகையை இஃதென்ன செய்யுமென்று உண்டுபண்ணிக் கொள்ளமாட்டான்; கே டு உண்டாதற்குக் காரண மில்லாதிருந்தாலும் பகையை மிகுதியாக வளர்த்துக்கொள்வன் என்பதாம். நன்மை

வருதற்கு முன் பகையில்லாமையும், கேடு வருதற்கு முன் பகையுண்மையும் அடையாள மாகத் தோன்றுமென்பது கருத்து. காரணம்-ஊழ்.

கO. இகலானு மின்னாத வெல்லா நகலானு
நன்னய மென்னுஞ் செருக்கு
(860)

அஎ-ஆம் அதி.—பகைமாட்சி.

உகுக

(இ-ம்) ஒருவனுக்கு மாறுபாடென்று சொல்லப்படும் பகையாலே · பழி பாவ முதலிய தீமைகளெல்லாம் உண்டாகும்; சிநேகமென்று சொல்லப் படும் பிரகாசத்தினாலே நல்ல நீதி யென்னும் பெரும்செல்வப்பெருக்கம் உண் டாகும் என்பதாம். பிரகாசம்-மகிழ்ச்சி. (தாற்பரியார்த்தம்;)

---

## 87-ஆம் அதி.—பகைமாட்சி.

அஃதாவது, அரசன் அறிவில்லாமை முதலிய குற்றங்களால் தன் பகையை வலிமைப்படுத்தல்.

க. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேல் மேக பகை.

(861)

(இ-ம்) தம்மைப்பார்க்கிலும் பொருள் சேனை துணை வலிமை யுடை யவரோடு பகைத்து பொருள் சேனை துணை முதலானவைகளால் போர் செய் தலை விட்டுவிடவேண்டும். தம க்குத் தாழ் ந்த மெலியவரோடு பகைகொள் ளு தலை நீங்காது விரும்பவேண்டும் என்பதாம். இதனால் தம்மினும் வலியவ ரோடு பகைத்தால் தோல்வியடையவேண்டியது வருமென்பதும், எளியவ ரோடு பகைத்தால் வெற்றியடையலாமென்பதுங் கண்டுகொள்க.

உ. அன்பிலன் ஆன்ற துணையிலன்
றான் றுவ்வான்
என்பரியு மேதிலான் றுப்பு.

(862)

(இ-ம்) தன் சுற்றத்தாரிடத்து அன்பில்லாதவனும் வலிமையுடைய துணையில்லாதவனும் தான் வலிமையில்லாதவனும் ஆகிய ஒருவன் தன்மே லெதிர்த்து வந்த பகைவனது வலியை எவ்விதம் தொலைத்து வெற்றியடைவன் என்பதாம். எனவே மேற்சொன்ன மூவகை வலிமையுமுடையவன் வெற்றி யடைவனென்பது கருத்து. இதில் குறித்த மூவகை வலியில் லாத அரசன் தன் பகைவனுக்கு மாட்சியை (பலத் தை ) யுண்டுபண் ணுபவனுவனென்பது யூகித்தறிந்து கொள்க.

௩. அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு.
(863)
(இ-ம்) அஞ்சவேண்டாத காரியங்களுக்கு அஞ்சுகின்றவனும் அறிய வேண்டிய விஷயங்களை அறியாதவனும் எல்லாரோடும் ஒத்த நடையில்லாத வனும் இவையுல்லாமல் ஒருவனுக்கும் ஒன்றும் கொடாதவனும் ஆகிய ஒருவன் உகூ௨ திருக்குறள் மூலமும்,
தெளிபொருள் வசனமும்,

தன்னுடைய பகைவனுக்கு எளியவனுவன் என்பதாம். எனவே, இத் தன்மைகளையுடையவனைக் கண்டால் அவன் பகைவன் இலேசானவனுயிருந் தாலும் அவனுக்கு வலிமையுண்டாகுமென்பது கருத்து.

ச. நீங்கான் வெகுளி நிறையில
னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது .
(864)
(இ-ம்) கோபம் நீங்காதவனும் இரகசியமான காரியங்களைப் பிறரறியும் படி சொல்பவனுமாகிய ஒருவனை எக்காலத்தும் எவ்விடத்தும் (எதிர்த்துப் பொருது வெற்றியடைதல்) எல்லாருக்கும் எளிது (இலேசு) என்பதாம். எல்லார்க்கு மென்றதனுல் சிறிய

பகைவர்க்கும் அவன் தோல்வியுடைவனென்பது கருத்து.

௫. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.
(865)

(இ-ம்) தொன்றுதொட்ட சான்றோராற் கைக்கொள்ளப்பட்ட இராச நீதி நூலைப்படியாதவனும் அந்நூலில் விதித்த காரியங்களைச் செய்யாதவனும் தனக்கு வரும் பழியையெண்ணி விலக்காதவனும் நற்குணமில்லாதவனு மாகிய அரசன் பகையானது அவன் மேற்சென்று பொருது செல்லும் பகை வர்க்கு இனிது (நன்மையு)டையது என்பதாம். எனவே, மேற்சொல்லியவைகளிலொரு குற்றமுமில்லாதவனை அவன் பகைவர் வெல்லமுடியாதென்பது கண்டுகொள்க. நன்மையாவது-வெற்றியைக்கொடுக்குமென்பது.

௬. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.
(866)

(இ-ம்) தன்னையும் பிறரையும் அறியாமைக்குக் காரணமாகிய கோப முடையவன் எவனோ அவன் பகைமையையும், மேலும் மேலும் வளர்ந்து வரும் பெருங் காமத்தையுடையவன் எவனோ அவன் பகைமையையும் விரும்பி யேற்றுக்கொள்ளப்படும் என்பதாம். ஏனென்றால், இவ்விருவகையாரையும் வெல்லுதலெளிதாகையால் என்க. கோபமுங் காமமுமிகுந்துவிட்டால் தன்னுடைய எளிய

நிலைமையு ம் பிறருடைய அரிய நிலைமையுந் தெரியமாட்டார். இவ்விரண்டுந் தெரியாதாகவே பகை பெரிதென்றெண்ணாது பொருது கெடுவர். ஆதலினிவவாறு கூறியருளினர்.

எ. கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற அடுத்திருந்து
மாணாத செய்வான் பகை,
(867)

## ருஎ-ஆம் அதி.—பகைமாட்சி.

உகாரு

(இ-ம்) போர் தொடங்கியிருந்துகொண்டு, அதற்கேலாத செயல்களைச் செய்பவனாயிருக்கிறவன் பகையைச் சிற்சில பொருள்களைச் செலவிட்டாவது நிச்சயமாகத் தேடிக்கொள்ளவேண்டும் என்பதாம். ஏனென்றால், இப்படிப் பட்டவனை இலேசாகவென்று வெற்றியடையக்கூடும். ஏலாத செயல்கள் - எடுத்துக் கொண்ட காரியத்துக்குப் பொருத்தமில்லாத செய்கைகள்.

அ. குணனிலனாய்க் குற்றம் பல வாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து.
(868)

(இ-ம்) இறைமாட்சி அதிகாரத்துட் சொல்லப்பட்ட

குணங்கள் இல் லாதவனாகி இவ்வதிகாரத்துட் சொல்லப்பட்ட குற்றங்களும் இவைபோன்ற வேறு குற்றங்களும் தன்னிடத்திலிருக்குமானால் அவன் துணையிழந்தவனாவன்; அல்லாமலும் அவன் பகைவர்க்கு அவன் குணமில்லாமையும் துணையில்லாமையு மாகிய இரண்டுந் துணையாயிருந்து வெற்றி தருதலையுடையது என்பதாம். குணமில்லாமல் குற்றமிகுதிப்பட்ட அரசனைப் பகைவர் வெல்லுதல் எளிதென்பது கருத்து.

௯. செறுவார்க்குச் சேணிகவா இன்பம் அறிவிலா
வஞ்சும் பகை வர்ப் பெறின். (869)

(இ-ம்) போர் செய்தற்குரிய நீதியை யறித லில்லாததோடு பகைவரைக் கண்டாற் பயப்படுங் குணமுடையார் வாய்க்கப்பெற்றால் அவரோடு போர் செய்யும் பகைவர்க்கு உயர்ந்த இன்பம் நீங்காது இடைக்கும் என்பதாம். எனவே, யுத்தநீதியறிதலும் பயப்படுதலில்லாமையும் உடையவரை வெல்லு தல் கூடாதென்பது கருத்து.

௰. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லா தொளி.

(இ-ம்) நீதிநூலைக் கல்லாதவனோடு கோபித்துப் பகைத்தலால் வரும் சிறு பொருளை அடையாதவனை எந்தக்காலத்தும் புகழ்வந்து சேரமாட்டாது என்பதாம். ஏனென்றால், நீதிநூலறியாதவன் தெரியாமல் தோல்வியடைவன் ஆதலால் அவனை

செய்தற்குரியன செய்யத்
இலேசாக வெல்லக்கூடிய
தாயிருக்கவும் அப்படிச் செய்யாதிருத்தலாலென்க. சிறுபொருள்-கல்லாதவனோடு பொருது வெற்றிகொள்ளும் சிறிய முயற்சியாற் கிடைத்தபொருள்.

---

உ௲௯ திருக்குறள் மூலமும், தெளிபொருள வசனமும்.

## 88-ஆம் அதி.—பகைத்திறந் தெரிதல்.

அஃதாவது, வலிமையில்லாத பகையை ஆக்குதற்குற்றமும் ஆகி நின்ற பகையுள் உறவாகச் செய்யத்தக்கதும் பகையும் உறவுமில்லாமல் செய்யத்தக்கதும் அவற்றிற் செய்யவேண்டுவதும் பகையைக் களைவதனிடத்துச் செய்வனவும் களையும் பருவமும் களையாக்கால் உண்டாகுங் குற்றமும் ஆகியவற்றை ஆ

ராய்தல்.

க. பகையென்னும் பண்பி லதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று.

(871)

(இ-ம்) பகையென்று சொல்லப்படுந் தீமையைத் தரும் செய்கையை ஒருவன் விளையாட்டினிடத்தாயினும் விரும்பத்தக்கதல்ல என்பதாம். ஏனென்றால், விளையாட்டாக மிகப் பழகியது வெற்றியாகிக் கேட்டை யுண்டு பண்ணும் ஆதலாலென்க.

உ. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

(872)

(இ-ம்) வில்லை ஏராகவுடைய உழவரோடு (வீரரோடு) விரோதங் கொண்டாலும் சொல்லை ஏராகவுடைய உழவரோடு (வித்துவான்களோடு) விரோதங்கொள்ளலாகாதென்பதாம். கொண்டால் கேடுவரும். இதற்கு உதாரணம் - கல்வியிற் பெரியராகிய கம்பருடன் பகைத்த சோழமகாராஜன் குலத்தொடு கெட்ட சரித்திரம் எல்லாருக்கும் தெரியும். இதற்குச் சாட்சியாக, "வில்லம்பு சொல்லம்பு மேதினியி லிரண்டுண்டு, வில்லம்பு சொல் லம்பை வெல்லாதாம்—வில்லம்பு, பட்டதடா என்மார்பிற் பார்வேந்தே நின் குலத்தைச்,

சுட்டதடா என்வாயிற் சொல்'' என்னுங் கம்பர் கூறியருளிய கவியைக் கண்டுகொள்க. கொண்டாலும் என்றதனுல் வில்லேருழவர் பகை யுங் கொள்ளலாகாதென்பதே முடிவு.

ரு. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

(873)

(இ-ம்) சுற்றத்தாரும் துணையாயுள்ள சிநேகரும் சேனை முதலியனவும் இல்லாமல் தான் தனியே இருந்துகொண்டு பலரோடும் விரோதித்துக்கொள் பவன் பைத்தியங்கொண்டவரைப் பார்க்கினும் அறிவில்லாதவனாவன் என்ப தாம். பைத்தியங்கொண்டவன் பிறரால் தீங்கடையமாட்டான். பல்லா ரோடும் பகைத்துக்கொண்டவன் நிச்சயமாகத் தீங்கடைவானதலால் அவரி னும் இவன் அறிவில்லானென்றருளிச்செய்தனர். அறிவில்லாதவன்-மூடன்.

ஈ்அ-ஆம் அதி —பகைத்திறந் தெரிதல்.
உகூ

ச. பகை நட்பாக் கொண்டொழுகும் பண்புடை

யாளன்

த கைமைக்கட் டங்கிற் றுலகு.

(874)

(இ-ம்) வேண்டிய இடத்துப் பகைவரைப் பகையில் நின்று நீக்கிச் சிநேகமாக்கிக்கொண்டு காரியத்தை முடிக்குங் குணமுடைய அரசன் பெருமையினிடத்து இவ்வுலகந் தங்கியிருக்கின்றது என்பதாம். தங்கியிருத்தலாவது-உலகத்தாரெல்லாரும் அவன் வசப்பட்டுநிற்றல். பெருமை - பொருள் படை முதலியவற்றாலாகிய சிறப்பு.

ரு

தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவன்
இன்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(875)

(இ-ம) தனக்கு உதவிசெய்யும் துணையில்லாத ஒருவன் தன்னை வருத்தப்படுத்தும் இரண்டு பகைவரையுடையவனானால் அவ்விருவருள் தனக்குப் பொருந்திய ஒரு பகைவரை அப்பொழுதுக்கு இனிய துணையாகச் செய்துகொள்ளவேண்டும் என்பதாம். ஏனென்றால், ஒரு சகாயமும் இல்லாதிருக்குங் காலம் இரண்டு பகைவரை வெல்லமுடியாதாகையால் வலிய ஒரு

பகைவரைத் துணையாக்கிக் கொண்டால் மற்றொரு பகைவரைப் பொருது வெற்றியடைதலாகுமாதலாலென்க. பொருந்திய பகைவரென்பதற்கு, தான் வெல்லுதற்கேற்ற வலிமையுடையராகத் தனக்கிசைந்த பகைவரென்பது பொருள். அப்பொழுதுக்கு-அந்தக்காலத்தில்.

௬. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
தேறான் பகாஅன் விடல்.

(876)

(இ-ம்) ஒருவன் பகைவனை முன்னே தெளிந்து மதிக்கப்பட்டிருந் தாலும் மதிக்கப்படாதிருந்தாலும் தனக்கு வேறொரு வழியாக யுத்தத்தால் தாழ்வு வந்த இடத்து அப்பகைவனைத் தன்னோடு சேராமலும் தன்னைவிட்டு நீக்காமலும் இவ்விரண்டுக்கும் பொதுவாக வைத்துக்கொள்ளவேண்டும் என்பதாம். ஏனென்றால், தன்னொடு சேர்த்தால் உட்பகையாய் நின்று விரைந்து கெடுத்துவிடுவன். நீக்கிவிட்டால் வேறொரு பகையால் வந்த பகைவருக்குத் துணையாய் நின்று விரைந்து கெடுத்துவிடுவன் ஆதலாலென்க. இதனால் நட்பிற்கும் நட்பில்லாமைக்கும் பொதுவாகக் கொண்டிருந்தால் உறவென்றும் பகையென்றும் நிச்சயிக்கக்கூடாத பகைவனால் கேடு வாராதென்பது கருத்து. நட்பு-சிநேகம்.

எ. கோவற்க கோந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. (877)

84



(இ-ம்) தான் துன்பப்பட்டிருப்பதைத் தாமாக அறிந்து உதவி செய் யாத சிநேகருக்கு அத்துன்பத்தைச் சொல்லாதிருக்கவேண்டும். இதுவல்லா மல் தன் வலிமையின் தளர்ச்சி வரவு பார்த்திருக்கும் பகைவர்க்குத் தன் னுடைய எளிய நிலைமையைக் காட்டிக் கொள்ளாதிருக்கவேண்டும் என்பதாம். ஏனென்றால், தாமாக உதவி செய்ய மாட்டாதவர் தன் துன்பத்தைச் சொன் னலும் உதவி செய்யமாட்டார். தன்னைக் கெடுக்கும் சமையம் பார்த்திருப்ப வர் தன்னுடைய எளிய நிலைமையைத் தெரிந்தால் அவர் விரைந்து வந்து தன்னைக் கெடுக்க நினைப்பராதலால் என்க.

அ. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு
(878)

(இ-ம்) தான் பகைவரை வெல்லும் வகையை யறிந்து அவ்வெற்றி யடைதற்குப் பொருத்தமாகப் பொருள் படை முதலியவற்றைப் பெருக்கிக் கொண்டு தன்னிடத்து மறவி வாராமற் காத்துக்கொள்வானுனல் தன் பகைவ ரிடத்து இவனைப் பொருள் முதலியவற்றுல் வென்றுவிடலாமென்னுஞ் செருக்கு (கெருவம்) கெட்டொழிந்துபோம் என்பதாம். இதனுல் பகைவர் தன்மேல் வாராமல் தடுத்தற்கு மிக்க பொருளும் மிக்க சேனையும் சேர்த்து வைத்துக்கொள்ள வேண்டுமென்பது கருத்து. மறவி-மறத்தல்.

௯. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த இடத்து.
(879)

(இ-ம்) முள்ளுடைய மரத்தை முளைத்திருக்கும் இளம்பருவத்திலே கிள்ளி யெறியவேண்டும். அப்படியல்லாமல் வயிரம் பாயும்படி அம்மரத்தை வளரவிட்டுப் பின்னர் வெட்டியெறியப் புகுந்தால் வெட்டுகிறவருடைய கையைப் புண்பட க்கிழித்து வருத்தஞ்செய்யும். அதுபோல ஒருவன் பகை தோன்றும்போதே அப்பகையைக் கெடுத்துவிடவேண்டும். முற்றவிட்டு அப்பகையைக் கெடுக்க முயற்சிசெய்தால் அப்பகை தன்னைக்

கெடுத்துவிடு மென்பதாம். இக்கருத்தால், "மூளைதரு சூர்முள் வேலை மூளை யிலே களையி னல்லால், நனிவர வயிர்த்த போது நவியமு மழுங்கு மன்றே" என்றார் பிறரும். (வில்லிபாரதம் சூதுபோர்ச்சருக்கம் 11.)

௩௦. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

(880)

(இ-ள்) தம்மோடு பகைப்பவரது செம்மலை (கருவத்தை)க் கெடுக்கும் வலிமையுடையவராயிருந்தும், இவரோடு போர் செய்வது நமக்கு இகழ்ச்சியர்

•

அகூ-ஆம் அதி.—உட்பகை.

உகா

மென்று சும்மா இருக்கும் அரசர் பின்னர் உயிரோடிருப்பதற்கு இடமில்லாதவரென்பது நிச்சயம் என்பதாம். எப்படியென்றால், நாளுக்குநாள் பகை வளர்ந்து தம் வலிமையைப் பார்க்கிலும் அவர் வலிமை அதிகப்பட்ட இடத்து அவரை வெல்லமுடியாது ஆதலாலென்க. இதனால் பகையைச் சிறிதென்று அலக்ஷியஞ் செய்திருக்கலாகாதென்பது கருத்து.

# 89-ஆம் அதி.—உட்பகை.

அஃதாவது, புறப்பகைக்கு இடமுண்டாக்கிக் கொடுத்து அப்புறப்பகை வெல்லுமளவும் உள்ளாய் நிற்கும் பகை.

க. நிழல்நீரும் இன்னாத வின்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின்.
(881)

(இ-ம்) ஒருவனுக்கு அனுபவிக்க வேண்டுவனவாகிய நிழலும் நீரும் முன் இன்பமுடையன ஆனாலும் பின் அவ்விரண்டும் நோய் செய்வனவானால் துன்பமுடையனவாகும்; அதுபோலத் தழுவவேண்டிய சுற்றத்தார் இயல்பு (தன்மை)களும் முன் இனிமையுடையனவானாலும் பின் சமையம் வாய்த்த இடத்துத் துன்பஞ் செய்யுமானால் அவைகளும் துன்பமுடையனவாகும் என்பதாம். நிழலாலும் நீராலும் வரும் நோய்-பெருங்கால், பெருவயிறு முதலாயின. சுற்றத்தார்-தாயாதிக்காரர்.

உ. வாள்போற் பகைவரை யஞ்சற்க அஞ்சுக
கேள்போற் பகைவர் தொடர்பு.
(882)

(இ-ம்) கொல்வேனென்று வெளியில் வந்து எதிர்ப்பட்டு நிற்கும் வாளாயுதம் போலும் புறப்பகைக்கு அஞ்சவேண்டுவதில்லை; சுற்றத்தார் (தாயத்தார்) வேடங்கொண்டு மறைந்து நிற்கும் உட்பகையோடிருத்தற்கு அஞ்சவேண்டும் என்பதாம். ஏனென்றால், வெளிப்பட்டு வந்து நிற்கும் பகை வரைத் தன்மேல் வரவொட்டாமல் அரசனானவன் தன்னுடைய சேனை முதலியவற்றால் காத்துக் கொள்ளலாம். மறைந்து நிற்கும் உட்பகையுடை யாரை மேற் சொல்லியவைகளால் காக்க முடியாமையால் என்க. அஞ்சுதல்- பயப்படுதல்.

ந. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்,
(883)

உசஅ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) உட்பகை வைத்துக்கொண்டிருப்பார்க்கு அரசன் எப்பொழுதும் பயந்து தன்னைக்காத்துக்கொள்ளவேண்டும். அவ்விதங் காத்துக்கொள்ளாமல் இவரால் என்னாகுமென்றிருந்தால் தனக்கோர் தளர்ச்சி (சோர்வு) வந்தவிடத் துக் குயவன் மண்பாண்டத்தை யுடைக்குங் கருவியைப்போல அவ்வுட்பகைவர் தன்னைக் கெடுத்துவிடுவர் என்பதாம். காத்தல் எப்படியென்றால், அவரை நெருங்கவொட்டாமலும்

நீங்கவொட்டாமலும் பழகி வருதல். இதனால் உட்பகையுள்ளார் சம்பந்தங் கேட்டையுண்டுபண்ணு மென்பது கருத்து.

ச .

மனமாணு உட்பகை தோன்றின் இனமாணு
ஏதம் பலவுந் தரும்.

(884)

(இ-ம்) புறத்திலே நல்லவர்போலிருந்து அகத்திலே தீயவரா கியபகைவர் அரசனுக்கு உண்டாவதானால் அது அவ்வரசனுக்குச் சுற்றத்தார் தன்கை வசப்படா திருத்தற்குக் காரணமாகிய குற்றம் பலவற்றையும் கொடுக்குமென் பதாம். குற்றம் பலவாவன—சுற்றத்தாரை உட்புகுந்து அப்பகைவர் வேறு படுத்தலும் அவர் வேறுபட்ட இடத்துத் தான் அவரைத் தெளியாதிருத்தலும் அவற்றால் பின் விளையுங் கேடுகளுமாம்.

ரு. உறன்முறையா னுட்பகை தோன்றின்
இறன்முறையான்
ஏதம் பலவுந் தரும்.
(885)
(இ-ம்) புறத்திலே உறவுமுறைத் தன்மையோடு

கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதானல், அஃது அவ்வரசனுக்கு மரணமடைதல் முறையோடு, கூடிய குற்றம் பலவற்றையுங் கொடுக்குமென்பதாம். அக்குற்றங்களாவன-புறத்திலே சுற்றத்தாரைப்போல அன்பு பாராட்டி உட்பகையாயுள்ளவர் அப்பகைமை தோன்றமல் வஞ்சனையால் கோறல் முதலியதீத்தொழில் செய்தலும், அமைச்சர் முதலாயினேரை வேறுபடுத்தி, அரசனிடத்து அவர்க்குள்ள நட்பைக் குறைத்தலு முதலாயினவாம். அமைச்சர்—மந்திரிகள். நட்பு—சிநேகம், அன்பு. இது, சுற்றத்தாரல்லாத பிறர் உட்பகை வைத்திருக்கும் கொடுமை கூறியது.

சா. ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது. (886)

(இ-ம்) ஒற்றுமையில்லாமல் பகைமையானது தன்னிடத் துள்ளாரிடத் துத்தோன்றுமானல் பொருள் படை (சேனை) முதலிய அங்கங்களோடு கூடிப் பெரியனுயிருக்குங் காலத்தும் கெடுதலில்லா திருத்தல் அரசனுக்கு இல்லை என்பதாம்,

## அகூ-ஆம் அதி —உட்பகை.

எ. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.
(887)
(இ-ம்) செப்பானது தன் மூடியோடு இறுகக் கூடியிருத்தல்போலப் புறத்திலுள்ளார்க்கு வேற்றுமை தெரியாமல் அகத்திலே பகை கொண் டிருக்கும் குடியானது அரசனோடு கலந்திருந்தாலும் செப்பை விட்டு மூடி வேறுதல் போலப் ப கை கமையுற்ற குடியிலுள்ளார் விட்டு நீங்குவர் என்பதாம். இதனால் உட்பகையாரை நட்புக்கொண்டிருந்தால் அவர் தம் வஞ்சக நினைப்பு வாய்த்த காலத்தில் கைவிட்டு நீங்குவரென்பது கருத்து.

அ. அரம்பொருத பொன்போலத் தேயும் உரம்பொரு
துட்பகை யுற்ற குடி.
(888)

(இ-ம்). நீண்டகாலம் ஓங்கி வளர்ந்த பெருஞ் யிருந்தாலும் உட்பகையுண்டாகுமானல் அப்பகையால்

செல்வமுற்ற குடியா

வஞ்சிக்கப்பட்டு அரத்
தால் தேய்க்கப்பட்ட இரும்பு எப்படித் தேயுமோ அப்படித் தேய்ந்து கெட்டு விடும் என்பதாம்.
உட்பகையாவது-வெளிக்கு நட்புப்போலப் பாவனை செய்து உள்ளே வஞ்சகத்தை நினைப்பது. இப்படிப்பட்டவர் சிநேகம் எவ்வளவு மாகாதென்பதை இதனடுத்த திருக்குறளாற் கண்டு கொள்க. இக்குறளாலும் இதற்கு முந்திய குறளாலும் அரசனுடைய குடிக்கு வருந் தீமை கூறப் பட்டது.

கூ. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை யுள் ளதாங் கேடு .

(889)
(இ-ம்) அரசனது உட்பகையானது அரசன் பெருமையை நோக்க எள்ளின் பிளப்பையொத்த சிறுமையுடையதே யானும் அப்பெருமை யெல்லாம் அழிய வருங்கேடு அவ்வுட்பகையின் சிறுமையினிடத்தே யுள்ளது என்பதாம். இதனால் உட்பகை எவ்வளவு சிறியதாய் அடங்கியிருந்தாலும் தனக்குச் சமையம் வாய்த்த இடத்து எவ்வளவும் பெரியதாய் வளர்ந்துவிடு
மென்பது கருத்து. ஆதலால் உட்பகையைச் சிறியதென்று தென்பதை யறிந்து கொள்க. எள்ளின் பிளவு-ஒரு எள்ளளவிற்

இகழலாகா

பாதி. அரச
னது உட்பகை-அரசனுக்கு வெளியிலே சிநேகம்போல நடித்து உள்ளே விரோதத்தை வைத்துக்கொண்டிருத்தல்.

க0. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்பொ டுடனுறைந் தற்று.
(890)



(இ-ம்) மனப்பொருத்தமில்லாதவரோடு கூட ஒருவன் வாழும் வாழ்க் கையானது மிகச்சிறிய ஒரு குடிசையுள்ளே பாம்போடு கூடியிருந்தாற் போலும் என்பதாம். எப்படியென்றால், மிகச் சிறிய குடிசையுள் விலகுதற்கு இடமில்லாமையால் கூட இருக்கும் பாம்பு தப்பாது கடித்துக்கொல்லும். அதுபோலச் சமையம் பார்த்து மன ஒற்றுமையில்லாதவர் கெடுத்து விடுவர் ஆதலாலென்க. சிறிய குடிசை-சிறிய வீடு. மன வொற்றுமையில்லாதவர்-உட்பகையுடையார்.

---

## 90-ஆம் அதி.—பெரியாரைப் பிழையாமை.

அஃதாவது, வலிமையாற் பெரிய அரசனையும், தவத்தாற் பெரிய முனிவரையும் அவமதித்து நடவாதிருத்தல்.

க. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.
(891)

(இ-ம்) எடுத்துக் கொண்டகாரியங்க ளெல்லாம் முடிக்கும் ஆற்றலென் னும் அறிவு, பெருமை, முயற் சிகளையுடைய பெரியாரை அவமதித்துப் பேசா திருத்தலானது தம்மிடத்துத் தீங்குவாராமற் காப்பார் செய்யும் காவல்களெல் லாவற்றினும் உயர்ந்தகாவல் என்பதாம். பெரியாரையிகழா திருத்தல் உ யர்ந்த காவலென்றது எதற்காக என்றால் - மதில், படை, பொருள், நட்பு முதலிய காவல்களெல்லாம் அப்பெரியாரால் அழியுமாதலால் அவைகள் காவல்களாக மாட்டா என்பதறிவித்தற்காக என்க.

உ . பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்
பேரா இடும்பை தரும்.
(892)

( இ-ம் ) பெருமை அறிவு முயற்சியென்னும் வலிமையினாலே பெரியராயி னாரை அரசர் நன்குமதித்துப்

பூசிதை செய்யாமல் அவமதித்து நடப்பாரானல் அந்நடக்கையானது அப்பெரியாரால் அவ்வரசர்க்கு எந்தக் காலத்தும் நீங்காத துன்பங்களைக் கொடுக்குமென்பதாம். துன்பங்களாவன—இம்மை மறுமை யிலும் வரும் மூவகைத் துன்பங்களாம். இவ்வாறு பின்வரும் 7-வது திருக் குறளில் ஆசிரியர் பரிமேலழகர் எழுதிய உரையாலுங்காண்க. மூவகைத்துன் பங்கள்-காமம் வெகுளி மயக்கத்தால் வருங்கேடுகள். வெகுளி-கோபம்.

௩. கெடல்வேண்டிற் கேளாது செய்க
அடல்வேண்டின்
ஆற்று பவர்க ணிழுக்கு .
(893)

௯௦-ஆம் அதி.—பெரியாரைப் பிழையாமை.
உள்க்

(இ-ம்) வேற்றரசரைக் கொல்லுதலை நினைத்தால் நினைத்த அப் பொழுதே செய்ய வலிமையுடைய அரசரிடத்துத் தான் கெட்டுப்போக விரும்பினல் நீதிநூல் வரம்பைக் கடந்து குற்றத்தைச் செய்வானுக என்பதாம். நீதிநூல் வரம்பாவது-பெரியார் மனம் வருந்தும்படி குற்றஞ் செய்யா திருத்தல். இதனல் பெரியார்க்குக் குற்றஞ்செய்பவன் கெடுவானென்பது கருத்து. இங்கே பெரியாரென்றது அரசரை.

ச. கூற்றத் தைக் கையால் விளித்தற்று லாற்றுவார்க்
காற்றா தா ரின்னா செயல்.
(894)
(இ-ம்) பிறருடைய உயிர் முதலியவற்றை வாங்குந் தண்ட ஞ்செய்யும் வலிமையுடைய அரசருக்கு முற்பட்டு வலிமையில்லா தவர் துன்பமான காரி யங்களை ச் செய்தலானது தானே வரக்கூடிய யமனை என்னை வந்து கொல் லென்று கையை நீட்டி அழைத்தாற்போலும் என்பதாம்.

ரு. யாண்டுச்சென் றியாண்டும் உளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர்.
(895)
(இ-ம்) பகைவர்க்குக் கொடிதாகிய வருத்தத்தைத் தரப்பட்ட வலிமை யுடைய அரசனால் கோபிக்கப்பட்டவர் அவனை விட்டு எங்கேபோய்ப் பிழைப் பர்? ஓரிடத்தும் பிழைக்கமாட்டாரென்பதாம். இதனால், உலகமுழுது மதிக் கப்பட்ட அரசனைப் பகைத்துக்கொண்டவருக்கு ஒருவரும் இடங்கொடுக்க மாட்டாரென்பது கருத்து. ஏனென்றால், அவ்வரசனுடைய பகை தமக்கும் வருமென்று பயப்படுதலாலென்க.

எரியாற் சுடப்படினு முய்வுண்டாம் உய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(896)

(இ-ம்) ஒருவன் தீயாற் சுடப்பட்டாலும் அத்தீயானது உடம்பிற்பற்றி அது வழியாகப் போய் உயிரைப்பற்றுமுன் ஏதாவது ஒரு பரிகாரத்தால் பிழைத்துக்கொள்ள முடியும். தவத்தாலுயர்ந்த பெரியவருக்கு இடையூறு செய்பவர் அவரது கோபத்தாற் சபிக்கப்பட்டு எவ்விதத்தாலும் பிழைக்க மாட்டாரென்பதாம். ஏனென்றால், அவருடைய கோபத்தைத் தடுக்க முடியாமையால் என்க. இதுபற்றியே 3-ஆம் அதிகாரத்தில் 'குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது' என்று இந்நூலாசிரியர் கூறியருளினர்.

எ. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாம்
தகைமாண்ட தக்கார் செறின்.

(897)



வசனமும்.

(இ-ம்) சாபமிடுதற்கும் பின்னர் அருள்செய்தற்கும் காரணமாகிய பெருமையால் உயர்ந்த அரியமுனிவர் அரசனைக் கோபிப்பாராளுல் அமைச்சு நாடு அரண் படை முதலியவற்றால் மேம்பட்ட அவனுடைய அரசாட்சியும் அவன் சம்பத்தும் என்ன பாடுபடும்? (கெட்டொழிந்துபோம்) என்பதாம். அமைச்சு-மந்திரி. அரண்-கோட்டை. படை-சேனை.

அ. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(898)

(இ-ம்) மலைபோன்ற பெரிய குணங்களையுடைய முனிவர் கோபத்தால் கெடும்படி நினைப்பாராளுல் நினைத்த அப்பொழுதே இந்நிலவுலகத்தில் நிலை பெற்று நின்றாற்போலும் எவ்வளவு பெருஞ்செல்வத்தினையுடையவரும் குடியொடு மிறந்துபோவர் என்பதாம். குடியொடுமிறத்தல்-சமூலமுங்கெடுதல். இதற்குச் சான்றாக இந்திரபதவி

யடையவந்த நகுடன் அகத்தியமுனிவர் சாபத்தால் அப்பொழுதே மலைப்பாம்பான சரித்திரம் திருவிளையாடற் புரா ணத்திற் காணலாம். நிலைபெற்று நின்றாற்போல்வது-மிகப் பெரியாராதலால் சிலர்க்கு எந்தக்காலத்தும் அழிவில்லையென்று கண்டாரால் கருதப்படுதல்.

கூ. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(899)

(இ-ம் ) தாங்குதற்கு அருமையான உயர்ந்த விரதசீலத்தையுடை யார் கோபிப்பாராஜல் இந்திரனும் இடையிலே தன் பதவியாகிய தேவராசாங்க செல்வத்தை யிழந்து கெடுவன் என்பதாம். இதன் சரித்திரம் திருவிளை யாடற்புராணத்துட் காணலாம். அஃதாவது, இந்திரன் அரசிருக்கை மண்ட பத்திற் சகல தேவரோடும் வீற்றிருந்து தேவமாதர் நடனம் பார்த்திருக்கும் போது தன் குருவாகிய வியாழபகவான் வருதலைக்கண்டு வணங்காதிருந்ததற் காக அக்குருவானவர் சபித்தலும் அவ்விந்திரன் சகல சம்பத்தையுமிழந்து ஒருதாமரைத் தண்டிலுள்ள நூலிலேபோ யொளித்துக்கொண்டிருந்தா னென்பதாம்.

க0. இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். (900)

(இ-ம்)
அரண் படை

அளவுக்கு மிஞ்சிய தவச்சிறப்பினையுடையார்
பொருள் நட்பு என்னும் நான்கினால் மிகப்

கோபிப்பாராஞல்
பெரிய அரசரும்
அத்தவச் சிறப்புடையார் தவ வலிமையால் அழிந்து கெடுவர் என்பதாம். இதற்குதாரணமாகத் திரிபுரத்தைச் சார்பாகக் கொண்ட அசுரர் சிவபிரான்
கூக-ஆம் அதி.—பெண்வழிச்சேறல்.
உள ரீ கோபத்தால் திரிபுரத்தோடழிந்த சரித்திரத்தைப் பல புராணங்களிற் கண்டு கொள்க. இதனால் எவ்வளவு பெருஞ் செல்வரும் பெரியாரது கோபமுண்டாக நடக்கலாகாதென்பது கருத்து.

---

91-ஆம்

## அதி.—பெண்வழிச்சேறல்.

அஃதாவது, தன் சொல்வழி நடக்கவேண்டியவளாகிய மனைவி சொல்வழியே தான் நடத்தல்.

க. மனைவிழைவார் மாண்பய னெய்தார்
வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.
(901)

(இ-ம்) காமம் (இன்பம்) காரணமாகத் தம்மனையாளை விரும்பி அவள் மனம்போல நடப்பவர் தமக்கு இனிய துணையாயிருக்கிற அறத்தினை யடைய மாட்டார். இதுவல்லாமல் பொருளை விருத்தி செய்ய நினைப்பாரும் விரும்பக் கூடாதது அக்காமம் என்பதாம். ஏனென்றால், பொருள் விருத்தியைச் செய்பவன் மிக்க காம இன்பத்தில் இச்சை வைத்தானானால் பொருள் விருத்தி செய்தலுமில்லாமல் முன்னுள்ள பொருளையு மிழந்துவிடுவனாதலாலென்க. இக்கருத்துப்பற்றியே "போதந் தனங்கல்வி பொன்றவருங் காலமயல், மாதர் மேல் வைப்பார் மனம்" என்றார் ஔவையாரும். (நல்வழி 34)

உ. பேணாது பெண்விழைவா னாக்கம்
பெரியதோர்
நாணாக நாணுத் தரும்.
(902)

(இ-ம்) தன்னுடைய ஆண்மைத் தன்மையைக் கர்வாமல் விட்டுக் காம
இச்சையாற் பெண் தன்மையை விரும்புவான் அடைந்த செல்வமானது
இந்நிலவுலகத்திலுள்ள ஆண்பாலார்க்கெல்லாம் பெரியதோர் நாணம்(வெட்கம்)
உண்டாகத் தனக்கும் வெட்கம் அடைதலைக் கொடுக்கும் என்பதாம். எப்படி
யென்றால், தன்சொற்படி நடக்கும் மனைவியின் சொற்படி காமத்தால் தான்
நடத்தலால் பிறருக்குக் கொடுத்தலும் தான் அநுபவித்தலும் தான் நினைத்த
படி முடியாதாகையால் அதைத் தெரிந்தவரெல்லாம் நம்மினமாகிய இவனுக்கு
யாதொரு சுதந்தரமும் இல்லையேயென்று வருந்தி வெட்கமடைவர். அது
போலவே பெண்சொற் கேட்பவனும் என்னைப்போலும் பிறரெல்லாம் தம்
இச்சைப்படி அநுபவிக்குஞ் செயல் எனக்கில்லையே யென்று வெட்கமடைவன்
என்க. ஆண்மைத் தன்மை-தன் சொல்வழி தன்மனையாளை நடக்கச் செய்தல். பெண்மைத் தன்மை-தனக்குச் சுதந்திரமில்லாதிருத்தல். பெண் சொல்வழி 35

நடப்பவனுக்கு நாணமுண்டாதல் பெரும்பாலும் அவன் செல்வம்பற்றியே யாதலால் செல்வம் நாணத்தைக் கொடுக்குமென் றருளிச்செய்தனர்.

௩. இல்லாள்கட் டாழ்ந்த இயல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாருள் நாணுத் தரும். (903)

(இ-ம்) ஒருவன் மனையாளுக்குத் தாழ்ந்து நடப்பதற்குக் காரணமாகிய அச்சம் (பயம்) ஆனது மனையாள் சொற்படி நடவாத நல்லாரிடத்துச் செல்லும்போது அவரவமதித்துச் சிரிப்பர். அதனாலவரைக் கண்டால் அவனுக்கு எந்தக்காலத்தும் நாணத்தைக் கொடுக்குமென்பதாம். அச்சம்-இவள் சொற்கேளாவிட்டால் இவளென்ன செய்வாளோ வென்று அஞ்சுதல். மூலத்தி லியல்பின்மையென்பதற்கு அச்சமென்பது பொருள்.

ச. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(904)

( இ-ம்) தன்மனையாளுக்குப் பயந்து நடத்தலால் மறுமைப் பயனை இழந்தவன் எதாவது காரியத்தை முடிக்கச் செல்வானானால் அக்காரியம் தனக்கு ஆண்மைத் தன்மையில்லாமையால் இடையூறெய்திப் பெருமை யடைதல் இல்லையென்பதாம். இல்லாளுக்குப் பயந்து நடப்பவன் மறுமைப் பயனையிழப்பது எப்படியென்றால், இல்லறத்திற் செய்யவேண்டிய செயல்கள் இவன் மனம்போல நடவாதாகையால் இல்லற தருமத்தால் கிடைக்கும் மறுமைப் பயன் எப்படிக் கிடைக்குமென்று விடை சொல்லவேண்டும். விடை- கேள்விக்கு மறுமொழி சொல்லுதல்.

ரு. இல்லாளை யஞ்சுவான் அஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல்.

(905)

(இ-ம்) தன்மனையாளுக்குப் பயப்படுகிறவன் எந்தநாளும் தேவர் முனிவர் கற்றுயர்ந்த பெரியவர் தாய்தந்தையர் விருந்தினர் முதலியவருக்குத் தான் சம்பாதித்த பொருளாயிருந்தாலும் அவர் வேண்டியதொன்றைக் கொடுக்கப் பயப்படுவன் என்பதாம். இதனால் எப்படிப்பட்ட அரிய பெரிய தானமும் தருமமும் மனையாள் சொற்கேட்பவன் தன் மனம்போலச்

செய்யமுடியாதென்பது கண்டுகொள்க.

சு. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லாள்
அமையார்தோ ளஞ்சு பவர்.
(906)

## கூக-ஆம் அதி.—பெண்வழிச்சேறல்.
உளரு

(இ-ம்) தம்முடைய மனையாளது மூங்கில் போலும் தோள்களுக்குப் பயப்படுகின்றவர் வீரத்தாற் பகைத்தவீரது தோள்களை வென்று வீரசொர்க்கம் பெற்றதேவர்களைப் போல இவ்வுலகத்தில் வாழ்ந்தாரானாலும் (பாடு) பெருமையுடைய ஆண்மையில்லாதவர் ஆவரென்பதாம். ஏனென்றால், வீரரது வயிரக்கற்போன்ற தோள்களைவென்ற தமது வலிமை தம்முடைய மனையாளது மூங்கில்போன்ற மெல்லிய தோளுக்கு உடைந்து தோற்றுவிட்டதாலென்க. அஃதாவது, மனையாள் தோளைத் தழுவுதற்கு ஆசைப்பட்டு அவள் சொல்வழி நடத்தல். போரிற் புறங்காட்டாமல் யுத்தம்செய்த வீரர் வீர சொர்க்கத்திற்போய்த் தேவராயிருத்தல் யுத்தநூல் முடிபு. தோளுக்குப் பயப்படுதல்-தோளையுடைய

மனையாளுக்குப் பயப்படுதல்.

எ .

பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையி
பெண்ணே பெருமை யுடைத்து.

ஞுணுடைப்
(907)

(இ-ம்) வெட்கமில்லாமல் தன் மனையாள் ஏவிய தொழிலைச் செய்து பிழைத்துத் திரியும் ஒருவனது ஆண்மைத் தன்மையைப் பார்க்கினும் வெட்க முடைய பெண்தன்மையே மிகவும் மேன்மையுடைய தென்பதாம். ஏனென்றால், நாணங் கெடவந்த இடத்து அறிவுடையோர் உயிரைவிட்டுவிடுவரென்று பலருங் கூறுதலறிந்திருந்தும் பெண்ணேவல் செய்தொழுகுவார் உயிரை விடாமல் நாணத்தை விட்டுவிட்டதனாலென்க. இதனால் மனிதர்க்குச் சிறப்பாவது நாணமென்பது கருத்து. இக்கருத்துப் பற்றியே நாணுடைமை யதிகாரத்தில் நாணுடைமை மாந்தர் சிறப்பென்று அருளிச்செய்தனர்.

அ.

நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

(908)

(இ-ம்) தம்முடைய எண்ணப்படியல்லாமல் தம்மனையாளுடைய எண் ணப்படி விரும்பி அவள் சொற்கேட்டு நடப்பவர் தமது சிநேகருக்கு வந்த குறைபாட்டைத் தீர்க்கமாட்டார். அதுவுமல்லாமல் மறுமைப் பயனடைதற் கேற்ற இல்லற தருமங்களையும் செய்யமாட்டாரென்பதாம். ஏனென்றால், இல்லறதருமத்துக்கு வேண்டும் பொருள்களை அவளிஷ்டப்படி யல்லாமல் தம்மிஷ்டப்படி செலவு செய்ய முடியாமையாலென்க.

கூ. அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.
(909)

(இ-ம்) தருமச் செய்கையும் அது முடிதற்கேதுவாகிய பொருட் செய்கையும் இவ்விரண்டிற்கும் வேறாகிய இன்பச் செய்கையும் தன் மனையாள்

வசனமும்.

ஏவிய சொற்கேட்டு அச்சொல்வழி நடப்பவர்களிடத்து இல்லை என்பதாம். தம் மனையாள் சொல்வழி நடப்பவருக்கு இன்புச் செய்கையில்லாமையாவது, அச்செய்கை அவள் குறித்தபோது முடியுமல்லாமல் தாம் குறித்தபோது முடியாமை. தருமச் செய்கை--தருமத்தையாக்குதல். பொருட்செய்கை- பொருளைச் சம்பாதித்தல். இன்பம்-காமம்.

க0. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். (910)

(இ-ம்) ஆக்குந்தொழிலின் சூழ்ச்சியிடத்துச் சென்ற நெஞ்சத்தினையும் அச்சூழ்ச்சியாலாகிய (இடன்) செல்வத்தினையும் உடைய அரசர்க்கு மனை யாளைக் கூடுதலால் வரும் அறியாமையாகிய விஷயம் எக்காலத்தும் இல்லை என்பதாம். அறியாமை-இவ்விடத்து மனையாள் சொல்வழி நடத்தல். சூழ்ச்சி- ஆராய்ச்சி. நெஞ்சம்-மனம்.

---

## 92-ஆம்
## அதி.—வரைவின்மகளிர்.

அஃதாவது, தம்முடைய இன்பத்தை விலைப்பொருள் கொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லாமல் விற்பதற்கு உரியரிவர், உரியரல்லாதவரிவர் என் னும்

அறிவில்லாத பெண்களியல்பு . இவரே வேசைய ரெனப்படுவார்.

க. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியார்
இன்சொ லிழுக்குத் தரும்.
(911)

(இ-ம்) ஒருவனை அன்புபற்றி விரும்பாது பொருள் பற்றி விரும்பும் பெண்கள் பொருள் கைவசப்படும் வரையும் அன்பால் விரும்பியவரைப்போலப் பேசும் இனிய சொற்கள் பின்னர் அவனுக்குத் துன்பத்தைக் கொடுக்கும் என்பதாம். துன்பம்-தரித்திரமாகிய வருத்தம்.

உ. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.
(912)

(இ-ம்) ஒருவனுக்கு உள்ள பொருளை அளந்து தெரிந்து அப்பொருள் முழுதும் தம் கைவசப்படும்வரை அன்புடைமை காட்டிப் பேசும் தீக்குண முடைய பொது மாதரது நடத்தையை ஆராய்ந்து தெளிந்து இவரை நம்பினல் நாம் கெட்டுப்போவோமென்று நினைத்து, பின் அவர் சிநேகத்தைப் பொருந்தாது விட்டுவிடவேண்டும் என்பதாம்.

## கூஉ-ஆம் அதி,— வரைவின்மகளிர்.

௩. பொருட்பெண்டிர் பொய்மை முயக்க மிருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று.
(913)

(இ-ம்) பொருள் கொடுப்பாரை மகிழாமல் பொருளையே மகிழும் பொதுப் பெண்களுடைய பொய்யாகிய புணர்ச்சியானது கூலிக்குப் பிணஞ் சுமப்பவர் இருட்டு வீட்டுக்குள் அயலாருடைய பிணத்தை அருவருத்துக் கூலி யினிமித்தந் தொட்டுத் தூக்கும் போது தழுவினாற் போலும் என்பதாம். எனவே, சாதியும் வயசும் ஒவ்வாதவனைத் தழுவும் போது கூலிக்குப் பிணந் தூக்குவாரைப் போல மனமும் செய்கையும் வேறுபடுதலால் அவரின்பம் பொய் யின்பமென்று தெளிவாகக் கண்டுகொள்க. இதனால் மனமும் செய்கையும் இருவருக்கும் ஒத்திருத்தலே இன்பமாகு மென்பது அறியப்பட்டது. இக் கருத்துப் பற்றியே "காதலிருவர் கருத்தொருமித்—தாதரவு, பட்டதே யின்பம்" என்று ஔவையாருளிச் செய்தனர்.

௪. பொருட் பொருளார் புன்னலந் தோயா ரருட்பொருள்
ஆயு மறிவி னவர்.

(914)

(இ-ம்) இன்பமாகிய பொருளை யிகழ்ந்து பொருளாகிய பொருளையே விரும்பும் பொது மாதருடைய அற்ப சுகத்தை அருளோடுகூடிய அறத்தை ஆராய்ந்து செய்யும் அறிவினையுடையார் மனத்தினாலும் தீண்டமாட்டார் என்ப தாம். ஏனென்றால், காமமயக்கம் மிகுதிப்பட்டவருக்கு அறம் (தருமம்) செய்ய முடியாமல் மனங்கெட்டுப்போமாதலாலென்க. இக்கருத்துப் பற்றியே "காமத்தா லிந்திரன் கருத் தழிந்தனன்" என்றார் பிறரும்.

௫. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர்.

(915)

(இ-ம்) முற்பிறப்பிற் செய்த நல்வினைகளால் மதிநலத்தினையுடைய மாட்சிமைப்பட்ட செயற்கை யறிவினையுடையார் பொருள் கொடுப்பார்க் கெல் லாம் பொதுவாயிரு க்கிற ஆசையினையுடைய பெண்களது புல்லிய (அற்பமா கிய) இன்பத்தைத் தீண்டமாட்டா ரென்பதாம். செயற்கை யறிவு—கல்வி யறிவு. இவ்வறிவு பூருவபுண்ணிய வசத்தாலாகிய மதிநலமென்னும் இயற்கை யறிவில்லார்க்குப் பயன் படாதென்பது இத்திருக்குறளாற் கண்டு கொள்க. மதிநலம்—இயற்கை யறிவு.

சு. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

(916) உஎசு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) ஆடல், பாடல், அழகு என்னும் மூன்றினாலுங் களிப்புற்றுச் செருக்கு (கருவம்) அடைந்து தம்முடைய புல்லிய நலத்தைப் பொருள் கொடுப்பாரெல்லாரிடத்தும் பரப்பும் (நிறைக்கும்) விலைமாதர் தோள்களை அறிவு ஒழுக்கங்களாலாகிய தம் புகழை உலகத்தில் பாரிப்பார் (நிறைப்பார்) ஆகிய உயர்ந்தோர் தொடமாட்டார் என்பதாம்.

எ. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள்.

(917)

(இ-ம்) நெஞ்சினாற் பொருளையும் அதனாலாகிய ஆடை அணி முதலிய வைகளையும் ஆசைப்பட்டு அவை கொடுப்பானை அப்பொருள்கள் காரணமாக மெய்யினால் தழுவும் பொது மாதர் தோள்களை அறிவு ஒழுக்க முதலியவற்றால் நிறையும் நெஞ்சம் (மனம்) இல்லாதவர் தழுவுவர் என்பதாம். எனவே, அறிவொழுக்க மிகுந்தவர் தழுவமாட்டாரென்று கண்டுகொள்க. மெய்-சரீரம்.

அ. ஆயும் அறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

(918)

(இ-ம்) அழகும் சொல்லும் செயலுமாகிய மூன்றால் வஞ்சித்தலையுடைய பொது மாதர் கலந்து தழுவுதலானது ஆராயப்பட்ட அறிவில்லாதவர்க்குக் காம நெறியால் உயிரை வாங்கும் வஞ்சகமுடைய ஒரு தெய்வப்பெண் பற்றிப் பிடித்தல் போலும் என்பதாம். அஃதாவது, முன் இன்பம் போலத் தோன்றிப் பின் துன்பந்தருவது என்பது.

கூ. வரைவிலா மாணி ழையார் மென்றோள்
புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

(919)

(இ-ம்) உயர்ந்தோரிழிந்தோரென்று நினையாது விலைகொடுப்பாரெல்லாரையுந் தழுவும் வேசையர் மெல்லிய தோள்களானவை அவ்வேசையர் குற்றத்தையறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புகுந்து அழுந்தும் நரகம் என்பதாம். பொது மாதரின்பத்தை அநுபவிப்பவர் நரகத்துக்குச் சமமான வியாதித் துன்பத்தையும் வறுமைத் துன்பத்தையும் பிறர் அவமதிக்கப்படும் துன்பத்தையும் இன்னும் வேறு துன்பங்களையும் அநுபவிப்பா ரென்பதெல்லாம் அடங்க "பூரியர்கள் ஆழும் அளறு" என்றருளிச் செய்தனர்.

கㅇ. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.
(920)

கூ௱உ-ஆம் அதி.—கள்ளுண்ணாமை.
உ௭கூ

(இ-ம்) ஒருவனோடு சேரும்போது பொருளால் விருப்பும், செய்கை யால் வெறுப்பும் ஆகிய பிளவுபட்ட மனத்தையுடைய பொது மாதரும், கள் ளும், சூதும் ஆகிய மூன்றும் தமக்குரிய செல்வத்தைப் போக்கலுற்றார்க்கு நட்புப்பொருள்கள் என்பதாம். இம்மூன்றாலும் செல்வத்தை யிழந்தவர் எண்ணில்லாதவர் ஆதலா லறிவுடையார் இம்மூன்றையும் சொப்பனத்திலும் நினைக்கமாட்டார். திரு என்பதற்குத் திருமகள் (இலக்குமி) என்றும் பொருள் கொள்ளலாம்.

---

## 93-ஆம் அதி.—கள்ளுண்ணாமை.

அஃதாவது, மேற்கூறிய வேசையரோடு ஒத்து அறிவைக் கெடுக்குங் கள்ளைக் குடியாதிருத்தல்.

க. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார். (921)

(இ-ம்) கள்ளினிடத்து ஆசை கொண்டிருக்கும் அரசரானவர் பொருள் படை முதலியவற்றால் எவ்வளவு பெரியராயிருந்தாலும் எந்தக் காலத்திலும் அவர் பகைவர் அவருக்குப் பயப்படமாட்டார்; அதுவுமல்லாமல் அவ்வரசர் தம்முன்னோரால் சம்பாதித்த புகழையு மிழந்துவிடுவர் என்பதாம். எப்படியென்றால், இவ்வரசன் குடிகாரனானதால் அறிவினாலே செய்யத்தக்கவைகளைச் செய்யாமல் மதிமயங்கிப் போவான். இவனை இலேசாக நாம் வென்றுவிடலாமென்னும் அவமதிப்பால் பகைவர் பயப்படமாட்டாரென்றும், குடிகாரனென்று தெரிந்தவரெல்லாரும் இகழப்படுதலால் தம்முன்னோர் புகழுக்குரியவனென்று ஒருவரும் பேசுதற்கு இடமில்லாமற் போவானென்றுங் கண்டுகொள்க. படை - சேனை. அஃதாவது தேர் யானை குதிரை காலாளாகிய நால்வகைக் கூட்டம்.

உ. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார். (922)

(இ-ம்) அறிவுடையாரனவர்

அவ்வறிவையிழத்தற்குக் காரணமாகிய கள்ளையுண்ணுதிருக்கவேண்டும். உண்ணவேண்டுமானல் கள்ளுண்ணுத மிருகங்களோடும் சமமாகவைத்தும் எண்ணக் கூடாத நிலையடைந்து சான்றோ ரால் நன்குமதித்தலை வேண்டார்தவர் உண்ணக்கடவர் என்பதாம். எனவே, கள்ளுண்பவர் அக்கள்ளையுண்ணுத மிருகங்களுக்குந் தாழ்ந்தவரென்பது கருத்து. சான்றோர்-எல்லாவற்றிலும் உயர்ந்தோர்.

உ௬௦ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

ந. ஈன்றாள் முகத்தேயும் இன்னுதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.
(923)

(இ-ம்) என்ன செய்தாலும் மகிழ்ச்சியடையுந் தாய்முன்பானுலும் தன்மகன் கள்ளைக்குடித்துக் களிப்படைந்து நிற்றல் அவளுக்கு வெறுப்பை யுண்டாக்குமானல் எந்தக் குற்றத்தையும் பொறுக்கமாட்டாத சான்றோர் (மேலோர்) முன் கள்ளுண்டு ஒருவன் களிப்படைந்து நின்றல் அவருக்குத் துன்பமே யுண்டாக்குமென்பது சொல்லவும் வேண்டுமோ என்பதாம்.

௪. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. (924)

(இ-ம்) கள்ளுக்குடித்தலென்னும் (எல்லாரும்) இகழ்ச்சி செய்யும் பெரிய குற்றத்தினை யுடையவருக்குமுன்னே மானமென்னும் நல்ல உயர்ந்த பெண்ணானவள் நிற்கமாட்டாள் என்பதாம். மானங்கெட வந்த இடத்து அறிவுடையோர் உயிரை விட்டுவிடுவரென்று இவவாசிரியர் மானம் என்னும் அதிகாரத்துட் கூறுதலால் மானங் கெட்டுப்போகக் கள்ளைக்குடிப்பவர் உயிர்ப் பிணங்களென்பது கருத்து.

௫. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல். (925)

(இ-ம்) ஒருவன் மெய்ம்மறந்து திரிதலை

விலைப்பொருளைக் கொடுத்துக் கள்ளினால் தான்

வாங்குதலானது அவன் முன்செய்த பழவினைப் பய ஞகிய செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாதிருத்தலைத் தனக்குக் காரண மாக உடையது என்பதாம். அறிவுடையார் விலைகொடுத்து நல்லதைவிட்டுத் தீயதை வாங்குதல் அவர் முன்செய்த பழவினைப்பயனுதலா லிவ்வாறு கூறி யருளினர். இதனல் கள்ளைக்குடித்தலானது குடித்தவனை நல்வினைப் பய ஞகிய இன்பத்தை யநுபவிக்கவொட்டாமல் தடுக்குமென்பது யூகித்தறிந்து கொள்க. மெய்ம்மறந்து திரிதல்-புத்தி கெட்டலைதல்.

சு. துஞ்சினர் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (926)

(இ-ம்) எந்தக்காலத்திலும் உறங்குகின்றவரும் ...ர்வரே; எப்படியென்றால், இவ்விருவரும் அந்தக்

செத்தவரும் சமான ... யிழ்த்தலர்லென்க.
காலத்தில் அறிவை ... மூடையவரே யாவர்.

அதுபோல, நஞ்சுண்பவரும் கள்ளுண்பவரும் சமான
இம்மட்டிலே நில்லாது நஞ்சைப்போல மிகுந்த குடி

௯௩-ஆம் அதி.—கள்ளுண்ணுமை.
௨௩௧

யால் கள்ளானது ஒருகாலத்துக் கொன்றாலும் கொல்லும் ஆதலால் இவ்விரு வரையும் வேறுபிரித்துக் கூறியருளினர். இவ்விருவர்-துஞ்சினர், செத்தார். நஞ்சுண்பார்-கள்ளுண்பவர்.

எ. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர். (927)

(இ-ம்) கள்ளை இரகசியமாக மறைந்திருந்து உண்டு அக்களிப்பால் (மகிழ்ச்சியால்) தம் அறிவு தளர்ச்சியடைந்து சோர்வார், உள்ளூரில் வாழ்பவ ரால், இவர் இப்படி மயங்கித் திரிவதற்குக் காரணமென்னவென்று விசாரித்து ஆராய் ந்து தெரிந்து, எந்தக்காலத்தும் அவமதித்துச் சிரிக்கப்படுவர் என்பதாம்.

அ. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும். (928)

(இ-ம்) இரகசியமாக மறைந்திருந்து கள்ளுண்டு நான் கள்ளுண்டறியே னென்று கள்ளுண்ணாத காலத்தில் தன்னை நன்குமதித்துப் பேசுதலை விட்டு விடவேண்டும்; விடாவிட்டால் பின் கள்ளுண்டகாலத்தில் பிறரறிந்தால் இழிவாமென்று மனத்திலே மறைத்து வைத்த குற்றமாகிய பொய்யும் முன்னை யினுமிகுந்து வெளிப்படும் என்பதாம். பொய்யும் வெளிப்படுமெனவே கள் ளுண்டதும் வெளிப்படுமென்பது சொல்லாமலே தெரியும்.

௯. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்து ரீஇ யற்று .
(929)

(இ-ம்) கள்ளுண்டு மகிழ்ச்சியடைந்தவனொருவனை இச்செய்கை கூடா
தென்று அதற்குரிய காரணமெடுத்துக் காட்டித் தெளிவித்தலானது நீரி
னுள்ளே மூழ்கினானொருவனை விளக்குக் கொண்டு தேடினாற் போலுமென்பதாம். அஃதாவது, விளக்கு நீரினுள்ளே செல்லாமல் அவிதல்போலக் கள்
ளுண்டவன் மனத்தில் இதோபதேசம் செல்லாமற் கெடுமென்பதாம்.

௧0. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு.
(930)

(இ-ம்) எப்போதுங் கள்ளுண்ணும் ஒருவன் கள்ளுண்ணாதிருக்கும்
ஒரு சமையத்தில் கள்ளுண்ட ஒருவன் தன் வசமழிந்து மயங்கிப் பிறர் சிரிக்க
நிற்பதைக் காணுமிடத்துத் தானுங் கள்ளுண்டு, இவ்வாறு மயங்கிப் பிறர்
சிரிக்க நிற்றலை நினைக்கமாட்டானோ என்பதாம். எனவே, நினைத்தால் தானும்

பிறர் இகழ்ந்து சிரிக்கப்படுதல் பற்றிக் கள்ளுண்ணமாட்டானென்பது கருத்து.

---

86

உ௬உ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

## 94-ஆம் அதி.—சூது.

அஃதாவது, கள்ளுண்டல் போல அறம் பொருளின்பங்களுக்கு இடையீடாகிய சூதாடலும் நோய்கொள்ளலுங் கூறத்தொடங்கி முதலில் சூதாடலால் வருங்கேடு கூறுதல். இடையீடு—இடையூறு.

க. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. (931)

(இ-ம்) சூதாடுதலில் வல்லனாயிருந்து வெற்றியடைந்தாலும் அது கேட்டை யுண்டுபண்ணுமாதலால்

அந்தத் தொழிலை விட்டுவிடவேண்டும். சூதாடி வெற்றியால் கிடைத்த பொருளை யநுபவித்தலானது இரையால் மூடப்பட்ட தூண்டிலிரும்பினை மீன் விழுங்கினாற் போலு மென்பதாம். எப்படியென்றால், இரையாகிய மாமிசத்தாற் பொதிந்த தூண்டி லிரும்பினை இரையென்று உண்டு மீன் இறத்தல்போலச் சூதாட்டத்தால் வந்த பொருளை பொருள்போல அநுபவிப்பவனும் கெடுவனென்க.

நல்வழியால்வந்த

உ. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு.
(932)

(இ-ம்) சூதாடுதலால் முதலிலே ஒரு பொருளை இலாபமாகப் பெற்றுப் பின்பு நூறு பொருளைத் தோற்றுவிடும் சூதாடிகளுக்கும் அறம் பொருள் இன்பமாகிய நன்மையடைந்துவாழுமார்க்கம் உண்டாகுமோ?உண்டாகமாட்டா தென்பதாம். சூதர்க்குமென்ற உம்மையால் இவர்கள் அறிவீனர்களென்பது சொல்லாமலே விளங்கும்.

ங. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்

போலுய்ப் புறமே படும்.

(933)

(இ-ம்) உருளுங்கின்ற கவற்றினுல் (சூதாடுகருவியினுல்) உண்டாகிய இலாபப் பொருளைப் பெருமையாக இடைவிடாமல் எடுத்துச் சொல்லிக் கொண்டு அரசன் சூதாடுவானுனுல் அவன் முன்சம்பாதித்து வைத்த பொருளும் இனிச் சம்பாதிக்கப்படும் பொருளும் அவனைவிட்டுப் போய் அவன்பகைவரிடத்தே தங்குமென்பதாம். எப்படியென்ருல், சூதாடுகிற அரசன் தன் பொருள் படை முதலியவற்றைக் காக்குங் கருதில்லாமற் சூதாட்டத்திலே காலத்தைப் போக்குவன். அதனுல் பொருளுங்குறைந்து படை (சேனை)யுங் குறைந்து விடும். அச்சமையம் பார்த்து அவன் பகைவர் அவன்மேற் படையெடுத்து வந்து எல்லாச் செல்வத்தையுங் கவர்ந்து கொள்வரென்க.

௯௩௪-ஆம் அதி.—சூது.

உ-ஷு

௪. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(934)

(இ-ம்) தன்னை விரும்பினவர்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றினையும் உண்டாக்கி, உள்ள புகழையுங் கெடுக்கும் சூதுபோலத் தரித்திரத்தைக் கொடுக்கவல்லது வேறொன்றில்லை என்பதாம். இதற்குச் சாட்சியாக நளச்சக்கரவர்த்தி கதையொன்றே போதும்.

ரு. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
யிவறியா ரில்லாகி யார்.
(935)

(இ-ம்) முற்காலத்து அளவிடக்கூடாத பெருஞ் செல்வராயிருந்து பின்னர்த் தரித்திரத்தையடைந்தவர், சூதினையும் சூதாடும் இடத்தினையும் சூதாடற்கு வேண்டுங் கைத்தொழிலினையும் பெரிதாகக் கொண்டு கைவிடாமற் காலம் போக்கிய அரசரென்பதாம். முற்காலம்-சூதாட்டத்தைத் தொடங்குதற்கு முந்திய காலம். சூதாட்டத்திற்கு வேண்டுந்தொழில்-பொய், களவு, வஞ்சக முதலியவை.

சா. அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடி யால் மூடப்பட் டார்.
(936)

(இ-ம்) சூதென்று சொல்லப்படும் மூதேவியால் பொதியப்பட்டவர் தம் செல்வத்தை யிழந்து விடுவர் ஆதலால் இம்மையில் தம் வயிறார உண்பதற்கு உணவு கிடைக்கவும் பெறமாட்டார்; அம்மட்டோ! மறுமையில் நரகத் துன்பத்திலுங் கிடந்து வருந்துவர் என்பதாம். உணவு கிடைத்தலே இல்லாத போது மற்றைச் சுகங்களிலொன்றுங்

கிடைப்பதில்லை யென்பது சொல்லா மலே விளங்கும். இதனல் சூதாடுவோர் இம்மைப்பயனும் மறுமைப்பயனு மடையமாட்டா ரென்பது கருத்து.

எ. பழகிய செல்வமும் பண்பும் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.
(937)

(இ-ம்) அறம் பொருளின்பங்கள் ஆக்குதற்குள்ள காலம் அரசனுக்குச் சூதாடுகின்ற கழகத்தில் (இடத்தில்) வீணுகக் கழியுமானல் அக்கழிவானது தம்முன்னோரால் சம்பாதித்து வைத்திருந்த செல்வத்தினையும் தன்னுடைய நற்குணங்களையும் கெடுத்துவிடும் என்பதாம். தன் முன்னோர் சம்பாதித்த செல்வத்தினையுங் கெடுக்குமென்றதனல் அவன் சம்பாதித்த பொருளையும் கெடுக்குமென்பது சொல்லாமலே யறிந்துகொள்ளலாம்.

உ.அகூ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

அ. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ
யருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது.
(938)

(இ-ம்) சூதானது தன்னைப் பழகிப் படித்துக்கொண்டவனது கைப் பொருளைக் கெடுத்துப் பொய்யையுஞ் சொல்லச் செய்வித்து மனத்திலுண்டா குஞ் சீவகாருணியத்தையுங் கெடுத்து இம்மை மறுமைப்பயனாகிய இன்பங்களை யநுபவிக்க வொட்டாமல் துன்பத்திலே யழுந்திக்கிடக்கச் செய்துவிடும் என் பதாம்.
அழுந்திக்கிடத்தல்—ஒருகாலத்திலும் மீளாமற் கிடத்தல்.

௯. உடைசெல்வம் ஊணொளி கல்வியென் றைந்தும்
அடையாவாம் ஆயங் கொளின் .
(939)
(இ-ம்) அரசனானவன் சூதாடுதலைத் தனக்குப் பொழுது போக்கும் விநோதத் தொழிலாகவிரும்புவானானால் அவனைப் புகழுங் கல்வியும் செல்வமும் உணவும் ஆடையுமாகிய ஐந்து பொருளும் சேரமாட்டா என்பதாம். எப்படி யென்றால், இவன் முன்னோரெல்லாம் யோக்கியர், இவன் சூதாடி யென்று உலகத்தாரிகழ்தலால் புகழும், படித்திருந்தாலும் செய்யத் தகாதது செய்து அறிவு கெடுதலால் கல்வியும், உள்ளதைக் காப்பாற்ற மாட்டாமையாற் பொருளும், அப்பொருளொழிந்து போகவே உணவும், ஆடையும் அவனைவிட்டு நீங்கு மென்பது கண்டுகொள்க. இவ்வாறு வரிசையாக ஒன்றன்பின்ஒன்றாக்

கெட்டுவிடுதற்குக் காரணமாகிய சூதாடுதலை அறிவாலுயர்ந்தவர் கைக்கொள்ள மாட்டார். இக்கருத்தால் ' 'அழகு பேரறி வாண்மையென் றறிந்தவ ரறத்தொ ழில் புரியாமல், கழக மாடவும் பெறுவரோ'' என்றார் பிறரும் (வில்லிபாரதம் சூது போர்ச் சருக்கம்-66)

கo. இழத்தொறூஉங் காதலிக்கும் சூதேபோற் றுன்பம்
உழத்தொறூஉங் காதற் றுயிர்.
(940)

(இ-ம்) சூதாடுதலால் இம்மைப் பயனும் மறுமைப் பயனும் இழக்குந் தோறும் அச்சூதின் மேல் விருப்பங்கொள்ளும் சூதாடியைப்போல உடம்பால் மூவகைத் துன்பங்களை அநுபவிக்குந்தோறும் அவ் வுடம்பினிடத்து ஆசை யுடையது உயிரென்பதாம். இம்மைப் பயனு மறுமைப் பயனுமிழத்தற்குக் காரணமாகிய சூதினைத் தெரிந்திருந்தும் கைவிடாமல் பின்னும் அச்சூதினை விரும்புதல் எதுபோலுமென்றால் , மூவகைத் துன்பமும் அடைதற்குக் காரண மாகிய சரீரத்தினைத் தெரிந்திருந்தும் அச்சரீரத்தினை விட்டுநீங்காமல் பின் னும் ஆசைவைத்து அச்சரீரத்திலே குடியிருக்கும் உயிர்போலு மென்று பொருளை விரித்துக் கண்டுகொள்க. இவவிரண்டும் அறியாமை யுடையதென் - கூ௫-ஆம்

பது இதனால் விளங்கியது. இம்மைப்பயன்—அறம் பொருள் இன்பம். மறுமைப்பயன்—இந்திரன் முதலியோர் பதவி யநுபவித்தல். மூவகைத் துன்பம்—இவ்விடத்து காமம், வெகுளி, மயக்கமென்னும் மூன்றால் வருந் துன்பம்.

## 95-ஆம் அதி.—மருந்து.

அஃதாவது, மனிதருக்குப் பழவினையால் வரும் வாத முதலிய நோய்கள் அம்மனிதர் ஒழிந்தால்மட்டும் நீங்கும். அதுவல்லாமல் உணவு செயல்களால் வரும் அந்நோய்கள் மருந்தினால் நீங்கும் ஆதலால் அம்மருந்தின் திறங்கூறல்.

க. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று. (941)

(இ-ம்) ஒருவன் உணவுந் தொழில்களுந் தன் சக்திக்குத் தக்கபடி கொள்ளாமல் மிகுந்தாலும் குறைந்தாலும் வயித்திய நூலுணர்ந்தாரால் எண்ணப்பட்ட வாதம் பித்தம் சிலேட்டுமமாகிய மூன்றும் அவனுக்குத் துன்பஞ் செய்யும் என்பதாம். துன்பம்-வியாதியால் வரும்

வருத்தம். தொழில்-புறத்தே
யுண்டாகும் செயல்கள். அவையாவன-காமமநுபவித்தல்,
நடத்தல் முதலியவைகளாம்.
உறங்கல், விழித்தல்,

உ. மருந்தென வேண்டாவாம் யாக்கைக்
கருந்திய
தற்றது போற்றி யுணின்.
(942)

(இ-ம்) ஒருவன் முன் உண்ணப்பட்ட உணவு சீரணித்ததைத் தன் னிடத்துத் தோன்றும் அடையாளங்களாலறிந்து பின் உண்பானானல் அவனுடைய உடம்புக்கு மருந்தென வேறொன்று வேண்டாவாம். எனவே, பசித்துச் சாப்பிடுகிறவனுக்கு வியாதியில்லையென்பது கருத்து. அடையாளங்களாவன-உடம்பு இலேசாயிருத்தல், தேகத்தின் தூய்மை, கைகால் அந்தக் கரணங்கள் தங்கள் தங்கள் தொழிற்குச் சுதந்திரமாயிருத்தல் பசி மிகுதல் முதலியவைகள்.

ந. அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.
(943)
(இ-ம்) முன்னுண்ணப்பட்ட உணவு சமித்தால்

பின்னுண்ணப்பட்ட உணவுகளையும் சமிக்கும் அளவறிந்து உண்ணல்வேண்டும். மிகவும் பலவித உஅரு



மாகிய பல சரீரங்களை நீங்கிப் பெறுதற்கரிய மனித சரீரத்தைப் பெற்றவன் நெடுங்கால மச்சரீரத்தைக்கொண்டு அறம் பொருள் இன்பம்இடையூறில்லாமல் நடைபெறச் செய்யும் வழி அதுவாகலாலென்பதாம். நடைபெறச் செய்தல். நாளுக்குநாள் விருத்தியடையச் செய்தல். அதுவென்பது அச்சரீரம்.

ச. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

(944)

(இ-ம்) முன்னுண்ட உணவு முழுதும் சமித்தது அறிந்து பின் மிகப் பசித்து உண்ணும்போது மாறுபாடில்லாத உணவுகளை உறுதியாகத் தெரிந்தெடுத்து உண்ணவேண்டுமென்பதாம். இதனால், மிகப்பசியாமல் இளம்பசி வந்தவுடன் அவசரப்பட்டு உண்ணலாகாதென்பதும் , காலத்துக்கு ஏற்றபடி குளிர்காலத்தில் வெப்பமுள்ளதும், வெயிற்காலத்தில் குளிர்ச்சியுள்ளதுமாகிய உணவுகளை உண்ணுமல் வாத பித்த சிலேட்டுமங்களாகிய மூன்றுக்கு மாறு பட்ட உணவுகளை உண்ணலாகாதென்பதும் கண்டுகொள்க. உறுதியாகத்

தெரிதலாவது, தேனும் நெய்யும் சமமாகக் கலந்தால் நஞ்சாதல் போலப் பதார்த் தங்கள் ஒன்றோடொன்று கலப்புடைமையால் உண்டாகும் தோஷங்களை யுடைய உணவுகளை ஆராய்ந்து காணுதல். இங்கே கூறிய முறைப்படி யுண்ணுமல் மனம்போன போக்கிலே சென்று கிடைத்த உணவுகளையெல்லாம் உண்டால் வியாதியும் மரணமும் உண்டாகும்.

ரு. மாறுபா டில்லாத உண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு.
(945)

(இ-ம்) மேற்சொல்லியபடி காலத்தால் மாறுபாடில்லாவிடத்தும் வாத பித்த சிலேட்டுமங்களால் மாறுபாடில்லாததும் பதார்த்தங்கள் ஒன்றோடொன்று கலப்பால் மாறுபாடில்லாததுமாகிய உணவுகளை ஆசையால் அளவுக்கு மிஞ்சியுண்ணுமல் வேண்டிய அளவு வியாதி வாராத விதமாக உண்டால், அப்படியுண்ணும் உயிர்க்கு நோய்களால் துன்பம் உண்டாகாது என்பதாம். எனவே, வேண்டிய அளவினுஞ் சிறிது குறைத்து உண்டால் நல்லதென்பது நன்கு கவனிப்பார்க்குத் தெரியும்.

சு. இழிவறிந் துண்பான்க ணின்பம்போல் நிற்குங்
கழிபே ரிரையான்க ணோய்.
(946)

(இ-ம்) வேண்டிய அளவினும் சிறிது குறைத்துண்டால் வருஞ் சுகத் தைத்தெரிந்து அவ்வாறு உண்பவனிடத்து நீங்காது நிற்கும் இன்பம்போல வேண்டிய அளவுக்கு மிகவுமதிகமாக இரை (உணவு) எடுப்பவனிடத்து

## ௬௫-ஆம் அதி.—மருந்து.

உ ஆுள்

நோயால் வருந் துன்பம் நீங்காது நிற்கும் என்பதாம். அளவுக்கு மிஞ்சிச் சாப்பிடுகிறவன் மனிதனேயானாலும் மிருகமாதலால் அவன் உணவை இரை யென்று நாயனாருளிச்செய்தனர். இன்பமாவது-வாத பித்த சிலேட்டும மாகிய மூன்றுந் தந்நிலையில் நிற்க மனம் வாக்குக் காயங்கள் அவன் வசப்பட்டு நிற்றலும் அதனால் அறம் பொருள் இன்பம் அடைதலுமேயாம்.

எ. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.

(947)

(இ-ம்) தன் சரீர நிலைமையும் அதற்கேற்ற உணவும் உண்ணவேண்டிய காலமும் ஆராய்ந்து யோசியாமல் கிடைத்த உணவைக் கிடைத்த காலத்தில் தன்னுடைய உதராக்கினி

(வயிற்றுத்தீ) சமிக்கச்செய்யும் அளவு தெரியாமல் அளவுக்குமிஞ்சி ஒருவன் உண்பானுனல் அவனிடத்து நோய்களு ம் அள விலலாமல் உண்டாகி மேலும்மேலும் வளரும் என்பதாம்.

அ. நோய்நாடி நோய்முதல் நாடி யது தணிக்கும
வாய்நாடி வாய்ப்பச் செயல் .
(948)
(இ-ம்) வயித்தியனுனவன் நோயாளியிடத்து உண்டாயிருக்கும் வியா தியை அடையாளங்களால் இன்னதென்று தெரிந்து, அதன்பின் அந்நோய் வருதற்குக் காரணங்களைக் கேட்டறிந்து, அதன்பின் அந்நோயைத் தீர்க்கும் உபாயத்தினை யாராய்ந்து, காலத்துக்கும் இடத்துக்குந் தக்கவாறு பழைய வயித்தியர்கள் செய்துவரும் முறையி லொன்றுந்தவறுமல் மருந்து கொடுத்து உதவல் வேண்டும் என்பதாம். காரணம்-உண்வும் செயலும் என முற்கூறிய இரண்டுமோம். உபாயமாவன்-உள்ளே மருந்து கொடுத்தலைத்தவிர இரத்தத் தைச் சுத்திசெய்தல் அறுத்தல் சுடுதல் முதலிய பலவாம்.

கூ. உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

(949)

(இ-ம்) ஆயுள் வேதமாகிய வயித்திய சாத்திரங்களைக் கற்ற மருத்துவன் (வயித்தியனானவன்) மேலே சொல்லிய உபாயத்தினைச் செய்யுமிடத்து நோயாளியின் சாதி, பருவம், பலம், வேதனைகளின் அளவும், இவ்வியாதி தீர்க்கத்தக்கது, தீர்க்கததகாதது, பெரும்பாலும் தீர்க்கத்தக்கதுஞ் சிறு பான்மை தீர்க்கத்தகாததும் என்னு மூவகை நிலையிலிருக்கும் வியாதியின் வன்மை மேன்மைகளி னளவும் வயித்தியஞ் செய்தற்கேற்ற காலமும் மேற் சொல்லிய நூல்வழியால் ஆராய் ந்து யோசித்து எல்லாவற்றேறும் பொருந்தச் செய்யவேண்டும் என்பதாம்.

உ௩௭ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

கo. உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்

றப்பால்நாற் கூற்றே மருந்து.

(950)

(இ-ம்) வியாதிக்கு மருந்தாவது, அவ்வியாதியை யடைந்தவன், அவ் வியாதியைத் தீர்க்கும் வயித்தியன், அவ்வயித்தியன் வியாதி தீர்த்தற்குக் கருவியாகிய மருந்து, அம்மருந்தைத் தவறாமல் பக்கத்திற்சென்று பக்குவ மாகச் செய்வான் என்றுசொல்லப்பட்ட அப்பகுப்பாவது-நான்கு பகுப்புடைய நான்குதிறத்தையுடையது என்பதாம். இவற்றுள், வியாதியடைந்தவன் பகுப்பு நான்காவன-பொருளுடைமை, வயித்தியன் சொல்வழி நிற்றல், நோய் நிலை

மையைச்சொல்லுதல், மருந்துத் துன்பத்தைப் பொறுத்தல் என்னும் இவை கள். வயித்தியன்பகுப்பு நான்காவன-வியாதியைக்கண்டு பயப்படாதிருத்தல், நல்லாசிரியனிடத்து வயித்திய சாத்திரங் கற்றுத்தெளிந்த புத்திநுட்பம், பல காலும் வியாதியைத் தீர்த்துவரும் பழக்கம், மனம் வாக்குக் காயம் பரிசுத்தமா யிருத்தலென்னும் இவைகள். மருந்தின் பகுப்பு நான்காவன-பல வியாதிக் கும் பொருத்தமாயிருத்தல், சுவை வீரியம் உண்டாக்கும் வலிமையால் மேன்மையடைதல், இலேசாகக் கிடைத்தல், எல்லாச் சாதியாருக்கும் பொருத்தமாயிருத்தல் என்னும் இவைகள். செய்வான் பகுப்பு நான்காவன-வியாதியாளனிடத்து அன்பு வைத்தல், மனம் வாக்குக் காயங்கள் பரிசுத்தமா யிருத்தல், மருத்துவன் சொன்னபடியே செய்தலின் வலிமை, அறிவுடைமை என்னும் இவைகள். இவையெல்லாங் கூடியவழி வியாதி மாதலால் இவைகளு மருந்தென்று அருளிச்செய்தனர்.

இலேசிலே தீரு

அங்க இயல் முற்றிற்று.

---

# ஒழிபியல்.

அஃதாவது, மேலே சொல்லப்பட்ட அரசியலிலும் அங்க இயலிலும்
அடங்காது நீங்கியவைகளின் இயல்பு. இது
தொடங்கி முதலில் குடிமை கூறுகின்றார்.

பதின்மூன்றதிகாரங்களாற் கூறத்

## 96-ஆம் அதி.—குடிமை.

அஃதாவது, உயர்ந்தகுடியிற் பிறந்தவரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்திலுமுள்ளது. நால்வகை வருணம்-பிராமணகுலம், க்ஷத்திரியகுலம், வைசியகுலம், சூத்திரகுலம்.

க. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.
(951)

(இ-ம்) கருத்தும் சொல்லும் செய்கையும் ஒன்றுக்கொன்று மாறுபாடில்லாத செம்மையும், பழிபாவங்களுக்கு அஞ்சுதலாகிய நாணும் ஆகிய இரண்டும் சேர நல்ல குடியிற் பிறந்தாரிடத்தே யியற்கையாகவுள்ளனவல்லாமல், மற்றவரிடத்து ஒருவர் கற்பித்தாலும் உண்டாக மாட்டா என்பதாம். நல்லகுடி-உயர்ந்தகுடி. மற்றவர்-இழுக்குடைய குடியிற் பிறந்தவர். இழுக்கு- குற்றம்.

உ. ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார்.
(952)

(இ-ம்) உயர்ந்த குடியினிடத்துப் பிறந்தவர் ஒழுக்கமும், மெய்ம்மையும், பழி பாவங்கட்கு அஞ்சுதலாகிய நாணமும் வழுவாதிருத்தற்கு நூல்களைப் படித்தறிய வேண்டுவதில்லை குடிப்பிறப்பின் இயற்கையால் தாமே வழுவாதிருப்பர் என்பதாம். வழுவாதிருத்தல்—குற்றப்படாதிருத்தல்.

ங. நகையீகை யின்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.
(953)

(இ-ம்) எந்தக்காலத்தும் வேறுபாடில்லாத உயர்ந்த குடியிற் பிறந்தவர்க்கு யாசகரைக் கண்டால் முகமலாச்சியும், உள்ளதை ஒளியாமற் கொடுத்தலும், இனியசொற் சொல்லுதலும், இவர் யாசிக்கவந்தாரென்று இகழ்ச்சி செய்யாமையும் ஆகிய நான்கும் இயற்கையாக உரிய கூறுபாடு என்பதாம். கூறுபாடு—பகுப்பு.

ச. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.
(954)

(இ-ம்) அடுக்கடுக்காகப் பலவிதமாகுங் கோடியளவினதாகிய செல்வம் பெற்றாராயினும் நல்ல குடியிற் பிறந்தவர் இவ்வளவு செல்வமுடைய நம்மை யாரென்னசெய்ய முடியுமென்று இறுமாந்து தம் மொழுக்கங் குறைபடுந் தொழில்களைச் செய்யமாட்டாரென்பதாம். அடுக்கு—வரிசை.

ரு. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.



(955)

(இ-ம்) பரம்பரையாக (தொன்று தொட்டு) வரும் உயர்குடியினி டத்துப் பிறந்தவர் தாம் வறியவர்க்குக் கொடுக்கும் பொருள் குறைபட்ட காலத்தும் இயன்ற மட்டுமாவது கொடுக்குங் குணத்தை விட்டு நீங்கார் என் பதாம். தொன்று தொட்டுவருதல்—படைப்புக் காலத்திலிருந்தே மேன்மை யடைந்து வருதல். இக்கருத்தால் "நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ராஞ லும், இல்லையென மாட்டா ரிசைந்து" என்று ஔவையாருங் கூறியருளினர். (நல்வழி 9)

௬. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(956) (இ-ம்) வசையில்லாமல் வருகின்ற தம்குடியின் பழைமையாகிய முறையோடு ஒத்து நாம் வாழவேண்டு மென்று எண்ணி அவ்விதம் வாழ்கின்றவர் வறுமையடைந்த காலத்தும் வஞ்சனையைப் பொருந்திச் செய்யத்தகாத செயல்களைச் செய்யமாட்டார் என்பதாம். செய்யத்தகாத செயல்கள்—நூல்களால் விலக்கப்பட்ட செய்கைகள்.

எ. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.
(957)

(இ-ம்) உயர்ந்த குடியிற் பிறந்தாரிடத்து உண்டாகுங் குற்றமானது சிறிதாயிருந்தாலும் ஆகாயத்திற்றோன்றுஞ் சந்திரனிடத்துள்ள மறு (களங்கம்) போல உயர்ந்து (பெரிதாகி) வெளிப்படும் என்பதாம். சிறிய குற்றம் பெரிதாதற்குக் காரணம் குடியினுயர்ச்சியென்று கண்டு கொள்க. சிறிய குடியிற் பிறந்தாரை யெல்லாரு மறியமாட்டாராதலால் அவர் குற்றம் பலரும் அறிதற்கு வெளிப்படாது உள்ளடங்கிவிடும். அதை யொருபொருளாக யாரு மெடுத்துப் பேசவுமாட்டார்.ஏனென்றால், அவர் குடிப்பிறப்பே நன்கு மதிக்கப் படாமையால் என்க.

அ. நலத்தின்கண் ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்கண் ணைய படும்.
(958)

(இ-ம்) நல்ல குலத்திற் பிறந்தவனிடத்து, அன்பில்லாமை காணப் பட்டால் அவனை அந்த நல்ல குலத்திற் பிறந்தவனோ பிறவாதவனோ என்று உலகத்தார் சந்தேகப்படுவர் என்பதாம். அன்பாவது அருளைப்

பெறுவதற்குத் தாயாம். ஆதலால் அவ்வருண்மையான அன்பு நல்ல குலத்திற் பிறந்தவருக்கே உரிமையுடையது என்று கண்டு கொள்க.

## கூள-ஆம் அதி.—மானம்.

உகூக

௬, நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். (959)

(இ-ம்) நல்ல நிலத்தின் தன்மையை அதனிடத்து உண்டாகிய பயிரின் முளை முளைத்தபோதே காண்பிக்கும்; அதுபோல நல்ல குலத்தின் தன்மையை அக்குலத்திற் பிறந்தார் வாயில் நின்று வருஞ் சொல்லானது வந்த உடனே காண்பிக்கும் என்பதாம். இதனால் இன் சொல்லே நல்ல குலத்திற் பிறந்தவருக்கு அடையாளமென்பது கண்டுகொள்க.

௰. நலம்வேண்டின் நாணுடைமை
வேண்டுக யார்க்கும் பணிவு.
வேண்டுங் குலம்வேண்டின் (960)

(இ-ம்) ஒருவன் தனக்குப் புகழ்

புண்ணியங்களாகிய நன்மையை விரும்புவானுனல் பழி பாவங்களுக்குப் பயப்படுதலாகிய நாணுடைமையைக் கைக்கொள்ள வேண்டும். குலனுடைமையை விரும்புவானுனல் தான் பணியப் படுவார் யாவரிடத்தும் தாழ்வுடைமை காட்டி நடக்கவேண்டும் என்பதாம். பணியப்படுவார்-அழகிய சாந்தகுணமுடையராகிய அந்தணர், சான்ருேர், தந்தை, தாய், குருமுதலிய பெரியோர். சான்ருேர்-எல்லாக்குணங்களு நிறைந் தவர். தாழ்வு-மேற்கூறிய உயர்ந்தோரைக் கண்டால் இருக்கை விட்டெழுதல், எதிர் சென்று வரவேற்றல் முதலிய உபசாரங்கள்.

---

## 97-ஆம் அதி.—மானம்.

அஃதாவது, நல்ல குடியிற் பிறந்தவருக்கு உரியனவாகிய குணங்கள் பல வற்றுள் சிறந்த மானமாவது, எந்த நாளும் தன் நிலைமையிற் குறையாதிருத் தலும் குறைவு வந்த இடத்து உயிரைவிட்டுவிடுதலுமாம். தன்னிலையாவது- நீதி நூலிற் கூறிய நல்லொழுக்கம்.

க. இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

(961)

(இ-ம்) இது செய்யாத இடத்துக் காரிய முடியமாட்டாதென்னுஞ் சிறப்பினையுடையனவானாலும் தம் குடிப்பிறப்புக்கு இழிவு வரும் செய்கைகளைச் செய்யாதிருக்க வேண்டும் என்பதாம்.

அச்செய்கைகளாவன-பழிபாவம் பொய் முதலியவைகள். இவைகளைச் செய்தால், தாம் உயிர் பிழைக்கலாமென வந்தவிடத்தும் உயிரிறந்தாலும் தீயவைகளைச் செய்யாதிருத்தலே உயர் உகூஉ **திருக்குறள்**

**மூலமும், தெளிபொருள் வசனமும்.**

குடியிற் பிறந்தார்க்குப் புகழும் புண்ணியமும் ஆதலால் இவ்வாறு கூறியருளினர். இப்படியிருத்தலே மானமென்பது கண்டுகொள்க.

உ. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.
(962)

(இ-ம்) இவ்வுலகத்தில் புகழுடனே மானத்தை நிலைநிறுத்த வேண்டுமென்று நினைப்பவர் இவ்வுலக இன்பத்துக்கு வேண்டிய செல்வத்தை விருத்தி செய்தற்கானாலும் தன் குடிச்சிறப்புக்குப் பொருந்தாத எந்தக் காரியங்களையுஞ் செய்யமாட்டாரென்பதாம்.

குடிப்பிறப்பு-குடியின் பெருமை.

௩. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.
(963)

(இ-ம்) உயர்ந்த குடியிற் பிறந்தார்க்கு நிறைந்த செல்வம் உண்டாகிய இடத்து எல்லாரிடத்தும் பணிவுடைமை வேண்டும். வறுமை வந்த காலத்துப் பணியாதிருத்தல் வேண்டுமென்பதாம்.
பணியாதிருத்தலாவது-செய்கையில் தாழ்வுவராமல் பழைய வுயர்ச்சியினிடத்தே நிற்றல். எப்படியென்றால், செல்வ முள்ள காலத்து அச்செல்வமே உயர்ச்சியைத் தருதலால் பணிவுடைமை யிகழ்ச்சியைத் தரமாட்டாது: அச்செல்வங்கெட்டு வறுமை வந்த காலத்து அவ் வறுமையே யிகழ்ச்சியைத் தருதலால் பணிவுடைமை உயர்ச்சியைத் தர மாட்டாது: ஆதலால் செல்வம் வந்த காலத்தில் பணிதல் வேண்டுமென்றும் வறுமை வந்த காலத்தில் பணியாமை வேண்டுமென்றுங் கண்டுகொள்க. இதனால் செல்வமுள்ள காலத்துப் பணியாதிருந்தால் இகழ்ச்சியும் அஃதில்லாத காலத்துப் பணியாதிருந்தால் புகழ்ச்சியும் உண்டாகுமென்று கண்டுகொள்க. அஃதெப்படியென்றால், செல்வர் இறுமாப்பைக் கண்டவர் இவர் செல்வச் செருக்கால் பிறரை மதியாதவரென்று இகழப்படுவர். வறியவர் பணியாமை யைக் கண்டால் இவர் ஒன்றுமில்லாத ஏழையாயினும் குடிப்பிறப்பின் ஒழுக்க நலங்களைக் கைவிடாதவரென்று புகழப்படுவர் என்க. இது "கெட்டாலு மேன்மக்கள்

மேன்மக்களே" என்னும் ஔவையார் திருவாக்கை உறுதிப் படுத்துகின்றது. (மூதுரை-5)

௪. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.
(964)

(இ-ம்) நல்ல குடியிற் பிறந்தவர் தாம் நடக்கவேண்டிய ஒழுக்க நிலையில் நின்று தவறிய இடத்தில் தலையில் நின்றும் நீங்கிய மயிரைப் போலப் போற்றப்

கூ௭-ஆம் அதி.—மானம்.

உ௬௱௯

படாமல் இகழப்படுவர் என்பதாம். தலையில் நின்று நீங்கிய மயிரைத் தூர
விட்டெறிதல் போல ஒழுக்கத்தில் நின்று நீங்கியவரை மொடு சேராமல் விலக்குவரென்பது கருத்து.

அறிவுடையார் தம்

௫. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.
(965)
(இ-ம்) குடிப்பிறப்பால் மலைபோல உயர்ந்தவரும்

குன்றி மணியி
னளவும் இழிவைத் தாத்தக்க செய்கைகளைச் செய்தாராஞல் முன்னிருந்த உயர்ச்சியை யிழந்து எல்லாராலும் இகழ்ந்து பேசுதற்கிடமாய்த் தாழ்வடைவர் என்பதாம். குன்றி மணியினளவு-எள்ளளவென்றது போல ஒரு சிற்றளவு.

சு. புகழின்றாற் புத்தேள்நாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.
(966)

(இ-ம்) தன்னை யவமதித்துப் பேசுவார் பின்னே, மானத்தை விட்டு ஒருவன் சென்று நிற்கின்ற நிலையானது இவ்வுலகத்துப் புகழைக் கொடுக்க மாட்டாது; அம்மட்டோ! மற்றைத் தேவருலகத்துச் செலுத்தவு மாட்டாது.
இவ்விரண்டு மல்லாமல் அவனுக்கு
கிறது? ஒன்றுமில்லை என்பதாம்.
அறிவீன மென்பதுகருத்து.

அதுசெய்யும் பிரயோசனம் எது இருக்
இதனல் வீணே மானத்தைக் கெடுத்தல்

எ. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுதல் நன்று.

(967)

(இ-ம்) தன்னையவமதிப்பார்பின் சென்று பொருள்பெற்று ஒருவன் உயிர்வாழ்வதைப் பார்க்கினும் வறுமையடைந்த அப்பொழுதே இறந்தானென்று சொல்லப்படுதல் அவனுக்கு நல்லதென்பதாம். எனவே, மானமிழந்து தன்னையிகழ்வார் சொற்கேட்டு, உயிர்பிழைக்கலாகாதென்பது கருத்து. மானமிழத்தல்—செய்யத்தகாத காரியங்களைச் செய்தல்.

அ. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை பீடழிய வந்த இடத்து.

(968)

(இ-ம்) உயர்ந்த குடிப்பிறப்பிற்குரிய பெருந்தன்மையான மானங்கெட வந்தஇடத்து இறந்துபோகாமல் தன்னுடம்பைப் பாதுகாத்து வாழும் வாழ்க்கையானது அதன்பின் இறவாமலிருத்தற்கு மருந்தாகுமோ? ஆகாதென்பதாம். ஆதலால், பின்னாழிந்து போகும் உடம்பை மானத்தைக் கெடுத்து முன்னர்க் கூஉ



காத்தலால் ஒருபிரயோசனமு மில்லையென்பது கண்டு கொள்க. இதனால் மானங் கெடவந்த இடத்து உயிரை விட்டுவிட வேண்டுமென்பது கருத்து. இது பற்றி யே

"மானமும் உயிரும் ஒருங்குநில் லாத வழியுயிர் தன்னையே விடுத்துத், தானுறு பொருளா மானமே கொளுமுன் றந்தை" என்றார் பிறரும். (பிரபுலிங்கலீலை.)

கூ. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்.

(969)

(இ-ம்) தன் மயிர்க்கூட்டத்தில் ஒரு மயிர் நீங்கினாலும் உயிரை வைத்திருக்க மாட்டாத கவரிமானுக்குச் சமானமானவர், உயிரை விட்டுவிட்டால் மானம் நிலைநிற்குமென்னும் சமயம் வந்தால் அவ்வுயிரைப் பின்னுந் தாங்கி நில்லாமல் விட்டுவிடுபவரென்பதாம். இதனால் உயிரைப் பார்க்கினும் மானம் சிறந்ததென்பது கண்டுகொள்க.

கo. இளிவரின் வாழாத மான முடையார்
ஒளிதொழு தேத்து முலகு.

(970)

(இ-ம்) தமக்கு ஒரு இளிவாகிய சொல் வந்தால் அதனைப் பொறுத்து உயிர் வாழ்தல் இல்லாத மானமுடையவரது புகழுடம்பை உலகத்தாரெல்லாருந் தொழுது துதிப்பர் என்பதாம். இதனால் புகழுடம்பு பெறுதற்கு மானமும் ஒரு காரணமாம் என்பது கண்டு கொள்க. "பூதல மிருக்குங் காறும் புகழுடம் பிருக்கும்" ஆதலால் இவ்வாறு கூறியருளினர். (விநாயக புராணம் அரசியற் படலம். 66)

---

# 98-ஆம் அதி.—பெருமை.

அஃதாவது, செய்தற்கரிய காரியங்களைச் செய்தல், கெருவமில்லாமை , பிறர் குற்றங் கூறாமை முதலிய நற்குணங்களால் உயர்ந்தவராது தன்மை.

க. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். (971)

(இ-ம்) ஒருவனுக்கு ஒளி (பிரகாசம்) ஆவது எது வென்றால், தானுள்ள காலத்தில் பிறாற் செய்யமுடியாத ஒப்புரவு (ஈகை) முதலியவற்றைச் செய்வேனென்று நினைக்கும் மனத்தின் மிகுதியாகும். அப்படி நினைக்கும் மனத்தின் மிகுதியில்லாமல் தானே வாழ்வேனென்று நினைத்தல் அவன்.



வெளிப்படாமல் மறைதற்கு ஏதுவாகிய மாசு (இருள்) ஆகும் என்பதாம்.
இதனால் ஒருவன் தன் மனத்தைப் பிரகாசப்படுத்த வேண்டுமானால் பிறர்க்கு உபகாரஞ் செய்ய மிகுதியாக

நினைக்கவேண்டுமென்பதும் அப்படியில்லாமல் தானே வாழவேண்டு மென்று நினைத்தால் அம்மனம் இருளடைந்து போமென்பதுங் கண்டுகொள்க. மனத்தின் மிகுதி-உற்சாகம். ஒப்புரவு— உபகாரம்.

உ. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். (972)

(இ-ம்) எல்லா மனிதருயிர்களுக்கும் பொதுவாகிய பிறப்பியல்கள் வேறு பாடில்லாமல் ஒரு சமமாகு மென்றாலும் அவரவர் செய்யுந் தொழில் வேறு பாட்டால் பெருமை சிறுமை யுண்டுபண்ணும் சிறப்பியல்கள் ஒப்பாக மாட்டா என்பதாம். எனவே, பிறப்பால் ஒத்தலும் செயலால் ஒவ்வாமையும் ஆமென் பது ஒருதலை. (நிச்சயம்) இதனால் பிறப்பைக் குறித்துப் பேசுஞ் சாதியால் உயர்ச்சி இல்லையென்பது கண்டுகொள்க. வேறு எதனால் உயர்ச்சி யென்றால், தொழிலைக் குறித்துப் பேசும் நன்மையினா லென்று சொல்லுக. அஃதாவது, வேதாகமங்களில் விதிக்கப்பட்டவைகளைச் செய்வதாம். விலக்கப் பட்டவைகளைச் செய்தலே தீமை. அத்தீமையுடையவர் யாராயிருந்தாலுந் தாழ்ந்தவரேயாவர்.

ந. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

(973)

(இ-ம்) அரிய காரியங்களைச் செய்யாமற் சிறியாராயினர் உயர்ந்த ஆசனத்தி லிருந்தாராலும் பெரியராக மாட்டார். அரிய காரியங்களைச் செய்து முடித்த பெரியாராயினர் தாழ்ந்த நிலத்தினிடத்து இருந்தாராலும் சிறியராக மாட்டா ரென்பதாம்.

ச. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

(974)

(இ-ம்) பிள்வுபட ாத மனத்தினையுடைய பெண்கள் நிறையின் (கற்பின்) வழுவாமல் தம்மைத் தாமே காத்துக்கொண்டு நடப்பதுபோல ஒரு வன் நிறை (நீதி) யின் வழுவாமல தன்னைக் காத்துக்கொண்டு நடப்பானுனல் அவனிடத்துப் பெருமைக் குணமும் உண்டா மென்பதாம்.

ரு. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றின்
அருமை யுடைய செயல்.

(975) ௨௯௬ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) மேல் வ சனத்திற் சொல்லிய முறையால் பெருமையுடையரா யினர் தாம் தமக்குரிய செல்வங்களை யிழந்து வறுமை யுடையராகிய இடத்தும் பிறர் செய்தற்

கரியவாகிய தம் ஈதற்றொழில் முதலியவைகளை விடாமல் அவற்றைச் செய்யவேண்டிய முறைப்படி இயன்ற மட்டு முடிவு பெறச் செய்ய வல்லவ ராவர் என்பதாம். இக்கருத்துப் பற்றியே "வறுமையுற் றழியுந் தொண்டை வளமலி நாட்டோர் தங்கள், இறுமுடல் வருத்தி யேனும் ஈவதற் கொல்கார்" என்றருளி னர் ஆசிரியர் சிவஞானயோகிகள் (காஞ்சிப் புராணம் நாட்டுப் படலம்-33.)

௬. சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

(976)

(இ-ம்) மேல் வசனத்திற் சொல்லிய பெருமையினையுடைய பெரியாரை வழிபாடு செய்து அவரது குணமாகிய செயல்களை நாம் அடைவோமென்னுங் கருத்து மற்றைச் சிறியாயினர் மனத்தினிடத்து உண்டாகமாட்டாது என்ப தாம்.
சிறியாயினர்-குடிப்பிறப்பு, கல்வி, செல்வம் ஆகிய மூன்றிருந்தும் செய்தற்கரியவாகிய ஈகை முதலியவைகளைச் செய்யமாட்டாதவர்.

௭. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

(977)

(இ-ம்) தனக்குப் பொருத்தமாகும்

பெரியாரிடத்துத் தங்கியிருக்கும் குடிமை, செல்வம், கல்விகளின் மிகுதியாகிய சிறப்பும், தனக்குப் பொருத்த மில்லாத சிறியாரிடத்து உண்டாகுமானால் அம்மூன்றின் மிகுதி குறைந்து செருக்கினிடத்தே மிகுந்த செயலையுடையதாம் என்பதாம். இதன் கருத்து - பெருமை பெற்ற குடிமை செல்வம் கல்விகளைச் சிறியார் பெற்றாரானால் அம் மூன்றும் அவருக்குச் செருக்கை யுண்டுபண்ணித் தாமுங் குறைபடும் என்ப தாம். செருக்கு-கருவம்.

அ. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
யணியுமாந் தன்னை வியந்து.

(978)

(இ-ம்) பெருமையுடையவர், செல்வங் கல்வி முதலிய சிறப்புடைய காலத்தும் செருக்கில்லாமல் எல்லார்க்கும் அடங்கி நடப்பர். மற்றைச் சிறுமை யுடையவர், மேலே சொல்லிய சிறப்பில்லாத காலத்தும் தம்மைப் புகழ்ந்து கொண்டு ஒருவருக்கும் அடங்காமல் திரிவர் என்பதாம். இதனால் பெருமை யுடையவர் எந்தக் காலத்தும் அமைதியுடையராயிருப்பரென்பதும், சிறுமை கூகூ-ஆம்



யுடையவர் எந்தக்காலத்தும் அமைதியில்லாமல் வீண் வார்த்தை பேசியலைவர் என்பதுங் கண்டுகொள்க.

௯. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

(979)

(இ-ம்) ஒருவருக்குப் பெருமைக் குணமாவது, பெருமை பாராட்டுதற் குரிய செல்வங் கல்வி முதலிய காரணமிருந்தாலும் இவை யெல்லாம் நமக்கு அமைந்தன வென்று நினைத்துச் செருக்கிலலாமலிருத்தலாம். சிறுமைக் குணமாவது, மேலே சொல்லியவைகளில்லாதிருந்தாலும் இருக்கின்றனவாகப் பிறர் மதிக்கும்படி பொய் பேசிச் செருக்கடைந்து திரிதலாம். செருக்கு— கருவம்.

க0. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(980)

(இ-ம்) பெருமையுடையார் பிறருடைய மானமாகிய குணத்தையே சொல்லி அவமானமாகிய குற்றத்தை மறைத்து விடுவர். மற்றைச்சிறுமை யுடையார் பிறருடைய மானமாகிய குணத்தை மறைத்து, அவமானமாகிய குற்றத்தையே பேசிப் பொழுது போக்குவர் என்பதாம். இக்கருத்தால் "நல் லார் பிறர் குற்றம் நாடார்" என்றார் பிறரும் இது (ஔவையாரருளிய வாக்கிய மென்பது கன்னபாரம்பரைச் செய்தி.)

---

## 9 9-ஆம் அதி.—சான்றாண்மை.

அஃதாவது, பலகுணங்களாலும் நிறைந்து அக்குணங்களை ஆளுந்தன்மை.

க. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. (981)

(இ-ம்) நமக்குத் தக்கது இது வென்றறிந்து, உயர்வாகிய குணத்தைக் கைக்கொண்டு நடப்பார்க்கு நல்லனவாய குணங்களெல்லாம் ஒருவர் சொல்லித் தெரியாமல் இயல்பா யிருக்குமென்று நூலறிந்தவர் சொல்லுவ ரென்பதாம். இதனால் சான்றாண்மையுடையார் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் இங்கே கூறியதல்லாமல் வேறில்லை யென்பது கண்டு கொள்க. சான்றாண்மையுடையார்—உயர்வாகிய குணத்தைக் கைக்கொண்டு நடப்பவர்.

உ. குணநலம் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉ மன்று. (982)





(இ-ம்) சான்றோர் (உயர்ந்தோர்) நலமாவது, அகத்தினிடத்து உண் டாகிய குணநலமே யாம். அது

நீங்கிய மற்றைப் புறத்திலுள்ள உறுப்புக்க (அவயங்க)ளாலாகிய நலம் நாலோர் குடிப்பிறப்பு, கல்வி முதலாகப் பிரித் தெடுத்துச் சொல்லப்படும் எவ்வகைப்பட்ட நலங்களிற் சேர்ந்ததும் இல்லை என்பதாம். இதனால், ஒருவனுக்குக் குண நலமே சிறந்ததல்லாமல் கண் கைகால் முதலியவற்றாலாகிய நலம் சிறந்ததல்லவென்று கண்டுகொள்க.

ங. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண் .
(983)

(இ-ம்) சுற்றத்தார்மேலே யல்லாமல் மற்றவரிடத்தும் உண்டாய அன்பும், பழிபாவங்கட்குப் பயப்படுதலாகிய நாணமும், யாவருக்கும் உபகாரஞ் செய்தலும், பழமையாயுள்ளவரிடத்துத் தாக்ஷணியம் செய்தலும், எந்த இடத்தும் மெய்மை (உண்மை) கூறுதலுமாகிய ஐந்தும் சால்பு என்னும் பாரத்தைத் தாங்கிய தூண்கள் என்பதாம். சால்பு—எல்லா நன்மைகளும் நிறைந்த ஒரு பெருங் குணம். இதனால் இங்கே சொல்லிய ஐந்துமில்லாத இடத்துச் சால்பு நிலையாதென்று கண்டுகொள்க.

ச. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு .
(984)

(இ-ம்) ஒரு உயிரையுங் கொலைசெய்யாத தருமத்தினிடத்தே தவ மானது உள்ளதாம். அதுபோலச் சால்பானது பிறருடைய குற்றத்தை யெடுத்துக் கூறுதிருத்தலினிடத்து உள்ளது என்பதாம்.

ரு. ஆற்றுவா ராற்றல் பணிதலதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.
(985)

(இ-ம்) ஒரு காரியத்தைச் செய்து முடிப்பார்க்கு வலிமையாவது, அக்காரியத்துக்குத் துணையாவாரைத் தாழ்ந்து தம்முடன் சேர்த்துக் கொள்ளுதலாம். அப்படிச் சேர்த்துக் கொள்ளுதலானது சால்புடையார் தம் பகைவரைக் கெடுக்கும் கருவியும் (ஆயுதமும்) ஆகுமென்பதாம். இதனால் சால்புடையவருக்குப் பணிவுடைமை அவசியம் வேண்டுமென்பதாயிற்று.

சூ. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணும் கொளல்.
(986)

(இ-ம்) சால்பாகிய பொன்னின் பெருமையை யறிதற்கு உரை கல்லாகிய செயல் எது வென்றால், தம்மைப்பார்க்கிலும் உயர்ந்தவரிடத்துப் பெற்றும்


கொள்ளுந் தோல்வியைத் தமக்குத்தாழ்ந்த வரிடத்துப்

பெற்றுக் கொள்ளுதல் என்பதாம், அஃதாவது, தாம் வெல்லும் வலிமையுடையரா யிருந்தே தமக்குத் தாழ்ந்தவரை யெதிரியாக்கிக் கொண்டு அவரோடு சண்டை செய்யாதிருத்த லென்று கண்டுகொள் க. சால்பு இன்னதென்று இத ன் மூந்திய வசனத்திற் காண்க. இதனால் நிறைந்த குணமுடையார் தாழ்ந்த குணமுடையாரிடத்து மிகப் பொறுமை செலுத்தவேண்டு மென்பதாயிற்று.

எ. இன்னுசெய் தார்க்கு மினியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.
(987)

(இ-ம்) சால்பு (நிறைந்த குணம்) உடையவர், தமக்குத் துன்பங்களைச் செய்தவருக்கும் இன்பங்களைச் செய்யமாட்டாராளுல் அவருடைய சால்பு (பெருங்குணம்) என்ன பிரயோசனத்தை யுடையதோ என்பதாம். எனவே, இன்பஞ்செய்தவருக்கு இ ன்பஞ்செய்தல் பெரியதல்ல வென்பது கருத்து. இதுபற்றியே ''இன்னுசெய் தாரை யொறுத்த லவர்நாண, நன்னயஞ் செய்து விடல்'' என்று 32-ஆம் அதிகாரத்திலுங் கூறியருளினர்.

அ. இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண் மையுண் டாகப் பெறின்.
(988)

(இ-ம்) சால்பு (பெருங்குணம்) என்று சொல்லப்பட்ட வலிமை யொருவனுக்கு உண்டாகப்பெற்றால் அவனிடத்துள்ள தரித்திரம் இளிவு (தாழ்மை) ஆகமாட்டாது என்பதாம். அவனை வறியவனென்று இகழ்ந்து பேசாமல் எல்லாரும் நன்கு மதிப்பரென்பது கருத்து.

சு. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். (989)

(இ-ம்) சால்புடைமையாகிய கடலுக்குக் கரையென்று சொல்லப்படுவார் யுகாந்த காலத்தில் எல்லாக்கடலுங் கரைக்குள் அடங்காமல் வெளியேறி மாறுபட்டு வந்தாலும் தம் சால்பாகிய பெருங்குணத்தை விட்டு வேறாகமாட்டாரென்பதாம்.

கம. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை. (990)

(இ-ம்) பல குணங்களாலும் நிறைந்தவராகிய பெரியார் தாம் அக் குணங்களைக் கொள்ளும் தன்மையிற் குறைபடுவாரானால் பெரிய பூமியானது

தான் சுமக்கும் சுமையாகிய பாரத்தைத் தாங்கமாட்டாததாய் முடியும் என்பதாம். எப்படியென்றால், பெரியாராயினோர் உயர்ந்த குணத்தை விட்டு நீங்கா திருத்தலும் பூமியானது பாரத்தைச் சுமத்தலும் எந்தக் காலத்திலும் இயற்கை யாதலால் இவற்றுள் ஒன்று மாறுபட்டால் மற்றொன்றும் மாறுபடுதற்குத் தடையில்லையென்று கண்டுகொள்க. இதனால் இவ்விரண்டும் எந்தக்காலத்தும் மாறுபடமாட்டா என்பது கருத்து.

---

## 100-ஆம் அதி.—பண்புடைமை.

அஃதாவது, மேலதிகாரங்களிற் கூறிய சான்றாண்மை, பெருமைகளிற் றவறாமல் நின்றே எல்லாரியல்புகளுமறிந்து, அவரவர்க்குத் தக்கவிதமாக ஒத்து நடத்தல். இப்பொருள் ''பண்பெனப்படுவது பாடறிந்தொழுகல்'' என்பதனாலும் அறிந்து கொள்க. (இப்பாட்டுக் கலித்தொகை நெய்தல் 1(ı) இயல்பு—குணம்.

க. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்

பண்புடைமை யென்னும் வழக்கு. (991)

(இ-ம்) இடையூறில்லாமல் எல்லாரும் வந்து நெருங்குதற்கேற்ற செவ்வியுடையாரயிருந்தால் அவர் அரிதாகிய பண்புடைமையென்னும் நல்ல நெறியடைதல் எளிதென்று நூலாராய்ச்சியுடையோர் சொல்லுவர் என்பதாம். எனவே, குணங்கள மிகுந்து செவவியெளியதாயுடையவருக்கும் பண்புடைமை தானே யுண்டாகுமென்றும், அப்பண்புடைமையானது உலகத்தாரை யெல் லாம் வசீகரிக்கும் பிரயோசனத்தையுடையதென்றும் யூகித்தறிந்துகொள்க. செவ்வி—சமையம். வந்தவர் காணுதற்குச் சமையம் எளிதாக வுடையாரை உலகத்தார் புகழ்ந்து பேசுவர். இக்கருத்தை 'காட்சிக் கெளியன்' என்னுந் திருக்குறளாலும் அதன் வசனத்தாலு மறியலாம்.

உ. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும் பண்புடைமை யென்னும் வழக்கு. (992)

(இ-ம்) பிறரிடத்து அன்புடையனுயிருத்தலும் உலகத்தோடமைந்த குடியினிடத்துப் பிறத்தலுமாகிய இவ்விரண்டும் ஒருவனுக்குப் பண்புடைமை யென்று உலகத்தார் சொல்லும் நன்மார்க்கம் என்பதாம். எனவே, இவ்விரண் டில் ஒன்றுமட்டும் இருந்தால் ஆகாதென்பதற்கும்

ஆகுமென்பதற்கும் மூலத் தில் இடங் கொடுக்கிறது.எப்படியென்றால், இவ்விரண்டும் என்ற முற்றும்மை

## ௧௦௦-ஆம் அதி.—பண்புடைமை.

௯௦௧

யை யெச்சவும்மை யாக்கினால் ஆகுமென்பது இலக்கணம் வல்லார்க்கு நன்கு புலப்படும். எச்சவும்மை யாக்காவிட்டால் குடிப்பிறப்பில்வார் அன்புடையரா யிருந்தாற் பயனில்லையாய்விடும் என்க.

௩, உ றுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதாம் ஒப்பு. (993)

(இ-ம்) உயிரின்வேறாய் அழியத்தக்க உடம்பால் நன்மக்களோடு (உயர்ந்தவரோடு) சமானமாதல் ஒருவனுக்குக் கூடாதாகையால் இனிக் கூடு வதாகிய சமானம் எதுவென்றால், உயிரோடு வேறாகாது செருங்கத்தக்க குணம் ஒன்றாயிருத்தல் என்பதாம். எனவே, குணத்தால் ஒத்திருத்தலல்லாமல் உருவத்தால் ஒத்திருத்தல் பயனில்லை யென்பது கருத்து.

௪. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

(994)

(இ-ம்) நீதியையும் தருமத்தையும் விரும்புதலால் பிறர்க்கும் தமக்கும் பிரயோசனப் படுதலுடையவாது பண்பினை (குணத்தினை) உலகத்தாரெல்லா ரும் கொண்டாடுவர் என்பதாம். கொண்டாடுதல்—யாரினும் உயர்ந்தவ ரென்று புகழ்ந்து பேசுதல்.

ரு. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண் புள பாடறிவார் மாட்டு.

(995)

(இ-ம்) தன்னை யிகழ் ந்துபேசுதல் ஒருவனுக்கு விளையாட்டினிடத்தும் இன்பஞ் செய்யமாட்டாது ஆதலால் பிறருடைய பெருமையை யறிந்து ஒழு குவாரிடத்துப் பகை இருந்தபோதிலும் பிறரை இகழ்ந்துபேசுதல் வரமாட்டாது. இனியவாகிய பண்புகளே யுண்டாகு மென்பதாம். இதனால் பிறர் பெருமைக்குணங்களை யறியாதவரே யிகழ்ந்து பேசுவரென்பது கருத்து.

சு. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண் புக்கு மாய்வது மன்.

(996)

(இ-ம்) உலகியலானது நல்ல குணமுடையவரிடத்தே சார்ந்திருத்த லால் எந்தக் காலமும் வளர்ந்து வருகின்றது. அப்படியில்லையானால் அவ வுலகியல் பூமியினிடத்து மடிந்து

கெட்டுப்போகுமென்பதாம். எனவே, நல்ல குணமில்லாதவரிடத்து உலகியலிருந்தால் வளர்தற்குக் காரணமில்லாமையால் இவ்வாறு கூறியருளினர். உலகியல்—உலகநடை. அஃதாவது, நூல்கள் விலக்கிய காரியங்களை விட்டு, விதித்த காரியங்களைச் செய்தல்.

ருO௨ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

எ. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்,
(997)

(இ-ம்) நன்மக்களுக்கே யுரிய குணமில்லாதவர் அரத்தின் கூர்மை போலுங் கூரிய அறிவுடையராயிருந்தாலும் ஓரறிவினையுடைய மரத்தினை ஒப்பாவரென்பதாம். நன்மக்களாவார்—பேரறிவுடையவர். இதனால் நன்மக்கட் குரிய குணமில்லாதவர் மனிதவடிவம் பெற்றதிற் பயனில்லையென்பது கருத்து.

அ. நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.
(998)

(இ-ம்) தம்மொடு நட்பினைச் செய்யாதவராய்ப் பகைமை செய்து வருவாரிடத்தும் தாம் அவர்க்குப் பண்பு (குணம்) உடையவராய் நடவாதிருத்தலானது அறிவுடையோருக்கு இழுக்கு என்பதாம். இதனால் தம்பகைவருக்கும் உதவிபுரிதல் உயர்ந்தோர்க்கு இயல்பாகிய குணமென்று கண்டுகொள்க. இழுக்கு—குற்றம்.

௯௯. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.
(999)

(இ-ம்) உயர் குணம் இல்லாமையால் ஒருவரோடுங் கலந்து உள்ளமானது மகிழ்ச்சியடையமாட்டாதார்க்கு மிகவும் பெரிய பூமி இருளில்லாத பகற்காலத்தினும் இருளினிடத்துக் கிடந்தது என்பதாம். எப்படியென்றால், பண்பில்லார் எல்லாரோடுங் கலந்தறியத் தெரியாமையால் அவர் மனம் இருளடைந்திருக்கிறதென்று சொல்லுங் கருத்தால், அவரைத் தாங்கு முலகம் பகற் காலத்தினும் இருளினிடத்துக் கிடந்ததென்று அவரது குணமில்லாமையைக் கோபித்து நாயனார் கூறியருளினாரென்று கண்டு கொள்க.

௧0. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.
(1000)

(இ-ம்) நற்குணமில்லாதவன் முன்னைத் தவப்பயனாற் பெற்ற பெருஞ் செல்வம் ஒருவருக்கும் பயன்படாமற் போதல் எதுபோலு மென்றால், நல்ல பசுவின் பாலானது தன்னையேற்றற்கு உரியதல்லாத பாத்திரத்தின் குற்றத்தாற் சுவை கெட்டுப் போதல் போலும் என்பதாம். எனவே, பெருஞ் செல்வம் பெற்றவனுக்கு நற்குணம் ஆவசியகம் வேண்டுமென்பது கருத்து. நற்குணமாவது—இவ்விடத்துத்தானும் அநுபவித்துப் பிறருக்குங் கொடுத்தல்,

---

# 101-ஆம். அதி.—நன்றியில் செல்வம்.

**அஃதாவது, தன்னைச் சம்பாதித்தவருக்கும் பிறருக்கும் பயன் படுதலில்லாத செல்வத்தி னியல்பு.**

க. வைத்தான்வாய் சான்ற பெரும்பொருளஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில். (1001)

(இ-ம்) தன்னுடைய வீட்டின் விசாலமான இடமெல்லாம் நிறைய எல்லாப் பொருள்களையும் சம்பாதித்து வைத்து உலோபகுணத்தால் மெய் வாய் கண் மூக்கு செவியென்கிற ஐம்புலனு மகிழ்ச்சியடைய அநுபவியாதவன் உயிரோடிருந்தாலும் செத்தவனே யாவனென்பதாம். எப்படியென்றால், செத்தபிணம் ஒரு பொருளையும் அநுபவியாததுபோல மேற்சொல்லிய உலோப குணமுடையவனும் அநுபவிக்கமுடியாத காரணத்தாலென்று கண்டுகொள்க.

உ. பொருளானு மெல்லாமென் றீயா திவறு
மருளானு மாணாப் பிறப்பு .

(1002)

(இ-ம்) பொருளொன்றிருந்தால் அதனால் எல்லா நலங்களும் உண்டா மென்று அறிந்து, அப்பொருளை வருத்தப்பட்டுச் சம்பாதித்து வைத்துப் பின்பு பிறர்க்கு ஒன்றுங்கொடாது அப்பொருளிலே மிகுந்த ஆசைவைக்கும் மயக்கத்தாலே ஒருவனுக்கு இன்பமில்லாத பேய்ப் பிறவியுண்டா மென்பதாம். மயக்கமாவது, பொருள் சம்பாதிக்குமுன் அப்பொருள் நல்ல காரியங்கள் செய் தற்குக் காரணமாமென்று அறிந்த அறிவுமாறி ஒருவருக்கும் ஒன்றுங் கொடுக் கக்கூடாதென்று எண்ணிய எண்ணம். இதனால், தம்மிடத்தில் பொருளிருந் தும் பிறருடைய பசியை நீக்காதிருப்பவர் பேய்வடிவாகப் பிறப்பரென்பது கருத்து.

ங. ஈட்ட மிவறி யிசைவேண்டா ஆடவர்
தோற்றம் நிலக்குப் பொறை.

(1003)

(இ-ம்) எல்லாரைப் பார்க்கிலும் நாம் பொருளையே மிகச் சம்பாதிக் கின்றோமென்ற ஒன்றையே யெண்ணி அப்பொருளால் வரும் புகழை விரும் பாத ஆண்மக்களது பிறப்புக்குரிய உடம்பானது பூமிக்குப் பாரமாகுமென்ப தாம். இம்மைக்கும் மறுமைக்கும் உறுதியாகிய அறமானது ஈகையாதலால் அதிலில்லாமல் பொருளைத்

திரட்டிவைக்கும் அறியாமையுடைய அவரைச் சுமப்பது பூமிக்குப் பாரமாயிற்று. ஆதலால் இவரிருப்பதைப் பார்க்கிலும் இறந்

•



தால் பூமிக்குச் சுமையாவது நீங்கும். புகழ்—பிறருக்குக் கொடுத்தலால் வருவது.

ச. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ ஒருவரால்
நச்சப் படாஅ தவன். (1004)

(இ-ம்) யாதொரு பொருளையும் பிறருக்குக் கொடாதிருத்தலால் ஒருவ ராலும் விரும்பப் படாதவன் தானிறந்த காலத்தில் மிச்சமாக நிற்பதென்று எதை நினைப்பானோ தெரியாது என்பதாம். கொடுத்துப் பெறுதலாகிய புகழே தானிறந்த காலத்து அழியாது நிலைநிற்பது. ஆதலால் அதை மறந்தவ னுக்கு இறந்தபின் நிலைநிற்பதாகிய பொருள் வேறில்லையென்பது கருத்து.

ரு. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

(1005)

(இ-ம்) வறியவர்க்கு வேண்டுவன கொடுப்பதும் தாம் வேண்டிய அளவு உண்டு உடுத்தி அநுபவிப்பதும் ஆகிய இரண்டு செய்கையும் இல்லாதவருக்குப் பலவாக எண்ணப்பட்ட செல்வம் கோடியென்னு ம் பெரு ந்தொகைக் கணக் காக இருந்தாலும் ஒன்றுமில்லையென்பதாம். என் இல்லையென்றால், இம்மை மறுமைப் பயன் தருவதாகிய மேலே சொல்லிய செய்கை ஒரு பொருளும் இல்லாதவனுக்கும் கோடி பொருளுடைய இவனுக்கும் பொதுவாயிருத்தலால் என்று கண்டுகொள்க. வறியவர்—தரித்திரர்.

சூ. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான்.

(1006)

(இ-ம்) தானும் வேண்டிய அளவு உண்ணு தவனும் அறிவு ஒழுக்கங்களால் உயர்ந்தார்க்கு ஒன்றும் கொடுக்குங் குணமில்லாதவனுக்குக் கிடைத்த பெருஞ் செல்வமே அவனுக்குத் துன்பம் என்பதாம். எப்படியென்றால், செல்வத்தாற் பெறவேண்டிய அறம் பொரு ளின்பங்களை இழத்தல் அல்லர் மலும் உலகத்தாரெல்லாரும் இவன் உலோபன்,பசித்தவருக்கு ஒன்றும் ஈயாத வன், பாவியென்று பலவிதமாகப் பேசும் நிந்தையை (பழிச்சொல்லை)க்கேட்டு

உயிரோடிருத்தல் என்க. இவ்வாறன்றி உரையாசிரியர்கள் வெவ்வேறு விதமாகவும் பொருள் கூறுவர். இதனால், கொடைக்குண மில்லாதவனுக்குச் செல்வங் கிடைப்பதைப் பார்க்கினுந் தரித்திரங் கிடைப்பது மிக நல்லதென்பதாம். எப்படியென்றால், உலகத்தார் இவன் கருணையில்லாதவன் அன்பில்லாதவனென்று இகழப்படாதிருத்தலாலென்க. இக்கருத்துப்பற்றியே "வள்ளன்மையில்லாதான் செல்வத்தின் மற்றையோன், நல்குரவே போலு

•

௧0௧-ஆம் அதி—நன்றியில் செல்வம்.
௱0௫

நணிநல்ல—கொன்னே, அருளிலன் அன்பிலன் கண்ணறைய னென்று, பலரா னிகழப் படான் என்றார் பிறரும். (நீதிநெறிவிளக்கம் 66)

எ. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றாள் தமியள்மூத் தற்று.

(1007)

(இ-ம்) ஒரு பொருளுமில்லாத தரித்திரருக்கு அவர் வேண்டிய தொன்றைக் கொடாதவனது

செல்வமானது பெண்களுக்குள் மிகுந்த அழகினைப் பெற்றவளொருத்தி தன் னை ஒருவருக்குக் கொடுப்பாரின்மையால் தனியேயிருந்து பிறருக்கும் தனக்கும் பயனில்லாமல் தன் குமரிப்பருவத்தை யிழந்து மூப்படைந்தாள் போலுமென்பதாம். மூப்படைந்தால் அவள் அழகு வீணே கழிதல்போலக் கொடுத்துப் புகழ்பெருதவாது செல்வமும் அதனு லாகும் பிரயோசனமும் இல்லாமற் கெட்டதென்பது கருத்து. பிரயோசனங்கள்-புகழ் புண்ணியங்கள். புகழ்—உலகத்தார் நன்குமதித்துப் பேசுதல். புண்ணியம்—மறுமைப் பயன்களைக் கொடுப்பது.

அ. நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று.

(1008)

(இ-ம்) வறியவர்க்குச் சமீபமுடையவனுயிருந்தும் அவர் கேட்கும் போது ஒன்று ங் கொடாமையால் அவரால் விரும்பப்படாதவன் செல்வம் பெறுதல் எதுபோலுமென்ருல், ஊர் நடுவிலே நிற்பதொரு நச்சு மரம் (எட்டி மரம்) பழுத்ததுபோலுமென்பதாம். ஒருவருக்கும் உதவாதவன் சமீபத்தி லிருந்தனுற் பயனில்லை யென்பது கருத்து. ஆதலால், ஈகையுடைய செல்வர் பக்கத்திலேயிருக்கவேண்டுமென்பது கண்டுகொள்க.

க. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.
(1009)

(இ-ம்) இவரைச் சிநேகஞ் செய்தால் ஏதாவது கொடுக்கவேண்டியது வருமென்றெண்ணி ஒருவன் தன் சுற்றத்தாரிடத்தும் பிறரிடத்தும் அன்பு செலுத்தாமல் தானும் அநுபவிக்கவேண்டிய இன்பங்களை அநுபவியாமல் சிறிது பொருள் கொடுத்தால் பெரிய தருமங் கிடைக்குமென்பதையும் ஆரா யாது சம்பாதித்துச் சேர்த்துத் திரட்டி வைத்த பெரும் பொருளை அநுபவிப்ப வர் அந்நியர் என்பதாம். அந்நியர்—திருடர், ஏமாற்றுகிறவர் முதலியோர்.

௧௦. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.
39
(1010)

௩௦௯ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) கொடுத்துப் புகழு டையதாகிய செல்வருக்கு எந்தக்காரணத்தி னலாவது ஒரு சமையம்

சிறிது காலம் நிற்பதாய் வந்த வறுமை (தரித்திரம்) உலகத்தையெல்லாம் மழைபெய்து காத்து நிலை நிறுத்து மேகம் சில நாள் மழைபெய்யாமல் நிற்பதாகிய ஒரு தன்மையுடையதென்பதாம். எப்படி யென்றால், மேகம் மழை பெய்யாமலிருந்து அச்சமையம் நீங்கி மீளவும் பழைய படி பெய்தல்போல ஈகையுடையார் செல்வமானது ஒருகாலம் நிலைநில்லாது நீங்கப் பின்னுஞ் செல்வமுடையாகி ஈகையை விடாது செய்வர் என்க. ஆகவே, ஈகையாகிய நன்றியானது இல்லாத செல்வம் எந்தக்காலத்தும் பயன் படாதென்பது கண்டுகொள்க.



## 102-ஆம் அதி.—நாணுடைமை.

அஃது, சால்பு பண்புமுதலிய குணங்களாலுயர்ந்தோர் தமக்குப்பொருந்தாத கருமங் (தொழில்)களில் நாணுதலுடையராந்தன்மை. சால்பு—பல நற் குணங்களாலும் நிறைந்த ஒரு பெருங்குணம். பண்பு—உலகத்தாரோடு ஒத்து நடத்தல். இப்பொருளென்பது பண்புடைமை அதிகாரத்திற்காண்க.

க. கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

(1011)

(இ-ம்) நன்மக்கள் நாணுவது, செய்யுந் தொழில்களின் இழிவு காரணமாக நாணுதலாம். அது வல்லாமல் மனம் வர்க்குக்காயங்களின் ஒடுக்கத்தால் வருவனவாகிய நாண்கள் நாணல்லவோ என்றால், அம்மூன்றாலும் வருவன வாகிய நாண்கள் அழகிய நெற்றியினையுடைய குலமகளிர் நாண்களென்பதாம். திருநுதல் நல்லவரென்று புகழ்ந்து கூறப்பட்டதால் பொதுமாதரை விலக்கிக் குலமகளிரென்று ஆசிரியர் பரிமேலழகர் பொருள் கூறினர். அல்லாமலும் பொது மாதருக்கு நாண் (வெட்கம்) கூடாது ஆதலாலுமென்க. மனம் முதலிய மூன்றின் ஒடுக்கமாவது, குலமகளிர தம் கணவரையன்றிப் பிறரைக் கண்டால் அவரை நினையாமையும். அவரிடம் பேசாமையும், நெருங்காமையுமாம்.

உ., ஊனுடை யெச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(1012)

(இ-ம்) உணவும் ஆடையும் இவ்விரண்டுமல்லாத உறக்கமும், பயமும், காமமும், எல்லாமனிதர்களுக்கும் பொதுவாகும். நன்மக்களாகிய உயர்ந்த

## ௧0௨-ஆம் அதி.—நாணுடைமை.

௱0ள

மனிதருக்கு நாணமுடைமையே சிறப்பாகுமென்பதாம். ஆதலால் நன்மக்களுக்கு அடையாளம் நாண் என்பது காணப்பட்டது, நாண் என்பதற்குப் பொருள்—பழி பாவங்களுக்குப் பயப்படுதல்.

௩. ஊனைக் குறித்த உயிரெல்லாம் நாணென்னும்
நன்மை குறித்தது சால்பு,

(1013)

(இ-ம்) எல்லா உயிர்களும் மாமிசத்தாலாகிய உடம்பினைத்தமக்கு இருப்பிடமாகக் கொண்டு அதனை விடமாட்டா. அதுபோலச் சால்பு என்னும் நிறைகுணமானது நாண் என்னும் நன்மைக் குணத்தைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டு அதனைவிடமாட்டாது என்பதாம். இதனால், உயிர் உடம் பொடு கூடினலன்றிப் பயனடையாதவாறுபோலச் சால்பு நாணொடு கூடினலன்றிப் பயனடையாதென்பதாம்.

௪. அணியன்றோ நாணுடைமை
சான்றோர்க்கஃ தின்றேற்
பிணியன்றோ பீடு நடை,

(1014)

(இ-ம்) உயர்ந்தாராயினோர்க்கு நாணம் உண்டாயிருத்தல் ஆபாணமாம். அவ்வாபரணமில்லாவிட்டால் அவரது கௌரவமான நடையைக் கண்டவர்க்கு நோயாமென்பதாம். கண்டவர்க்கு நோயாவது எப்படியென்றால், இப்படிப் பட்ட பெரியவர் வெட்கமில்லாமல் அலைகின்றாரே யென்று அவரைக் கண்டவர் மனம் பொறுக்கமாட்டாமல் வருந்துதலென்க.

ரு. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.

(1015)

(இ-ம்) பிறருக்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் சமமாக நினைத்து நாணமடைவாரை உலகத்தார் இவர் நாணத்துக்கு இருப்பிட மென்று புகழ்ந்து பேசுவரென்பதாம். சமமாக மதித்தலாவது - பிறருக்கு வரும்பழியை அவர் கெட்டுப்போவாரே என்று அவர்மேல் இரக்கங் காரண மாகத் தமக்குவரும் பழியாக நினைப்பது. இது பெரியாரது குணமாதலால் அவரை யுயர்ந்தாரெல்லாரும் மதிப்ப ரென்பதாயிற்று.

சா . நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

(1016)

(இ-ம்) உயர்ந்தவர் தமக்குக் காவலாக நாணமாகிய வேலியைக் கொள் ளுவதல்லாமல் பெரிய உலகத்தை விரும்பமாட்டா ரென்பதாம். எனவே, ௱௦௮

**திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.**

பெரிய உலகத்தைப் பார்க்கினும் நாணம் பெரிய பொருளென்பது கருத்து. பழிபாவங்களிற் செல்லவொட்டாமல் தடுப்பது நாணமாதலால் உலகத்தினும் நாணம் பெரியதென்பதைக் காரணத்தோடு கண்டுகொள்க. இனி வேறொரு பொருளாவது, பெரியோர் நாணத்தை முதலாவது கைக்கொண்டல்லாமல் பெரிய உலகத்தைக் கைக்கொள்ளமாட்டா ரென்பதாம். எப்படிப் பொருள் கொண்டாலும் உலகத்தைப் பார்க்கிலும் நாணம் பெரியதென்பதற்குச் சந்தேகமில்லை.

எ. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டால்
நாண்துறவார் நாணாள் பவர்.

(1017)

(இ-ம்) நாணத்தினது பெருமையையறிந்து, அதனை விடாமற் கைக் கொண்டு நடப்பவர், நாணமும் உயிரும் ஒன்று சேர்ந்திருக்க முடியாத இடத்து நாணத்தை வைத்துக்கொள்ளும் பொருட்டு உயிரை விட்டுவிடுவர்.

அஃதல்லா மல் உயிரை வைத்துக்கொள்ளும் பொருட்டு நாணத்தை விட்டுவிடமாட்டா ரென்பதாம். இதனால் உயிரினுஞ் சிறந்தது நாணமென்றால் இது எவ்வளவு பெரியதென்று அறிவுடையோர் கவனிக்கவேண்டும்.

அ. பிறர்நாணத் தக்கது தான்நாணா னாயின்
அறநாணத் தக்க துடைத்து.
(1018)

(இ-ம்) தன்னிடத்துக் கண்டாருங் கேட்டாரும் நாணத்தக்க பழி பாவங்களை ஒருவன் காரணமில்லாமல் செய்வானானால் அந்நாணாமையானது அவனைத் தருமம் விட்டு நீங்கும் குற்றமுடையதென்பதாம். இதனால் பழி பாவங்களுக்குப் பயப்படுதலாகிய நாணத்தோடு பொருந்தாதவனைத் தருமம் சாரமாட்டாதென்பது கருத்து.

கூ. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை.
(1019)

(இ-ம்) ஒருவனுக்கு நல்லொழுக்கந் தவறுமானால் அத்தவறுதலானது அவன் குடிப்பிறப்பின் பெருமையைக் கெடுக்கும். ஒருவனிடத்து நாணம் இல்லாமையிருந்த இடத்து அவ்வில்லாமையானது - பிறப்பு, கல்வி, குணம், செயல் முதலிய நலமெல்லாவற்றையுங் கெடுக்குமென்பதாம். இதனால் ஒழுக்கந் தவறுதலைப் பார்க்கினும் நாணமழிதல் மிகத் தீதென்பது கருத்து.

௯௰. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று,
(1020)

## ௧௦௩-ஆம் அதி.— குடிசெயல்வகை.

௩௦௬

(இ-ம்) தம்மனத்தில் நாணமில்லாத மனிதர் உயிருடையவர்போல உலகத்தில் நடந்து திரிதலானது எதுபோலுமென்றால், மரப்பாவையானது யந்திரக்கயிற்றினால் நடந்தோடித் திரிதலால் உயிருடையதாக உலகத்தாரை மயக்கினாற் போலுமென்பதாம். இதனால், நாணமில்லாதவர் உயிரிருந்தாலும் உயிரில்லாத மரப்பாவைக்குச் சமானமாவரென்பது கருத்து. இங்கே கூறிய நாணத்துக்கும் 97ஆம் அதிகாரத்திற் கூறிய மானத்துக்கும் வேறுபாடு எதுவென்றால், நாணமாவது பழிபாவங்களுக்குப் பயப்படுதல். மானமாவது, செல்வங் குறைந்த காலத்தும் நீதிநூலிற் கூறிய ஒழுக்கத்திற் சிறிதுங் குறைபடாதிருத்தலும் மேம்பாடு குறையுமாறு பிறரிடத்துத் தாழாதிருத்தலுமாம்,

மேம்பாடு—மேன்மை,

# 103-ஆம் அதி.—குடிசெயல்வகை.

அஃதாவது, ஒருவன் தான் பிறந்த குடியை உயரச் செய்தலின் திறம்.

க. கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில். (1021)

(இ-ம்) தான் பிறந்த குடியை மேன்மைப் செய்யவேண்டும் நல்ல காரியங்கள் செய்ய ஆரம்பித்து

படுத்தும் பொருட்டுச்
அக்காரியங்கள் இடை
யூறுகளால் முடியாவிட்டால் நான் இளைத்து
விட்டுவிடமாட்டேனென்று
திரும்பவும் விடாமற் செய்யும் முயற்சிப் பெருமைபோல
பெருமையாதொன்றும் இல்லை என்பதாம்.

ஒருவனுக்கு வேறு

உ. ஆள்வினையும் ஆன்ற அறிவும் எனவிரண்டி

னீள்வினையால் நீளுங் குடி.

(1022)

(இ-ம்) முயற்சியும், உயர்ந்த இயற்கையறிவோடு செயற்கை அறிவு மாகிய இரண்டினையுமுடைய இடையருத செயல் செய்யும் ஒருவன் பிறந்த குடியானது மேலும் மேலும் வளர்ந்து வருமென்பதாம். செயற்கையறிவு—நூல்கள் படித்தலாலாகிய அறிவு. மேலு மேலும் வளர்தல்—சந்ததி பரம்பரை யாக விருத்தியாகி வருதல். செயல்—தொழில். முயற்சி—இவவிடத்து இன் னது செய்தால் இன்னதாமென்று நினைக்கும் மன எழுச்சி.

௩. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ மடிதற் றுத் தான்முந் துறும்.

(1023) ௩௯௰ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) என்குடியை யுயரச் செய்வேனென்று சொல்லி, அதற்கேற்ற காரியங்களில் முயற்சி செய்வா னொருவனுக்குத் தெய்வம் தன் ஆடையை யிறுக உடுத்திக்கொண்டு முற்பட்டு வந்து நின்று வேண்டும் உதவிகளைச் செய்யும் என்பதாம். ஆடையை யிறுக உடுததிக்கொள்ளுதல் எதற்கென்றால், விரைந்தோடி வரும்போது நழுவிக் கீழேவிழாமலிருத்தற்கு என்க. இதனுல் முயற்சியுடையவனுக்குத் தெய்வபலம்

அதிகமென்பது நன்றாக விளங்கு கின்றது காண்க. தெய்வம்—அறக்கடவுள்.

ச. சூழாமற் றானே முடிவெ ய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.
(1024)

(இ-ம்) தம்குடிப் பெருமையை யுயரச் செய்தற்கு ஆகும்வினையை (காரியத்தை) தாமதியாமல் விரைந்து செய்யமுயற்சி செய்வார்க்கு அவ்வினை முடிக்குந்திறம் அவர் ஆராயவேண்டாமல் தானேமுடியு மென்பதாம். தானே முடியுமென்றது எதனாலென்றால், மேலே தெய்வந் துணையாக முந்துறு மென்று கூறியதனால் என்க. முயற்சி செய்வார்க்கு—எண்ணுவார்க்கு.

ரு. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

(1025)

( இ-ம் ) அறத்துக்கும் நீதிக்கும் மாறுபாடாகிய குற்றங்களைச் செய்யா தவனாய்த் தன் குடியை நற்செயல்களால் உயரச்செய்து வாழ்வானை அவனுக்குச் சுற்றமாக விரும்பி உலகத்தார் சூழ்வரென்பதாம். உலகத்தார் சூழுதல் எதற்கென்றால், தாமும் அவன் செய்யும் நன் னெறியை உறுதியாகக் கைக்கொண்டு பயனடைதற்கு

என்க. சுற்றம்—சூழஇருப்பவர்.

சு.

நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல்.

(1026)

(இ-ம்) ஒருவனுக்கு நல்ல ஆண்மையென்று நன்குமதித்து உலகத்தார் உயர்த்திச் சொல்லப்படுவது எதுவென்றால், தான்பிறந்த குடியிலுள்ளவரைச் செல்வமுதலிய நலத்தால் உயரச்செய்து தன்சொல்வழி நடக்கச்செய்து ஆளுங்குணமென்பதாம்.

எ. அமரகத்து வன்கண்ணர் போலத்
தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை.
(1027)

(இ-ம்) போர்க்களத்தில் யுத்தஞ்செய்யச் சென்ற வீரர் பலராயிருந்தாலும் எதிர்த்துச் சண்டை செய்யும் பகைவர்விடும் ஆயுதங்களைத் தம்மார்பிலே

கoரு-ஆம் அதி.—குடிசெயல்வகை.

தாங்குதலானது அஞ்சாமையுடைய வீரரிடத்தானற்போல நல்லகுடியிற் பிறந் தார் பலரானலும் அக்குடி யின் பாரத்தைத் தாங்குதலானது தாங்கத்தக்க வல்லமையுடையாரிடத் தேயா மென் பதாம். பாரந்த ாங்குதல்—தம் குடியிலுள் ளாரை எந்தவிதத்தும் வருந்தாமல் மகிழச்செய்து உயர்த்தல்.

௮. குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் க ருதக் கெடும்.

(1028)

(இ-ம்) தம் குடியினை யுயரச்செய்பவர் உயர்தற்காகச் செய்யுஞ் செய லையே நோக்கவேண்டும். அப்படி நோக்காமல் காலத்தை நோக்கிச் சோம்ப லாயிருந்து இது செய்வது நமக்குத் தகாதென்று மானத்தையுங் கருதுவரா னல் அவருடைய குடி கெடுமென்பதாம். எனவே, ஒன்றையுங் கருதாமல் இடைவிடாத முயற்சி செய்யவேண்டுமென்பதாயிற்று. காலத்தை நோக்கல்- இது வெய்யிற்காலம், இது பனிக்காலமென் றெண்ணுதல். மானங்கருதல்- இக்குடியிலுள்ளார் யாவரும் இன்பமுற்றிருக்க இக்காலத்து நான்மட்டுமோ துன்பப் படுவதென்று நினைத்தல்.

௯. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு. (1029)

(இ-ள்) மூவகைத் துன்பமும் பொருந்துதற்கு இடமாகிய தன்குடியை அத்துன்பங்கள் பொருந்தாமற் காக்க முயற்சி செய்வானது உடம்பானது அம் முயற்சித் துன்பத்தினை நிறைக்கும் ப த்திரமாம். அவ்வளவேயல்லாமல் இன் பந் தங்குதற்கு இடமாவது இல்லையோ என்பதாம். எப்படியென்றால், குடியையுயரச் செய்பவன் என்குடி முழுவதும் இன்பமுற்று உயரவே நான் இம் மைப்பயனும் மறுமைப்பயனும் அடைதலால் இம்மெய்வருத்தம் எனக்கு நன் றென்று முயற்சித் துன்பத்தைப் பொறுக்கும் அறிவுடையானுக்கு அத்துன் பம் எந்நாளும் நீங்காமையை நோக்கி இடும்பைக்கே கொள்கலம் அவனுடம் பென்பதாம் என்க. மூவகைத் துன்பமாவன-இடம், பொருள், ஏவல் என்று மூன்று மில்லாமையால்வரும் மூன்றுவிதத் துன்பங்கள். அவை-காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றால் வருவனவாம்.

௧0. இடுக்கண்கால் கொன்றிட வீழு

மடுத்தூன்றும்
நல்லா ளிலாத குடி.

(1030) (இ-ம்) தம் குடிப்பிறந்தாராகிய முதலை (அடித்தூணை) துன்பமாகிய கோடரி புகுந்து வெட்டிச்சாய்க்க யாதொரு ஆதாரமுமில்லாமல் கீழே விழுந்து



விடும். அந்தக்காலத்து ஆதாரமாகியவற்றைக் கொடுத்துத் தாங்கவல்ல நல்ல ஆண்மகன் பிறவாத குடியாகிய மரம் என்பதாம். ஆதாரம்—தாங்குந்தன்மை யுடையது. அஃதாவது வந்த துன்பத்தை விலக்குதற்கேற்ற பொருள். எப்படி யென்றால், தம் குடியைத் தாங்குவார், தங்குடியிலுள்ளார் உணவு ஆடை ஆபரணம் வீடு முதலிய எந்தெந்தப் பொருளால் துன்பமடைவாரோ அந்தந்தப் பொருளைக் கொடுதது அந்தத்துன்பத்தை விலக்கல் என்பதாம்.

---

## 104-ஆம் அதி.—உழவு.

அஃதாவது, வேளாளராகிய வைசியருக்குப்

பெரும்பாலும் உரிய உழு தற்றொழில்.

க. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனால்
உழந்து முழவே தலை.

(1031)

(இ-ம்) உலகத்திலுள்ளார் உழவு தொழிலால் வரும் சரீர வருத்தத்தை யுத்தேசித்து வேறு வேறு தொழில்களைச் செய்து திரிந்தும் முடிவில் உழு தொழிலுடையார் வசப்பட்டே உணவுப்பொருள்கள் பெற்று ச் சீவிப்பா ராயினும் ஆதலால் மிகுதியாக வருத்தமடைந்தாலும் முதன்மையான தொழில் உழவு தொழில் என்பதாம். எனவே, வேறு தொழில்களால் வருத்தமில்லாமல் வேண்டிய பொருள்களைப் பெற்றாலும் வருத்தமுற்றுப் பெறும் உணவுப் பொருள்களைத் தரும் உழவு தொழிலே சிறந்ததென்பது கண்டுகொள்க.

உ. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

(1032)

(இ-ம்) அவ்வுழுதொழிலைச் செய்யமாட்டாமல் சிரமத்தை யுத்தேசித்து வேவ்வேறு தொழில்களைச் செய்வாரெல்லாரையும் உணவுப் பொருள்களைக் கொடுத்து அவருயிரை நிலைநிறுத்துதலால் அவ்வுழவுதொழில் வல்லார் உலகத் தாராகிய தேர்க்கு அச்சாணியென்பதாம். இதனால், அச்சாணியில்லாமல் தேர் நடவாமைபோல உழுதொழில்

செய்வாரையில்லாமல் உலகத்தார் சீவிக்க மாட்டாரென்பது கருத்து. உ ழவரென்பது-தாமே உழுவார்க்கும் கூலி கொடுத்து உழுதொழிலைச் செய்விப்பார்க்கும் பொருந்தும்.தேர்செய்தானென் றால், தேரைச்செய்த த ச்சனுக்கும், தேரைப் பொருள் கொடுத்துச் செய்வித்த அரசனுக்கும் பொருந்துதல்போ லெனக.

## ௧0௩-ஆம் அதி.—உழவு.

ருக௩

ந. உழு துண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழு துண்டு பின்செல் பவர்.
(1033)

(இ-ம்) எல்லாரும் உண்ணும்விதம் உழவு தொழிலைச்செய்து அதனால் விளையும் உணவுகளைத் தாமும் உண்டு ஒருவரால் ஏவப்படாமல் சுதந்திரராய் வாழ்பவரே வாழ்க்கைக்குரியவர். இவரல்லாதவரெல்லாம் பிறரை வணங்கி அவர்பின் சென்று, அவருக்குக் கீழ்ப்படிந்து அவர் கொடுப்பதைக்கொண்டு தாம் உண்டு, தமக்குரிய சுதந்திரத்தை யிழந்து பரதந்திரராய் வாழ்பவர் என்ப தாம். இதனால் உழவு தொழிலைப்போல உயர்ந்தது ஒரு தொழிலும் இல்லை யென்பது கண்டு கொள்க.

ச. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்

அலகுடை நீழ லவர்.

(1034)

(இ-ம்) உழவு தொழிலால்வரும் நெல்வளமுடைய தண்ணளியுடையார் அநேக அரசர் குடை நிழலினிடத்துள்ள உலக முழுவதையும் தம் அரசனது குடை நிழலினிடத்தே அடங்கியிருக்கக் காண்பர் என்பதாம். இதனால் உழு தொழிலால்வரும் உணவுப் பொருள் கிடையாத நாடெல்லாம் அவ்வுணவுப் பொருளை விரும்பி அப்பொருள்களையுடைய நாட்டில்வந்து தங்குமென்று கண்டு கொள்க. நாடென்பது-நாட்டிலுள்ளாரை. இக்கருத்துப்பற்றியே "இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும் உழலிடை விளைப்போர்" என்றார் பிறரும் (சிலப்பதிகாரம் நாடுகாண்காதை அடி 149) தண்ணளி-தம் நெல் முதலிய உணவுப்பொருள்களை எல்லாருக்குங் கொடுக்கும் அன்பு.

ஞ. இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

(1035)

(இ-ம்) தம்கையால் உழவுதொழி லைச் செய்து அதனால் விளையும் உண வுப் பொருள்களை யுண்டுவாழும் இயல்பினையுடையவர் ஒருவரிடத்திற்போய் எமக்கொரு பொருள் வேண்டுமென்று யாசிக்கமாட்டார். அம்மட்டோ! தம் மிடத்தில்வந்து யாசிப்பவர்க்கு அவர் கேட்டதொரு பொருளை ஒளியாமல் கொடுத்தலும் செய்வர் என்பதாம்.

உணவுப்பொருள்கள்—நெல், காய், கனி முதலியவைகள். இதனால் எல்லாச் செல்வமும் உடையவராதல் அல்லாமலும் ஈதற் சிறப்பும் உடையவராவரென்பது கண்டு கொள்க.

௬. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.
(1036)

40



(இ-ம்) உழுதொழிலுடையாரது கையானது அத்தொழிலைச் செய்யாமல் அடங்கியிருக்குமானால், எல்லாரும் விரும்பும் உணவுப் பொருளும் எல்லாந்துறந்தோமென்று சொல்லும் துறவிகட்கு அத்துறவறத்தினிடத்து நிற்றலும் உண்டாவன இல்லையென்பதாம். இதனால், உழவர் உழுதொழிலில்லாமையால் உணவில்லாமையும், அஃதில்லாமையால் தாம்உண்டலும், இல்லறஞ் செய்தலும், இல்லறத்தின் வகையாய துறவறத்தார்க்கு வேண்டுவன கொடுத்தலும் நடவாதிருக்குங் காரணத்தால் இம்மை மறுமை வீடு என்னும் மூன்று பயன்களும் உண்டாகா என்பதை யூகித்தறிந்து கொள்க.

எ. தொடிப்புழுதி கஃசா உணக்கிற்
பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும் .
(1037)
(இ-ம்) ஒரு நிலத்தினையுழுத சமுசாரியானவன் ஒருபல நிறையுள்ள புழுதி காற்பலநிறையுள்ளதாகக் காயவைப்பானுனல் அந்நிலம் ஒருபிடிக்குள் ளடங்கிய எருவாகிய உரமுங் கூட வேண்டுதலில்லாமல் பயிர்கள் அடிபெருத்து நன்ருகவிளையும் என்பதாம்.

அ, ஏரினு நன்ரு லெருவிடுதல் கட்டபி
னீரினு ந ன்றதன் காப் பு.
(1038)
(இ-ம்) மேலே சொல்லியபயிருக்கு உழவைப் பார்க்கிலும் எரு (உரம்) போடுதல்நல்லது; களையெடுத்தபின் நீர்பாய்ச்சுதலைப் பார்க்கிலும் கள்ளமாடு முதலியவை பயிரை அழித்துவிடாமற் காப்பதுநல்லது என்பதாம். ஆகவே, உழுதல் உரம்போடுதல் களையெடுத்தல் நீர்கட்டுதல் பயிரைக்காத்தல் ஆகிய இவ்வைந்தும் வேண்டுமென்பது கருத்து.

௯. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலர்
தில்லாளி னூடி விடும்.

(1039)

(இ-ம்) நிலத்திற் குரியவன் அந்நிலத்தினிடத்துச் சென்று செய்ய வேண்டிய வேலைகளைச்செய்யாது சோம்பலுற்றிருப்பானுனால் அந்நிலம், அவன் மனைவியைப் போலத் தன்னிடத்துப்பிணங்கி வெறுத்துத்தன்னுள் விளையும் பொருள்களைக் கொடாமலிருந்துவிடு மென்பதாம். இதில் மனைவியானவள் தன்னிடத்தில் வந்து தனக்குச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்யாமல் வேறிடத்துப் போயிருந்தபோது தன்னுடைய நாயகனை வெறுத்து ஊடல் செய்து தன்னிடத்து உண்டாகும் இன்பத்தைக் கொடுக்கமாட்டாளென உவமையை விரித்துப் பொருள் கண்டு கொள்க.

## ௧0௫-ஆம் அதி.—நல்குரவு. ௱௧௫

௧0. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணில்
நிலமென்னு நல்லாள் நகும்.

(1040)

(இ-ம்) நாம் தரித்திரத்தையுடையோம் இனியென்ன செய்வோ மென்று சொல்லிக்கொண்டு சோம்பலாயிருப்பாரைக் கண்டால், உழுவார் யா வருக்கும் வேண்டும்பயன்களைக் கொடுக்கும் நல்லவளாகிய பூமிதேவிதன்னுள் ளே அவமதித்துச் சிரிப்பள் என்பதாம், எப்படியென்றால், எவர்வந்து உழுது பயிர்செய்தாலும்

அவர்க்குவேண்டும் பொருள்கொடுத்து உதவிசெய்திருக்கும் நம்செய்கையைக் கண்டிருந்தும் உழவுதொழில் செய்து வேண்டும்பொருள் களைப்பெற்றுப் பிழைக்கமாட்டாமல் தரித்திரப்பட்டிருக்கின்றாரே யென்று இரக்கத்தால் அவமதித்துப் பூமிதேவி சிரிப்புள் ளன்க,



## 105-ஆம் அதி.—நல்குரவு.

அஃதாவது, உண்ணப்படுவன எல்லாப்பொருள்களும் இல்லாமை; தரித்திரம் அல்லது வறுமை.

க. இன்மையி னின்னாத தியாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. (1041)

(இ-ம்) ஒருவனுக்கு வறுமை (தரித்திரம்) போலத்துன்பஞ் செய்வது எதுஎன்று கேட்டால், வறுமைபோலத் துன் பஞ்செய்வது அவ்வறுமையே யல்லாமல் வேறில்லை என்பதாம். எனவே, துன்பஞ்செய்யும் பொருள்களில் வறுமைக்குச் சமானமானதில்லை யென்பதுகருத்து. சமானமானது ஒன்றில்லை யெனவே, அதற்குமேம்பட்டது இல்லையென்பது சொல்லாமலே விளங்கும்.

உ. இன்மை யெனவொரு பாவி மறுமையும்
இம்மையு மின்றி வரும்.
(1042)

(இ-ம்) வறுமையென்று சொல்லப்படுவதாகிய ஒருபாவி வரும்போது அவனுக்கு மறுமையின்பமும் இம்மையின்பமும் இல்லாமற்போக வந்துசேரும் என்பதாம். எப்படியென்றால், கொடுத்துப் புகழ்பெறுதலாகிய இம்மையின் பத்திற்கும், கொடுத்தலோடு வேறு அறங்களையுஞ்செய்து மறுபிறப்பில் உயர்ந்த செல்வமுதலிய நலங்களையடைதற்கும் இடமில்லாமையால் என்க.

ங. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.
(1043)

ருகங திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) வறுமையென்று சொல்லப்படும் ஆசையானது தன்னால் அன்பு செய்யப்பட்டவருடைய பழையகுடியிலுள்ளார் தன்னிடத்தில் வருதலையும் அவர் விரும்பிவருதற்கேற்ற இனியசொல்லினையு ஒருமிக்கக்கெடுக்கும் என்பதாம். எப்படியென்றால், தரித்திரமுடையாரிடத்துப் போனால் அவர் நம்மை யுபசரிப்பதற்கு வருத்தப்படுவரேயென்று உறவினர்,

சிநேகர் தாமே வரமாட் டார். அவர்வரவில்லையே யென்று வருந்தி அவரைத்தரித்திரர் இனிய சொற் கள் சொல்லி அழைக்கமுடியாதென்று சொல்லுக. தோல்என்பது "இழு மென் மொழியால் விழுமியது நுவறல்" என்றார் ஆசிரியர் தொல்காப்பியனார். அஃதாவது—இனியஓசையாற் சிறந்த பொருளைச் சொல்லுதல். ஆகவே, சொல்லென்பது கண்டுகொள்க. வறுமையை ஆசையென்றுகூறியது என்னவென்றால், ஆசையுடையவனுக்கு ஆசைப்பட்டபொருள் கிடையாவிட்டால் அதுவே வறுமையாமாதலால் வறுமையை ஆசையென்று நாயனாருளிச்செய் தனர்.

ச. இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.
(1044)

(இ-ம்) இழிவுவருதற்கு ஏதுவாகிய சொற்பிறவாத குடிப்பிறந்தாரிடத் தும் அச்சொற்பிறத்தற்கு ஏதுவாகிய சோர்வினை வறுமையானது உண்டாக் கும் என்பதாம். இழிவு வருதற்கு ஏதுவாகிய சொல்— பிறரிடத்துப் போய் எனக்கு ஒன்று கொடுக்கவேண்டுமென்று கேட்குஞ்சொல். இச்சொல் இழி வென்பதற்குதாரணமாக "இளிவென எண்ணி மானம் பூண்டவர் இறப்பர் கொல்லோ" என்னுஞ்செய்யுளைக் காண்க. (நைடதம் அன்னத்தைக் கண் ணுற்றபடலம்-18) சோர்வு—தாம் படுந்துன்பமிகுதியால்

ஒரோ இடத்துத்தம் குடியின் சிறப்பைமறந்து யாசிக்கநினைத்தல்.

ரு. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்

துன்பங்கள் சென்று படும். (1045)

(இ-ம்) தரித்திரமென்று சொல்லப்படும் ஒருதுன்பத்துள்ளே பலதுன் பங்களும் வந்துவிளை யும் என் பதாம். விளைதல்—வந்ததுன்பங் குறையாமல் மேலும்மேலும் விருத்தியடைதல். பலதுன்பங்களாவன—வறுமைகாரணமாக, வயிற்றின் கொடுமைக்காற்றாமல் செல்வர்வாயிலை நோக்கிச் செல்லுதற்றுன் பமும், அவரைச் சமையம்பார்த்துக் காணுதற்றுன்பமும், கண்டு ஏதேனுங் கேட்க அவரில்லை யென்று சொன்னவுடன் உண்டாகுந்துன்பமும், இல்லை யென்னமல் அவர்கொடுக்கச் சொன்னாலும் அவர் வேலையாளரிடத்திலிருந்து வாங்குதற்றுன்பமும், அதன்மேல் அவர்கொடுத்ததை வாங்கிக்கொண்டு வந்து

கoரு-ஆம் அதி.—நல்குரவு. ௲௬௭

உணவுப்பொருள்களைச் சேகரிக்குந்துன்பமும் முதலாயின என்க. மூலத்தில் குறையென்றது இசை நிறைச்சொல்.

சு, நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினு
நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும்.
(1046)

(இ-ம்) உண்மை நூற்பொருளை நன்முக அறிந்து சொன்னாலும் வறுமையுடையார் வாயினின்று வருஞ்சொல்லின் பொருளானது பயன்படாது என்பதாம். எப்படியென்றால், இவர் தரித்திரமுடையாதலால் இவருடைய சொல்லெலாம் விரும்பிக்கேட்டால் தாக்ஷணியம் உண்டாகி இவர்கேட்டதொன் றை நாம் கொடுக்கநேரிடு மென்று பயந்து கேட்பார்பலரும் புறக்கணித்து விடுதலால் என்று கண்டுகொள்க.

எ. அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.
(1047)

(இ-ம்) தருமத்தோடு சம்பந்தமில்லாத தரித்திரம் ஒருவனுக்கு உண் டானல் அவனைப்பெற்ற தாயினுலும் பிள்ளையென்று நினையாமல் அந்நியனைப் போல நினைத்து வெறுத்து அவன் ஆதரிக்கப்படமாட்டா னென்பதாம். இக் கருத்துப் பற்றியே "இல்லானை—இல்லாளும்

வேண்டாள்மற் றீன்றெடுத்த தாய்வேண்டாள்'' என்றார் ஒளவையார். (நல்வழி-34) தருமத்தோடு சம்பந்த மில்லாத தரித்திரமென்றது, செல்வம் தருமஞ்செய்தற்குக் காரணமாதல்போலத் தருமஞ் செய்தற்குக் காரணமாகாது தரித்திரமென்று அறிதற்குஎன்க. தரித்திரனைப்பெற்ற தாயும் பேணமாட்டாளென்றால் வேறு பேணுவார்யாவரிருக்கின்றார், ஒருவருமில்லை யென்பது கருத்து.

அ. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலும் நிரப்பு .

(1048)

(இ-ம்) நேற்றைத்தினம் என்னைக் கொலை செய்தாற்போலும் வந்து துன்பஞ் செய்தவறுமையானது இன்றைத்தினமும் என்னிடத்தில் வந்து துன்பஞ் செய்யலாவதோ என்பதாம். இது, நேற்று மிகுந்த வருத்தப்பட்டு வயிற்றுப்பசியைப் போக்கிய ஒருவன் சொல்லியது. மிகுந்த வருத்தம் 1045-ஆம் குறளிற் சொல்லிய வருத்தங்கள்.

கூ. நெருப்பினுட் டுஞ்சலு மாகும் நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

(1049) ௱க௪௯ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்,

(இ-ம்) தீயிலகப்பட்டானொருவன்

மந்திரங்களாலாவது மருந்துகளாலாவது அத்தீயின் நடுவிற்படுத்து உறங்குதலும் கூடும்; வறுமை வந்த இடத்து யாதொரு உபாயத்தினாலுங் கவலையில்லாமல் உறங்க முடியாதென்பதாம். இதனால் தீயினு மிகக்கொடியது வறுமை (தரித்திரம்) என்பது கருத்து.

கO. துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(1050)

(இ-ம்) உண்ணுதல் முதலிய அநுபவிக்கப்படும் பொருள்களில்லாமல் வறுமைப்பட்டார் முழுவதுந் துறந்து விடுதலேயாயிருக்கவும் அப்படிச் செய்யா திருத்தலானது அந்நியர் வீட்டிலுள்ள உப்பிற்கும் பழங்காடிக்கும் யமனாகும் என்பதாம். அஃதாவது—பிறர்வீட்டிற்போய் உப்பும்பழங்காடியும் பசிநிமித்தம் யாசித்து வாங்கியுண்ணுதல். முழுவதுந் துறத்தலாவது—தாமே துறக்க வேண்டிய சுற்றத்தாரெல்லாம் தமது வறுமையால் அவரே தம்மைத் துறந்து விடவும் தமக்கு மிஞ்சி நின்றதாகிய தம்முடம்பினையும் துறத்தல் என்பதாம். துறத்தல்—விட்டு நீங்குதல். இதனால், மானமிழந்து யாசித்தலைப்பார்க்கிலும் உயிரை விட்டுவிடுதல் நல்லதென்று கண்டுகொள்க.

முழுவதுந் துறப்பார் உடம்பையுந் துறக்கவேண்டுமென்பது. 345-ஆவது திருக்குறட்பொருளால் நன்கு விளங்கும்.

---

## 106-ஆம் அதி.—இரவு.

அஃதாவது—மானம் நீங்காமல் யாசித்தலானது யாசியாமையோடொத் தது ஆதலால் அவ்விதம் யாசிக்கலாமென்பது.

க. இரக்க இரத்தக்கார்க் காணிற் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று.
(1051)

(இ-ம்) ஒருவர் யாசித்தற்குப் பொருத்தமுடையாரைக் கண்டால் அவரிடத்து யாசிக்கவேண்டும்; யாசித்தால், கொடுப்பார் தமக்குள்ள பொருளை ஒளிப்பாரானால் அவர்க்குப் பழியுண்டாகுமல்லாமல் யாசிக்கும் அவர்க்கு அப் பழியுண்டாகமாட்டாது என்பதாம். பொருத்தமுடையார் யாரென்றால், யாசிப்பவர் வாயினாற் கேளாமல் அவர் குறிப்பறிந்து வேண்டும் பொருள்களை இல்லையென்னாமற் கொடுப்பவரென்க. யாசிப்பவர்க்குப் பழியில்லாமல் கொடுப்பவர்க்குப் பழிவருவது எப்படியென்றால், குறிப்பறிந்து கொடுக்குங்

குணமுடையார், கொடுக்கும் பொருளை வைத்துக்கொண்டு கொடாமல் மறைப்

## ௲0௬௬-ஆம் அதி.—இரவு.

ஈக்க

பாராஜல் பரி சுத்தமாகிய வெள்ளிய ஆடையினிடத்து அழுக்கேறல்போல் அவரிடத்துக் குற்றம் விரைந்து வந்து சேருதலென்று கண்டுகொள்க.

உ. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறுஅ வரின்.

(1052)

(இ-ம்) ஒருவன் யாசித்த பொருள்கள் கொடுப்பாரது அறிவுடைமையால் அவனுக்கு யாசித்தற்றுன்பமில்லாமற் கிடைக்குமாஜல் யாசித்தலும் இன்பத்துக்கேதுவாகும் என்பதாம். கொடுப்பார்க்கு அறிவுடைமையாவது, யாசிப்பவர் வாயாற் கேளாமல் அவர் குறிப்பறிந்து, இரந்தோர்க்கு ஈவது நமக்குக் கடமையென்று கொடுத்தல். இவவுண்மைகளை "இரந்தோர்க்கீவது முடையோர்கடனே" என்றதஜலும், "குறிப்பறிந்து ஈதலே கொடை" என்றதஜலுங் கண்டுகொள்க. இவற்றுள் முன்னையது வெற்றிவேற்கை. பின்னையது நைடதம் நளன் தூதுப்படலம் 19. இரத்தற்றுன்பமாவது—யாசிக்கும் போது பற்களை வெளியே தெரியக்காட்டியும் தம் வருத்தத்தை முகப்பொலிவிழந்து சுருக்கித் தெரிவித்துப்

பலவாறு சொல்லி இரண்டு கைகளையும் விரித்துத் தம் மரியாதையைவிட்டு மானத்தைக்கெடுத்துக்கொண்டும் நிற்றல், இதற்குச் சாக்ஷியாக "பல்லெலாந் தெரியக் காட்டிப் பருவரல் முகத்திற் கூட்டிச், சொல்லெலாஞ் சொல்லி நாட்டித் துணைக்கரம் விரித்து நீட்டி, மல் லெலா மகல வோட்டி மானமென் பதனை வீட்டி, இல்லெலா மிரத்த லந்தோ இழிவிழி பெரித ஞான்றும்" என்னும் செய்யுளைக் காண்க. (குசேலோபாக்கியானம்)

௫. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேள ருடைத்து.

(1053)

(இ-ம்) உள்ளதை யொளியாத மனத்தோடு தாம் செய்யவேண்டிய கடமையை அறிவாராகிய வள்ளற்றன்மையுடை யவர்க்கு முன்னே நின்று யாசித்தலும் யாசிப்பவர்க்கு ஒரு அழகுடையதென்பதாம். செய்யவேண்டிய கடமையாவது, கொடையாளிகள் கொடைத்தன்மையா கிய (யாசகரது) குறிப் பறிந்து கொடுத்தல். அவர் முன்னே நின்று யாசித்தல் யாசகர்க்கழகாவது, தம் வாயினால் மானமிழந்து கேட்குஞ் சிறுமையடையாமல் தம் குறிப்பா லறிந்து அவர் கொடுக்க வாங்கிவருதல்.

௬. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவினுந் தேற்றாதார் மாட்டு.

(1054)

(இ-ம்) தம்மிடத்துள்ள பொருள்களைச் செர்ப்பனத்திலும் மறை யாமற் கொடுக்கும்

கருணையுடையாரிடத்துப் போய் நின்று ஒருவன் யாசித்



தலும், அவன் வறியவருக்கே கொடுத்தலைப்போலுமென்பதாம். எப்படி யென்றால், கொடுக்குங் குணத்தையறிந்தவர் யாசகர்வந்து நின்றவுடனே குறிப் பறிந்து கொடுத்தலால் யாசகர்க்கு முன்னுள்ள புகழ்கெடாதிருத்தலும் பின்னுள்ள யாசித்தலாகிய இழிவடையாதிருத்தலுமாகிய இரண்டு முடை மையால் என்க. இத்திருக்குறளும் "குறிப்பறிந்தீதலேகொடை" என்பதை வற்புறுத்தியவாறு கண்டுகொள்க.

ரு. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. (1055)

(இ-ம்) வாயினால் தம்துன்பத்தைச்சொல்லி யொன்றைக்கேட்டலில் லாமல் முன்னேநிற்றல் மாத்திரத்தாலே யாசகர் உயிரைக்காத்தற் பொருட்டு யாசகத்தொழிலைக் கைக்கொண்டுவருத லெதனாலென்றால், தமக்குள்ளதை ஒளித்தலில்லாத கொடையாளிகள் சிலர் இப்பூமியினிடத்து இருத்தலால் என்பதாம். எனவே,

அச்சிலரும் இல்லையாளுல் யாசகர் மானத்தை நீக்க மாட்டாமையால் உயிரை விட்டுவிடுவரென்பது கருத்து. இதனால், உயிரைப் பார்க்கினும் மானஞ்சிறந்த தென்பது காண்க.

சு. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.
(1056)

(இ-ம்) தமக்குள்ளதை ஒளித்தலாகிய நோயில்லாரைக் கண்டால் மான மாகியமணியை யிழந்துவிடாமல் யாசிப்பவர்க்குத் தரித்திரத்தா லுண்டாகுந் துன்பங்களெல்லாம் ஒருமிக்கக் கெட்டுவிடுமென்பதாம். உள்ளதை ஒளித்த லாகிய நோயில்லாரைக் காணில் என்றதனால், அவரைக் காண்பது அரி தென்பது கண்டு கொள்க. ஏனென்றால், உள்ளதை ஒளித்தலாகிய அந் நோயில்லார் உலகத்தில் மிகச் சிலராதலரெனக. தரித்திரத்தா லுண்டாகுந் துன்பங்கள் அநேகம். அவற்றை 1052-ஆவது வசனத்திற் கண்டுகொள்க.

எ. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ் ந்துள்ளம்
உள்ளு ளுவப்ப துடைத்து.
(1057)

(இ-ம்) யாசிக்கும் போது தம்மை யவமதித்து

இகழ்ச்சியர்கப் பேசாமல் பொருள் கொடுப்பாரைக் கண்டால் யாசிப்பவாது மனமானது மகிழ்ச்சி யடைந்து உள்ளேயுவக்கும் தன்மையுடை யது என்பதாம். மகிழ்தல்—வறுமை நீங்குதல். உவத்தல்—மெய் வாய் கண் மூக்கு செவி என்கிற ஐந்தாலும் பேரின்பமடைந்தாராக நினைத்தல். இவ்வளவு நினைத்தற்குக் காரணம், தாம் முன்னடைந்த வறுமைத்துன்பம் நீங்கப் பெற்றதனுலாய சுகம்.

## கூ௦௭-ம் அதி.—இரவச்சம்.

௱௨௧

அ. இரப்பாரை யில்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.
(1058)

(இ-ம்) தரித்திரத்தால் வருத்தப் பட்டு வந்து யாசிப்பாரில்லையானுல் குளிர்ந்த இடத்தையுடைய பெரிய பூமியிலுள்ளார் வருதலும் போதலுமெது போலவென்றுல், உயிரில்லாத மரப்பாவை யந்திரக்கயிற்றுல் நடந்துசென்று வந்தாற்போலும் என்பதாம். எப்படியென்றுல்,

யாசிப்பவருக்கு வேண்டுவன கொடுத்துப் புகழும் புண்ணியமும் பெறுதல் மரப்பாவைக்கில்லையாதல் போல உலகத்தார்க்கு இல்லையாதலாலென்க. எனவே, கொடுத்துப் புகழ்பெறாத வர் உயிரிருந்தும் உயிரில்லாத மரப்பாவைக் கொப்பாவரென்பது கருத்து.

கூ. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோள்
மேவா ரிலாஅக் கடை.
(1059)

(இ-ம்) தம்மிடத்தில்வந்து யாசித்து ஒரு பொருளை வாங்கிக்கொள்ளும் யாசகரில்லாத இடத்துக் கொடுக்கின்ற கொடையாளிகளுக்கு என்ன புகழுண்டாகு மென்பதாம். புகழ்பெறுதற்குக் காரணம் வறுமையால் வந்து யாசிப்பவராதலால் அவரையிகழ்ந்து வெறுக்கலாகா தென்பது கருத்து.

கo. இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி.
(1060)

(இ -ம்) கொடுப்பவருக்கு ஒரு சமையம் வேண்டியபொருள் கையி லில் லாதபோது யாசிப்பவன் அவரிடத்துக் கோபஞ்செய்யா திருக்கவேண்டும். வேண்டிய சமையம் கொடுப்பார்க்குப் பொருளில்லாதிருக்கு

மென்பதற்கு வேறுசாட்சி வேண்டுவதில்லை. யாசகனிடத்துள்ள தரித்திரமாகிய துன்ப மொன் றுமே போதுமான்சாட்சி என்பதாம். எப்படியென்றால், வறுமைத்துன் பத்தை யாசித்து எப்போதும் நீக்கிக்கொள்ளும் யாசகனாகிய தான் தற்போது நீக்கிக்கொள்ள முடியாமைபோல எப்போதும் கொடுத்தற்கு உதவும் பொருள் தற்போது கொடுத்தற்கு உதவாமை கொடுப்பாரிடத்து உளதாதலால் என்க.

---

## 107-ஆம் அதி.—இரவச்சம்.

அஃதாவது, மானம் நீங்கவரும் யாசித்தலுக்கு அஞ்சவேண்டு மென்பது. அஞ்சுதல்—பயப்படுதல்.

41

௲உஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

க. கரவா துவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.
(1061)

(இ-ம்) தமக்குள்ள பொருளை ஒளியாமல் இவர் நம்மிடத்து வரக் கிடைத்ததே பெரும்பாக்கிய மென்று

மகிழ்ந்து கொடுக்குங் கண்போலச் சிறந்த நண்பரிடத்தும் ஒருவன் யாசியாதிருந்து வறுமையடைதலானது யாசித்துச் செல்வமடைதலைப்பார்க்கிலும் கோடிபங்கு அதிக நன்மை யென்பதாம். உள்ளதை ஒளியாமல் மகிழ்ச்சியுடன் கொடுப்பாரிடத்து யாசித்தால் மானங்கெடாது என்பதல்லாமல், யாசித்துப் பெறப்பட்ட செல்வத்துக்கு வேறு பெருமையில்லை யாதலால் ஏதாவதொரு முயற்சியால் உயிரைப்பாது காத்தலே நல்லதென்பது கருத்து.

உ. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக உலகியற்றி யான்.

(1062)

(இ-ம்) இந்த உலகத்தைப் படைத்தவன் இதனிடத்து வாழ்கின்றவருக்கு முயற்சி செய்தலால் வரும் பயனைக் கொண்டு உயிர் வாழ்தலைப் படைத்தலோடு யாசித்தும் உயிர்வாழ்தலை விரும்பிப் படைத்தானாயின் அக்கொடியவனும் யாசித்து உயிர்வாழ்கின்றவரைப் போல எவ்விடத்துஞ் சென்று துன்பப் பட்டுக் கெடுவானாக என்பதாம். யாசகத் தொழிலைப் படைத்தவனைக் கெட்டுப் போம்படி ஆசிரியர் திருவள்ளுவர் சபிப்பாரானால் யாசகம் எவ்வளவு பெருங் கொடுமையுள்ளதென்று தெரிந்து கொள்க. ஒருவன் செய்த வினைக்குத் தக்கவாறு எத்தனையோ இழிதொழில்கள் படைப்பதாக இருந்தும்

அவற்றில் ஒரு தொழிலிற் புகுத்தாமல் அவற்றினுங் கொடுமையாகிய யாசகத்தில் புகுத்துவதே ஆசிரியருக்கு இவ்வாறு கோபம் வருதற்குக் காரணமாம். முயற்சி—தொழில்.

௩. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். (1063)

(இ-ம்) தரித்திரத்தால் வருந்துன்பத்தை யாசகஞ் செய்து நீக்கிக் கொள்வோமென்று நினைக்கும் வலிமையைப் போல வன்பாடு (முரட்டுத் தனம்) வேறில்லையென்பதாம். இதனால் ஒருவன் தரித்திரத்தை நீக்கிக் கொள்வதற்கு வழி யாசகமல்லவென்பது கருத்து.

௪. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு. (1064)

## ௱௭ஆம் அதி.—இரவச்சம்.

௲௬௰

(இ-ம்) உண்ணப்படும் பொருள்களெல்லாம் இல்லாத இடத்தும் அந்நியரிடத்திற் போய் யாசகஞ் செய்யாமலிருக்கும் அமைதியானது உலக மெல்லாம் ஒன்று சேர்ந்து தன்னுள் அடக்கிக் கொள்ளவேண்டுமென்று நினைத்து அடக்கினாலும் அதனுள்ளடங்காத பெருமையினையுடையது என்பதாம். இதனால், ஒருவன் எப்படிப்பட்ட வறுமைவந்தாலும் பிறரிடத்தில் யாசியாதிருக்கும் பெருமை எல்லா உலகத்தினும் பெரியது என்பது கருத்து. அமைதி—அடங்கியிருப்பது.

ரு. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.
(1065)

(இ-ம்) ஒருவனுக்கு முறையாகிய முயற்சியானது (தொழிலானது) கொண்டுவந்து கொடுத்த உணவானது தெளிந்த நீர்போலும் சமையல் செய்யப்பட்ட நெகிழ்ந்த கூழாயிருந்தாலும் தன் முயற்சியாற் பெறப்பட்ட உணவாதலால் அது அமுதமேயாகும். அதை உண்ணுதலைப் பார்க்கிலும் மேலான இனிய உணவு வேறில்லை என்பதாம். முறையாகிய முயற்சி—பாவம் வராத தொழில். நெகிழ்ந்த கூழென்றது—தாழ்ந்த உணவினும் தாழ்ந்த உணவென்றபடி.

சு. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.
(1066)

(இ-ம்) தண்ணீர் கிடையாமல் பெருந்தாகத்தால் இறக்கும் நிலைமை யுடைய ஒரு பசுவைக் கண்டு, அதன் உயிரைக்காக்க விரும்பி, "அறம் நோக்கி இப்பசுவுக்குத்தண்ணீர் தரல்வேண்டும்" என்று ஒருவன் பிறரிடத்தில் யாசித் தாலும் அவனுடைய நாவிற்கு இந்த யாசகத்தைப் போல இழிவு தருவது வேறொன்றில்லை என்பதாம். எனவே, ஒருவன் தருமஞ் செய்யவேண்டுமானால் தன் முயற்சியால் வந்த பொருளைக் கொண்டு செய்யவேண்டுமேயல்லாமல் பிறரிடத்து யாசகஞ் செய்து பொருள் பெற்றுச் செய்யக்கூடாதென்பது கருத்து. அறம்—தருமம்.

எ. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.
(1067)

(இ-ம்) யாசிப்பவரிடத்திலெல்லாம் யானொன்றை யாசிக்கின்றேன். அஃதாவது, தமக்குள்ள பொருளை ஒளித்து வைத்துக் கொண்டு என்னிடத் திலொன்றுமில்லையென்று சொல்வாரிடத்திற் போய் நீங்கள் யாசியாதிருக்க

வேண்டுமென்பதாம். ஏனென்றால், உள்ளதை ஒளித்து இல்லை யென்பா ரிடத்துப் போய் ஒன்று கேட்டால் மானங் கெட்டுப் போதலாலென்க. இதனால் உள்ளதை இல்லையென்னுமற் கொடுப்பாரிடம் யாசித்தலால் மானங் கெட, மாட்டாதென்பது கண்டுகொள்க. இது யாசகஞ் செய்தலின் கொடுமையால் வருந்திய யாசகனொருவன் யாசிப்பவருக்குக் கூறியது.

அ. இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். (1068)

(இ-ம்) தரித்திரமாகிய கடலை யாசித்தலாகிய தோணியால் நீந்தலா மென்றெண்ணி இன்பங் கொடுக்கமாட்டாத அத்தோணியிலேறி நடத்தும் போது கொடுப்பார் உள்ளதை ஒளித்துக் கொள்ளுதலாகிய பார் (பாறை) மோதுமானால் அத்தோணி யுடைந்துவிடும் என்பதாம். இன்பங் கொடுக்க மாட்டாதென்றது, யாசகத்தால் வறுமையைப் போக்கமுடியாதென்றபடி. இதனால், வறுமை நீக்குதற்கு யாசகம் ஏற்ற தொழிலாகாதென்பது கண்டு கொள்க.

கூ. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்.
(1069)

(இ-ம்) பொருளுடையார் முன்னே அப்பொருளில்லாதார் சென்று மானமிழந்து யாசித்து நிற்றலின் கொடுமையை நினைத்தால் எம்முள்ளம் உருகிவருந்திநிற்கும். அப்படி யாசித்து நிற்பார்க்கு ஒன்றுங் கொடாமல் உள்ளதை ஒளித்துக் கொள்வார் ஒளிப்பை நினைத்தால் மேலே சொல்லியபடி உருகுமளவு காலங்கூட இல்லாமல் எமது மனங் கெட்டுவிடுமென்பதாம். இதனால், யாசிப்பதைப் பார்க்கிலும் யாசிப்பார்க்குக் கொடுப்பார் ஒளிக்குங் கொடுமை பெரிதென்று கண்டுகொள்க. இது, யாசித்த இடத்து ஒளித்துக் கொண்டதைக் கண்டவர் சிலர் பெருந் துன்பமடைந்து சொல்லியது. இத் திருக்குறட் கருத்துப்பற்றியே "இரவினை, யுள்ளுங்கால் உள்ள முருகுமால்" என்றார் பிறரும். (நாலடியார் இரவச்சம் 15)

கO. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒ முயிர்.
(1070)

(இ-ம்) உள்ளபொருளை ஒளித்துக் கொள்வார்

இல்லையென்று சொன் னவுடனே அச்சொல்லைக் கேட்ட யாசகருக்கு நாமினி யென்செய்வோ மென்று வருத்தமுண்டாக உயிர் போய்விடும். இல்லையென்ற கொடிய சொற் கேட்டவருக்கே உயிர்போவதானல் அச்சொல்லைச் சொன்னவருக்கு

## கoஅ-ஆம் அதி.—கயமை.

ௗ௨0

உயிர்போகாமல் எவ்விடத்துப் போய் ஒளிக்குமோ என்பதாம். இரப்பார்க்கு உயிர் போதலாவது, இல்லையென்ற அப்போது மூர்ச்சை யுண்டாகத் தோன் றுங் கொடியவருத்தம் . இக்கருத்துப் பற்றியே "ஒளிமுக மிழப்பவந் துற்ற நாணமீக், கிளர்தர இல்லெனக் கிளக்கு மூர்ச்சனை " என்றார் பிறரும், (நைடதம் நளன் றூதுப்படலம்-20.)

---

## 108-ஆம் அதி.—கயமை.

அஃதாவது, மேலே அரசியலுள்ளும் அங்கஇயலுள்ளும் குறிப்பாகக் கூறப்பட்டனவும் இவ்விடத்து அங்கஇயலுள் வெளிப்படையாகக் கூறப்பட்டனவுமாகிய குணங்கள் இல்லாராகிய கீழோரது இயல்பு.

இயல்பு—தன்மை அல்லது செய்கை.

க. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
ஒப்பா ரியாங்கண்ட தில்.
(1071)

(இ-ம்) கண் கை கால்முதலிய அவயவங்களோடு கூடிய உருவத்தாலே கயவர் மக்களை (மனிதரை) ஒத்திருப்பர். அக்கயவர் மக்களை ஒத்திருந்தாற் போன்ற ஒப்புமை (பொதுக்குணம்) இந்த மக்கட்சாதி கயச்சாதிகளைப் போலும் வேறு இரண்டுசாதியினிடத்து நாம்பார்த்ததில்லை யென்பதாம். மக்கட் சாதியாவார்—மனிதர்க்குச் சிறப்பாகிய உயர்ந்தகுணமுள்ளவர். கயச்சாதியாவார்—மனிதர்க்குச் சிறப்பாகாத தாழ்ந்த குணமுள்ளவர். இதனல் மனிதரானவர் உருவத்தாற் பெரியராகாமல், குணத்தாற் பெரியராவரென்பது கருத்து.

உ. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.
(1072)

(இ-ம்) தமக்குறுதியைத்தரும் இம்மை மறுமைமோக்ஷங்களுக்கு உரிய வனவாகிய புகழ் அறம் ஞானங்களை அறிவாரைப் பார்க்கிலும் மேற்சொல்லிய மூன்றையும் அறியாத கீழ்மக்கள் அவரைப்போலத்தம் நெஞ்சினிடத்துத் துன்பமடைய மாட்டாராதலால்

அக்கீழ்மக்கள் நன்மையுடையவர் என்பதாம்.

எப்படியென்றால், புகழ் அறம் ஞானங்களையறிவார் அவற்றை மிகுதியாகச் செய்யவேண்டு மென்றும் அப்படிச்செய்யும் போது அவற்றிற்கு இடையூறு வாராதிருக்க வேண்டுமென்றும் பலவிதத்துன்பமடைவர். அத்துன்பங் கீழ் மக்களுக்கு இல்லையாதலால் பழிபாவங்களுக்குப் பயப்படாரென்று அவரைப் புகழ்ந்ததுபோல இகழ்ந்ததாம் என்க.

## ௲௨௬ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௩., தேவ ரனையர் கயவ ரவருந்தாம்
மேவன செய்தொழுக லான்.
(1073)

(இ-ம்) தேவரும் கயவரும் தம்முள்ளொத்தவராவர்; எதனாலென்றால், தேவரைப்போலத் தம்மை நியமிப்பாரில்லாமல் கயவரும் தாம் விரும்புவன வாகிய செயல்களைச் செய்து வருதலாலென்க. தேவர் விரும்புவன உயர்ந்தவையும் கயவர் விரும்புவன இழிந்தவையுமாதலால் இவ்வேறுபாடு பற்றிக் கயவர் இழிந்தாரென்றது குறிப்பாற் கண்டுகொள்க. நியமிப்பாரில்லாம லென்றது,

தம்மை ஒருவர் ஏவுவாரில்லாமலென்றதாம். இதுவும்புகழ்தல்போல் இகழ்ந்ததாம்.

ச, அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.
(1074)

(இ-ம்) கீழாயுள்ளவன் தன்னிற் குறைந்த பாவமாகிய பட்டியாயுள்ள வரைக் கண்டால் அவருக்கு நாமுயர்ந்தோமென்று தம் செய்கையை மிகுதி யாகக் காட்டி இறுமாந்திருப்பனென்பதாம்.
பட்டி—கள்ளொழுக்கமுடைய வன். தம் செய்கை—தமது களவு முதலிய தீயசெய்கை. பட்டி—கள்ளமென் பதனை "பட்டிமை வழக்கால் வென்று போகொட்டேன்" என்னுந் திருவிளை யாடற் புராணச் † செய்யுளாலும், "நோதக்க செய்யும் சி றுபட்டி மேலோர் நாள்' ' என்னுங் கலித்தொகைச் ❋ செய்யுளானுங் காண்க. பயிர் முதலிய வற்றை இரவிலே போய் மேயும் மாட்டைப் பட்டிமாடு என்று கூறும் வழக்கி லுங் காண்க.

ரு. அச்சமே கீழ்கள தாசார மெச்சம்
அவாவுண்டே லுண்டாஞ் சிறிது.
(1075)

(இ-ம்) கயவராகிய கீழோரிடத்து ஆசாரம்

(நல்லொழுக்கம்) கண்டால் அதற்குக் காரணம், இராசதண்டனையால் வரும் அச்சமே (பயமே) ஆம். அஃதில்லாவிட்டால் தம்மால் விரும்பப்படும் பொருள் கிடைப்பதாயிருந்தால் அதனாலும் அவ்வாசாரம் சிறிது அவரிடத்து உண்டாகும் என்பதாம். பொருள் கொடுப்பதால் உண்டாகும் ஆசாரம் எப்படியென்றால், இன்ன இலக்கண முடையவருக்குத்தான் இன்ன தானங் கொடுக்கப் படுமென்று தெரிந்தால்

---

† "மாமனாக வந்து வழக்குரைத்த படலம் 15"
* "கலி-குறிஞ்சி 15"

க்௦அ-ஆம் அதி.—கயமை.

ரூஉ ள்

அர்த்தத்தானம் பெறும்பொருட்டு ஆசாரமுடையவர்போல் அதற்குரிய வேஷந்தரித்துக் கொள்ளுதல் போல்வது. இதனால், கீழ்மக்களுக்கு ஆசாரம் பெரும்பாலும் அச்சத்தாலும் சிறுபான்மை பொருள் பெறுதலினாலும் உண்டாவதல்லாமல் இயற்கையி லுண்டாகா தென்பது கருத்து.

சு. அறைபறை யன்னர் கயவர்தாம் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.
(1076)

(இ-ம்) கீழோர் தாம்கேட்ட இரகசியச் சொல்லை மனத்திற் சுமந்து கொண்டு இடந்தோறும் போய்ப் பிறர்க்குச் சொல்லுதலால் அவர் அடிக்கப் படும்பறை (தோலா லாகியகருவி)யை ஒப்பார் என்பதாம். இரகசியச்சொல் லாவது, பிறர்க்குத் தெரிந்தால் கேடுவரு மென்று அவருக்குத் தெரியாமல் மறைத்து வைக்குஞ் சொல். தோலாலாகிய கருவி யெதுவென்றால், ஒருவன் கையால் தனக்கறிவித்ததைத் த ான் எல்லாருக்கும் தெரியும்படி பேரொலியாற் சொல்லும் முரசு என்னும் பெயருடையது. இதை "ஆதுலர் யாவரென்ன அதிர்குரல் முரசிற் சாற்றி" என்னுஞ் செய்யுளாற் காண்க. (நைடதம் நாட்டுப் படலம். 14.)

எ. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

(1077)

(இ-ம்) கீழோராகிய கயவர் தம் கன்னத்திலடித்து நெரிக்கும் வளைந்த கையினையுடையவருக்கு வேண்டும் பொருள்களைக் கொடுப்பரே யல்லாமல் அவரல்லாத பிறருக்குத் தாம் உண்டு கழுவிய கையைத் தெரித்தல் (உதறுதல்) வேண்டுமென்று கேட்டாலும் தெரிக்கமாட்டாரென்பதாம். கையை உதறினால் அக்கையிலொட்டிய சோற்றுப் பருக்கையாவது கீழே விழுந்தால் எடுத்துக் கொள்ளலாமென்று கேட்பவர் மிகுந்த வறியவரென்றறிந்துகொள்க. கழுவிய கையிலொன்றுமேயிராது, அக்கையையும்

உதறமாட்டாரென்றால் அவரது கீழ்மைக்குணத்தை யென்னென்று சொல்வது. வளைந்தகை—விரல்களை மடக்கிய கை.

அ. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.
(1078)

(இ-ம்) மேலோர் தம்மிடத்து எளியவர் வந்து தம் குறையைச் சொல்லினால் மனமிரங்கித் தம்மிடத்திலுள்ள பொருளைக் கொடுத்துப் பிரயோசனப் படுவர். கீழோர் அப்படியல்லாமல் கரும்பைச் செக்கிலிட்டு நெருக்கியது

ரு௨௪ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

போல வலியவர் வந்து துன்பஞ் செய்தால் அவருக்குத் தம்மிடத்திலுள்ள பொருளைக் கொடுத்து உதவுவர் என்பதாம்.

கூ. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

(1079)

(இ-ம்) பிறர் செல்வமடைந்து பட்டுந் துகிலும் உடுத்தலையும் பாலோடு சோறுண்ணுதலையும் பொன்னொடுமணி பூணுதலையும் யானை குதிரை சிவிகை யேறுதலையும் கீழாயினவன் கண்டானானால், பொறாமைப் பட்டு, அவர்மேல் யாதொருகுற்றமும் இல்லையானாலும் பல குற்றங்களையுங் கற்பித்துக் குறை கூறுதற்கு வல்லவனாவன் என்பதாம். இதனால் பொறாமையுள்ளவன் பிற குணங்களாலுயர்ந்தவனாயிருந்தாலும் தாழ்ந்தவனாவன் என்பது கருத்து.

கO. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து.

(1080)

(இ-ம்) நற்குண நற்செய்கையில்லாத கீழோர் தமக்கு ஏதேனும் ஓர் துன்பம் வந்த இடத்து, அத்துன்பங் காரணமாகத் தம்மை விரைந்து விலை செய்தற்கு உரியர். அஃதல்லாமல் வேறெந்தத் தொழிலுக்கு உரியவர் என்பதாம். இதனால் அறிவில்லாதவர் பிறருக்கு அடிமையாவரென்பது கருத்து.

ஒழிபியலோடு இரண்டாவது பொருட்பால் முற்றிற்று.

---

# மூன்றாவது—காமத்துப்பால்.

## களவியல்.

அஃதாவது, பிணியும் மூப்பும் இறப்புமில்லாமல் எந்தக் காலத்தும் ஒரு
நன்மையாராய் உருவும் திருவும் குலமும் குணமும் அன்பு முதலியவற்றால் தம்முள் சமானமுடையவராகித் தலைவனும் தலைவியும் பிறர் கொடுத்தலும் அடுத்தலும் இல்லாமல் ஊழ்வசத்தால் தாமே எதிர்ப்பட்டுப் புணர்ந்து (கலந்து) வருவது. அதனை ஏழதிகாரத்தால் கூறத்தொடங்கி, முதலாவது தகையணங் குறுத்தல் கூறுகின்றார். தகை—அழகு. அணங்கு—துன்பம். உறுத்தல்—உறச்செய்தல்.

## 109-ஆம் அதி.—தகையணங்குறுத்தல்.

அஃதாவது, பூஞ்சோலையில் விளையாடும் ஆசையால், பெண்கள் கூட்டத்தைவிட்டுத் தனியே நின்ற தலைவியை, வேட்டையின் ஆசையால் கூடவந்த தோழரைவிட்டுப் பிரிந்து தனியேநின்ற தலைவன்கண்டு, அவளுடைய அழகு தன்னை வருத்தமுறச் செய்தலைச் சொல்லுதல்.

க. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு. (1081)

(இ-ம்) இந்தக்கனத்த குண்டலத்தை அணிந்த பெண்ணனவள் இச் சோலையினிடத்து வசிக்கும் ஓர் தெய்வப்பெண்ணோ? அல்லது ஆராயப்பட்ட விசேடமான ஒரு மயிலோ? அல்லது ஒரு மானிடப்பெண்ணோ? இவளை இத் தன்மையுடைய ளென்று துணிந்து சொல்லமாட்டாது என்னெஞ்சு மயங்கி நிற்கின்றது என்பதாம்.

இது, மானிடப் பெண்ணாகத் தெரிந்த தலைவன் அவள்பார்வையினலாகிய வருத்தங்கூறியது.

உ. நோக்கினாள் நோக்கெதிர் நோக்குதல் தாக்கணங்கு
தானைக்கொண் டன்ன துடைத்து. (1082)

(இ-ம்) தெய்வப்பெண்ணோ புதுமை பொருந்தியமயிலோ மானிடமாதோ வென்று நினைக்கத்தக்க அழகினையுடைய இவள் என்னுடையபார்வைக்கு ஒத்தபார்வையாகப் பார்த்தலானது , தன்னைக்கண்டவரைத் தானேதாக்கி வருத்துவதாகிய ஒரு தெய்வப்பெண் அவ்விதம் வருத்துதற்கு ஆயுதத்தையுங் கொண்டுவந்து நின்றாற்போலுந் தன்மையையுடையது என்பதாம். இதனல் அவளுடைய அழகு

வருத்தஞ்செய்வதோடு அவள் பார்வையும் வருத்தஞ் செய்த தென்று கண்டுகொள்க.

இதுவும் அது.

௩. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
பெண்டகையாற் பேரமர்க் கட்டு. (1083)

(இ-ம்) நூல்களைக் கற்றறிந்தோர், கூற்று (யமன்) என்று சொல்வதனை முன்னம் கேட்டறிந்ததல்லாமல் கண்டறிந்தேனில்லை; இப்பொழுது கண்டறிந்தேன். அது எதுவென்றால், பெண்குணமாகிய நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் நான்குடனே விசாலமுடையனவாய்ப் போர்த்தொழிலைக்

42



கொண்ட கண்களையுடையது என்பதாம். அக்கண்களையுடையது பெண்ணாதலால் அதுவே கூற்றென்பதாயிற்று. அக்கருத்துப்பற்றியே "ஊனுமுடையு நமன் றூதுவர்கா ணுள்ளமே, வானுதலார் நேரே மறலிகாண்" என்றார் பிறரும். நாணம்—அந்நிய புருடரைக் கண்டால் வெட்கப் படுதல். பயிர்ப்பு— அந்நியபுருடரிடத்து

அருவருப்பு. அச்சம்—தன்னுயகனுக்கு அஞ்சி நடத்தல்; அஃதாவது, கீழ்ப்படிந்து நடத்தல்.

இதுவும் அது.

ச. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
பேதைக் கமர்த்தன கண்.
(1084)

(இ-ம்) நாணம் மடம் அச்சம் பயிர்ப்பென்னுங் குணங்களையுடைய இப் பெண்ணுக்கு உள்ளனவாகிய கண்கள் தம்மைக்கண்டவருயிரை யுண்ணும் பார்வையோடு கூடி அமர்த்தன (அளவுக்கு மிஞ்சிய கொடுமையோடு கூடி யிருந்தன) என்பதாம். பார்வை—பார்த்தல்.

இதுவும் அது.

ரு. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்
நோக்கமிம் மூன்று முடைத்து.
(1085)

(இ-ம்) என்னை வருத்தஞ்செய்வதுடைமையால் யமனோ? கண்ணோட்டமாக(தாக்ஷணியமுடைமையாகப்) பார்த்தலால் கண்ணோ? இயல்பாக அஞ்சுதலுடைமையால் மானோ? இன்னதுதானென்று

தெரியவில்லை. இப்பெண்ணி
ன் து பார்வை இம்மூன்றின்
குணமுமுடையதாயிருக்கின்றது என்பதாம்.
எனவே, இன்பமுந் துன்பமும் ஒருமிக்கச்
செய்கின்றதென்பது கருத்து.

இதுவும் அது.

சூ. கொடும்புருவங் கோடா மறைப்பி
னடுங்கஞர்
செய்யல மன்னிவள் கண்.
(1086)

(இ-ம்) கண்களோடு பிரியாமல் பக்கத்திலிருக்கும் சிநேகமாகிய வளைந்த புருவங்கள் செம்மையுடையனவாய் விலக்கினால், இவளுடைய அக் கண்கள் நடுங்குதற்கேதுவாய துன்பங்களைச் செய்யமாட்டா என்பதாம். ஒருவருக்குக் கோபமதிகப்பட்டால் பக்கத்தில் நீங்காதிருக்கும் அவரது சிநேகர் தடுத்தால் அக்கோபம் அவருக்கு அடங்குதல் உலக வழக்கமாதலால் இவ்வாறு தலைவன் சொன்னதாக இந்நூலாசிரியாருளிச்செய்தனர். ஒருவருக் குப் போதிப்பார் தாம் செம்மையுடையாராயிருக்கவேண்டுமாதலால் கோணி

கஐஅ-ஆம்

அதி.—தகையணங்குறுத்தல். ... யிருக்கும் புருவங்கள் செம்மையுடையனவாகி (நேராகி ) விலக்கினால், கண்கள் துன்பஞ் செய்யமாட்டா என்றது—புருவங்கள்

நோய் நிமிர்தலும் கண்கள் துன்பஞ் செய்யாதிருத்தலும் இல்லையென்பதை விளக்கி நின்றது கண்டு கொள்க.

எ. கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்

படாஅ முலைமேற் றுகில்.
(1087)

( இ-ம் ) இப்பெண்ணினுடைய சாய்வறாத கொங்கைகளின்மேலே யிட்ட சேலையானது மதங்கொண்ட யானையின் மேலிட்ட முகபடாத்தினை யொக்கு மென்பதாம். அஃதாவது, சேலையால் மூடாவிட்டால் கொங்கைகள் கொன்று விடுமென்னுந் துன்பம். இக்கருத்தைப் பின்வரும் செய்யுளாலறிக.

"மட்டார் குழலி கலவியி னீத்தபொன் வார்திரும்பக்
கட்டா தொருகணந் தாழ்த்தன ளேற்கவி யானைசெம்பொற்
கொட்டார மன்ன குமார குலோத்துங்கன் கோழிவெற்பில்
எட்டா னையுநிலை கெட்டோடு மூதண்ட மென்படுமே."

(குலோத்துங்கன் கோவை) இது, அவள் தனங்களாலாகிய வருத்தங்கூறியது.

அ. ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு.
(1088)

(இ-ம்) யுத்தகளத்தில் வந்து எதிர்த்து யுத்தஞ் செய்யாத பகைவரும், யுத்தம் செய்து தோல்வியடைந்தவர் வாயாற் கேட்டுப் பயப்படுதற்கு ஏதுவாகிய என்னுடைய புயவலிமையானது இப்பெண்ணினுடைய ஒளிபொருந்திய நெற்றியொன்றிற்கே ஐயோ! அழிந்துவிட்டது என்பதாம். இதனால், கண்டவர் மனத்தைக் கவரும் நெற்றியுடையாளென்பது கண்டுகொள்க.

இது, தலைவன் தலைவியினது நெற்றியாலாகிய வருத்தங்கூறியது.

கூ. பிணையேர் மடநோக்கும் நாணும் உடையாட்
கணியெவனோ வேதில தந்து.
(1089)

(இ-ம்) புறத்திலே யழகு செய்தற்குப் பெண்மானை யொத்திருக்கும் இளம்பார்வையும், அகத்திலேயழகு செய்தற்கு நாணமும், ஒற்றுமையாய் அமைந்திருக்கும் இப்பெண்ணுக்கு வேற்றுமையாகிய ஆபரணங்களைச் செய்து அணிந்து அழகு செய்வது என்னபயனைக் குறித்தோ என்பதாம். இதனால், இயற்கை அழகுடையவளென்பது

கருத்து.

இது, அவள் அணிநலத்தாலாகிய வருத்தங் கூறியது.

## ௬௬௨ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௯௦. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டா ர் மகிழ்செய்த லின்று.
(1090)

(இ-ம்) கொல்லுஞ் செயலையுடைய கள்ளானது தன்னையுண்டா ரிடத்து மகிழ்ச்சியைச் செய்யுமே யல்லாமல் காமமநுபவித்தற்கிடமாகிய பெண்களைப்போலத் தன்னைப் பார்த்தவரிடத்து மகிழ்ச்சியைச் செய்தல் இல்லை என்பதாம். இதனால், மகிழ்ச்சிசெய்யுமிடத்துக் கள்ளைப்பார்க்கினுங் காமஞ்சிறந்ததென்பதாயிற்று.

இது, தலைவன் குறிப்பறியு நிலையிலே கூறியதாம். குறிப்பறிதலாவது, இவ்விதங்கூறிய சொற்களுக்குத் தலைவி புன்சிரிப்பாலவனுடன்பாடு தெரிதல்.
புன்சிரிப்பு-குறுஞ்சிரிப்பு.

# 110-ஆம்

**அதி.—குறிப்பறிதல்.** அஃதாவது தலைவன், தலைவி குறிப்பினையறிதலும், தோழி குறிப்பினை யறிதலும், தோழி அவ்விருவர் குறிப்பினையறிதலுமென மூன்று பகுப் புடையதாம். குறிப்பு-எண்ணம்.

க. இருநோக் கிவளுண்க ணுள்ள
தொருநோக்கு
நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.
(1091)

(இ-ம்) இப்பெண்ணினுடைய மையுண்ட கண்ணிடத்துள்ளதாகிய பார்வையானது இப்பொழுது என்மேல் இரண்டு பார்வையாயிருந்தது. அவ் விரண்டுள் ஒருபார்வை என்னிடத்து நோய்செய்யும் பார்வை. மற்றொரு பார்வை அந்நோயைத் தீர்க்கும் மருந்தாகிய பார்வை என்பதாம். நோய் செய்யும் பார்வையை மருட்பார்வை என்பர். நோய் தீர்க்கும் பார்வையை அருட்பார்வை யென்பர். நோய் செய்தலாவது—காமத்தை யதிகப்படுத்தல். அதைத் தீர்த்தலாவது, அக்காமத்தை யநுபவித்தற்குத் தன்னிடத்துள்ள அன்பை வெளிப்படுத்தல்.

இது தலைவன், தலைவியின் உள்ளக்குறிப்பை அவள் பார்வையாலறிந் தது.

உ. கண்களவு கொள்ளுஞ் சிறுநோ ராக்கங் காமத்திற்
செம்பாக மன்று பெரிது,
(1092)

## ககo-ஆம் அதி.—குறிப்பறிதல்.

ññññ

(இ-ம்) இவள் கண்கள் எனக்குத் தெரியாமல் என்னைப் பார்க்கின்ற சிறு பார்வையானது, நானுமிவளுஞ் சரீர சம்பந்தப்பட்டு இன்பமனுபவிக்கும் போது சமபாகத்துக்கு மேலும் இன்பமநுபவிக்கும் என்பதாம். சிறுபார்வை யாவது-நான் பார்க்கும்போது வெட்கத்தாற் பூமியைப் பார்த்து நான் பாராத போது என்னைச் சிறிதுநேரம் உற்றுப்பார்க்கும் பார்வை.

இதுவும் அது.

ந. நோக்கினள் நோக்கி யிறைஞ்சின ளஃதவள்
யாப்பினு ளட்டிய நீர்.
(1093)

(இ-ம்) யான் பாராதபோது அன்போடு என்னைப்

பார்த்தாள். அப்படிப் பார்த்ததுமல்லாமல் வெட்கத்தை யுட்கொண்டு தலைகுனிந்தாள்; அக்குறிப் பானது, அவளும் நானும் ஒருசேரத் தழுவுங்காலத்தில் என்னிடத்திலும் அவளிடத்திலு முண்டாகிய அன்பாகிய பயிர் வளர வார்க்கும் நீர் என்பதாம்.

இது தலைவன், தலைவி குறிப்பினை நாணத்தாலும் மகிழ்ச்சியாலும் அறிந்தது.

ச. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
றானோக்கி மெல்ல நகும்.
(1094)

(இ-ம்) அவளை நான் பார்க்கும்போது அவளென்னைப் பாராமல் தலை குனிந்து நிலத்தைப்பார்த்து நிற்பள். அக்குறிப்பையறிந்து நான் அவளைப் பாராதபோது அவளென்னைப்பார்த்துத் தன்னுள்ளே மெள்ளச் சிரித்து நிற்பள் என்பதாம். மெல்லநகுமென்பதற்குப் புன்சிரிப்புக்கொள்வள் என்றும் ஒரு பொருள் கூறுவாரு முண்டு.

இதுவும் அது.

ரு. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்

சிறக்கணித்தாள் போல நகும்.

(1095) (இ-ம்) நேரே என்னை லக்ஷியமாக வைத்துப் பாராத அளவில் நில்லாமல் ஒருகண் சுருங்கிப்பார்த்தவளைப்போல என்னைப் பார்த்துத் தன்னுள்ளே பின்பு மகிழ்ச்சியடைந்து நிற்பள் என்பதாம். இதனால், இனி இவளையடையலாமென்பது நிச்சயமாயிற்று.

இதுவும் அது.

சு. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொல்
ஒல்லை யுணரப் படும்.

(1096) ௲௯௬ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) புறத்து உறவும் பகையுமில்லாதவர்போல அன்பில்லாத கொடிய சொற்களைச் சொன்னாலும், அகத்து வெறுப்பில்லாத அவர் சொல் பின்னர்ப் பயன்படுதலானது குறையுற்றாரால் சீக்கிரத்திலறியப்படும் என்பதாம். குறையுற்றார்—மேலே கூறிய அன்பில்லாத கொடிய சொல்லை யேற்றுக்கொண்டவர். இவ்விதம் நிகழ்வது உலகவழக்கமாதலால், தோழி தலைவனை, இவ்விடத்து நீ வாராதே யென்பது முதலியவை கூறுதல்—இவ்விடத்துக் காவல் மிகுதியாயிருக்கிறது, இனி வேறிடத்துக்கு நீயும் தலைவியும் சென்று கூடுங்களென்று, குறிப்பாலறிவித்ததாகக் கண்டுகொள்ளவேண்டுமே யல்லாமல் அன்பில்லார்போற்

சொன்னுலென்று கொள்ளக் கூடாதென்ப தாம். இவவாறு புணர்ச்சியின் பின்னர் வருவனவெல்லாம் குறிப்பறிதலின் வகையாம்.

இது தோழி, தூரத்திற் செல்லுக என்ற இடத்து அவள் குறிப்பினை யறிந்து தலைவன் தன்னுள்ளே சொல்லியது.

எ. செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போல் நோக்கும்
உறாஅர்போன் றுற்றார் கு றிப்பு. (1097)

(இ-ம்) பின்ன ரின்பந் தருவதாய் முன்னர்த்துன்பந்தருவதாய சொல் லும், உட்புறத்தில் வெறுதிருந்தே வெளித்தோற்றத்தில் பகைத்தவர்போன்ற கோபப்பார்வையும் உறவும் பகையுமில்லாதவர்போன்று சிநேகமாயினார்க்கு ஒரு குறிப்புப்பற்றி வருவன என்பதாம். ஒரு குறிப்பு—அன்புகாரணமாக யாதேனும் ஒருபயன் பற்றி நிகழும் நிகழ்ச்சி. இந்நிகழ்ச்சிகள் இயல்பல்ல, இவற்றிற்குப் பயப்படவேண்டுவதில்லை யென்பது கருத்து. நிகழும்—நடக்கும். நிகழ்ச்சி—நடை.

இதுவும் அது.

அ. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னேக்கப்
பசையினள் பைய நகும்.

(1098)

(இ-ம்) என்னைத் தோழி யகற்றுகின்ற சொல்லுக்கு ஆற்றமாட்டாமல் யான் வருந்தித் தாழ்ந்து பார்த்த இடத்து அதையறிந்து மனநெகிழ்ச்சியுற்று உள்ளே மெள்ளச் சிரிப்பள் ஆதலால் நுடங்கிய இயல்பினையுடைய இவளுக்கு அச்சிரிப்பினிடத்து ஒரு நன்மைக்குறிப்பாகிய அழகுண்டு என்பதாம். நுடங்கிய இயல்—நிறைந்து ததும்பிய சாயல். சாயல்—மேம்பாடாகிய பேரழகு. குறிப்பு—அடையாளம்.

இது, தன்னை நோக்கி மகிழ்ந்த தலைவியைத் தலைவன் கண்டு சொல்லியது.

## ௱௱௰-ஆம் அதி.—புணர்ச்சியின் மகிழ்தல்.

௲௱௫

௧. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
காதலார் கண்ணே யுள.

(1099)

(இ-ம்) முன்னறியாதவரைப்போல ஒருவரை யொருவர் பொதுப் பார்வையாகப் பார்த்தல் ஆசையையுடைய தலைவன் தலைவியாகிய இருவரிடத்தும் உண்டாகி நின்றன என்பதாம்.

பொதுப்பார்வை—எல்லாரிடத்தும் ஒரே தன்மையுடையராகப் பார்த்தல். இவ்விருவரும் மதுவை மறைந்திருந்துண்ட வர் மகிழ்ச்சிபோலத் தம்முள்ளே ஒருவரை யொருவர் மகிழ்ந்துகொள்வர். அது வெளிப்படாதாதலால் முன்னறியாதவரைப் போலென்று தோழி கூறினள்.

இது தோழியானவள், தலைவன் தலைவியாகிய இருவர் அபிப்பிராயத் துக்கும் உடம்படுவாளாய்த் தன்னுள்ளே சொல்லியது.

கூ0. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில. (1100)

(இ-ம்) காமம் அநுபவித்தற்குரிய ஆண் பெண் என்னும் இருவருள் ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள் பார்வையால் ஒத்திருக்குமானால் வாய்ப் பேச்சுகள் ஒரு பயனுமுடையன ஆகாதென்பதாம். வாய்ப்பேச்சுகளாற் பய னில்லை யென்பது எப்படியென்றால், தினைப்புனத்தில் இவ்விருவர் களவையும் அறியாதவர்,ஆண்மகனை நோக்கி நீயென்ன காரியமாக வந்தாயென்றால் அவன் நான் மிருகவேட்டை யாடுதற்கு வந்தேனென்பதும், பெண்மகளைநோக்கி அவ்விதங் கேட்டால் நான் தினைப்புனங் காக்கவந்தேனென்பதும் பொய்யாத லாலென்க. இதற்குதாரணமாகப் பின்வரும் செய்யுளைக் காண்க.

"புனங்காவ லன்றிவள் பூண்டது மாண்டகை போந்துமா
ளினங்காவ லின்கலை யெய்யவன் ருலிக லாழிவிந்தை
தனங்காவ லன்றஞ்சை வாணனன் ஞட்டிவர் தங்களிற்ரு
மனங்காவல் கொண்டதெல் லாங்கண்க ளேசொல்லும் வாய்திறந்தே."
(தஞ்சைவாணன் கோவை.)

---

## 111-ஆம் அதி.—புணர்ச்சியின் மகிழ்தல்.

அஃதாவது, மேற்சொல்லியபடி குறிப்பறிந்த தலைவன் தலைவியைப் புணர்ந்து, அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறுதல்.

ீ௲ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

க. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்

ஒண்டொடி கண்ணே யுள.

(1101)

(இ-ம்) கண்ணாற்கண்டும் காதாற்கேட்டும் வாயாலுண்டும் மூக்கால் மோந்தும் சரீரத்தால் தொட்டும் அநுபவிக்கப்படும் ஐந்தறிவாகிய இன்பங்களும் ஒளிபொருந்திய வளையலை யணிந்தவளாகிய இப்பெண்ணிடத்தேயுள்ளன என்பதாம். இதனால், வேறோரிடத்தில் ஒருமிக்க ஐந்து இன்பங்களும் அநுபவிக்கக் கூடாதாகையால் இவ்விடமே அவ்வைந்தின்பமும் அநுபவித்தற்குச் சிறந்ததாயிற்றென்பது கண்டுகொள்க.

இது, இயற்கைப் புணர்ச்சியின் முடிவிலே தலைவன் சொல்லியது. இயற்கைப் புணர்ச்சியாவது - இடையிலே ஒருவர் நின்று சேர்த்து வையாமல் தலைவனுந் தலைவியும் தாமே சம்மதித்துப் புணரும் புணர்ச்சி.

உ. பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து.

(1102)

(இ-ம்) வாத முதலாகிய நோய்களுக்கு மருந்து இன்னதற்கின்னது தான் மருந்தென்று வரையறைப்பட்டதுமல்லாமல் மாறாய தன்மையினை யுடைய பல வுள்ளனவாம். அப்படியல்லாமல் அலங்காரமாக அணியப்பட்ட ஆபரணங்களையுடைய இப்பெண்ணாலுண்டாகிய என்னுடைய காமநோய்க்கு இப்பெண்ணே மருந்து என்பதாம். எனவே, இப்பெண்ணைச் சேர்ந்தாலன்றி இக்காமநோய் தீராதென்பது கருத்து.

இது, மேலே சொல்லிய இயற்கைப் புணர்ச்சியை நினைந்து வருந்திய தலைவன், தலைவி தமியளா யெதிர்ப்பட்ட இடத்திற் சொல்லியது.

ந. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி
னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு
(1103)

(இ-ம்) மேற்கூறிய ஐம்புலன்களால் ஒருமிக்க அநுபவிக்கக்கூடிய இன்பத்தை விரும்புவார்க்கு, தம்மாலாசைப்படும் பெண்களது மெல்லிய தோள்களைத் தழுவி நித்திரை செய்வதைப்போலும் இனிமையுடையதாகுமோ? தவஞ்செய்து போயநுபவிக்குந் துறவிகளுக்குத் தாமரைப் பூப்போலுங் கண்களையுடைய திருமால் உலகமாகிய வைகுந்தம் என்பதாம். எனவே, வருத்தமில்லாம லநுபவிக்கும் நம்போல்வா ரின்பத்துக்கு வருத்தப் பட்டுப்போய்த் துறவிகளநுபவிக்கும் வைகுந்தம் அவர்களுக்கு இன்பமாகா தென்பது கருத்து.

க்கக-ஆம் அதி.—புணர்ச்சியின் மகிழ்தல்.

ஙஙள

இது, பேரின்பத்தை யநுபவித்தற்குரிய பேரறிவுடைய நீ சிற்றறி வுடையா ரநுபவிக்குஞ்

சிற்றின் பத்திற்காக இப்படி மெலிந்துவிட்டாயே யென்ற பாங்கனை நோக்கித் தலைவன் கூறியது.

ச. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்
தீயாண்டுப் பெற்று ளிவள். (1104)

(இ-ம்) தன்னை, யான் விட்டுப் பிரிந்தபொழுது என்னைவந்து சுட்டுத் துன்பஞ் செய்யும்; அதற்குப் பயந்து,யான் போய் நெருங்கிக் கலந்த பொழுது எனக்கு இன்பத்தைச் செய்யும்; அப்படிப்பட்ட (காமத்)தீயை எனக்குக் கொடுக்கும் பொருட்டு இவளெவ்விடத்துப்பெற்று ளென்பதாம். இதனால், கட்டைத் தீயைப்பார்க்கிலும் காமத்தீ கொடிய தென்பது கருத்து. இக்கருத் தால் "நீருட்—குளிப்பினும் காமஞ் சுடுமேகுன் றேறி, யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்றூர் பிறரும். (நாலடியார் பிறன்மனை நயவாமை 10) தன்னை யென்பது தலைவியை. இது, பாங்கனை விட்டுப்பிரியும்போது தலைவன் கூறியது. பாங்கன்—தோழன்.

ரு. வேட்ட பொழுதி னவையவை போலுமே
தோட்டார் கதுப்பினள் தோள். (1105)

(இ-ம்) மிகவும் இனிமையுடைய சுவைப் பொருளை யடையப் பெறுமல் ஒவ்வொன்றிலும் ஆசைமிகுந்த காலத்தில், அந்தந்தப் பொருள்கள் தாமே வந்து இன்பஞ்

செய்யுமாறுபோல இன்பஞ் செய்யும் அது எதுவென்றால், பூவையணிந்த கூந்தலையுடையாள் தோள்கள் என்பதாம். இது, தோழியைக் கண்டு பேசிய காலத்தின் முடிவில் தலைவன் கூறியது.

கூ. உறு தோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்

கமிழ்தி னியன்றன தோள் .

(1106)

(இ-ம்) தன்னை விட்டுப்பிரிந்து வாடி வருத்தமுற்ற என்னுயிர் தளிர்ப்ப (இன்பமெய்தும்படி) அடையுந் தோறுந் தொடுதலால், இப்பெண்ணுக்குத் தோள்கள் அமிழ்தினாற் செய்யப் பட்டன என்பதாம். அமிழ்தமானது பட்டால் இறந்தார் பிழைப்பாராதலால் இவ்வாறு தலைவன் கூறினான். இதனால் காமிகள், காமமநுபவிக்கும் இடமாகிய பெண்களைப் பிரிந்தால் பிழைப்ப தரிதென்று கண்டுகொள்க. இதுவும் அது.

எ. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றால்
அம்மா வரிவை முயக்கு.

43

(1107)



(இ-ம்) அழகிய மாமை நிறத்தையுடைய

இப்பெண்ணின் கலப்பாகிய இன்பமாவது எப்படியிருந்ததென்றால், இன்பந் தருதற்கிடமாகிய தமக்குரிய வீட்டினிடத்திருந்து, தம்முடைய முயற்சியால் வந்த பொருளை, தென்புலத் தார் தெய்வ முதலானவர்களுக்குப் பகுந்து கொடுத்து, தமக்குரிய பங்குப் பொருளைத் தாமுண்டு, அநுபவித்தாற் போலும் என்பதாம். இதனால், ஒவ் வொருவரும் தம்தம் முயற்சியால்வந்த பொருளாலே யுண்டு உடுத்துச் சீவிப் பதே யின்பமாமென்று தெரிந்துகொள்க.

மாமைநிறம்—ஒருவிதமான பேரழகு செய்யு நிறம். இது, இவளை நீ மணஞ்செய்து இல்லறத்திலிருந்து துறவற இன்பமடைவாயென்ற தோழிக்கு, மணஞ்செய்வதை மறுத்து, எனக்கு அவ் வின்பத்தை இப்புணர்ச்சியே தருமெனத்தலைவன் கூறியது.

அ. வீழு மிருவர்க் கினிதே வளியிடை
போழப் படாஅ முயக்கு .

(1108)

(இ-ம்) ஒத்த அன்புடைய உங்களிருவருக்கும்,ஒரு பொழுதும் நீங்காத முயக்கம் (கலப்பு) இனியதாதலால், இனி "விவாகஞ்செய்து கூடுக" என்ற தோழியே! நீ சொல்வதுசரி. ஆனாலும்,தற்போது காற்றும் இடை புகுதற்கில் லாமல் நாங்களிருவரும் ஒருவரை யொருவர் நெருங்கித்தழுவும் கலப்பானது ஒருவரை யொருவர்

விரும்பப்படும் எம்மிருவர்க்கும் இனியது என்பதாம். இது, விவாகத்துக் குடன்படாமல் களவுப்புணர்ச்சியை மகிழ்ந்து, தோழிக்குத் தலைவன்கூறியது.

கூ. ஊட லுணர்தல் புணர்த லிவை காமங்
கூடியார் பெற்ற பயன்.

(1109)

(இ-ம்) புணர்ச்சியானது இன்பமாகும் பொருட்டு வேண்டுவதாகிய ஊடலும், அவ்வூடலை நீள்விடாமல் அளவறிந்து நீக்குதலும் அதன்பின் உண்டாவதாகியபுணர்ச்சியுமேகாமத்தை யிடைவிடா தநுபவிப்பார் பெற்றபயன்கள் என்பதாம். இது, மணஞ்செய்துகொண்டு கள்ளமில்லாமல் இடைவிடா தநுபவிப்பவர்க்கே இப்பயன்களெய்து மென்று சொல்லிய தோழிக்குத் தலைவன், நீ சொல்லிய மணஞ்செய் தநுபவிப்பது மற்றவர்க்கே அல்லாமல் இரண்டுதலைப் பறவைக்கு ஓருயிர்போல எப்போதும் ஒத்த அன்புடைய எம்மிருவர்க்கும் வேண்டுவ தில்லை யென்று கூறி, களவுப்புணர்ச்சியையே மகிழ்ந்து கூறியது.

கo. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்
செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

(1110).

## ககஉ-ஆம் அதி.—நலம்புனைந் துரைத்தல்.

நோ்ந

(இ-ம்) நூற்பொருள்களை அந்நூல்களாலும் நுட்ப அறிவாலும் புதிது புதிதாக அறியுந்தோறும் முன்னறிந்த அறிவானது அறியாமையாகவே முடிதல்போலச் சிவந்த ஆபரணங்களையணிந்த இப்பெண்ணினிடத்து நெருங்கிநெருங்கிப் பழகிப்புதிதுபுதிதாக இன்பம் அநுபவிக்கும்போது, களவுப் புணர்ச்சியில் இடையிட்டு இடையிட்டு முன் அநுபவித்த இன்பமானது இன்பமாகாமற் போயிற்று என்பதாம்.

இக்கருத்துப்பற்றியே "புணர்ந்தாற் புணருந்தொறும் போகம் பின்னும் புதிதாம்" என்று ஸ்ரீமாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்தனர். (திருக்கோவையார் இயற்கைப்புணர்ச்சி 9) எனவே, இக் காமஇன்பம் ஒருவராலும் இவ்வளவுதானென்று வரையறுத்துக் கூறலாகாதென்பது கண்டுகொள்க.

இடையிடுதல்—விட்டுநீங்குதல். இது, மணஞ்செய்து தலைவியைப் பிரியாதிருந்தும், காமத்தைய நுபவித்த தலைவன் அக் காமமகிழ்ச்சியைத் தன்னுள்ளே கூறியது.

---

## 112-ஆம் அதி.—நலம்புனைந் துரைத்தல்.

அஃதாவது, தலைவன் தலைவியினது நலத்தை அலங்கரித்துக் கூறுதல், நலம்—அழகு.

க. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
மென்னீரள் யாம்வீழ் பவள்.

(1111)

(இ-ம்) அனிச்சப்பூவே நீயெல்லாப் பூக்களினு மிருதுவான குணமுடை யாய், அப்படியிருந்தாலும் என்னால் விரும்பப்பட்டவள் நின்னைப் பார்க்கிலு மிருதுவான தன்மையுடையாள், இத்தன்மையுடையாளை விசேடித்துப் பேசு தற்கு நீ எல்லையாயிருந்தமையால் நீ யென்றும் வாழ்வாயாக என்பதாம். எல்லை- அளவு. இது, தலைவியோடநுபவித்த தலைவன் அப்பொழுது அவளுடைய பரிசத்தின் நலத்தைக் கண்டு கூறியது. பரிசம்—ஊறு; அஃதாவது- தொடுதல்.

உ. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
பலர்காணும் பூவொக்கு மென்று.

(1112)

(இ-ம்) மனமே என்னாற் காணப்பட்ட இவள்கண்களைப் பலராற் காணப்பட்ட தாமரை குவளை நீலோற்பல முதலிய பூக்களைக் கண்டால் அப் பூக்கள் ஒக்குமென்று எண்ணி மயங்குகின்றாய், நின்னறிவு நல்லறிவல்ல என்ப தாம். எப்படியென்றால்,பலராற் காணப்படுதல் கண்களுக்கில்லாமையாலென்க,

எனவே, பலராற் காணப்படும் பொதுமாதர் கண்கள் போல் அல்லாமல், தன் கண்கள் தலைவனால் மட்டுங் காணப்பட்டு, கற்பிற் சிறந்தாள் தலைவி, யென்பது கருத்து. நல்லறிவு—கூரிய நுண்ணறிவு. இது, தலைவியின் கண்களி னலத்தை வியந்து தலைவன் கூறியது.

௩. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.
(1113)

(இ-ம்) என்னை வசப்படுத்திய மூங்கில் போலுந் தோளையுடையவட்கு அடையாளம் சரீரத்தினிறம் மாந்தளிர் போலிருக்கும் பற்கள் முத்துப்போ லிருக்கும் சரீரத்தின் இயல்பாகிய வாசனை நல்ல வாசனையாயிருக்கும் மை யுண்ட கண்கள் வேல்போலிருக்கும் நீயறிவாக என்பதாம். இது, தலைவி யைத் தேடிச் சேர்த்துவைக்கும் பாங்கனுக்குத் தலைவன், தலைவியின் இலக் கணங் கூறியது. பாங்கன்—தோழன்.

௪. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று.

(1114)

(இ-ம்) மாட்சிமை தங்கிய ஆபரணங்களை யணிந்த இப்பெண்ணினது கண்களை நேரிற்பார்த்தால் நாம் இக்கண்களுக்குச் சமானமாகமாட்டோ மென்று நீலோற் பல மலர்கள் வெட்கப்பட்டுத் தலை கவிழ்ந்து பூமியைப் பார்க்கும்; பாராமையால் தலையெடுத்து மேல் நோக்கி முக மலர்ச் சியோடு நிற்பன என்பதாம். இதனால் நீல நிறமுடைய கருவிளமலரினுங் கண்கள் பேரழகுடையன என்பது கருத்து. கருவிளம் நீலோற்பலம் குவளை என்பன ஒரு பொருட் சொற்கள். இது, பாங்கனைக் காணுமிடத் திற் சென்ற தலைவன், தலைவியினது கண்களினழகை யன்பு மிகுதிபற்றித் திரும்பவுங் கூறியது.

ரு. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு

நல்ல படாஅ பறை.

(1115)

(இ-ம்) இவள் அனிச்ச மலர்களின் காம்புகளைக் கொய்யாமற் கூந்தலிற் சூடியிருக்கின்றாள்; அக்காம்பின் பாரம் பொறுக்கமாட்டாமல் இடையானது ஒடியும்; அஃதொடியவே, இறப்பு (மரணம்) வரும்; அப்போது நல்லவாத்திய முழக்கமில்லாமல் சாப்பறையடிப்பார்கள் என்பதாம். இது, பாங்கி பகற் காலத்திற் சேருதற்கு அடையாளங்காட்டி வரச்சொன்ன இடத்தில் தலைவன்

போய்த் தலைவி பூவாலலங்கரித்து நிற்பதைக் கண்டு கூறியது. பாங்கிதோழி.

## ௧௧௨-ஆம் அதி.—நலம்புனைந் துரைத்தல்.

௱௪௧

௬. மதியு மடந்தை முகனு மறியா
பதியிற் கலங்கிய மீன்.

(1116)

(இ-ம்) ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரங்கள் தமக்குரிய மதிக்கும் எமக் குரிய தலைவியின் முகத்துக்கும் வேறுபாடு மிக இருக்கவும், இது மதி, இது முகமென்று அறியமாட்டாமல், தந்நிலையிற் கலங்கித் திரிகின்றன என்பதாம். வேறுபாடு மிக இருத்தலாவது—மதிக்குத் தேய்தல், வளர்தல், மறுவுண்டா தலும், அம்மூன்றும் முகத்துக்கு இல்லையாதலுமாம். கலங்கித் திரிதல்—ஓரிடத்திலிராமல் ஆகாயத்திற் சஞ்சரித்துச் செல்லுதல். மதி—சந்திரன். இது, இரவில் வரும்படி பாங்கி அடையாளம் வைத்த இடத்திற் சென்ற தலைவன், தலைவியின் முகத்தைக் கண்டு கூறியது.

௭. அறுவாய் நிறைந்த அவிர்மதிக்குப் போல
மறுவுண்டோ மாதர் முகத்து.

(1117)

(இ-ம்) மேற்கூறிய நக்ஷத்திரங்கள் தந்நிலையினின்று மயங்கித் திரிதற்குக் காரணம் எதுவென்றால், தன்னுடல் குறைதலாய்ப் பின்பு நிறைந்து விளங்குகின்ற சந்திரனிடத்துப் போல என்னுடைய தலைவியின் முகத்து மறு (களங்கம்) உண்டோ? அஃதில்லை என்பதாம். இதில் இம்மூன்று மில்லா திருத்தலே முகத்தினது நலம்புனைந் துரைத்தலாம். இதுவும் அது.

அ. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
காதலை வாழி மதி.

(1118)

(இ-ம்) சந்திரனே! இப்பெண்ணின் முகம்போல யான் சந்தோஷிக்கும் விதமாகப் பிரகாசிக்க வல்லமையுடையாய் ஆனால் நீயும் என்னால் விரும்பப் படும் ஆசையை யுடையாய் ஆவாய். அவவிதம் வல்லமையில்லாவிட்டால் உன்னை யான் விரும்புதற்குக் காரணமில்லை என்பதாம். இதுவும் அது.

சு. மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற்
பலர்காணத் தோன்றல் மதி.

(1119)

(இ-ம்) சந்திரனே! கருங்குவளை மலர்போலுங் கண்ணினையுடைய இவள் முகத்தை யொத்திருக்க நீ விரும்புவாயானால் இம்முகம்போல யான் மட்டுங்

காணத்தோன்று, என்னைத்தவிர மற்றைப் பலருங் காணும்படி தோன்றாது மறைவாயாக என்பதாம். இதனால் பலருங் காணத்தோன்றினால் ஒப்பாகமாட்டாயென்று சந்திரனையிகழ்ந்து, தலைவி முகத்தைத் தலைவன் புகழ்ந்தானென்று கண்டுகொள்க. இதுவும் அது,

௲௱௨௰ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

க0. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதர்
அடிக்கு நெருஞ்சிப் பழம்.
(1120)

(இ-ம்) உலகத்தார் மெல்லிது என்று எடுத்துச் சொல்லப்பட்ட அனிச் சப்பூவும், அன்னப் பறவையினிறகும் இப்பெண்ணின் பாதங்களிற் பட்டால் முதிர்ந்த நெருஞ்சியின் கூரியமுள்ளைப் போலத் துன்பஞ்செய்யும் என்பதாம். எனவே, இந்த இரண்டைப் பார்க்கிலு மிருதுவான பாதங்களென்று அவளுடைய நலத்தைத் தலைவன் புகழ்ந்தானென்பதாயிற்று. இது, தலைவியைக் கூட்டிக்கொண்டுபோய் இடையீடில்லாம லநுபவிப்பாயென்ற தோழிக்கு அவள் நடந்துவா மாட்டாளென்று அவளது கால்களினலத்தைத் தலைவன் கூறி, மறுத்தது. இடையீடு—இடையிடுதல்; அஃதாவது—இடைவிடாமலென்றபடி.

---

# 1 1 3-ஆம்
## அதி.—காதற் சிறப்புரைத்தல்.

அஃதாவது, தலைவன் தன்னுடைய ஆசைமிகுதி கூறுதலும் தலைவி தன் னுடைய ஆசைமிகுதி கூறுதலுமாம்.

க. பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்.

(1121)

(இ-ம்) இன்பமுண்டாக மதுரமாகப்பேசும் பேச்சினையுடைய இப் பெண்ணினது வெண்ணிறமுள்ள பற்களினிடையே யூறியநீரானது பாலையுந் தேனையுஞ் சேர்த்துக்கலந்தாற் போலிருந்தது என்பதாம். அஃதாவது, தனித் தனி அறியப்படும் ஒவ்வொரு சுவையுடையதாகிய பாலையுந் தேனையும் ஒன்று சேர்த்துக்கலந்து உண்டால் இன்னருசி யுடையதென்று அறியலாகாமல் இனிய சுவையுடையதா யிருந்தது என்பது. எனவே, ஒருகாற் பால் போலவும் ஒருகால் தேன்போலவும் அநுபவிப்பனுதலால் ஆசைமிகுதிக்குத் தக்கபடி யிருந்த தென்பதுகருத்து. இது, இயற்கைப் புணர்ச்சியின் முடிவில் தலை வன் தன்னுசைமிகுதி கூறியது.

இயற்கைப்புணர்ச்சி—தலைவனுந் தலைவி யும் தனியிடத்திற்சந்தித்து முதலாவது கூடுதல்.

உ. உடம்பொ டுயிரிடை யென்னமற் றன்ன
மடந்தையொ டெம்மிடை நட்பு.
(1122)

(இ-ம்) உடம்பினிடத்து உயிரானது எப்படி இடைவிடாமற் கலந் திருக்கிறதோ அப்படியே இப்பெண்ணினிடத்தும் என்னிடத்தும் உள்ளன

கக்ஙு-ஆம் அதி.—காதற் சிறப்புரைத்தல்.

ஙுசங

வாகிய அன்புகள் ஒன்றைவிட்டொன்று நீங்காமற் கலந்திருக்கின்றன என்ப தாம். இருவரு மூபற்சி யின்றித் தெய்வங்கூட்டுவிக்கக் கூடியவராதலால் இருவர்நட்பும் பிரியமாட்டாதென்று தலைவன்றெரிந்து இவ்விதங் கூறினு னென்க. நுட்பமாக நோக்குவார்க்கு இவ்வுண்மை தெரியும். இது, பிரிவி னல் வரும் துன்பமில்லை யென்று தலைவன் கூறியது.

ங. கருமணியிற் பாவாய்நீ போதாயாம் வீழுந்
திருநுதற் கில்லை யிடம்.
(1123)

(இ-ம்) என் கண்ணிலுள்ள கருமணியிடத்து வசிக்கும் பாவையே! நீ யவ்விடத்தைவிட்டு

வெளியேறிக்கொள்ளவேண்டும்; ஏனென்றால், எம்மால் விரும்பப்பட்ட சிறந்த நெற்றியையுடைய இப்பெண்ணை யான் காணதிருக்க முடியாது ஆதலால், இவள் வேறாகப் புறத்திலே போகத்தக்கவளில்லை; நீ யிருக்கும் இடமே யிடமாக இருக்கத்தக்கவள், ஒருகால் நீயுமவளு மிருக்கலா மென்றாலும், இடங்காணு தாதலா லென்பதாம். எனவே, இவள் கண்மணி யினுஞ் சிறந்த பெண்மணி யென்பது கண்டுகொள்க. கண்மணியைப் பெண் ணாக உருவகஞ்செய்வது பெரியார் வழக்கு. இக்கருத்துப்பற்றியே "மணி யாடு பாவாய் காவாய்" என்று திருநாவுக்கரசுநாயனு ரருளிச்செய்தனர். (தேவாரம்) இது, தலைவியினிடத்துத் தலைவன் கூறியது.

௪. வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாதல்
அதற்கன்னள் நீங்கு மிடத்து.

(1124)

(இ-ம்) ஆராய்ந்து எடுக்கப்பட்ட நல்ல ஆபரணங்களையணிந்த இவள் புணருமிடத்து, உயிருக்கு உடம்போடு கூடி வாழ்ந்திருத்தலெத்தன்மையோ அத்தன்மையை யொத்திருப்பள். பிரியுமிடத்து, அவ்வுயிர் உடம்பைவிட்டு நீங்குத லெத்தன்மையோ அத்தன்மையை யொத்திருப்பள் என்பதாம். என்வே, உடனிருந்தால் உயிர்வாழ்ந்திருப்பேன், விட்டுப்பிரிந்தால் இறந்து படுவேனென்பது கருத்து. இது, பகற்குறியினிடத்துப்

புணர்ந்து நீங்கும்
தலைவன் கூறியது.

ரு. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம். (1125)

(இ-ம்) பிரகாசம் பொருந்தியனவாய்ப் போர்செய்கின்ற கண்களையுடையாள் குணங்களை யான் சிறிது மறந்தேனானால் உடனே நினைப்பேன், அதன் பின்னர் மறத்தலையறியேன். அம்மறத்தலில்லாமையால் நினைத்தலு



மறியேனென்பதாம். நினைத்தலுமறியேனென்றது, எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பேனென்றபடி. இது, ஒருசமயம் நீங்கி வந்த தலைவன், நீவிர் பிரிந்த காலத்து எங்களை நினைத்திருப்பது முண்டோ? என்ற தோழிக்குக் கூறியது. எங்களை யென்றது, தன்னையுந் தலைவியையுங் குறித்தது. இதுவரை யுந் தலைவன் கூற்று: இனித் தலைவி கூற்று. கூற்று—சொல்.

சு. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்

நுண்ணியரெங் காத லவர்.

(1126)

(இ-ம்) பிறர் எம்முடைய தலைவரை நேரிற் காணுமையால் தூரதேசத் துப் போயினுரென்று எண்ணுவார், அவரெப்படி நினைத்தாலெமக்கென்ன, எம் காதலர் எம் கண்ணிடத்தை விட்டு வேறிடத்துக்குப் போகமாட்டார். ஒரு கால் எம் கண்ணிமைகள் இமைத்தால் (மூடினுல்) நெருக்கத்தால் துன்பமடையவுமாட்டார். ஆதலால் அவர் அதிநுட்பமாயுள்ளவரென்பதாம். இது, தலைவன் ஒரு சமையம் பிரிந்துபோன பின், தோழியானவள் தன்னுடைய இயலைப் பழிப்பாளென்று பயந்து, தானிருக்கு மியல்பைத் தலைவி, அவள் கேட்பத் தன்னுள்ளே கூறியது. இயல்பு—தலைவனை மறவா திருக்குந்தன்மை.

எ. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணும்

எழுதேங் கரப்பாக் கறிந்து.

(1127)

(இ-ம்) எமது ஆசையுடைய தலைவர் எப்பொழுதும் இடைவிடாமல்

எம் கண்ணினுள்ளே யிருக்கின்றார் ஆதலால் கண்களுக்கு மையெழுதவு மாட்டோம். ஏனென்றால், மையெழுதும் அவ்வளவுகாலம் அவர் மறைதலை யறிந்தெனபதாம். எனவே, சதாகாலமும் தலைவனை கின்றாளென்பது கருத்து. இதுவும் அது.

நினைத்துக்கொண்டிருக்

அ. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்
அஞ்சுதும் வேபாக் கறிந்து.
(1128)

(இ-ம்) ஆசையுடைய தலைவர் எம் நெஞ்சினுள்ளிருக்கின்றார் ஆதலால் அவரைச் சுடுமென்றறிந்து சூடான பதார்த்தங்களை யுண்ணுதற்கு நாம் பயப் படுகின்றோம் என்பதாம். இவ்விதம் ஆசைமிகுதியால் தலைவி சொல்லியது, (பேதைமையென்பது மாதர்க்கணிகலம்) என்னும் ஔவையார் வாக்கையுறு திப்படுத்துகின்றது. மேலேமூன்று திருக்குறளிற் கூறியவையும் இதுவேயாம்.

க்கச-ஆம் அதி.—நாணுத்துறவுரைத்தல்.

ருசரு

க. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே

ஏதில ரென்னுமிவ் வூர்.
(1129)

(இ-ம்) என்கண்ணனது இமைக்குமானல் கண்ணுள்ளிருக்கிற காதலர் எனக்குத்தெரியாமல் ஒளித்துக்கொள்வர்; யான் அதையறிந்து இமைக்கமாட்டேன். அவர்மறைந்துகொள்ளும் அவ்வளவுபிரிவுக்காக அவரென்னைப்பிரிந்தா ரென்று இவ்வூரிலுள்ளார் சொல்லுவர் என்பதாம். ஊரிலுள்ளார் சொல்லுவ ரென்றது—தோழியே! நீ சொல்கின்றாயென்று குறிப்பாற் சொன்னபடியாம். இது, பிரிவினிடத்துத் தலைவி சகித்திருக்கும் பொருட்டு, தலைவனது இயலை (தன்மையை)த் தோழி பழித்துக்கூறிய இடத்து, அவள் அவனது இயலைப் பழிக்கலாகாதென்று கூறியது. அஃதாவது, ஒருபொழுதும் பிரியாதவரைப் பிரிந்தாரென்று நீ பழிக்கத்தகாதென்று தோழிக்குத் தலைவி சொல்லினளென்பதாம்.

கO. உவந்துறைவ ருள்ளத்து ளென்று
மிகந்துறைவர்
ஏதில ரென்னுமிவ் வூர்.
(1130)

(இ-ம்) என் காதல ரெக்காலத்தும் இடைவிடாமல் என்னுள்ளத்தில் சந்தோஷித்துத் தங்கியிருப்பர். அத

னையறியாமல் அவரென்னைவிட்டுப் பிரிந் திருக்கின்றார், அன்பிலரென்று இவ்வூரார் சொல்லுவரென்பதாம். பிரியா திருத்தலும் அன்புமுடைய அவரை, அவ்விரண்டும் இல்லாதவரெனத் தோழி யே! நீ நிந்தித்துப் பேசலாகாதென்பது குறிப்பாலாகிய கருத்து. இதுவும் அது.

---

## 114-ஆம் அதி.—நாணுத்துறவுரைத்தல்.

அஃதாவது-தலைவி தூரத்தேநீங்குதலும், அதுசகியாதவனாகிய தலைவன், தோழிக்குத் தன்னுடைய நாணம் நீங்குதலைச் சொல்லுதலும், அவ்விதமே தலைவன் நீங்கச்சகியாததலைவி தன்னுடையநாணம் நீங்குதலைத் தோழிக்குச் சொல்லுதலுமாம்.

க. காம முழந்து வருந்தினார்க் கேமம்
மடலல்ல தில்லை வலி.

(1131)

(இ-ம்) கிடைத்தற்கருமையுடையவராகிய பெண்களோடு முன்காமத் தை அநுபவித்து, பின் அவ்வநுபவித்தல் கிடையாமல் வருத்தமுற்ற ஆட வர்க்கு அவ்வருத்தம் நீங்க இன்பமாய்வருகின்ற மடலூர்தலல்லாமல் வேறு

வலிமை எனக்கில்லை யென்பதாம். மடலூர்தலாவது— குலோத்துங்கன் கோவையில் யானெழுதிய வசனங்களாற் கண்டுகொள்க. இது பாங்கியால் தூரத்தே நீக்கப்பட்ட தலைவன் தலைவி பிரிவாற்றாமையாற் கூறியது.

உ. நோனா வுடம்பு முயிரு மடலேறு
நாணினை நீக்கி நிறுத்து.
(1132)

(இ-ம்) மேலே வசனத்திற் சொல்லியபடி முன்பு காமத்தை அநுபவித்துப் பின்பு அவ்வநுபவித்தல் கிடையாமல் வருந்தினவர்க்கு, அவ்வருத்தத் தினைத் தாங்கமாட்டாத உடம்பு முயிரும் , அவ்வருத்தத்தை நீக்குவதாகிய நாணத்தைப் போக்கி, மடல்மாவினை யூர்ந்துநடக்கத் துணிந்து நிற்கும் என்பதாம். அவ்விதந் துணிந்து நிற்பாருள் யானுமொருவ னென்றது குறிப்பு. மடல்மா—பனங்கறுக்கு மட்டையாற் செய்த குதிரை. மடற்குதிரையேறி நடக்கும் விவரத்தை மேலே வசனத்தாலறிந்துகொள்க. எனவே, காமத்தா லாகிய வருத்தத்தை நாணமுடையாரே பொறுத்திருப்பரென்பது

தெரிந்து கொள்க. நீக்கி நிறுத்தென்பது.—ஒருசொல். இது, நாணமுடையவுமக்கு மட லூர்தல் முடியாதென விலக்கிய தோழிக்குத் தலைவன் கூறியது.

௩. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்
காமுற்றா ரேறு மடல். (1133)

(இ-ம்) நாணமும் மிகுந்த ஆண்தகைமையும் தலைவியைச் சேர்தற்கு முற்காலத்து உடையேன். சேர்தற்கு முடியாத இக்காலத்து, அவ்விரண்டும் காம மிகுதியால் நீங்குதலால், அக் காம மிகுதியாகவுடையார் ஏறுகின்ற பனங் கறுக்குமட்டையாலாகிய குதிரையையுடையேன் என்பதாம். இக்குதிரையின் விவரத்தை இதன் முன்னுள்ள இரண்டு வசனங்களாற் கண்டுகொள்க. ஆண் தகைமை—ஒன்றிற்குந் தளர்ச்சியடையாதிருத்தல். நாணம்—இழிதொழில் களை விலக்குவது. இது, நாணமில்லாமல் ஆண்தகைமையுடைய உமக்கு மட லூர்தல் முடியாதென்ற தோழிக்குத் தலைவன் கூறியது.

௪. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை. (1134)

(இ-ம்) நாணமும் நல்ல ஆண்மையுமாகிய புணை அல்லது தெப்பமாகிய தோணிகளை என்னிடத்து மிகுந்த

காமமென்னும் பெருவெள்ளமானது என்னிடத்து நின்றும் இழுத்துக்கொண்டு போகும் ஆதலால், நான் அக்காம வெள்ளத்தை எப்படிக் கடப்பேன் என்பதாம். இது, நாணூமும் நல்லாண்மை

கககச-ஆம் அதி.—நாணுத்துறவுரைத்தல்.

ஙசஎ

யும் காமவெள்ளத்தைக் கடப்பதற்குக் கப்பல் (தோணி) ஆதலால் அவ்விரண்டும் நீங்கமாட்டா என்ற தலைவிக்குத் தோழி கூறியது.

ரு. தொடலைக் குறுந்தொடி தந்தாள் மடலொடு
மாலை யுழக்குந் துயர்.
(1135)

(இ-ம்) மாலைக்காலத்தி லநுபவிக்கும் காமத் துன்பத்தினையும் அத் துன்பத்தை நீக்கு மடலாகிய மருந்தினையும் இதற்குமுன் யானறியமாட்டேன். இப்பொழுது மாலைபோலத் தொடர்ந்த (வளைந்த) வளையலையுடைய தலைவி தந்தாள் என்பதாம். காமத்துன்பம் மற்றைக் காலத்தினு முளதாறுலும் மாலைக்காலத்திலதிகமாதலால் மாலைக் காலத்தை எடுத்துக் கூறினன். இத் துன்பங்களெல்லாம் தோழியே! நின்னால்

நீங்குமென்பது குறிப்பான கருத்து. இது, இவ்வாறு கூறும் ஆற்றாமையும் மடலூரும் எண்ணமும் உமக்கு எவ்வாறு வந்தன? என்று கேட்ட தோழிக்குத் தலைவன் கூறியது.

ச. மடலூர்தல் யாமத்தும் உள்ளுவேன் மன்ற
படலொல்லா பேதைக்கென் கண்.
(1136)

(இ-ம்) தோழியே! நின்பேதையாகிய தலைவி காரணமாக என் கண்கள் சிறிது நேரமாவது நித்திரை செய்யமாட்டா ஆதலால், எல்லாரும் நித்திரை செய்யும் நடுராத்திரியிலும யான் வருத்தமுற்றிருந்து மடலூர்தலையே உறுதி யாக எண்ணுகின்றேன் என்பதாம். இதனால், தோழியே! தலைவியை யென் னோடு சேரச்செய்வது நாளைக்கென்று நினையாதே யென்பது கருத்து. மடலூர்தல் — பனங்கறுக்குமட்டையாற் செய்த குதிரையிலேறுதல். இதன் விவரம் முன்னைய வசனங்களாலறிந்துகொள்க. பேதையென்று சொல்லிய தற்கு—அறியாமையென்பது பொருளல்லாமல் பேதைப் பருவமென்னும் பொருளில்லை. இது, மடலூருந்தொழில் இன்றைக்கு வேண்டாமென்ற தோழிக்குத் தலைவன் கூறியது.

எ. கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.
(1137)

(இ-ம்) அளந் தறியக்கூடாத மிகுந்த காமநோயை

அநுபவித்தும் மட லூர்தலைச் செய்யாமல் அந்நோயைப் பொறுத்துக்கொண்டிருக்கும் பெண் சன்மத்தைப்போல உயர்ந்த தகுதியுடையசன்மம் வேறில்லையென்பதாம். மட லூர்தல் செய்தால் அந்நோய் நீங்குமென்பது கருத்து. எவ்வாறென்றால்-1135 ஆவது வசனத்தைப் படித்துக்கண்டுகொள்க. இது, முந்திய வசனத்தில் பேதைக்காக ஏன்நண்கள் நித்திரைசெய்யா என்பதுபற்றி அறிவிலாரய மட ஈசுஅ திருக்குறள் மூலமும்,

தெளிபொருள் வசனமும்.

வாரைப் பார்க்கினும் அறிவுடைய ஆடவரே காமநோயைப் பொறுக்கவல்லவ ரென்ற தோழிக்குத் தலைவன் கூறியது. இவ்வேழுதிருக்குறளும் தலைவன் தன்னிலை கூறியது. இனிவரும் மூன்றுதிருக்குறளும் தலைவி தன்னிலை கூறுதல்.

அ. நிறையரியர் மன்னளிய ரென்னாது காம
மறையிறந்து மன்று படும்.

(1138)

(இ-ம்) இவர் நிறையால் பெரியர், இவருள் ளடங்காது அதிக்கிரமித்துச் சென்றால் நம்மையடக்கிவிடுவ ரென்று பயப்படுதலுஞ்செய்யாது ,நம்மைவைத் தூக் காக்கத்தக்கவரென்று இரங்குதலுஞ் செய்யாது, பெண்கள்காமமும் அவர் மறைத்து வைத்தலைக்கடந்து, வெளிப்பட்டுச்செல்லும் என்பதாம். இது, உல கத்துப் பெண்களியல்புசொல்வாள்போன்று தன்னியல்பைத் தலைவி

தோழிக் குச்சொல்லி இனி நீ அறத்தொடுநிற்கவேண்டு மென்று குறிப்பாற் கூறியது. அறத்தொடு நிற்றலாவது—தாய் தந்தையர்க்கு முறைப்படிசொல்லி, விவாகஞ் செய்வித்தல். நிறையென்பது இவ்விடத்து அடக்கம்.

௯. அறிகிலா ரெல்லாரு மென்றேயென் காமம்
மறுகின் மறுகு மருண்டு.
(1139)

(இ-ம்) யான் இதற்குமுன்னம் அடங்கியிருத்தலா லென்னையொரு வரு மறிய மாட்டார்; இனி வெளியேறிச் சென்று எல்லாருக்கும் தெ ரியப் படுத்துவே னென்றெண்ணி, யென்காமமானது இவ்வூர்த் தெருவினிடத் தே மனமயங்கிச் சுற்றிக்கொண்டு திரிகின்ற தென்பதாம். அஃதாவது , தலைவன் பிரிந்த இடத்துத் தலைவி காமத்தைச் சகிக்கப்படாமல் வருந்துவதை ஊரார் தெரிந்து வசைபேசுதல். இதுவும் அது.

௧0. யாங்கண்ணிற் காண நகுப அறிவில்லார்
யாம்பட்ட தாம்படா வாறு .
(1140)

(இ-ம்) யாம் காதாற்கேட்கும் விதமல்லாமலுங் கண்ணால்நேரே காணும் விதமாகவும் எம்மைக் காமத்தால் வருந்துகின்றாளென்று அவமதித்துச் சிரிப் பர் அறிவில்லாதவர். அவ ரவ்விதஞ்சிரிப்பது, யாமடைந்த காமநோய்கள் அவ ரடையாமையால் என்பதாம். அவரடைந்திருந்தால் சிரிக்கமாட்டா ரென்பது கருத்து.

இது, செவிலித்தாயோடு சேர்ந்துநின்று, உனக்கு நான்செய்யுமா றென்னையென்று நகைசெய்த தோழியோடு புலந்து தலைவி தன்னுள்ளே சொல்லியது.

நகைசெய்தல்—சிரித்தல். புலத்தல்—ஊடுதல்.

---

## 115-ஆம் அதி.—அலரறிவுறுத்தல்.

அஃதாவது, களவுப் புணர்ச்சியை விரும்பிய தலைவன் பிறர் கூறுகின்ற பழிச்சொற்குப் பயப்படாது, அச்சொல் தனக்குச் சாதகமாயிருக்கிறதென்று, பின்னும் அக்களவுப் புணர்ச்சியை விரும்பித் தோழிக்குச் சொல்லுதலும், தோழியுந் தலைவியும் தங்களுக்கு வந்த பழிச்சொல்லைத் தலைவனுக்குச் சொல்லுதலுமாம்.

க. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
பலரறியார் பாக்கியத் தால்.

(1141)

(இ-ம்) தலைவிக்கு மெனக்குமுள்ள நட்பானது ஊரினிடத்துப் பழிச் சொல்லா யெழுதலால் குறித்த இடந் தவறித் தலைவியைக் காணமல் வருந் திய என்னுடைய வுயிரானது அவளைக் கண்டதுபோல நிலை நிற்கும். அப்படி நிற்கப் பெறுதலைத் தெய்வத்தால் (ஊழால்) யானே அறிவேனல்லாமல் பழிச் சொற்கூறுகின்ற பலரு மறியமாட்டாரென்பத ாம். எப்படியென்றால், இரகசிய மாக

நடக்கின்றது பழிச்சொற் கூறுமாறு வெளிப்பட்டதனால் இனி ஓரிடத்தைக் குறியாது நேர்ந்த இடமெல்லாந் தலைவியை யநுபவிக்கத் தடையில்லை யென்பதனாலென்க. இது, குறித்த இடந் தவறுதலால் தலைவியைக் காணமல் வருந்தி, மறுநாள் வந்த தலைவனைத் தோழியானவள் ஊரார் பழிச்சொற் சொல்லுதலை யெடுத்துக் கூறி, நீ மணஞ் செய்து கொள்வதற்குத் தடை யென்ன? என்று கேட்ட இடத்துத் தலைவன் கூறியது.

உ. மலரன்ன கண்ணா ளருமை யறியா
தலரெமக் கீந்ததிவ் வூர்.

(1142)

(இ-ம்) நீலோற்பல மலர் போலுங் கண்களையுடையவளது யாவராலும் அடைதற்கு அருமையாகிய தகுதியறியாமல் இவ்வூரிலுள்ளார் அவளை எளிய வளாக்கி அவள் மேற் சொல்லும் பழிச்சொல்லை எமக்குக் கொடுத்தனர். எமக்கு அவள் ஆதாரமாயிருத்தலாலென்பதாம். எப்படியென்றால், பிறரறியாமல் இரவிலும் பகலிலும் ஒவ்வோரிடத்திற்போய்க் களவாகச் சேர்த்தக்கவளை யினி மணஞ் செய்து நினைத்த இடத்தில்வைத் தநுபவிப்பதற்கு ஊரார் அவள் மேற் சொன்ன பழிச்சொல் காரணமாயிருத்தலாலென்க. பழிச் சொல் வந்து விட்டால் இனிக் களவுப்புணர்ச்சி முடியாதென்று மணஞ்செய்து புணர் தற்குத் தலைவன் உடன்பட்டானென்பது கருத்து. இதுவும் அது.

௩. உறாஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
பெறாஅது பெற்றன்ன நீர்த்து, (1143)

௱௫௦ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) நானுந் தலைவியுங் களவாகக் கலந்து மகிழுஞ் செய்தி இவ்வூரா ரறிதலாலுண்டாகும் பழிச்சொல் எனக்குப் பிரயோசனமுடையதொரு காரிய மல்லவா? எப்படியென்றால், அச்சொல்லைக் கேட்ட என்மனமானது அவளைச் சேராமலிருந்தே சேர்ந்து தழுவினாலுண்டாகும் இன்பம்போலு மின்ப முடையதாதலால் என்பதாம். அஃதாவது, இனி யவளை மணஞ்செய்து யாதொரு வசைக்கு மிடமில்லாமலும் தடையில்லாமலும் அநுபவிக்கலா மென்பது. இதுவும் அது.

௪. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
றவ்வென்னுந் தன்மை யிழந்து. (1144)

(இ-ம்) என்னுடைய காமமானது இவ்வூரா ரெடுத்துப் பேசும் வசைச் சொல்லாலே மேலு மேலும் வளர்கின்றது; அவ்வசைச்சொல் இல்லாவிட்டால் அக்காமம் மேலு மேலும் வளரும் தன்னியல்பு குறைந்து சுருங்கிவிடும்

என்ப தாம். வசைச்சொல்லாலே காமம்வளர்வதெப்படியென்றால், பிறாறியாதபோது காமம் பயந்து பயந்து அநுபவிக்கப்படும். பிறாறிந்துவிட்டால் வசைச்சொல் வந்தது வந்தது, இனி யச்சொற்குப் பயப்படவேண்டியதில்லை யென்று மிகத் துணிந்து அநுபவித்தலென் க.

துணிந்தநுபவித்தலாவது—மணஞ்செய்தநு பவித்தல். இதுவும் அது.

ரு. களித்தொறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
வெளிப்படுந் தோறு மினிது. (1145)

(இ-ம்) கள்ளுண்பார்க்குக் கள்ளுண்டலால் மகிழ்ச்சியடையுந் தோறும் அக்கள்ளுண்டல் இன்பமாமாறுபோல, எனக்குக் காமமானது வெளிப்பட்டு அலர் (பழி) மொழியாகுந்தோறும் இன்பமுண்டாகின்றது என்பதாம். எப்படி யென்றால், மேலே வசனத்தில் வசைச்சொல்லாலே யென்றது முதல் படித் தறிந்து கொள்க. இதனால் ஆசைமிகுதியாலே பழிச்சொல்லு மின்பமாமென்பது கண்டுகொள்க. இதுவும் அது.

சா. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
திங்களைப் பாம்புகொண் டற்று.

(இ-ம்) யான் காதலரை (ஆசையுடையதலைவரை)க் கண்டு தழுவி யநு பவித்தது ஒருநாளேயாம். அதனாலுண்டாகிய பழிச்சொல்லானது அவ்வொரு நாள்மட்டிலல்லாமல் சந்திரனைப் பாம்புதீண்டினு லது உலகமெங்குந் தெரிதல் போல, ஊரெங்கும் பரவி விரிந்து நின்றது என்பதாம். இதனால், ஒருநாள் களவுப்புணர்ச்சியாகக் காதலரை யநுபவித்ததற்கே பழிச்சொல் மிகவிரியு

க்கரு-ஆம் அதி.—அலரறிவுறுத்தல்.
ஙருக

மானல் இன்னமும் இவ்வாறநுபவித்தல் கூடாது. மணஞ்செய்து இப்பழிச் சொற்கிடமில்லாமற் காதலரைத் தழுவி யநுபவிக்க வேண்டுமென்று குறிப் பாற் கூறினளென்பது கருத்து. இது, இடையீடுகளாலும் குறியிடந்தவறு தலாலும் தலைவியை யடையப்பெறாத தலைவன் காவலிடத்துக்கு வெளிப்புறத் திக்குள்ளானு யிருக்க, அதனைத்தோழிக்குச் சொல்லுவாளாய்த் தனக்கு வந்த பழிச்சொல்லை ச் சொல்லி, அத்தலைவனை எப்போது மணஞ்செய்விப் பாய்? என்று தலைவி தோழியை வினவியது. வினவல்—கேட்டல்.

எ. ஊரவர் கௌவை யெருவாக அன்னைசொல்

நீராக நீளுமிந் நோய்.
(1147)

( இ-ம்) நானநுபவிக்கின்ற காமநோயானது இவ்வூரிலுள்ள பெண்கள் பேசும்வசைச்சொற்கள் எரு (உரம்) ஆக, அச்சொல்லைக்கேட்ட என்தாயானவள் சொல்லுகின்ற கொடுஞ்சொற்கள் நீராக மிகவும் வளர்ந்து நீள் கின்றது என்பதாம். எப்படியென்றால், காமத்தால் தலைவி படுந்துயர் ஊரிலுள்ள பெண்கள் தெரிந்து தாயினிடத்து ''உன்மகளை ஒருவன் இவ்வளவுதுன்பத்துக் கிடஞ்செய்துவிட்டான்" என்று குறிப்பாகவும் வெளிப்படையாகவும் சொல்லிய சொற்களைக்கேட்டுப் பொறுக்க மாட்டாமல்,"அவனைக்கண்டால் இனித் துன் பஞ்செய்வோம்" என்று அவள்சொல்லியதைத் தலைவியறிந்து வருந்தித் தோழிக்கு, நீ சொல்லியபடி மணம்முடியாதோவென்று கூறியதென்க. இது, மணஞ்செய்யுங்காலம் நீட்டித்தலும் அதைச்சகியாதவளாகிய தலைவியைத் தலைவன் காவலிடத்துக்கு வெளிப்புறத்தானாய் வந்திருந்தலை யறிந்ததோழி ஊரார்சொல்லும் பழியையும் தாய்சொல்லையுநோக்கி ஆற்றவேண்டுமெனப் பேசத்தொடங்கும் போது தலைவி கூறியது.

அ. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றூற்

கௌவையாற்
காம நுதுப்பே மெனல்.
(1148)

(இ-ம்) அயலாராகிய பெண்கள் தாம் சொல்லுகின்ற பழிச்சொல்லால் என் காமத்தைக் கெடுத்துவிடுவோமென்று நினைத்தலானது பெருநெருப்பை நெய்யினாலே கெடுத்துவிடுவோமென்று கருதலோடொக்குமென்பதாம். இதனால், இவ்விரண்டு முடியாதென்பதல்லாமலும் மேலு மேலும் வளரு மென்பது கண்டுகொள்க. இவ்விரண்டு—நெருப்பும், காமமும். இதுவும் அது.

௯. அலர்நாண வொல்வதோ அஞ்சலோம் பென்றார்
பலர்நாண நீத்தக் கடை.
(1149)



(இ-ம்) நம்மை முதலாவது வந்து நேரே கண்டு கலந்த

நாளில் "உன்னை விட்டுப் பிரியேன், ஒன்றுக்கு நீ யஞ்சாதே" என்று தேற்றஞ் சொல்லிய தலைவர், தாமே இன்று கண்டார்பலரும் நாணும்படி நம்மை நீங்கிய பின்னர் நாம் அயலார் சொல்லும் பழிச்சொல்லுக்கு நாணமடையக் கூடுமோ? கூடா தென்பதாம். இதனால், சொன்னவாக்குத் தவறிப்போன காதலர்க்கே நாண மில்லாதபோது, அவவிதந் தவறுதலில்லாத நமக்கு நாணம் வேண்டுவதில்லை யென்பது கருத்து. இது, விவாகத்தை முன்னிட்டுத் தலைவன் பிரிந்து போனதைச் சகியாதவளாகிய தலைவி அவன் சிறைச்சாலைக்கு வெளிப் புறத் தில் வந்திருந்தலையறிந்து ஊரார் சொல்லும் பழிச்சொல்லுக்குப் பயந்து காமத்தைப் பொறுத்துக்கொள்ளவேண்டுமென்ற தோழிக்குக் கூறியது. சிறைச்சாலை —தலைவியைக் காவலில் வைத்த இடம்.

கο. தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர்.

(1150)

(இ-ம்) தலைவனோடு கூட அவன் விரும்பிய இடத்துக்குப் போதற்குக் காரணமாவதையெண்ணி நாம் முன்னமே விரும்புவதாகிய பழிச்சொல்லை இவ்வூரார் நாம் விரும்பாமல் தாமே சொல்கின்றனர். இனி காதலர் நாம் சம் மதிததால் நம்மை அவர் விரும்புமிடத்துக்குக்

கூட்டிக்கொண்டுபோகச் சம் மதிப்பாதலால் இப்பழிச்சொல் நன்றாக வந்து நமக்கு வாய்த்தது என்பதாம். இதனால், பழிச்சொல்லைப் பொறுத்துக்கொண்டிருப்பதிற் பயனில்லையென்று தலைவி தலைவனோடு வெளியேறிப் போதற்குத் துணிந்தாளென்பது கருத்து.

இது, தலைவன் காவலிடத்துக்கு வெளிப்புறத்தில் வந்திருத்தலை யறிந்த தோழி, தலைவிக்குச் சொல்லுவாளாகி, ஊரார் சொல்லும் பழிச்சொல்லைத் தெரியும்படி கூறித் தலைவனுடன் வெளிப்புறப்பட்டுப்போதலின் நன்மையைக் கூறியது. இதுமுதல் முந்திய 20 திருக்குறளும் புணர்ச்சிவேண்டியதற்குக் காரணமாம்.

## களவியல் முற்றுப்பெற்றது.

---

# கற்பியல்.

அஃதாவது—தலைவனுந் தலைவியும் விவாகஞ்செய்து இல்லறத்திலிருந்து இன்பமநுபவித்துக்கொண்டிருக்கும்போது ஒவ்வொருகாரணம்பற்றித் தலைவன், தலைவியைப் பிரிந்தகாலத்தில் உண்டாகும் பலவகைத் துன்பங்களைத் தலைவி சகித்துக்கொண்டிருந்து, தலைவன் வந்தகாலத்தில் ஊடல் கூடல்களைச்

## கக௲-ஆம் அதி.—பிரிவாற்ருமை.

௱௫௱

செய்து முன்னிலுமதிகமாக இன்பமநுபவித்துக்கொண்டிருத்தலாம். "பொற்பமை சிறப்பிற் கற்பெனப் படுவது மகிழ்வு மூடலு மூடலுணர்த்தலும் பிரிவும் பிறவும் மருவியதாகும்" என்ருர். இஃது இலக்கணம். (நம்பியகப் பொருள்) ஒவ்வொரு காரணமாவன—அரசர்க்குத் தூதுபோதலும், நட்பினர்க் குத் துணையாகச் செல்லுதலும், பொருள் சம்பாதிக்கப்போதலும், கல்வி கற்கப் போதலுமாம்.

---

## 1 1 6-ஆம் அதி.—பிரிவாற்ருமை.

அஃதாவது, இனிக்களவுப்புணர்ச்சி கூடாதென்று தலைவனுந் தலைவியும் விவாகஞ் செய்துகொண்டபின் அறம்பொருள் இன்பங்களின் பொருட்டுத் தூரத்துஞ் சமீபத்துந் தலைவன் பிரிந்து செல்லுதலைத் தலைவிசகியாளாந் தன்மை. இனி, அப்பிரிவாற்ருமையானது இவவிடத்துத் தலைவியைப் பிரிந்து செல்லுஞ் செய்தியைச் சொல்லிய தலைவனுக்குத் தோழி கூறலும் அச்செய்தியைத் தலைவனது

குறிப்பாலறிந்து தலைவி தோழிக்குக் கூறலும் பிரிதலைச் சொல்லுமிடத்துத் தோழிகூறலும், தலைவன்பிரிந்த இடத்துப் பிரிவால் வருந்துன்பத்தைச் சகிக்கும்படி சொல்லிய தோழிக்குத் தலைவி மறுத்துக்கூறலுமென நால்வகைப்படும்.

க. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.
(1151)

(இ-ம்) தலைவனே! நீ எங்களைவிட்டுப் பிரியாமலிருப்ப துண்டானால் அதை என்க்குச் சொல்லு. அஃதில்லாமல் பிரிந்துபோய் விரைந்து வருவேனென்று சொல்வாயானால் அச்சொல்லை உன்னைவிட்டுப் பிரிந்தால் உயிரோடு வாழ்ந்திருக்கும் பெண்களுக்குச் சொல்லு என்பதாம். எனவே, நீ பிரிந்தால் உன்தலைவி யிறந்துபோவாள் என்று சொல்லியபடி. இது, பிரிந்துபோய் விரைவில் வருவேனென்ற தலை வனுக்குத் தோழி கூறியது.

உ. இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
புன்க ணுடைத்தாற் புணர்வு.
(1152)

(இ-ம்) தழையும் பூங்கண்ணியுங் கொண்டு வந்துநின்ற பின்னிலைக்கா லத்தில் காதலர் பார்வையான்று

புணர்ச்சிக் குறிப்புக் காட்டியதனால் நமக்கு இன்பமுடையதாயிருந்தது, இன்று அப்புணர்ச்சி நடந்துகொண்டிருக்கவும் அது (அப்பார்வை) அவர்பிரிந்து போவாரென்று அஞ்சும் அச்சத்தையுடைய



தாயிருந்தது என்பதாம். தழையும் பூங்கண்ணியுங் கொண்டுவந்த பின்னிலைக் கால மெதுவென்றால், தோழி அறியாமல் தலைவியுந் தலைவனும் புணர்ந்த காலத்துக்குப் பிந்தியகாலமாம். தழையும் பூங்கண்ணியும் கொண்டுவருத லெதற்கென்றால், தலைவிக்குக் கொடுப்பதற்காக என்க. பூங்கண்ணி-பூமாலை, பூங்கொத்து. இது, பிரிந்துபோதலைத் தலைவனிடத்து உண்டாகுங் குறிப்பா லறிந்த தலைவி தோழிக்குக் கூறியது.

௩. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
பிரிவோ ரிடத்துண்மை யான். (1153)

(இ-ம்) உன்னைவிட்டுப் பிரியமாட்டேனென்ற தம்முடைய சொல்லையும் விட்டுப்பிரிந்தால் நான்சகித்திருக்க மாட்டேனென்பதையும் அறித லுடையவராய நம் காதலரிடத்தும் ஒவ்வொருசமையம் பிரிவுண்டாதலால் அவருடைய வார்த்தையும்

முதன்மையான அன்பும்பற்றி, அவர் நம்மிடத்து அன்புடையாரெனத் தெளிந்துகொள்ளுந்தெளிவுமில்லை என்பதாம். இதுவும் அது.

ச. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
றேறியார்க் குண்டோ தவறு.

(1154)

(இ-ம்) என்னை முதலாவது கண்ட நாளில் பேரன்பு செய்து உன்னை விட்டு நான் ஒருபோதும் பிரியமாட்டேன். நீ பயப்படாதே யென்ற தலைவர் தற்போது தாமே பிரிவாரானால் அவர்க்கல்லாமல் அவர் சொல்லை யுண்மை யென்று தெளிந்திருந்தா ய நமக்குக் குற்றமுண்டோ? இல்லை யென்பதாம். எனவே, சொல்லுஞ் செயலும் ஒத்திராத உமக்குக் குற்றம் உண்டாகுமென்று இவை யெல்லாம் எடுத்துச்சொல்லித் தோழியே நீ அவர் நம்மைவிட்டுப் போதலைத் தடுப்பாய் என்பது கருத்து. இதுவும் அது.

ரு. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பல் மற்றவர்
நீங்கி னரிதாற் புணர்வு.

(1155)

(இ-ம்) தோழியே! என்னுயிர் என்னைவிட்டுப் போகாமல் நீ காப்பா யானல் அதைக் காப்பாற்றுதற்குப்

பொருந்தினவராகிய தலைவர் என்னை விட்டுப் பிரிந்து செல்லுஞ் செய்கையைத் தடுக்கவேண்டும். அவர் பிரிவைத் தடுப்பாரில்லாமற் பிரிந்துபோவாரானால் அவராலாளப்பட்ட என்னுயிர் என்னை விட்டுப் பிரிந்துபோகும்; போனால் பின்னர் அவர் வந்து என்னைக் கூடுதல் இல்லை என்பதாம். இதுவும் அது.

## கக௬-ஆம் அதி,—பிரிவாற்றாமை.

௱௫௫

௬. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
நல்குவ ரென்னு நசை.

(1156)

(இ-ம்) நம் பிரிவாற்றாமை யறிந்த தலைவர் தாமே நம்முன்னின்று நான் பிரிந்து வருவேனென்று சொல்லும் வன்கண்மை (கொடுமை)யுடையவ ரானால் அப்படிப்பட்டவர் நம்மைப் பிரிந்துபோய் நம் வருத்தந்தெரிந்து வந்து தலையளி (பேரன்பு) செய்வரென்னும் ஆசையை விட்டுவிடவேண்டும் என்பு தாம். இது தலைவன், பிரிவு அறிவித்தவாறு வந்து சொல்லிய தோழிக்குத் தலைவி கூறியது.

எ. துறைவன் றுறந்தமை தூற்றுகொல் முன்கை
யிறையிறவா நின்ற வளை.
(1157)

(இ-ம்) குளிர்ந்த நீர்த்துறைகளையுடைய தலைவன் என்னை விட்டுப் பிரிதலை அவன் சொல்லாமல் தாமே தெரிந்து என் முன்கையினின்றுங் கழலு கின்ற வளையல்கள் எனக்குச் சொல்லமாட்டாவோ? அவன் பிரிதலை நியாய வழியாகச் சொல்லித் தடுக்க மாட்டாத நீயும் அவனும் சொல்லவேண்டுமோ என்பதாம். இன்னுயிர்க் காதலர் பிரிவின்வருத்தத்தால் சரீரமெலியவும் பெண்கள் வளையல்கள் கழலுதல் இயற்கையாதலா லிவ்வாறு கூறினாள். எனவே, தோழியோடு தலைவி ஊடல்செய்து கூறினாளென்பது கண்டுகொள்க. இதுவும் அது.

அ. இன்னா தினனில்லூர் வாழ்த லதனினும்
இன்னா தினியார்ப் பிரிவு .
(1158)

(இ-ம்) பெண்களுக்குத் தங்கள் குறிப்பறிந்து வேண்டியவை செய்து மகிழச் செய்யும் தோழியரில்லாத வூரில் அப்பெண்கள் வாழ்ந்திருப்பது துன்ப முடையதாகும். அதைப்பார்க்கினு மிகுந்த துன்பமுடையது இனிமையுடைய காதலரைப்

பிரிந்திருத்தல் என்பதாம். எனவே, இவ்விரண்டு துன்பமும் யான் அடைந்திருக்கின்றேனென்பது கருத்து.
தோழியிருந்தும் தன்கருத்தறிந்து
செய்வது செய்யாமையால் தான் வாழூமூர் அவளில்லாத கண்டுகொள்க. இதுவும் அது.
ஆராயிற்றென்று

கூ. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
விடிற்சுட லாற்றுமோ தீ.

(1159)

(இ-ம்) நெருப்பானது தன்னைத் தொட்டாற் சுடுமானல் சுடுமே யல்லாமல் காமமாகிய நோய்போலத் தொடாமல் விட்டு விட்டால் சுடுதலைச் ரேுசே

# திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

செய்யுமோ? சுடாது என்புதாம், சுடுமானல் சுடுமென்பதனல் சுடாமலுமிருக்குமோ என்றல், மந்திரத்தாலும் மருந்தாலுஞ் சுடாமலிருக்குமென்க. காமநோயோ எந்த உபாயத்தாலும் சுடாமலிராதென்பது கருத்து. இப்படிப்பட்ட காமத்தை யானெவ்வாறு சகித்திருப்பேனென்று குறிப்பாற் சொல்லினளாம். இக்கருத்துப்பற்றியே ''நீருட்-குளிப்பினுங் காமஞ் சுடுமேகுன் றேறி, ஒளிப்பினுங் காமஞ் சுடும்'' என்றார் பிறரும். (நாலடியார் பிறன்மனை நயவாமை 10) இது, நீ சகித்திருக்க வேண்டுமென்ற தோழிக்குத் தீயினு மதிகமாகச் சுடுங் காமநோயை எப்படி நான் சகித்திருப்பே னென்று தலைவி கூறியது.

கO. அரிதாற்றி யல்லல்நோய் நீக்கிப்

பிரிவாற்றிப்
பின்னிருந்து வாழ் வார் பலர். (1160)

(இ-ம்) தோழியே நீ சொல்லுகின்றது சரி. காதலர் விட்டுப் பிரிதலைச் சொல்லிய விடத்து அதற்குச் சம்மதித்து, அப்போதுண்டாகுந் துன்பத்தினை நீக்கி அவர் பிரிந்து போவதையும் பொறுத்து, அதன்மே லுயிரோடிருந்து வாழுமாதர்கள் உலகத்துப் பலர் என்பதாம். இப்படி வாழுமாதர் ஒருவரு மில்லையென்பது குறிப்பு. காதலரைப் பிரிந்து உயிர் வாழ மன்புடைய மாத ரொருவருமில்லை யாதலால் யானு மிறந்துபோவேனென்பது கருத்து. இத் திருக்குறளிலுள்ள சொற்களினின்று விரியும் பொருள்கள் பூரணமான இலக் கண நயந்தெரிந்தார்க்கே பயன்படுமாதலால் ஆசிரியர் பரிமேலழகர் விரித் துரைத்தபடி யானொன்று மிவ்விடத்து எழுதவில்லை. இது, தலைவியர் பலரும் தலைவர் பிரிவைச் சகித்துக்கொண்டிருப்பர். நீயவ்விதம் செய்கிறாயில்லையென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

---

## 117-ஆம் அதி.—படர்மெலிந்திரங்கல்.

அஃதாவது - தலைவன் பிரிந்து போனதைச்

சகியாதவளாய்த் தலைவி தான் படுகின்ற துன்பத்தினை எப்பொழுதும் நினைத்தலால் உடம்பு மெலிந்து வருந்துதல்.

க. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
கூற்றுநீர் போல மிகும்.
(1161)

(இ-ம்) இக் காமநோயைப் பிறரறிந்தால் அவமதித்துச் சிரிப்பரென்று வெட்கப்பட்டு மறைக்கின்றேன். இந்நோயோ மறைந்து அடங்காமல் நீர் வேண்டுமென்று இறைப்பார்க்கு ஊற்று நீர் எப்படி ஊறுமோ அப்படியே

௧௧௫௯ஆம்
அதி.—படர்மெலிந்திரங்கல். ௩௫௯

மேலுமேலு மிகுந்து வளருமென்பதாம். இது, காமநோயை வெளிப்படுத்தல் நாணமாகிய உன்னுடைய குணத்துக்குப் பொருந்தாதென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

உ. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
குரைத்தலு நாணுத் தரும்.
(1162)

(இ-ம்) இக்காமநோயை யிவ்விடத்திலுள்ளார் அறியாமல் மறைத்தலுஞ் செய்யமாட்டேன். மறைக்கமாட்டேனுனல் இந்நோயைச் செய்து அவ்விடத்துச் சென்ற தலைவருக்குச் சொல்லவேண்டுமென்றால், அப்படிச் சொல்வதும் எனக்கு வெட்கத்தைக் கொடுக்கின்றது. இனி யான் என்ன செய்வேன்? என்பதாம். இதனுல், ஒருநாளைக் கொருநாள் காமம் வளர்கின்ற தென்பதும் , இதைப் பொறுக்கமாட்டாமல் தூதனுப்புதலை நாணம் தடுக்கின்ற தென்பதுங் கண்டுகொள்க. இது, காமநோயை வெளிப்படுத்தல் உன்னுடைய நாணத் துக்குத் தகாதென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

௩. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
னோனு வுடம்பி னகத்து.

(1163)

(இ-ம்) காமநோயும், அந்நோயைச் செய்த தலைவருக்கு இப்படியேன் செய்தீரென்று கேட்கமுடியாத நாணமும் ஆகிய இவ்விரண்டையும் சுமக் க மாட்டாத என்னுடம்பினிடத்துள்ள உயிரானது, சுமக்குங் காவுகம்பாக அத னிரண்டு பக்கத்துந் தொங்கிக்கொண்டிருக்கின்றன என்பதாம். இரண்டு பக்கததுந் தொங்குதலாவது—காமமும் நாணமும் ஒன்றுக்கொன்று மிகாமல் சமமாயிருந்தவென்பது. இதனுல், காமவியாதியால் உடல் மெலிந்தாளென் பதும்

இப்படி நீடித்திருந்தால் உயிருமெலிந்து கெடுமென்பதும் கருத்து. இதுவும் அது.

ச. காமக் கடல்மன்னு முண்டே யதுநீந்தும்
ஏமப் புணைமன்னு மில்.

(1164)

(இ-ம்) எல்லாருக்கும் உள்ளனவாய காமம் நாணம் என்னுமிரண்டனுள் எனக்குண்டாயது காமமாகிய கடலொன்றே. அக்கடலைக் கடக்குங் காவலாகிய புணை (தோணி) யில்லை என்பதாம். இதனால், தோழியே நீ தூதனுப்பித் தலைவனை வரவழைத்து என் காமத்தைத் தணித்தாயில்லை. இனியேனும் அப்படிச் செய்வாயென்று தலைவி கூறினளென்பது கருத்து. மன், உம்— இவ்விரண்டும் அசைகள். இது, தலைவியர் காமக்கடற்குளகப்படமாட்டார், ஙூடு திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

அகப்பட்டாலும் தக்கபுணை (தோணி)யாற் கடப்பரென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

ரு. துப்பி னெவனாவர் மற்கொல் துயர்வரவு
நட்பினு ளாற்று பவர்.

(1165)

(இ-ம்) இன்பஞ்செய்தற்குரிய சிநேகத்தினிடத்தே

துன்பம் வருதற்குக் காரணமாகிய செய்கைகளைச் செய்யவல்லவர் துன்பஞ் செய்தற்குரிய பகையிடத்து என்னதான் செய்யமாட்டார்? எல்லாஞ் செய்வர் என்பதாம். இது, தலைவன் பிரிவைச் சகிக்கமாட்டாத தலைவி, அத்தலைவன் வருதற்குத் தூதனுப்பாதிருந்த தோழியைப்பார்த்து, உலகஇயல் கூறுவாள்போலத் தன் கருத்தைக் குறிப்பாற் கூறியது. இதனால், நீ என்னோடு நட்பாயிருக்கும் போது என்னுடைய துன்பத்தை நீக்காதிருப்பாயானால் பகையாங்காலத்து எது செய்யமாட்டாயென்பது முதலியவற்றை விரித்துச் சொல்லிக் கொள்ளலாம்.

சு. இன்பங் கடல்மற்றுக் காம மஃதடுங்கால்
துன்ப மதனிற் பெரிது.
(1166)

(இ-ம்) காமமானது புணர்ச்சியால் இன்பஞ்செய்யுமிடத்து அவ்வின்பம் கடல்போலப் பெரியதாகும். இனி அக்காமந்தானே காதலர் பிரிவினால் துன்பஞ் செய்யுமிடத்து அத்துன்பம் அக்கடலைப்பார்க்கினும் பெரியதாகும் என்பதாம். இதனால், இன்பமுந் துன்பமும் ஒத்திருந்தால் அத்துன்பத்தைச் சகிக்கலாம். இன்பத்தினளவுக்குத் துன்பத்தினளவு மிகுதியாதலால் அதைச் சகிக்கமுடியாதென்பது கருத்து.

இது, காமத்தால் இன்பமுற்ரு ருக்கு அக்காமத்தால் துன்பமும் வருமென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

எ. காமக் கடும்புனல் நீந்திக் கரைகாணேன்
யாமத்தும் யானே யுளேன்.
(1167)

(இ-ம்) காமமென்னும் பெரிய கடலை யான் கடக்கமாட்டாதவளில்லை. கடந்தும் எல்லாரும் நித்திரை செய்யும் நடுராத்திரியிலும் ஒருதுணை இல்லா மல் யானே தனித்திருந்தேன். அப்படியிருந்தும் ஒருவருமறியாத அக்காலத் தாவது இறந்து பாடுற்றுப் பிழைத்துப்போனேனில்லை; இஃதொரு தீவினை யிருந்தவிதம் என்பதாம். தனியிருந்தேனென்பது, தோழியே நீ துணையா யிருந்து துன்பத்தை ஆற்றிணுயில்லை யென்னுங் குறிப்பு. இது, காமக்கடலை நிறையானது புணையாக நீந்தப்படுமென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

க்கஎ-ஆம் அதி.—படர்மெலிந்திரங்கல். ரு
ருக்க

அ மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
என்னல்ல தில்லை துணை.
(1168)

(இ-ம்) இராக்காலமானது இவ்வுலகத்து நிலைபெற்ற எல்லா வுயிர்களையும் நித்திரை செய்யப்பண்ணி அன்புடையதாயிருந்தது. அந்நித்திரையில்லாத என்னையல்லாமல் அவ்விராக்காலத்துக்கு வேறு துணையில்லை என்பதாம். எனவே, நிலைபேறுடைய உயிரைத் துணையாகக்கொள்ளாமல் காமநோயால் இறந்துபோவேனாகிய என்னைத் துணையாகக் கொண்டது அறிவீனமென்பது அன்புடையதாயிருந்ததென்ற குறிப்பு மொழியால் விளங்கியது கண்டு கொள்க. இது, தலைவி நித்திரையில்லாமல் இரவின் கொடுமையைச் சொல்லி வருந்தியது.

கூ. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய இந்நாள்
நெடிய கழியு மிரா.
(1169)

(இ-ம்) காதலரோடு காம இன்பம் அநுபவித்த முன்னாட்களில் சிறியனவாயிருந்து அவரென்னைவிட்டுப் பிரிய நான்வருத்தமுற்ற இந்நாட்களில் நெடியவாய்ச் செல்கின்ற இராத்திரிகள், காதலராகிய கொடியார் செய்யுங் கொடுமையைப் பார்க்கினுங் கொடுமையுடையனவாயிருந்தன என்பதாம். காதலரைக் கொடியாரென்றது, பிரிந்துபோய் விரைந்துவாராமையாற் கோபம் பற்றிக் கூறியதல்லாமல் அன்பில்லாமற் கூறியதல்ல. இதனால், காமிகளுக்கு இன்பமநுபவிக்குங்கால்

இராப்பொழுது சிறிதாயும் துன்பமநுபவிக்குங்கால் பெரிதாயுமிருக்குமென்று கண்டுகொள்க. இதுவும் அது.

கo. உள்ளம்போன் றுள்வழிச் செல்கற்பின் வெள்ளநீர்
நீந்தல மன்னோஎன் கண்.
(1170)

(இ-ம்) என் காதலர் சென்ற தேயத்துக்கு என் மனம்போல என் கண்கள் விரைந்து செல்ல வல்லமையுடையன ஆனால் வெள்ளம் (மிகுதி) ஆகிய தம் நீரை நீந்திச்செல்லமாட்டாவோ? மனம்போலச் செல்லும் வல்லமை யில்லை யாதலால் நீந்தாதிருந்தன என்பதாம். தம் நீர் - கண்ணீர். அருவ மாகிய மனத்தின் வேகம் உருவமாகிய கண்களுக்கில்லாமையால் இவ்வாறு கூறினள். இது, நின் கண்கள் பேரழகுடையனவாதலால் அழுதாலவ்வழகு கழியும். அழாதே என்ற தோழிக்குத் தலைவி கூறியது.



## 118-ஆம் அதி —கண்விதுப்பழிதல்.

அஃதாவது - பிரிந்துபோன தலைவனைக் காணுதற்குத் தலைவி கண்கள் அவசரப்படுதலால் வருந்துதல்.

க. கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங் கண் டது.

(1171)

(இ-ம்) தணியாத காமநோயை நாம் கண்டது தலைவரைக் கண்களானவை காட்டலாலன்றோ? அப்படியிருக்க, இன்று அத்தலைவரை, எம்மைக் காட்டென்று சொல்லி அக்கண்கள் அழுவது என்ன நினைத்தோ? தெரியவில்லை என்பதாம். இது, நின்கண்கள் அழுதழுது அழகழிந்தன; இனித் துன்பத்தை ஆற்றவேண்டுமென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

உ.

தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப் பைதலுழப்ப தெவன்.

(1172)

(இ-ம்) பின்னே வரக்கடவதாகிய காரியத்தை ஆராய்ந்தறியமாட்டாமல் அன்று காதலரை நோக்கிய

மையுண்ட கண்கள் இன்று இத்துன்பம் நம்மால் வந்ததென்று பகுத்து அறிந்து பொறுத்துக்கொள்ளாமல் துன்பப்
படுவது என்ன பயனைக்குறித்தோ தெரியவில்லை
பின் வருவதை யோசியாமல் ஒரு காரியஞ் செய்தவர்

என்பதாம். இதனால்,
அதனாலொரு துன்பம்
வந்தால் பொறுத்துக்கொள்ள வேண்டும். அப்படிப் பொறுத்துக்கொள்ளா மல் இடர்ப்படுவது மிகுந்த மடத்தனமென்பது கருத்து. இதுவும் அது.

ங. கதுமெனத் தானோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.

(1173)
(இ-ம்) இக்கண்கள் ஒன்றும் யோசியாமல் அன்று காதலரை விரை வாகப் பார்த்து, இன்று தாமே இருந்து அழுகின்ற இச்செய்கையானது நம் மாற் சிரிக்கத்தக்க தன்மையினையுடையது என்பதாம். இதனால் ஒருகேடு வருவதறிந்து முன்னமே வாராமல் தடுப்பதறியாதவர் யாவராலும் அவமதித்துச் சிரிக்கப்படுவரென்பதாம். இதுவும் அது.

ச. பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா

உய்விலேஞ் யென்க ணிறுத்து.
(1174)
(இ-ம்) மையுண்ட கண்களானவை அன்று யான் பிழைக்கமாட்டாமைக் குக் காரணமாகிய காமநோயை என்னிடத்து நிறுத்திவைத்துவிட்டுத் தாமும்

•

கக௨-ஆம் அதி.—கண்விதுப்பழிதல்.
ஙக்

அழுசமுது இனிய பமுடியாவிதம் நீர் வற்ரட்பட்டன என்பதாம். எனவே, முன்னெனக்குத் துன்பஞ் செய்தலால் என் கண்களுக்குப் பின் துன்பம் வந்த தென்று கூறிஞளென்பதாம். இதுவும் அது.

ரு. படலாற்ருப் பைதல் உழக்குங் கடலாற்ருக்
காமநோய் செய்தவென் கண்.
(1175)

(இ-ம்) கடலினும் பெரியதாகிய காமநோயை எனக்கு முன் செய்த என் கண்கள் அப்டாவத்தால் தாமும் நித்திரையில்லாதனவாய்த் துன்பத்தை யநுபவித்து வருந்துகின்றனவென்பதாம். இத்திருக்குறள் 'பிறர்க்கின்ஞ முற் பகற் செய்யிற் றமக்கின்ஞப் பிற்பகற் ருமே வரும்' என்ற 314 ஆவது திருக் குறளின் பொருளைப்

பிரத்தியக்ஷமாகக் காட்டியதைக் கண்டுகொள்க. கண்கள் காமநோயைச் செய்தலாவது—தலைவனைப் பார்த்து ஆசையையுண்டுபண்ணிய தாம். இதுவும் அது.

சு. ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
தாஅ மிதற்பட் டது.
(1176)

(இ-ம்) எமக்கு இக்காம நோயை யுண்டாக்கிய கண்கள் தாமும் உறங்காது அழுதலையடைந்தது. அப்படி யழுதல் மிகவும் இனிமையுடையது என்பதாம். எப்படியென்றால், போன தலைவர் இவ்வழுதலைத் தெரிந்தால் உடனே வந்து இன்பஞ் செய்தலென்று சொல்லுக. இதுவும் அது.

எ. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
வேண்டி யவர்க்கண்ட கண்.
(1177)

(இ-ம்) ஆசை பெருகி விரும்பி மனங்குழைந்து அக்காலம் அத்தலைவரைக் கண்ட கண்கள் தற்காலம் நித்திரையில்லாமல் அழுது வருந்தி வருந்தித் தம்மிடத்துள்ள நீரானது இல்லாமலே வற்றிப்போகவேண்டும் என்பதாம். இதனால் தலைவரை முன் காணதிருந்தால் இப்போது இத்துன்பங் கண்களுக்கு வராதென்பதாம். இதுவும் அது.

அ . பேணுது பெட்டார் ருள்மன்னே மற்றவர்க்
காணு தமைவில கண் .
(1178)

(இ-ம்) மனத்தால் விரும்பாது சொல்லால் மட்டும் விரும்பிய தலைவர் இவ்விடத்தே சமீபத்திலுள்ளார் என்ற தோழியே! என் கண்கள் அவரைக் காணமல் அடங்கியிருத்தல் இல்லையானுல் நீ சொன்னபடி அவர் சமீபத்தில்



இருந்ததனு லென்ன பிரயோசனமென்பதாம். எனவே. இருந்தால் அவரைக் கண்கள் கண்டு களிக்க (மகிழ) வேண்டும். அதற்கிடமில்லாமையால் அவர் சமீ பத்தில் 'இவ்விடத்திருந்தாலும் நம்மை விட்டுப் பிரிந்து தூரத்திற் சென்றவரே யாவரென்பது கருத்து. சொல்லால் மட்டும் விரும்புதல்—சொன்னபடி நட வாமல் மாறுபட்டு நடத்தல். அஃதாவது, பிரியேனென்று சொல்லிப் பிரிந்து செல்லுதல். இது, காதலர் உன்னைவிட்டுப் பிரிந்துபோகவில்லை. ச மீபத்தி லே இவ்விடத்திலே யிருக்கின்ருர். உன் கண்கள் அவரைக் காணுமளவும் நீ பொறுத்திருக்கவேண்டுமென்ற தோழிக்குத் தலைவி

கூறியது.

கூ. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா ஆயிடை
ஆரஞ ருற்றன கண்.
(1179)

(இ-ம்) என்கண்கள் தலைவர் வாராதநாளில் எப்போது வருவாரென்று அவர் வரவை எதிர்பார்த்து உறங்கமாட்டா. அவர் வந்தநாளில் இனியெவ் விடத்துப்பிரிந்து செல்வாரோ என்று உறங்கமாட்டா. ஆகவே, இவ்விரண்டு காலத்தும் மேற்கூறிய என்கண்கள் துன்பமுற்றன என்பதாம். இது, நீயும் கோபத்தைமாற்றி யுன்கண்களும் உறங்குவன ஆதல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி கூறியது.

கO. மறைபெற லூரார்க் கரிதன்றா லெம்போல்
அறைபறை கண்ணா ரகத்து.
(1180)

(இ-ம்) எம்மைப்போலும் அறைபறையாகிய கண்களையுடைய மாதரிடத்துப் பிறரறியாமல் நெஞ்சில் வைத்திருக்கும் இரகசியத்தை யறிதல் இவ் வூரிலுள்ளார்க்கு அரியதல்ல, மிகஎளியது என்பதாம். எப்படியென்றால், இரகசியமான செய்தியை ஊராருக்குத் தெரியும்படி ஒலித்துச் சொல்லும் தோற் கருவிபோல மாதர்மனத்து ளடங்கிய காமக்குறிப்பை அவர்கண்கள் துன்ப முற்று அழுது

அறிவார்க்கு வெளிப்படுத்தலாலென்று பொருளை விரித்துக் கண்டு கொள்க. மேலே சொல்லிய தோற் கருவியை இக்காலத்தில் தமுக்கு என்பர். அது என்னபாஷைச் சொல்லோ தெரியாது. அறை பறை—பிற ரறியாத விஷயத்தை அவரறியும்படி ஓசையாற்சொல்லும் தோலா லாகிய ஒருகருவி. கருவியென்பது, வாத்தியங்கட்குப் பொதுப்பெயர். இது, காதல ருடைய தன்மையை இவ்வூரார் அவமதியாமல் அவர் கொடுமையை நீ மறக்க வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

## 119-ஆம் அதி.—

## பசப்புறுபருவரல்.

அஃதாவது, தலைவனைப் பிரிதலால் தலைவி பசலைநிறம் அடைவதோர் வருத்தம். பசலை—ஒருநிற வேறுபாடு.

க. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
பண்பியார்க் குரைக்கோ பிற. (1181)

(இ-ம்) என்னைநயந்து கேட்டுக்கொண்ட தலைவர் நான்சம்மதியா விட் டால் என்னைவிட்டுப் பிரிந்து போகமாட்டார். அவ்விதம் அன்புடையவ ரென்று நினைத்து அவர் பிரி ந்துபோவதற்குச் சம்மதித்தேன்.

இப்பொழுது அப்பிரிவைச் சகிக்கமாட்டாமல் என்சரீரம் பசலைநிறமடைந்த குணத்தினை யாருக்கு நான் எடுத்துச் சொல்வேன்? என்பதாம். இத்துன்பம் தானேவா வழைத்துக் கொண்டதால் ஒருவர்மேலுங் குறைகூறப்படாதென்று இவ்வாறு கூறினாள். இதைப்பிறரறியச் சொன்னால் குற்றம்தனக்கே வருமென்பதாம். பசலை—ஒருவிதப் பசப்புநிறம். இது, தலைவன்பிரிவுக்கு மூன்சம்மதித்த தலைவி தன்னுடம்பு பசப்புநிறமடைதலும், அதைக்கண்டு தன்னுள்ளே கூறியது.

உ. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
மேனிமே லூரும் பசப்பு,
(1182)

(இ-ம்) தலைவருடைய பிரிவை நான் சகித்துக்கொண்டிருக்கவும், பசலையானது தன்னையுண்டாக்கினர் அத்தலைவரென்னுங் கருவத்தால் என் மேனிமேலேறி ஊர்ந்துசெல்கின்றது என்பதாம். இதனால், தலைவனைப் பிரிந்து வருந்தியமாதர் எவ்வளவு நன்னிற முடையவராயிருந்தாலும் அவரைப் பசலைநிறமானது அடைந்து அவரது காமக்குறிப்பை வெளிப்படுத்து மென்பது கருத்து. இது, தலைவன் பிரிவைச் சகிக்கமாட்டாளென்று கவலை யடைந்த தோழிக்கு, அப்பிரிவைச் சகிப்பேனென்னும் பொருள் தோன்றத் தலைவி கூறியது.

ங. சாயலும் நாணு மவர்கொண்டார் கைம்மாறு
நோயும் பசலையுந் தந்து. (1183)

(இ-ம்) தலைவர் என்னைவிட்டுப் பிரிகின்றநாளில் என்னிடத்திருந்த அழகையும் நாணத்தையும் தமது கைக்கொண்டு அவ்விரண்டுக்கும் பிரதியுபகாரமாக வியாதியினையும் பசப்பு நிறத்தையுந்தந்து பிரிந்துபோயினர் என்பதாம். இனி, அவர்தந்தாலல்லாமல் அழகும் நாணமும் உண்டாதலும், வியாதி ௩௬௩ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

யும், பசலையுமில்லையாதலும் இல்லையாம். அவர்தருதலாவது—விரைந்து தலைவியை வந்து சேருதல். வியாதி—காமத்தால் வருந்துதல். இது, அழகும் நாணமும் அழியாமல் தலைவர்பிரிந்த துன்பத்தை நீ ஆற்றவேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ச. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
கள்ளம் பிறவோ பசப்பு. (1184)

(இ-ம்) காதலர் சொல்லிய இன் சொற்களை நான் மனத்தால் நினைக் கின்றேன். வாயாற் சொல்லுவதும் அவரது

உறுதிப்பாட்டினையன்றி வேறில்லை. அப்படி இருக்கவும் பசலை நிறம் என்மேல் வந்து படர்கின்றது என்னுமிடத்து இஃதொருவஞ்சகமாயிருந்தது என்பதாம். எப்படியென்றால், பிரிந்து சென்ற காதலர் செய்கையைக் கருதாமல் காமத்தால் வருந்திக் கவலைப்பட்டபோது வரவேண்டிய பசலை நிறம் அவர் செய்கையைக் கருதி மகிழ்ந்திருக்கும்போது வந்தது வஞ்சகச்செய்கை யென்று சொல்லுக. இவவிதம் வரும் படர்ந்த பசலை நிறத்தைத் தேமல் படர்ந்ததென்று இக்காலத்துக் கூறுவர். படர்தல்— விரிதல். இது, பிரிகின்ற காதலர் உன்னைத் தேற்றிக் கூறிய சொற்களையும் அவரது நல்லுறுதிப்பாட்டினையும் நீயறிவாயாதலால் அவர் காலததை வீண் போக்காமல் வருவர். நீ கவலைப்படாதே என்று கூறிய தோழிக்குத் தலைவி சொல்லியது.

ரு. உவக்காணெங் காதலர் செல்வா
ரிவக்காணென்
மேனி பசப்பூர் வது.
(1185)

(இ-ம்) முன்னமும் நம் தலைவர் உவ்விடததுச் செல்வாராக என் சரீரத்துப் பசலை நிறம் வந்து படர்தல் இவ்விடத்திலல்லவா? அத்தன்மை யுடைய பசலை நிறம் இன்று அவர் பிரிந்து போதலை அறிந்து வந்து படரா திருக்குமோ என்பதாம். ஒத்த காமமுடைய தலைவரது பிரிவைச் ச கியாமை யடையும்போது வருத்தமுறுதலால் தலைவியர் மேனி பசலை நிறமடையு மென்பது கருத்து.

உவ்விடம் தூரமும் சமீபமும் இல்லாத பொது இடம். உவக்காண் என்பதும், இவக்காண் என்பதும் ஒட்டிநின்ற இடைச்சொற்களென்று ஆசிரியர் பரிமேலழகர் உரை கூறினர். ஒட்டி நின்ற இடைச் சொற்கள். தொல்காப்பியம் படித்தவர்க்கு நன்கு விளங்கும். இது, காதலர் பிரிந்து பக்கத்திலிருக்கவும் ஆற்றுகின்றாயில்லை யென்ற தோழிக்குத் தலைவி முன்னிசழ்ந்தது சொல்லியது.

சு. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.
(1186)

கககூ-ஆம் அதி.—பசப்புறுபருவரல்.

௲௱௮௰௬

(இ-ம்) விளக்கின் ஒளியினது சோர்வு பார்த்திருக்கும் இருளானது அச்சோர்வு நேர்ந்த காலத்தில் எப்படி நெருங்கி வருமோ அதுபோலக் காதலர் பிரியுங் காலத்தை யெதிர்நோக்கியிருக்கும் பசலையானது அப்பிரிவு வந்த காலத்தைக் கண்டு நெருங்கி என்னிடத்தில் வந்தது என்பதாம். சோர்வு— குறைவு. இதுவும் அது.

எ. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
லள்ளிக்கொள் வற்றே பசப்பு.
(1187)

(இ-ம்) முன்னொரு நாளிற் காதலரைத் தழுவிப் படுத்திருந்த யான் பின் வருவதறியாது சிறிதுநேரம் கையை நெகிழ்த்துப் பக்கத்திற் படுக்கவும் அவ்வளவு பிரிவைப் பொறுமல் பசலை நிறமானது கையால் வாரிக்கொள்ளும் அளவில் மிகுதியாக வந்து என் மேனியெல்லாம் படர்ந்தது. இச்சிறிய நேரம் காதலரைப் பிரிந்ததற்கே இவ்விதம் படரும் அப்பசப்புச் சில நாட் பிரிந்த தற்கு என்னதான் செய்யமாட்டாதென்பதாம். இதுவும் அது.

அ. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில்.
(1188)

(இ-ம்) காதலரைப் பிரிந்ததுன்பத்தை ஆற்றியிராமல் பசலையடைந் தாள் இவளென்று என்னைக் கூறுவரேயல்லாமல் இத்தன்மையாகத் துன்ப முறுமிவளை அக்காதலர் பிரிந்து சென்றது நியாயமல்லவென்று சொல்லுவா ரொருவருமில்லை என்பதாம். இது, காதலர் பிரிந்த துன்பத்தைச் சகித திராமல் வருந்தி இவவாவு பசலை நிறம் அடையுந் தன்மையையுடையாய் இது தக்கதல்லவென்ற தோழியோடு தலைவி புலந்து சொல்லியது. புலத்தல்— ஊடுதல்.

சு. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
நன்னிலைய ராவ ரெனின்.

(1189)

(இ-ம்) தாம் பிரிந்து போவதற்குச் சம்மதியாத நானே சம்மதிக்கும் படி சொல்லிய தலைவர் இன்று தோழியே! உன் மனத்துக்கு நல்லவராகத் தோன்றினல் என்னுடம்பு எப்படிக்கெட்டாலும் கெடப் பசலை நிறம் வருவ தாகுக என்பதாம். இதனால், இத்துன்பம் வருதற்குக் காரணம் தலைவரென் றறியாமல் துன்பத்தை ஆற்றியிருக்கின்றாயில்லையென்று தன்னைச் சொல்லிய தோழியோடு புலந்து (ஊடி) தலைவி கூறியவாறு கண்டு கொள்க, இதுவும் அது.

.

௩௯௯ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்,

௧0. பசப்பெனப் பேர்பெறுதல் நன்றே நயப்பித்தார்
நல்காமை தூற்றா ரெனின்.

(1190)

(இ-ம்) என்னைவிட்டுப் பிரியுநாளில் அப்பிரிவை யான் உடன்படும்படி இன்சொற்சொல்லிப் பிரிந்த தலைவர் இன்று தாம் சொன்னபடி விரைந்து வராமையால் நட்டார் (சிநேகர்) அவர் மேற்குறைகூறி அவதூறு செய்யாதிருப் பாரானல்

பசலைநிறம் உற்றாளென்று வேற்றுமைப்படச் சொல்லாமல் பசலை நிறமே தானாயினாளென்று ஒற்றுமைப்படச் சொல்லும் பெயரையடைதல் எனக்கு நல்லதே என்பதாம். அஃதாவது, இப்போதுவந்திருக்கிற பசலை நிறத்தைப்பார்க்கிலும் அதிகமாக எவ்வளவு வந்தாலும் நல்லதென்பதாம். இது, தலைவியை யாற்றுவித்தற் பொருட்டுத் தலைவன் இயல்பை (தன்மையை)த் தோழி பழித்துப் பேசுதலும், அதனைப் பொறாதவளாய்த் தலைவி தலைவனது இயல்பைப் புகழ்ந்து வியந்து சொல்லியது.

---

## 120-ஆம் அதி.—தனிப்படர் மிகுதி.

அஃதாவது, அதிகத்துன்பம் தலைவனிடத்தில்லாமல் தலைவியினிடத்து உண்டாதல். தலைவனிடத்து அதிகத்துன்பம் ஏனில்லை யென்றால், அறமும் பொருளும் கருதிப் பிரிதலால் அவனிடத்து இல்லை என்பதாம்.

க. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
காமத்துக் காழில் கனி. (1191)

(இ-ம்) தம்மால் விரும்பப்படுங் கணவரானவர் தம்மை விரும்பப்பட்ட மாதரே காமமநுபவித்தலாகிய விதையில்லாத கனியைப் பெற்றவரென்பதாம். எனவே, தலைவர்பிரிந்து

போனது மல் லாமல் விரைந்தும் வாராமையால் யான் அப்படிப்பட்ட கனியைப் பெற்றிலே னென்பதும், பெற்றால் விதையில்லாத கனிமுழுது முண்ணப்படுதல் போலக் காமஇன்பமுழுது மநுபவிக்கலா மென் பதும் கருத்து. இது, பிரிந்துபோன தலைவர் நின்னைப்பார்க்கிலும் காமவியா தியைச் சகிக்கமாட்டார். விரைந்துவருவர். நீ யவரோடு பேரின்ப மநுபவிப்பா யென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

உ. வாழ்வார்க்கு வானம் டயந்தற்றால் வீழ்வார்க்கு
வீழ்வா ரளிக்கு மளி.
(1192)

(இ-ம்) அறம் பொரு ளின்பமென்னும் மூன்றினில் முன்னிரண்டை யும் கருதிப் பிரிந்து சென்ற தலைவரையல்லாமல் இன்பமடையாத மாதருக்கு

க்உ0-ஆம் அதி.—தனிப்படர் மிகுதி.
ரூக்ள்

அம்மாதரையல்லாமல் இன்பமடையாத அத்தலைவர் காமமநுபவிக்கும் அள வறிந்து வந்து கலந்து இன்பமூட்டும் முதன் மையான அன்பானது தன்னையே நோக்கி உயிர் வாழ்கின்ற மாந்தருக்கு மேகமானது பருவ காலமறிந்து வந்து மழை பெய்தாற்போலு மென்பதாம். இதனால், நம்

காதலர் நம்மை விரும்பி வாராமையாற் பேரன்புடையவரல்லர். ஆதலால் மழையில்லாத இடத்து வாழாதவர்போல இறந்துபோதலே இனி நமக்குள்ளது என்று உவமையின் எதிர்மறைமுகத்தால் தலைவி தலைவன் கொடுமை கூறினளென்று கண்டுகொள்க. இதுவும் அது.

ந. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
வாழுந மென்னுஞ் செருக்கு.

(1193;

(இ-ம்) தாம் விரும்புங் கணவரால் விரும்பப்படு மாதருக்கு அக்கணவர் தம்மை விட்டுப் பிரிந்து சென்றாராயினும் சீக்கிரம் வந்து நமக்கு இன்பத்தைக் கொடுக்க நாம வவின்பத்தைப் பெற்று வாழ்ந்திருப்போமென்னும் கருவம் அமையும் (உண்டாகும்) என்பதாம். இதனால், அவரை விரும்ப அவர் நம்மை விரும்பி வாராமையால் இனி இறந்து போவதே நமக்கு விதித்த விதியென்று குறிப்பால் தலைவி கூறியது கண்டுகொள்க. இதுவும் அது.

ச. வீழப் படுவார் கெழீஇயிலர் தாம்வீழ்வார்
வீழப் படாஅ ரெனின்.

(1194)

(இ-ம்) கற்பிற் சிறந்த அருந்ததியனைய மடவாரால் நன்கு மதிக்கப் படும் மாதரும் தம்மால் விரும்பப்பட்ட கணவரானவர் புறக்கணித்து விரும்பப் படாராஞல் தீவினையுடையவரென்பத ும். எப்படியென்றால், அக்கணவரை வேண்டியவாறு அநுபவிக்கும் நல்வினையில்லாமையால் அம்மாதரும் தீவினை யுடையவரென்றுளெனக. இதனால், தீவினையுடைய எனக்கு நன்குமதிப்பாற் பயனில்லை யென்று வருத்தமுற்றுளென்பது கருத்து. இது, காதலர் இயலை (தன்மையை)ப் பிறர் பழித்துக் கூறுவது பொறாமல் அவரது அருளில்லா மையை மறைத்த நீ தெய்வக்கற்புடையாளாதலால் கற்புடைய மாதரால் நன்குமதிக்கப்படுவாயென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ரு. நாம்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாம்காதல் கொள்ளாக் கடை.

(1195)

(இ-ம்) நம்மால் விரும்பப்பட்ட தலைவர் நம்மைப்போலத் தாமும் நம்மை விரும்பமாட்டாத இடத்து நமக்கு என்ன இன்பத்தைச் செய்வர்? (ஒன்று

ஒன்றும் செய்யமாட்டா ரென்பதாம். ஆதலால் நாம்மாத்திரம் ஆசைப்படுதல் நமக்குத் துன்பமே என்பது கருத்து. இக்கருத்தை ' 'காத லிருவர் கருத் தொருமித்—தாதரவு, பட்டதே யின்பம்'' என்ற ஔவையார் திருவாக்கால் யூகித்தறிந்துகொள்க. (பெருந்திரட்டு) இது, காதலர் மேல் ஆசையுடையாய் ஆதலால் அவர் கருத்தறிந்து அவர் பிரிந்த துன்பத்தையாற்றி இருந்தா யென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

சு. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
இருதலை யானு மினிது.

(1196)

(இ-ம்) மாதர் ஆடவர் என்னும் இருவரிடத்தும் உண்டாவதாகிய காமம் ஒருவரிடத்துமட்டும் உண்டானல் அது இன்பமாக மாட்டாது. துன்பமே யாகும். காவடித்தண்டின் பாரம் (சுமை) போல இரண்டு பக்கத்தும் சம மாக உண்டானல் அக்காமம் இன்பமாமென்பதாம். இதனல், என்னிடத்து உண்டாகிய ஆசைபோல அவரிடத்தும் உண்டானல் யாணிப்படித் துன்ப மடைய மாட்டேனென்பது கருத்து. இதுவும் அது.

எ. பருவரலும் பைதலுங் காணான்கொல் காமன்
ஒருவர்க ணின்றொழுகு வான்.

(1197)

(இ-ம்) காமம் அநுபவித்தற்குரிய பெண்கள் ஆடவர்

என்னும் இருவ ரிடத்தும் சமமாக நிற்பதைவிட்டு ஒருவரிடத்தே நின்று போர்செய்கின்ற மன்மதன் போர்செய்கின்ற அவவிடத்துப் பசலைநிறத்தாலாகிய காமநோயும் அந்நோயாலாகிய வருத்தமும் அறியமாட்டான்போலு மென்பதாம். இதனால், தெய்வத் தன்மையுடைய காமக்கடவுளும் என்னிடத்து ஒருதலைப் பக்ஷமாக இருந்தால் யானெவவாறு பிழைப்பே னென்பது கருத்து. இதுவும் அது.

அ. வீழ்வாரி னின்சொற் பெறாஅ துலகத்து
வாழ்வாரின் வன்கணா ரில்.

(1198)

(இ-ம்) தம்மால் விரும்பப்படுங் காதலரிடத்திலிருந்து யாதேனும் ஓர் இனிய சொல்லைப் பெறாமல் அவர் பிரிவைச் சகித்திருந்து உயிரோடு வாழ்ந் திருக்கின்ற மாதரைப்போல வன்கண் (கொடுமை)உடையவர் வேறில்லை என் பதாம். இதனால், யான் வன்கண்மையுடையேனாதலால் தலைவரிடத்திலிருந்து ஓரினிய வார்த்தையுஞ் சேளாமல் உயிர் பிழைத்திருக்கின்றேனென்பதாம். இது, தலைவனிடத்திருந்து தூதுவரப் பெறாத தலைவி தோழிக்குச் சொல்லி யது.

௯. நசைஇயார் நல்கா ரெனினு மவர்மாட்
டிசையும் இனிய செவிக்கு.
(1199)

(இ-ம்) என்னால் நச்சப்பட்ட (விரும்பப்பட்ட) காதலர் என்னிடத்து அன்பில்லாராயினும் அவரிடத்திலிருந்து ஏதாயினு மொரு சொல் வந்தால் என் செவிகளுக்கு இனிமையுடையது என்பதாம். ஏதாயினும் ஒரு சொல்— யானினிவரமாட்டேனென்னுங் கொடுஞ்சொல். இக்கருத்து தம்மால் விரும் பப்பட்ட ஆடவரிடத்திலிருந்து கொடுஞ் சொல் வந்தாலும் மாதர் செவிக்கு இனிதாம், அதுவும் வரவில்லையென்பது. இதுவும் அது.

௰. உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅய் வாழிய நெஞ்சு.
(1200)

(இ-ம்) நெஞ்சே உன்னோடு வந்து பொருந்தாத காதலர்க்கு நீயுற்ற நோயைச் சொல்லுவாய். சொல்லமுடியாமற் போனால் பெரியதாகிய அச் செய்கையை விட்டு இந்நோயைச் செய்யும் கடலைத் தூர்க்க முயற்சிசெய்வாய். இது வெகு சுலபம் (எளியது) ஆகும். அப்படிச் செய்தால் நீ வாழ்வாயாக என்பதாம். இது, தலைவன் தூது வரப்பெறாமல் தான் தூதுவிட எண்ணிய

தலைவி, தன் மனத்தொடு சொல்லியது.

---

## 121-ஆம் அதி.—நினைந்தவர் புலம்பல்.

அஃதாவது, அரசர் பொருட்டு யுத்தத்துக்குச் சென்ற தலைவன் முன் தலைவியைக் கூடிய நாள் இன்பத்தை நினைத்துப் பலவாறு கூறுதலும், தலைவனைப் பிரிந்த தலைவி, மேற்கூறிய தனிப்படர் மிகுதியால் அவ்வின்பத்தை நினைத்துப் பலவாறு கூறுதலுமாம்.

க. உள்ளினும் தீராப் பெருமகிழ் செய்தலாற்
கள்ளினுங் காம மினிது.
(1201)

(இ-ம்) கூடிய காலத்து அநுபவித்த காம இன்பத்தைப் பிரிந்த காலத்து நினைத்தாலும் அப்பொழுது அநுபவித்தல் போல நீங்காத பெருமகிழ்ச்சியைச் செய்தலால் உண்டபோது மாத்திரம் பெருமகிழ்ச்சியைச் செய்யும் கள்ளைப்பார்க்கிலும் காமம் மிக இனிமையுடையது என்பதாம். எனவே, தன் றனிமையும் தலைவியை மறவாமையுந் தலைவன் கூறியபடி கண்டுகொள்க. இது, தலைவியனுப்பத் தூதாய் வந்த பாங்கனுக்குத் தலைவன் சொல்லியது.

௨. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
நினைப்ப வருவதொன் றில். (1202)

(இ-ம்) அன்புமிகுதியால் தம்மால் விரும்பப்படுவோரைக் கூடியபின் னர்ப் பிரிந்த இடத்து நினைத்தால் நினைத்தவர்க்கு அப்பிரி வினால் வருவதோர் துன்பமில்லையாம். ஆ தலால் ஒத்த காமமானது எவ்வளவானாலும் எந்தக் காலத்தும் இன்பம்ஒன்றையே கொடுக்கும் என்பதாம். எந்த க்காலத்து மென் றது—கூடியகாலத்தும் பிரிந்தகாலத்து மென்றபடி. பிரிந்தகாலத்தில் இன் பமாவது—கூடியகாலத்து நிகழ்ந்த விஷயங்களை நினைக்குந்தோறும் அநு பவித்ததுபோல இன்பமுண்டாதல் என்க. இதனால், தலைவன் தலைவியைப் பிரிந்து வருந்திய துன்பத்தை ஆற்றியிருந்தவகை கூறியவாறாயிற்று. இதுவும் அது.

௩. நினைப்பவர் போன்று நினையார்கொல் தும்மல்
சினைப்பது போன்று கெடும். (1203)

(இ-ம்) எனக்குத் தும்மல் வருவதுபோலத் தோன்றி

முழுதும்வாராமல் அடங்கிவிடும் , ஆதலால் என்னைவிட்டுப்பிரிந்து தூரதேசத்திற்போன காதலர் என்னைநினைப்பவர்போலச் சிறிது நினைத்துப் பூரணமாக நினையாதிருப்பர் போலும் என்பதாம். சுற்றத்தார் நண்பர் தூரத்திற்போயிருந்தால் தம்மிடத்து அன்புடையவரை நினைத்தால் நினைக்கப்பட்ட அவர்க்குத் தும்மல்உண்டாவது உலகவழக்கம். அதுபற்றி யிவ்வாறு கூறப்பட்டது. இதனால் நினைப்புப்பூரண மாக உண்டானால் தும்மல்முழு வதும் உண்டாமென்பதாயிற்று. இது, தலை வனை நினைந்து வருந்துகின்ற தலைவி தோழிக்குச் சொல்லியது.

ச. யாமு முளேங்கொ லவர்நெஞ்சத்
தெந்நெஞ்சத்
தோஒ வுளரே யவர்.
(1204)

(இ-ள்) எம்முடைய மனத்தினிடத்து அக்காதலர் எப்பொழுதும் நீங் காதவராயிருக்கின்றார். அப்படியே அக்காதலர் மனத்தினிடத்தும் யாமும் இருக்கின்றோமாவோமோ ஆகமாட்டே மோ என்பதாம்.எனவே, யான் அவரை நினைத்துக்கொண்டேயிருப்பேன். என்னையவர் நினைப்பாரோ நினைக்கமாட்டார் ரோ என்பது கருத்து. இக்கருத்துத் தோன்றுதற்குக்காரணம், காதலர்கருதிச் சென்ற காரியம் முடிந்ததோ முடியவில்லையோ வென்னும் ஐயப்பாடு. (சந்தேகம்) இதுவும் அது.

ரு. தங்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார்
நாணார்கொல்
எந் நெஞ்சத் தோவா வரல்.
(1205) கஉகரு-ஆம் அதி.—நினைந்தவர் புலம்பல்.
ருஎரு

(இ-ம்) தம்முடைய மனத்தினிடத்து ஒருதரமாகிலும் எம்மை வரவொட்டாமல் காத்துக் கொண்ட தலைவரானவர் எம்முடைய மனத்தினிடத்துப் பலதரமும் வருதலுக்கு வெட்கப்படமாட்டார்போலும் என்பதாம். இதனால் நாமெப்போதும் அவரை நினைக்கின்றோம், அவர் நம்மை யொருதர மேனும் நினைக்கிலார் என்பது கருத்து. இதுவும் அது,

சு. மற்றியா னென்னுளேன் மன்னோ அவரோடியான்
உற்றநா ளுள்ள வுளேன்.
(1206)

(இ-ம்) பிரிவென்னும் துன்பக் கடலில் அழுந்தி நின்றும் யான் உயிர் வாழ்ந்திருப்பது அத்தலைவரோடு புணர்ந்த நாளில் உண்டாகிய இன்பத்தை நினைப்பதனாலன்றோ? இதுவல்லாமல் அத்தலைவருடைய தூது என்னிடத்து வருதலும் என்னுடைய தூது

அவரிடத்துப் போதலுமாகிய இவ்விரண்டில் எனக்கு என்ன இருக்கின்றது? என்பதாம். எனவே, இவ்விரண்டில் ஒன்றிருந் தாலும் உயிர் வாழ்தற்குக் காரணமாமென்பது கருத்து. இது, தலைவரோடு புணர்ந்தநா ளுண்டாகிய இன்பத்தை நினைந்து இறந்துபடுந்துன்ப மடைகின்றாய், அதைமறத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

எ. மறப்பி னெவனாவன் மற்கொன் மறப்பறியேன்
உள்ளினு முள்ளஞ் சுடும்.
(1207)

(இ-ம்) புணர்ந்த நாளிலுண்டாகிய இன்பத்தை மறத்தல் அறியேனாய் நினைத்துக்கொண்டிருக்கவும என்மனங் கொதிக்குமாதலால் மறந்துவிட்டால் அவர் பிரிவாற்றாத யான் இறந்துபோத லல்லாமல் எவ்வகையால் உயிர் பிழைப்பேனென்பதாம், இதுவும் அது.

அ. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றோ
காதலர் செய்யுஞ் சிறப்பு.
(1208)

(இ-ம்) தம்மை யான் எவ்வளவு அதிகமாக

நினைத்தாலும் அதற்காகக் காதலரானவர் என்னைக் கோபிக்கமாட்டார். கோபியாதிருக்கும் அவ்வளவல் லவா அக்காதலர் என்னிடத்துச்செய்யும் இன்பமென்பதாம். காதலர் கருதிய கருமமுடிப்பது தாழ்த்தமையால் விரைந்து வாராதிருக்க அவரிடத்துவைத்த ஆசைப்பெருக்கத்தால் தன்னுள்ளே புலந்து இவ்வாறுகூறினளென்பது குறிப் பால் தெரிந்துகொள்க. இது, தலைவிபடுந்துன்பத்தை யாற்றுதற்குக் காதலர் விரைந்து வந்து உனக்கு சொல்லியது.

இன்பஞ்செய்வரென்ற தோழிக்கு அத்தலைவி கூறே.

**திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.**

கூ. விளியுமெ னின்னுயிர் வேறல்ல மென்பார்
அளியின்மை யாற்ற நினைந்து.

(1209)

(இ-ம்) கூடியிருந்த முன்னாட்களில் நாமிருவரும் வேறில்லை, ஒன்றே யென்று சொல்லுந் தலைவரதுஅன்பு இப்போது இல்லாமையை மிக நினைத்து என்னுயிர் சிறிதுசிறிதாகக்குறைகின்றது என்பதாம். அன்பு இல்லாமை யாவன—பின் வருவேனென்று பிரிதலும், பிரிந்து விரைந்துவாராமையும், வருதற்கு இடையில் தூதுவிடாமையுமாம். இது, தலைவன் தூதுவரக் காண வில்லையென்று வருந்தாதே. விரைந்துவருவாரென்று

வற்புறுத்துந் தோழிக்குத் தலைவி சொல்லியது.

௧௦. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்

படாஅதி வாழி மதி.

(1210)

(இ-ம்) என் மனத்தைவிட்டு நீங்காதிருந்தே நீங்கிப் பிரிந்துபோன தலைவரை யென்கண்களாற்கண்டு மகிழுமாறு சந்திரனே ! நீ வெளிப்படாமல் மறைந்து செல்வாயாக. அப்படிச்சென்றால் நீ வாழக்கடவாய் என்பதாம் . பிரிந்துபோன தலைவர் குறித்தகாலத்தில் வாராதிரு ந்து பின்வந்தால் ஊடல் மிகுதியாற் பாராதிருப்பாள் ஆசைமிகுதியாற் பார்க்கவேண்டியது அவசர மாதலால் அப்போது பிறரறியும்படி பார்த்தால் நாணங்கெடுமாதலால் சந்தி ரனை மறைந்துபோம்படி கூறினளென்பது கருத்து. இது, வன்புறை யெதி ரழிந்த தலைவி காமமிகுதியால் அதிகப்பட்ட துன்பத்தாற் சொல்லியது . வன்புறை யெதிரழிதலாவது-தோழி வற்புறுத்திக் கூறியதற்குச் சம்மதியாது வருந்துதல்.

———

## 122-ஆம் அதி.—கனவுநிலையுரைத்தல்.

அஃதாவது, தலைவி தான் கண்ட கனவினது தன்மையைத் தோழிக்குச் சொல்லுதல்.

க. காதலர் தூதொடு வந்த கனவினுக்
கியாதுசெய் வேன்கொல் விருந்து .
(1211)

(இ-ம்) யான் காமத்தால் வருந்துகின்றது தெரிந்து அவ்வருத்தம் நீங்கும் பொருட்டுக் காதலர் அனுப்பிய தூதினைக்கொண்டு என்னிடத்து வந்த கனவினுக்கு யான் விருந்ினர்க்குச் செய்யும் உபசாரங்களுள் எந்த உபசாரத்தைச் செய்வேனென்பதாம்.

அளவு கடந்த மகிழ்ச்சியுற்றுளாதலால் கஉஉ-ஆம்
அதி.—கனவுநிலையுரைத்தல். ௲௨௱

எந்த வுபசாரஞ் செய்தாலும் பிரதியுபகார மாகாதென் னுங் கருத்தால் இவ் வாறு கூறினளென்பது கருத்து. இது, கனவினிடத்துத் தலைவன் தூதுவரக் கண்டு சந்தோஷித்த தலைவி தோழிக்குச் சொல்லியது.

உ. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற்
கலந்தார்க்
குயலு ண்மை சாற்றுவேன் மன்.
(1212)

(இ-ம்) உறங்காது வருந்துகின்ற கயல்மீன் போலும் மையுண்ட என் கண்கள் யான் யாசித்தலால் உறங்குமானல்

கனவினிடத்து என் காதலரைக் காண்பேன். கண்டால் அவர்க்குப் பிரிவினிடத்து உண்டாய துன்பத் தை யாற்றியிருந்ததன்மையை யானே சொல்லுவேன். வேறொருவர் வேண்டுவ தில்லை யென்பதாம். யானே சொல்லுவேனென்றது, தூதுவரிடம் சொல்லாத இரகசியத்தை. இது, தலைவன் குறித்த காலத்து வாராதிருந்ததுபற்றித் தூது விடக் கருதிய தலைவி தோழிக்குச் சொல்லியது.

ங. நனவினல் நல்கா தவரைக் கனவினற்
காண்டலி னுண்டென் னுயிர்.
(1213)

(இ-ம்) சாக்கிரத்தில் (விழித்திருக்குங் காலத்தில்) வந்து எனக்கு இன்பங் கொடுத்தருளாத தலைவரைச் சொப்பனத்திற் காணுதலாலே என் னுயிர் பிழைத்திருக்கின்றது. தோழீ! நீ வருத்தப்படவேண்டுவதில்லை யென்ப தாம். இது, த லைவன் பிரிவைச் சகித்திருந்து நீ யெப்படி யுயிர்வாழ்கின்ற யென்று வருத்தமுற்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ச. கனவி னுண்டாகுங் காமம் நனவினல்
நல்காரை நாடித் தரற்கு.
(1214)

(இ-ம்) சாக்கிரத்தில் (விழித்திருக்குங் காலத்தில்) வந்து முதன்மை யான போன்பு செய்து இன்பங் கொடாத தலைவரை அவர் போயிருக்கின்ற இட த்தைத் தேடி

அவரைக்கண்டு கொண்டுவந்து கனவானது கொடுத்தலால் அக்கனவினிடத்தே எனக்கு இன்பமுண்டாகின்றது என்பதாம். தலைவரைக் கனவினிடத்தே காணுதலால் என்னுயிர் இறந்துபோகாமலிருக்கின்றது. தோழியே! வருத்தப்படாதிரு என்பது கருத்து. இதுவும் அது.

௫. நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.
(1215)

(இ-ம்) முன் சாக்கிரத்தில் (விழித்திருக்கும்போது) அவரைக்கண்டு அனுபவித்த காமமும் அப்பொழுதே இனிதாயிற்று. பின்பு கனவினிடத்துக்



கண்டு அவரை அனுபவித்த காமமும் அப்பொழுதே அதுபோல இனிதாயிற்று என்பதாம். எனவே, இவ்விரண்டு காலத்தும் காமம் ஒத்திருந்ததென்பது கருத்து. இதனால், தலைவர் பிரிவையாற்றியிருக்கின்றேன்,தோழியே!நீ வருந்தாதே யென்று பின்னுந் தலைவி கூறினளென்பது கண்டுகொள்க.

௬. நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற்
காதலர் நீங்கலர் மன்.
(1216)

(இ-ம்) விழிப்பென்று சொல்லப்படுகின்ற ஒப்பற்ற பாவி இல்லையானல் கனவினிடத்து வந்து கலந்து இன்பங் கொடுத்த காதலர் என்னை விட்டுப் பிரியமாட்டாரென்பதாம். இதனுல் விழிப்பில்லாமல் உறக்கமே யிருந்திருந் தால் இன்பமும் மிகுதியாக அனுபவிப்பே னென்பதும் உறக்கம் சிறத்திருத் தலால் காதலர் பிரிவைச் சகித்திருக்கின்றேனென்பதுங் கூறினளென்பது கண்டுகொள்க. இதுவும் அது.

எ. நனவினுல் நல்காக் கொடியார் கனவினுன்
என்னெம்மைப் பீழிப் பது.
(1217)

(இ-ம்) ஒருநாளும் விழித்திருக்கும்போது வந்து பேரன்பால் தழுவி இன்பங் கொடாத கொடியவர் தினந்தோறுங் கனவினிடத்து வந்து என்னைத் துன்பப் படுத்துவது என்னசம்பந்தம்பற்றியோ தெரியவில்லை என்பதாம். இங்கே காதலரைக் கொடியவரென்றது அவர்பிரிந்துபோதலும் பிரிந்துபோய்க் குறித்த காலத்தில் வாரதிருத்தலும் நோக்கி என்க. இது, கண் விழித்த இடத்துத் தலைவனைக் காணுதவளாய்க் கனவிற் றழுவிப்புணர்ந் தநுபவித்த இன்பத்தை நினைந்து வருந்தி அவ்வருத்தம் பொறுக்கமாட்டாத் தலைவி சொல்லியது.

அ. துஞ்சுங்காற் ரோண்மேல ராகி விழிக்குங்கால்

நெஞ்சத்த ராவர் விரைந்து.
(1218)

(இ-ம்) என்மனமே யிருப்பிடமாக விடாமல் இருக்கின்ற காதலர் யான் உறங்கும்போது வந்து என்தோள் மே விருப்பவராகிப் பின் விழிக்கும் போது விரைந்துவந்து பழைய இருப்பிடமாகிய மனத்தினிடத்தே யிருப்பர். ஒருபோதும் என்னைவிட்டு நீங்கிலர் என்பதாம். எனவே, சொப்பனத்திலே தலைவரைக் காணாத நாளில்லை யென்றாளாயிற்று. இது, தன்னை யாற்றுதற் பொருட்டுத் தலைவன் குணங்களைப்பழித்த தோழிக்கு அவனது குணங்களை அவள் பழியாதிருக்குமாறு தலைவி சொல்லியது.

க்உரு-ஆம் அதி.—பொழுதுகண்டிரங்கல்.
ருஎரு

கூ. நனவினால் நல்காரை நோவர் கனவினாற்
காதலர்க் காணா தவர்.
(1219)

(இ-ம்) தமக்கொரு காதலரில்லாமையால் அவரைக் கனவினிடத்துக் கண்டு அறியாத பெண்கள் தாமறியும்படி நான் விழித்திருக்கும்போது என் னிடத்து வந்து பேரன்புகாட்டி இன்பஞ்செய்யாத எம்முடைய காதலரைப் பழித்துப் பேசுவரென்பதாம். எனவே,

தமக்கொரு காதலரையுடைய மக ளிரே கனவினிடத்துத் தலைவர் வந்து இன்பஞ்செய்தலை யறிவர். அவரல்லாத பிற மாதர்கள் அறியாரென்பது கருத்து. இதுவும் அது.

கo. நனவினால் நந்நீத்தா ரென்பர் கனவினாற்
காணார்கொ லிவ்வூ ரவர்.
(1220)

(இ-ம்) இவ்வூரிலுள்ள பெண்கள் சாக்கிரமாகிய விழித்திருக்குங் காலத்தில் தலைவர் எம்மைவிட்டுப் பிரிந்து போயினாரென்று அவர்மேற் பழி கூறுவர். அவர் எமது கனவினிடத்துத் தினந்தோறும்வந்து கலந்து இன்பஞ் செய்து போவதை யறியமாட்டாரோ என்பதாம். ஊரவர்மே லேற்றித் தோழியைச் சொன்னாளென்பது குறிப்பாற் கண்டுகொள்க. இதுவும் அது.



# 123-ஆம் அதி.—பொழுதுகண்டிரங்கல்.

அஃதாவது, மாலைப்பொழுது வந்த இடத்து அதனைத் தலைவனைப் பிரிந்த தலைவி பார்த்து விரகவேதனையால் வருந்துதல். விரகம்—காமம்.

க. மாலையோ அல்லை மணந்தா ருயிருண்ணும்
வேலைநீ வாழி பொழுது.
(1221)

(இ-ம்) பொழுதே! நீ இற்றைக்கு முன்னாட்களில் வந்த மாலையோ வென்று ஆராய்ந்து பார்த்தால் அதுவல்ல. வேறெதுவென்றால், முன்னாளில் காதலரைக் கலந்த பெண்களது உயிரையுண்ணும் நாசகாலமாயிருந்தாய், அல்லது வேலாயுதமாயிருந்தாய் என்பதாம். முன்னாள் கூடியிருந்த நாளெனவே பின்னாள் பிரிந்திருந்த நாளென்பது சொல்லாமலே விளங்கும். இது, மாலைக்காலத்தின் வரவு கண்டு வருந்திய தலைவி சொல்லியது.

உ. புன்கண்ணை வாழி மருள்மாலை யெங்கேள் போல்
வன்கண்ண தோநின் றுணை.
(1222)

ஙஉஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) மயங்கிய மாலைக்காலமே! நீயும் எம்மைப்போலப் புன்கண் (துன்பம்) உடையாய் எம்முடைய துணையாகிய நாயகன் எம்மைப் பிரிந்து வாராதிருத்தல்போல உன்னுடைய துணையாகிய நாயகனும் உன்னைப் பிரிந்து வாராதிருக்கும் கொடுமையுடையவனோ என்பதாம். மாலைக்காலத்துக்குப் புன்கணாவது—பகலுமாகாமல் இரவுமாகாமல் ஒளியிழத்தல்.

வாழி என்றது — எனக்குத் துன்பஞ் செய்தலால் கெடுவாயென்று கோபத்தாற் சொல்லிய குறிப்புமொழி. இது, தலைவி தானடைந்த துன்பத்தை மாலைக்காலத்தின் மேலேற்றிச் சொல்லியது.

ங. பனியரும்பிப் பைதல்கொள் மாலை
துனியரும்பித்
துன்பம் வளர வரும்.
(1223)

(இ-ம்) காதலர் என்னைக் கூடிப் பிரியாதிருந்த நாளெல்லாம் எனக்கு முன் நடுக்கமெய்திப் பசந்து வந்த மாலைக் காலமானது அவர் என்னைவிட்டுப் பிரிந்த இந்நாளில் எனக்கு மரணம் வந்து தோன்ற அதற்குளதாய துன்பம் நாளுக்குநாள் வளரும்படி வருகின்றது.
யானென்செய்வேன்? என்பதாம். இது, துன்பத்தை ஆற்றவேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ச. காதல ரில்வழி மாலை கொலைக்களத்
தேதிலர் போல வரும்.
(1224)

(இ-ம்) ஆசையுடைய தலைவர் என்னிடத்திருக்குங் காலமெல்லாம் என் னுயிர் இன்பமுற்று வளர வந்த மாலை நேரமானது அவரென்னை விட்டுப் பிரிந்துபோன வேளை அப்படி வாராதிருத்தலே யல்லாமல் கொலை செய்யும்

போர்க்களத்தில் கொலையாளியைப் போல என்னுயிரைப் போக்குகிறதற்கு வருகின்றதென்பதாம். இனிச் செய்யக் கடவதொன்றில்லையென்று தலைவி வருந்தினாளென்பது கருத்து. இதுவும் அது.

ரு. காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. (1225)

(இ-ள்) காலைப்பொழுதும் மாலைப்பொழுதும் தலைவர் என்னைக் கூடிய நாளில் வருதல்போல் அல்லாமல் அவர் பிரிந்தநாளில் அவ்விரண்டு பொழுதும் ஒன்றுக்கொன்று மாறுபட்டு வருதலால் காலைப்பொழுதுக்கு என்ன உபகாரஞ் செய்தேன்? மாலைப்பொழுதுக்கு என்ன அபகாரஞ் செய்தேன்? என்பதாம். மாறுபடுதலாவது, காலை முன்போலத் துன்பஞ் செய்யாமல் வருதலும், மாலை அப்படி வராமல் துன்பஞ்செய்ய வருதலுமாம். பிரிந்திருந்த நாயகி நாயகனுக்கு மாலைப்பொழுதில் காமவிகாரம் அதிகப்படுதல் இயல்பாதல்

க்உரு-ஆம் அதி.—பொழுதுகண்டிரங்கல்.
கூளின்

சகசமாதலால் அஃதறியாது மாலைக்காலஞ்

செய்ததாகத் தலைவி கூறியதும் ஒரு நியாயமேயென்று கண்டுகொள்க. இதுவும் அது.

சு. மாலைநோய் செய்தல் மணந்தா ரகலாத
காலை யறிந்த திலேன்.

(1226)

(இ-ம்) முன்னை நாளெல்லாம் எனக்குச் சிநேகமாய் இன்பஞ்செய்து வந்த மாலைக்காலமானது இன்றுபகையாகித் துன்பஞ் செய்தலை என்னைக் கலந்த தலைவர் இ ன்பஞ்செய்து கூடியிருந்த காலத்தில் யான் அறிந்திலேன். அறிந்திருந்தேனானால், அவர் பிரிந்துபோதற்குச் சம்மதிக்க மாட்டேனென்பதாம். இனி, எவவிதம் இத்துன்பத்தைச் சகிப்பேனென்பது கருத்து. இது, இன்று இப்படி வருத்தப்படுதற்கு நீ அன்று தலைவர் பிரிதற்கு ஏன் சம்மதித் தாயென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

எ. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

(1227).

(இ-ம்) இக்காம நோயாகிய பூவானது காலைப்பொழுதினிடத்துக் காய ரும்புபோலத் தோன்றிப் பகற் பொழுதெல்லாம் மலருங்காலத்துப் போரும் பாகி மாலைப்பொழுதினிடத்து மலர்ந்து நிற்குமென்பதாம். நித்திரை விட் டெழுந்த போது முன்னைநாளிரவிற் கனவிலே கூடிய தலைவனை நினைந்து துன்பம்

நீங்கியிருத்தல் பற்றிக் காலையரும்பி (தோன்றி)யென்றும், பொழுது செல்லச் செல்ல அதைமறந்து தலைவன்பிரிந்ததை நினைந்து சகியாளாதல் பற்றிப் பகலெல்லாம் போதாகியென்றும், (அஃதாவது, பின்னும் தலைவனைச் சேரநினைத்தல்) மாலைக்காலத்தில் தங்கள் தங்கள் துணை (பெண்ணை)நினைந்து வந்துசேரும் விலங்குகளையும் மனிதரையும் பார்த்துத் தானும் தன் துணையாகிய தலைவனொடு கூடி யின்ப மநுபவித்தற்கு முடியாதிருத்தலைச் சகிக்கக் கூடாமைபற்றி மாலை மலரும் இந்நோயென்றுங் கூறினாள். இது, மாலைப் பொழுதினிடத்து இப்படி அதிகத்துன்பம் அநுபவித்தற்குக் காரண மென்ன வென்று கேட்ட தோழிக்குத் தலைவி சொல்லியது.

அ அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
குழல்போலுங் கொல்லும் படை.
(1228)

(இ-ம்) காதலரைக் கலந்துகூடிய முன்னாளெல்லாம் இனியதாய் வந்த இடையனது வேய்ங்குழ லோசையானது காதலரைப்பிரிந்த இக் காலத்து அக்கினியைப்போலச் சுடுகின்ற மாலைக்காலத்துக்குத் தூதுமாகி,

அம் மாலைக்காலம் வந்து என்னைக் கொல்லுமிடத்துக் கொல்லுகின்ற ஆயுதமும் ஆயிற்று என்பதாம். தானே சுடுகின்ற மாலை வேய்ங்குழ லோசை யாகிய துணையும்பெற்று லினி யென்னதான் செய்யமாட்டா தென்பது கருத்து. பசுக்களை மேய்க்கும் இடையர் மாலைக்காலம் வருஞ்சமையத்து அப் பசுக்களைக் காட்டில்நின்றும் வீட்டிற் செலுத்தும்பொருட்டு வேய்ங்குழ லூதுவர். அக் குழலினின்று வரும் ஒசை காமிகளுக்கு விரகத்தை யுண்டாக் கும் ஆதலா லிவ்வாறுகூறினுள். வேய்-மூங்கில். இதுவும் அது.

௯. பதிமருண்டு பைதலுழக்கு மதிமருண்டு
மாலை படர்தரும் போழ்து.
(1229)

(இ-ம்) இதற்கு முன்னெல்லாம் யானே மயக்கமுற்றுக் காமநோயால் வருத்தமுற்றேன். இனிக் கண்டவரெல்லாரும் அறிவுமயங்கும் வகையாக மாலைப்பொழுது மிகுதியாக வருஞ்சமயத்தில் என்னோடு

இவ்வூரிற் கண்டா ரெல்லாரும் மனமயங்கிக் காமநோயால் வருந்துவர் என்பதாம். அஃதாவது, யானே மயக்கமுற்றுக் காமநோயால் வருத்தமுற்றே னென்றது, பிரிதற்றுன் பம் தனக்கே யல்லாமல் பிறர்க்கில்லாமையாலென்க. கண்டாரெல்லாரு மென்றது காம இன்பம் அநுபவிக்கக் கருதுவா ரெல்லாரு மென்றபடி. இதுவும் அது.

௩௦. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
மாயுமென் மாயா வுயிர்.
(1230)

(இ-ம்) காதலர் பிரிவை இதுவரையும் பொறுத்து இறந்துபடாதிருந்த என்னுயிரானது இன்பத்தி னியல்பைப் பெரிதாக நினையாமல் பொருளி னியல்பையே பெரிதாக நினைத்துக் குறித்தகாலங் கடந்து பலநாளும் செல்ல இதுவரையும் வாராதிருந்த அவரை நினைத்து மயக்கத்தைச் செய்யாநின்ற இம் மாலைக்காலத்தினிடத்தே இறந்துபடப்போகிறது என்பதாம். எனவே, தோழியே! நீ யெவ்விதம் சமாதானம் சொல்லித் தேற்றினாலும் பயனில்லை யென்று சொன்னாளாயிற்று. இதுவும் அது.

## 124-ஆம்
## அதி.—உறுப்புநலனழிதல்.

அஃதாவது, தலைவன் பிரிவால் தலைவியின் கண்ணும் நெற்றியுந் தோளும் முதலிய அவயவங்கள் அழகழிதலைக் கூறுதல்.

### கஉச-ஆம் அதி.—உறுப்புநலனழிதல்.

**ஙாஙக**

க. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
நறுமலர் நாணின கண்.
**(1231)**

(இ-ம்) பிரிந்திருத்தலை ஆற்றாமை (சகியாமை) யாகிய சிறுமை நம்மிடத்திலே நிற்ப, நம்மைவிட்டுப் பிரிந்து தூரதேசத்துக்குச் சென்ற தலைவரை நீ நினைத்தழுதலால், நின்கண்கள் ஒளியிழப்பது மல்லாமல் நின் கண்களுக்குத் தோற்றுநின்ற நீலோற்பல முதலிய மலர்களுக்கு இப்போது நின்கண்கள் தோற்று நாண மடைந்தன என்பதாம். இவற்றைக் கண்டார் தலைவரைக் குறைகூறுவர் ஆதலால், நீ பிரிவைச் சகித்திருக்க வேண்டு மென்று தோழி தலைவிக்குக் கூறினளென்பது

கண்டுகொள்க. இது, ஆற் றாமை மிகுதியால் வேறுபட்ட தலைவிக்குத் தோழி சொல்லியது. ஆற்றாமை- சகியாமை.

உ. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
பசந்து பனிவாருங் கண்.
(1232)

(இ-ம்) பசப்பு நிறம் மிகுதியாக அடைந்து அதன்மேல் நீரொழுகு கின்ற நின்கண்கள் நம்மால் விரும்பப்பட்ட தலைவர் நம்மைப்பிரிந்து நம் மிடத்திற் கருணையில்லா திருப்பதைப் பிறருக்குத் தெரியப்படுத்தல்போலத் தோன்று மாதலால் நீ தலைவன் பிரிவை நினைத்துத் துக்கப்படாம லிருக்க • வேண்டுமென்று தலைவியைத் தோழி ஆற்றுவித்தாள் என்பதாம். சொல்லுத லாவது-அழுதலாகிய அவமானத்தா லுணரப்படுதல். ஆற்றுவித்தல்-பிரிவால் வந்த துன்பத்தைச் சகித்திருக்கும்படி சமாதானப்படுத்தல். இதுவும் அது.

ஙு. தணந்தமை சால அறிவிப்ப போலு
மணந்தநாள் வீங்கிய தோள்.
(1233)

(இ-ம்)
யாற் பூரித்த

காதலர் கண்டு கலந்து கூடிய முன்னைநாட்களில் இன்ப மிகுதி நின்னுடைய தோள்கள் இன்று அவர் பிரிந்திருப்பதைப் பிறரறியும்படி விளங்கச் சொல்லுதல்போல மெலிகின்றன. இது உனக்குத் தகாத செய்கையென்று தோழி சொல்லினாளென்பதாம். எனவே, அன்று பூரிப்பும் இன்று மெலிவுங் கண்டவர் காதலரைக் குறைகூறுவர். ஆதலால், பிரிவைச் சகித்து நீ வருந்தாதிருப்பாயாக வென்று தோழி சொல்லினளாயிற்று. இதுவும் அது.

ச. பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்
தொல்கவின் வாடிய தோள்.

(1234) ௲௨௱௩௰௪ திருக்குறள் மூலமும்,

தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) துணைவர் நீங்கிய அன்று அவராற் பெற்ற செயற்கை யழகோடு அதன் முன்னிருந்த பழைய இயற்கை யழகும் இழந்த நின்தோள்கள் இன்று அதற்கு மேலே தம்பெருமையும் இழந்து வளையல்களும் கழலப்பட்டன. இவ்விரண்டும் இல்லாமல் நீ அத்துணைவர் பிரிவைச் சகித்து வருந்தாதிருக்க வேண்டும் என்பதாம். ஏனென்றால், இவ்வருத்தங்கண்டார் இவளைப் பிரிந்த தலைவன் வந்திலனென்று அவன்மேற் குறைகூறாமல்

இருக்கமாட்டார். இவ் விதங் கூறுமலிருக்கச்செய்வது தலைவிக்குக் கடமையாதலால் என்க. அன்று- துணைவர் பிரிந்தநாள். இன்று-குறித்த பருவத்தில் அவர் வாராதநாள். இவ் விரண்டு—பெருமையிழத்தல், வளை கழலுதல், தோள்—கை. இதுவும் அது.

ரு. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
தொல்கவின் வாடிய தோள்.
(1235)

(இ-ம்) பாயவிற்றழுவும் நமது கைகள் சிறிது நெகிழும் அவ்வளவு காலத்தையும் பொறுக்கமாட்டாத தலைவி இவ்வளவு நீண்டகாலம் நாம் பிரிந் திருந்தால் என்னபாடு படமாட்டாளென்று நினையாத தலைவராகிய கொடியவ ரது கொ டுமையை வேறொருவர் சொல்லவேண்டுவதில்லை. அவரொடு கலந்து தழுவிய தோள்களும் வளையல்களுமே பிறரறியும்படி சொல்கின்றன என்ப தாம். தோள்கள் சொல்லுதலாவது—முன்னிருந்த அழகுகெட்டு மெலிந்து வாடுதல். வளையல்கள் சொல்லுதலாவது—கையைவிட்டுக் கழன்றுபோதல். இவ்விரு செயல்களையுந் தடுக்கும் விதம் நீ வருந்தாதிருப்பதைத் தவிர வேறொன்று மில்லை என்பது கருத்து. இதுவும் அது.

சு. தொடியொடு தோள்நெகிழ நோவ லவரைக்

கொடிய ரெனக்கூறல் நொந்து.
(1236)

(இ-ம்) காதலர் பிரிந்து வாதிருக்கின்ற வருத்தத்தை யான் ஆற்றி யிருக்கவும் (பொறுத்திருக்கவும்) வளையல்கள் என் கைவசப்பட்டு இராமல் கழலும்படி தோள்கள் வருந்தி மெலிய அவவிரண்டையுங் கண்டு அவரை நீ கொடியவரென்று சொல்லுத லைப் பொறுக்கமாட்டாமல் யான் என்னுள் ளே நொந்து வருந்துகின்றேன். பிறர்க்குச் சொன்னால் இது சிரிப்புக்கு இடமாகும் என்பதாம். இது, தான் ஆற்றுதற் பொருட்டுத் தலைவன் இயற்கையைப் பழித்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

எ. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
வாடுதோட் பூச லுரைத்து,
(1237) ௬௨௨ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

௧௦. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
யொண்ணுதல் செய்தது கண்டு.
(1240)
(இ-ம்) உடம்பு இறுகத் தழுவும்போது கைகள் சற்றுவிலகக்கண்ட கண்ணின் பசலைநிறமானது

துன்பமுற்றது, தனக்குப் பக்கத்திலுள்ள ஒளி பொருந்திய நெற்றியானது உண்டாக்கிய பசலை நிறத்தைக்கண்டு என்பதாம். எப்படியென்றால், கைகள் தழுவியது விலகிய உடனே நெற்றியின் பசப்பு பசத்தல்போல நாமும் பசவாமல் காலந்தாழ்த்துக் கைகளோடு மெய்யும் விலகியவுடனே பசந்தோமேயென்று வெட்கமுற்றதனாலென்க. துன்ப முறுதல்-இவ்விடத்து வெட்கமுறல். இதனால், தலைவி இவ்வளவு நாள் பிரிந்திருப்பதைப் பொறுக்கமாட்டாள்; இனி நாம் தாமதித்திருந்தால் இறந்துபாடெய்தினு மெய்துமென்று விரைந்துவரத் தலைவன் கருதினானென்பது கருத்து. இதுவும் அது.



## 125-ஆம் அதி.—நெஞ்சொடுகிளத்தல்.

அஃதாவது, தலைவன் பிரிவாற்றாமை அதிகப்படத் தனக்கு ஆதாரங் காணாத தலைவி தான்செய்யுஞ் செயலறியாது தன் மனத்தொடு சொல்லுதல்.

க. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே
யெனைத்தொன்று
　　மெவ்வநோய் தீர்க்கு மருந்து.

(1241)

(இ-ம்) மனமே! பலவிதத்தாலுந் தீராத துன்பந்தரும் காமநோயினைத் தீர்க்குமருந்து யானறியும் வலிமையில்லாம லிருக்கின்றேன். நீயாவது நினைத்துப் பா ர்த்து எவ்வளவானாலும் ஒருமருந்து சொல்வாயாக என்பதாம். எவ்வளவானாலு மென்றது, சிறிதானாலு மென்றபடி. இது, தலைவி தன்னு டைய ஆற்றாமை தீருந்திறத்தை நாடியது. ஆற்றாமை-சகியாமை.

உ. காத லவரில ராகநீ நோவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

(1242)

(இ-ம்) நம் தலைவராகிய அவர் நம்மிடத்தில் ஆசையில்லாதிருக்கவும் நீ அவர் வருவதைக் கருதி வருத்தப்படுவது அறியாமையே யல்லது வேறில்லை யாதலால் அவ்வெண்ணத்தை விட்டு என் மனமே நீ வாழ்வாயாக என்பதாம். இதனால் நாம் அவரிடத்துச் செல்லுதலே அறிவாமென்பது கருத்து. இது, தலைவனைக் காணுதற்கு ஆசைமிகுதியால் தலைவி சொல்லியது.

க்உரு-ஆம் அதி.— நெஞ்சோடுகிளத்தல்.

ரூ-ஓர்ம

ரு. இருந்துள்ளி யென்பரிதல் நெஞ்சே

பரிந்துள்ளல்

பைதல்நோய் செய்தார்க ணில்.
(1243)

(இ-ம்) மனமே நம் காதலரிடத்.து விரைந்துபோவதுஞ் செய்யமாட் டாய், அவர் வரவில்லையேயென்று இறந்து விடவு மாட்டாய். இவவிரண்டுஞ் செய்யாமல் இங்கிருந்து அவர் வருதலையே நினைத்து நீ வருத்தப்படுதலால் நமக்கு என்ன பிரயோசனம்? இத்துன்ப நோயைச் செய்த அவரிடத்து நமக் கிரங்கி வரக்கருதும் எண்ணம் உண்டாகமாட்டாது என்பதாம். இதனால், அவர் நம்மிடத்தில் அருளுடையவரல்லர். இனி நாம் அவரிடத்துச் செல்லு தலே தகுதியென்பதாயிற்று. இதுவும் அது.

ச. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்

தின்னு மவர்க்காண லுற்று.
(1244)

(இ-ம்). மனமே நீ காதலரிடத்துப் போவதற்குப் புறப்பட்டாயானால் இக்கண்களையும் உன்னுடன் கூட்டிக்கொண்டு போதல் வேண்டும். அப்படி யல்லாமல் நீ தனியே போவாயானால் இக்கண்கள் தாம்

காணவேண்டுமென் னும் ஆசைமிகுதியால் நீ அவரைக் காட்டு என்று என்னைத் தின்னுதல் போலக் கோபஞ் செய்து வருத்துமென்பதாம். இதுவும் அது.

ரு. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயாம்
உற்றா லுறாஅ தவர். (1245)

(இ-ம்) மனமே யாம் காதலரை விரும்ப அவர் நம்மை விரும்பாதிருந்தால் அவர் நம்மை வெறுத்துவிட்டாரென்று நினைத்து அவரோடு நாம் ஊடல் செய்து அவரைக் கைவிட்டு (வெறுத்துவிட்டு) இருக்கும் வலிமை நமக்குண்டோ? இல்லை என்பதாம். இதனால், அவ்வலிமையில்லாததால் நாம் அவர் பாற் செல்லுதலே தகுதியென்று மீளவும் மனத்தை வற்புறுத்தினளென்பதாயிற்று. இதுவும் அது.

சு. கலந்துணர்த்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
பொய்க்காய்வு காய்திஎன் னெஞ்சு. (1246)

(இ-ம்) என்மனமே நான் காதலரோடு புலந்தால் (ஊடல்செய்தால்) அப்புலவியை (ஊடலை)க் கலவியினாலே நீக்க வல்லமையுடைய அவரைக் கண்டால் பொய்யாக ஆனாலும் ஒருதரம் ஊடல் செய்து பின்பு அதனை நீக்க மாட்டாய். அப்படிச் செய்யத் தெரியாத நீ இப்பொழுது

அவர் கொடியவ! ரென்று பொய்யாக வெறுக்கின்றாய்.

இக்கருத்தை விட்டு அவரிடத்துச்



திருக்குறள்

மூலமும், தெளிபொருள் வசனமும்.

செல்லத் துணிவாயாக என்பதாம். இது, தலைவன் கொடுமையை நினைந்து அவனிடத்திற்குச் செல்லுதற்கு உடன்படாத நெஞ்சிற்குத் தலைவி சொல்லியது.

எ. காமம் விடுஒன்றோ நாண்விடு நன்னெஞ்சே
யானோ பொறேனிவ் விரண்டு.
(1247)

(இ-ம்) என்னுடைய நல்ல மனமே! காமம் நாணமென்னும் இரண்டினில் நாணத்தை விடமாட்டாயானால் ஒரு காரியஞ்செய். அஃதாவது, காம இச்சையை விட்டு விடு. அதை விடமாட்டாயானால் மற்றொரு காரியஞ் செய். அஃதாவது, நாணத்தை விட்டு விடு. இந்த இரண்டையும் நீ பொறுத்திருந் தாலும்

நான் பொறுத்துக் கொண்டிருக்கும் வலிமையில்லேன் என்பதாம். இவ்விரண்டில் நாணத்தை விட்டுவிட்டால் தலைவரைத்தேடி அவரிருக்கு மிடத்துக்குப் போகலாமென்பது கருத்து. இது, நாணந் தடுத்தலால் தலைவனைத் தேடிச் செல்லுதல் நீங்கிய தலைவி தன் மனத்துக்குச் சொல்லியது.

அ. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.
(1248)

(இ-ம்) என்மனமே! நான் படுந் துன்பத்தை யறியமாட்டார் ஆதலால் இரக்கமுடையவராய் வந்து தலையளி (பேரன்பு) செய்யாதிருந்தாரென்று கருதி என் துன்பத்தைத் தெரிவிக்கும்பொருட்டு நம்மைப் பிரிந்துபோன காதலர் பின்பு ஏக்கங்கொண்டு செல்லலுற்ற நீ ஒன்றும் அறிவில்லாமை யுடையாய் என்பதாம். இதுவும் அது.

கூ. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
யாருழைச் சேறியென் னெஞ்சு.
(1249)

(இ-ம்) என்மனமே! நம்மால் விரும்பப்பட்ட

காதலையுடைய தலைவர் உன் அகத்தினிடத்தவராயிருக்க, இதற்குமுன் னெல்லாங் கண்டிருந்தும் அதை மறந்துவிட்டு இப்பொழுது புறத்திலே யாரைநினைத்துத் தேடிப் போகின்றாய். என் சொல்லைக் கேளாமற் போவாயானால் அவமதிப்புக் கிட மாம். ஆதலா லினிப் போதலை நிறுத்துவாயாக என்பதாம். இதுவும் அது.

௧௦. துன்னாத் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
இன்னு மிழத்துங் கவின்.
(1250)

௧௨௬-ஆம் அதி.—நிறையழிதல்.

௩௨௫

(இ-ம்) நம்மிடத்துத் திரும்பி வந்துசேருதற்கு இடமில்லாமல் நம்மை விட்டு நீங்கிச்சென்ற காதலரை நாம் நம் அகத்தி லுடையேமாகவும் புறத்திலே தே டிச் சென்றாயானால் முன்பு இழந்த புறத்து அழகே யல்லாமல் இன்னும் அகத்து அழகும் இழந்துவிடுவோம் என்பதாம். அகத்தழகு-நிறை. அது பிறரறியாத இரகசியம். இது, தலைவரை மறந்து வருத்தத்தைச் சகிக்க வேண்டுமெனத் தன்னெஞ்சுக்குத் தலைவி சொல்லியது.

---

## 126-ஆம்
## அதி.— நிறையழிதல்.

அஃதாவது, மனத்தில் அடக்கவேண்டியவைகளை ஆசை மிகுதியால் அடக்கமாட்டாமல் வாய்விட்டுச் சொல்லுதல். அடக்கவேண்டியவை—பிற ரறியாமல் மறைக்கும் இரகசிய விஷயங்கள்.

க. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு.
(1251)

(இ-ம்) வெட்கமாகிய தாழால் (தாழ்க்கோலால்) இறுக்கிப் பூட்டிய நிறை யென்னுங் கதவினைக் காம இச்சையாகிய கூந்தாலி அஃதாவது, இக்கால வழக்கினுள்ள கோடாலி முறித்துவிடும். இனி அவ்விரண்டும் நிற்றலு மில்லை. யான் காதலர் பிரிவை ஆற்றலுமில்லை என்பதாம். நிறை-பிறரறியா தடக்குங் காம இச்சையாகிய இரகசியம். அவ்விரண்டு-நிறையும், வெட்கமும். தாழை இக்காலத்தார் தாப்பாழ் என்பர். இது, நாணும் நிறையும் அழியாமல் தலைவர் பிரிவை நீ ஆற்றல்வேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

உ. காம மெனவொன்றோ கண்ணின்றென் னெஞ்சத்தை

யாமத்தும் ஆளுந் தொழில்.

(1252)

(இ-ம்) எல்லாருந் தொழிலை (வேலையை) விட்டு நித்திரை செய்யும் நடுராத்திரியிலும் காமம் என்மனத்தைப் புண்படும்படி தண்டித்து வருத்தி கின்ற வேலை யைச் செய்கின்றது. ஆதலால் அக் காமமென்று சொல்லப் பட்ட ஒன்று ஐயோர் என்னிடத்தில் தாக்ஷணிய மில்லையாயிருந்தது என்ப தாம். இது, மனத்தினிடத்துத் தோன்றிய காமம் மனத்தால் அடக்கப்படு மென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

௩. மறைப்பேன்மற் காமத்தை யானே குறிப்பின்றித்

தும்மல்போற் றோன்றி விடும்.

49

(1253)



(இ-ம்) தும்மலுண்டானால் அஃதடக்கினலும் அடங்காமல் வெளிப் படுதல்போல என்னிடத்து உண்டாகிய காமத்தை யான் மறைத்து வைத் தாலும் என்னுடைய நினைப்பின்படி யிராமல் எப்படியாவது

பிறாறியும்படி வெளிப்பட்டு விடுகின்றது என்பதாம். இதனால், ஒருவராலுங் காமத்தை மறைக்க முடியாதென்பது காண்க. இது, மகளிர் காம மறைக்கப்படுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ச. நிறையுடையே னென்பேன்மன் யானோஎன் காம
மறையிறந்து மன்று படும்.
(1254)

(இ-ம்) இதுவரையும் யான் என்னை நிறையுடையேனென்று எண்ணி யிருந்தேன். இன்று என்னுடைய காமமானது யான் மறைத்துவைத்தலை விட்டு நீங்கிப் பிறாறியும்படி வெளிப்பட்டுத் தோன்றி நிற்குமாதலால் யான் மறைத்து வைத்திருந்ததனா லென்ன பிரயோசனம் என்பதாம். நிறை— அடக்கம். இதுவும் அது.

ரு. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்றா ரறிவதொன் றன்று.
(1255)

(இ-ம்) தம்மைவிட்டு நீங்கிப்பிரிந்த காதலர் பின் தொடர்ந்து செல்லாமல் தாமும்அவரைவிட்டு நீங்கியிருக்கும் பெருந்தகைமை (நிறையுடைமை) யானது காம நோயடையாதவர் அறியப்படுவதாகிய ஒன்றல்லாமல்

அக்காம நோயடைந்தவர் அறியப்படுவதொன்றல்ல என்பதாம். பின் றொடர்ந்து செல்லுதல்—மனத்தால் இடை விடாமல் நினைத்தல். காம நோயடையா தவர்—மானமுடையவர். இது, நம்மைமறந்த காதலரை நாமுமறக்க வேண்டு மென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

௬. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
எற்றென்னை யுற்ற துயர்.

(1256)

(இ-ள்) என்னைவிட்டுப் பிரிந்து நெடுந்தூரஞ் சென்ற காதலர் பின்னே யான் செல்லுதலை விரும்புதலால் என்னைப் பற்றிய துன்பம் எத்தன்மை யுடையது. இத்துன்பத்தின் செயல் மிகவும் நன்றாயிருக்கிறது என்பதாம். எப்படியென்றால், பிரிந்த காதலரை விட்டிருக்கு மாதரைப் பற்றுவதே துன்பத்தின் தொழிலாயிருக்க அதை மறைந்து அவரை விடாமற் பின் செல்லும் என்னைப் பற்றுதலால் இது முறையல்லவென்று கூறும் இகழ்ச்சிக் குறிப்பால் மிகவும் நன்றாயிருக்கிறது என்று கூறினானென்பது கண்டுகொள்க.

௧௨௬-ஆம் அதி.—நிறையழிதல்.

ரூ.௩௨௭

எத்தன்மைத்து என்றது என்ன ஒழுங்கோடு சேர்ந்தது? என்றபடி. இதுவும் அது.

எ. நாணென வொன்றோ அறியலங் காமத்தாற்
பேணியார் பெட்ப செயின். (1257)

(இ-ம்) நம்மால் விரும்பப்பட்ட காதலர் வந்து, ஆசை மிகுதியால் நாம் கருதியிருந்த கலவியின் (புணர்ச்சியின்) வகைகள் பலவற்றையும் செய்யு மிடத்து, பரத்தையர் மார்பைத் தழுவி வந்த அவரது மார்பைத் தழுவுதற்கு நாம் நாண் (வெட்கம்) ஒரு சிறிதும் அடையமுடியாமலிருந்தோம் என்பதாம். அபேதம்பற்றித் தன் செய்கைக்குத் தோழியையும் உடன் படுத்தி இருந்தோ மென்று புன்மையால் தலைவி கூறினளென்பது கண்டுகொள்க. இது, பரத்தை யிற் பிரிந்துவந்த தலைவனோடு நிறையழிவாற் கூடிய தலைவியை நீ யிப்போது தலைவனோடு ஊடல் செய்யாதிருத்தலுக்குக் காரணமென்னவென்று தோழி கேட்க, அதற்குத் தலைவி சொல்லியது. நிறை—நாணம்.

அ. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை. (1258)

(இ-ம்) பல பொய் வார்த்தைகளையும் பேசவல்லமையுடைய கள்வன் (திருடன்) ஆகிய தலைவனது

நம்மைப்பார்க்கினும் அன்புடையவனுகக் கூறும் வணக்கமாகிய சொற்களல்லவா நம்முடைய நிறையாகிய கோட்டையை யிடிக்கும் ஆயுதமாவது. இப்படியானுல் இனி அக்கோட்டை எவ்விதம் நிலை நிற்குமென்பதாம். நிறை—கலங்காத மனவுறுதி, அல்லது நாணம். இதனுல், காம மிகுந்த ஆடவர் தமது தகுதிக்கு ஏலாத தாழ்ந்த வார்த்தைகளை மான மிழந்து கூறுவரென்பது கண்டுகொள்க. இதற்கு உதாரணமாகச் சீதையி னிடத்து ஒருதலைக் காமமுடைய இராவணன் ' 'குடிமை மூன்றுலகுஞ் செய்யுங் கொற்றத்தென், அடிமை கோடி'' என்றதைக் கம்பராமாயணம்— நிந்தனைப் படலம் 37-ம் செய்யுளில் அறிந்து கொள்ளலாம். இதுவும் அது.

கூ. புலப்ப லெனச்சென் றேன் புல்லினே னெஞ்சங்
கலத்த லுறுவது கண்டு.
(1259)

( இ-ம் ) காதலர் வந்த பொழுது ஊடல் செய்வேனென்று நினைத்து வேறொரு இடத்துக்குப் போயினேன் . போயும் என்மனம் பொறுத்திருக்க மாட்டாமற் போய் அவரைக் கூடிக் கலந்தது. அதுகண்டு இனி நாம் இருந்ததிற் பயனில்லையெ ன்று விரைந்துசென்று அவரைத் தழுவிச் சேர்ந்தேனென்பு கூஅ௨ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

தாம். இதனால், காமமுடைய மாதர் கணவரைக் காணாதபோது வெறுத்துப் பேசுதலும் கண்டபோது விரும்பித் தழுவுதலும் ஆமென்று கண்டுகொள்க, இதுவும் அது.

௬௦. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
புணர்ந்தூடி நிற்பே மெனல்.
(1260)

(இ-ம்) நிணத்தை (கொழுப்பை)த் தீயினிடத்து இட்டால் அஃது உருகும் விதம்போலத் தம் காதலரைக் கண்டால் மனம் உருகி நிற்கு மாதருக்கு அக்காதலர் தம்மிடத்து நெருங்கிச் சமீபத்தில் வர அவரைக் காணாதபோது, ஊடல் செய்வோமென்று நினைத்தபடி ஊடல் செய்வது உண்டாகுமோ உண்டாகமாட்டாது என்பதாம். எனவே, யானும் அத்தன்மையுடையே னென்று குறிப்பாற் கூறினாளாயிற்று. இதனால், பிரிந்த காதலர் வந்தால் அவரோடு ஊடல் செய்து நேரத்தைப் போக்குவது காம மிகுதியுடைய பெண் களுக்கு முடியாதென்பது கண்டுகொள்க. இதுவும் அது.

## 127-ஆம் அதி.—அவர்வயின் விதும்பல்.

அஃதாவது, தூரத்தே பிரிந்திருந்த தலைவனுந் தலைவியும் ஒருவரை யொருவர் காணுதற்கு விரைதல். (அவசரப்படுதல்)

க. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
நாளொற்றித் தேய்ந்த விரல்.
(1261)

(இ-ம்) காதலராகிய அவர் நம்மைப்பிரிந்துசென்ற நாட்களைக் கணக்கிடுதற்குச் சுவரிலேகீறிய கோடுகளைத் தொட்டுத் தொட்டெண்ணி என்னுடைய கைவிரல்கள் தேய்ந்தன. இதுவல்லாமல் அவரெப்போது வருவாரென்று வழியைப்பார்த்துப் பார்த்து என்கண்களும் ஒளியிழந்து புல்லிய ஆயின. இனியான் செய்வது என்ன? என்பதாம். புல்லிய ஆதல்—கண்களின் ஒளியானது மிகுதியுங்கெட்டு நுட்பமாகிய பொருளை யறிதற்கிடமில்லாமற் குறைதல். இது, தலைவி தலைவனைக்காணும் அவசரத்தால் தோழிக்குச் சொல்லியது.

உ. இலங்கிழா யின்று மறப்பினென் றோண்மேற
கலங்கழியுங் காரிகை நீத்து.

(1262) கஉஎ-ஆம் அதி.—அவர்வயின் விதும்பல்.

௱௮௨௲

(இ-ம்) பிரகாசிக்கின்ற ஆபரணத்தையணிந்த தோழியே! யான்இறந்து படுதலாகிய இன்றைத்தினம் காதலரை மறப்பேனுனல், இப்பிறப்போடு போகாமல் மறுபிறப்பினும் அழகு அழியும்விதமாக என் கைகள் வளையல்கள் கழலப்படுவனவா மாதலால் இப்பிறப்பில் நினைத்தால் மறுபிறப்பிலாவது தவருது அவரைச்சேர்ந்து சுகமடையலாம். அதுபற்றி அவரை மறக்கமாட் டேன் என்பதாம். இப்பிறப்பின் நினைப்பு மறுபிறப்பிற் கைகூடுமென்பது சாத்திரங்கள் கூறு முடிபு. தோழியை இலங்கிழாயென்றது யான் அழகழிந் திருப்பதைக் கவனியாதிருக்கின்ருயென்று கூறிய இகழ்ச்சிக் குறிப்பு. இது, தலைவர் பிரிவினை யாற்ருமை மிகுதியால் அவரை இடைவிடாமல் நினைக்க வேண்டா. சிறிது மறக்கவேண்டுமென்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

ங. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்ருர்
வரல்நசைஇ யின்னு முளேன்.

(1263)

(இ-ம்) என்னேடு காம இன்பம் அநுபவித்தலை விரும்பாமல் போர்வெல்லுதலை விரும்பித் தோழியே நாம் துணையாயிருத்தலை யிகழ்ந்து தம் முடைய ஊக்கமே துணையாக விரும்பிக்கொண்டு நம்மைப் பிரிந்து சென்ற

காதலர் அப்போரினையும் ஊக்கத்தையும் இகழ்ந்து இவ்விடத்து வருதலை விரும்புதலால் யான் இன்னும் உயிரோடிருக்கின்றேன். அவர் வரவு இல்லா விட்டால் இறந்து படுவேன் என்பதாம். போர்— யுத்தம். ஊக்கம்— வலிமை. இதுவும் அது.

சு. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
கோடுகொ டேறுமென் னெஞ்சு.
(1264)

(இ-ம்) காமம் நீங்கியவராய் நம்மை விட்டுப் பிரிந்துபோன தலைவர் கருதிய வினை முடித்த பின் முன் கூடியிருந்த காமத்துடனே நம்மிடத்துவரு தலை நினைத்து என்மனம் வருத்தம் நீங்கி மேலு மேலும் பூரித்தெழுகின்றது என்பதாம். எனவே, ஒரு தொழிலிற் பிரவேசிக்கும் போது காதலர் காமத் தை நினைக்கமாட்டாரென்பதும், அத்தொழில் முடித்த பின் நினைப்பாரென்பதுங் கண்டுகொள்க. இதனால் காதலர் வரவை நினையாவிட்டால் யான் இறந்து போவேனென்று தலைவி குறிப்பாற் கூறினளாம். காமம்— விரகம். இதுவும் அது.

ரு. காண்கமற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு.

(1265) ௲௨௱௬௰௫ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்,

(இ-ம்) என் கண்கள் நிறைவாக (பூரணமாக) காதலனைப்பார்க்க வேண்டும். அப்படிப் பார்த்த பின்னர் என்னுடைய மெல்லிய தோள்களிற் படர்ந்த பசலை நிறமானது நீங்கும் என்பதாம். எனவே, காதலர் வரவு கேள்வி மாத்திரத்தாற் பசலை நிறம் நீங்காதென்பதாயிற்று. இது, தலைவன் வரவுகூறி நீ பசலை நிறமடையத்தக்கவளல்லள் என்ற தோழிக்குத் தலைவி சொல்லியது.

௬. வருகமற் கொண்க னொருநாட் பருகுவன்
பைதல்நோ யெல்லாங் கெட.

(1266)

(இ-ம்) இவ்வளவு நாளும் வராமல் மறந்திருந்த நாயகன் ஒரு நாள் என்னிடத்து வருவானாக, வந்தால் துன்பத்தைச் செய்கின்ற இவ்வியாதி யெல்லாம் அடியோடு கெட்டொழிய அவனின்பமாகிய அமிர்தத்தை மெய் வாய் கண் மூக்கு செவியென்னும் ஐந்து வாய் வழியாலும் பருகுவன் (உண் பேன்) என்பதாம். ஒரு நாளைக்குள்ளே முன்னரடைந்த துன்பத்தோடு இனி வரக்கடவதாகிய துன்பத்தையுங் கெடுப்பேன் என்பது குறிப்பு. இவ்வாறு நினைப்புடைய இவள் ஆசைப் பெருக்கத்தை யாவரால்

அளந்து சொல்ல முடியும். இதுவும் அது.

எ. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
கண்ணன்ன கேளிர் வரின்.
(1267)

(இ-ம்) என் கண்போற் சிறந்த நண்பராகிய காதலர் வந்தால் இது வரையும் வராமலிருந்ததற்காக ஊடல் (பிணக்கு ) செய்வேனோ அல்லது இது வரையும் சகித்திருந்த வருத்தத்தை நீக்குதற்கு அவரைத் தழுவி இன்ப மடைவேனோ அல்லது அவ்விரண்டும் வேண்டுதலால் அவ்விரண்டையுங் கலந்து செய்வேனோ என்பதாம். அவ்விரண்டு— ஊடுதலும், கூடுதலும். இவ் விரண்டையுங் கலந்து செய்தல்—ஊடுதலை முதற்செய்து பின்னர்க் கூடுதலைச் செய்தல்; இப்படிச் செய்தலே காமமநுபவிப்பார்க்கின்பமாம். இதை "ஊடுதல் காமத்திற்கின்பம், அதற்கின்பம் கூடி முயங்கப் பெறின்" என்னும் பின் வரும் திருக்குறளாலறிந்துகொள்க. இதுவும் அது.

அ. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
மாலை யயர்கம் விருந்து.
(1268)

(இ-ம்) அரசனானவன் வினை (போர்த்தொழிலைச்)

செய்து பகையை வெல்வாறு க, வென்றவுடனே ஈாமும் சென்று மனைவி (தலைவி)யைக் கூடி அவ்விடத்து வரும் மாலைப் பொழுதுக்கு எதிர் கொள்ளல், அலங்கரித்தல்

## ௱உ௲-ஆம் அதி—குறிப்பறிவுறுத்தல்.

ஙகை த

முதலாகிய உபசாரத்தைச் செய்வோமாக என்பதாம். மாலைப் பொழுதானது காமமநுபவித்தற்குத் தோற்றுவாய் செய்யுங் காலமாதலால் இவ்வாறு தலைவன் கூறினன். தோற்றுவாய்—பின் வருவதை முன் அறிவிப்பது. இது, அரச னுக்குத் துணையாகத் தலைவன் அரசனுடைய வினை (போர்) முடியாமல் காலம் நீட்டித்த இடத்துத் தலைவியை நீட்டித்தல்—நீளுதல்.

நினைந்து தன்னுள்ளே சொல்லியது.

கூ. ஒருநாள் எழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.
(1269)

(இ-ம்) தூரதேசத்திற் சென்ற காதலர் எப்போது வருவாரென்று நினைந்து நினைந்து அவர் திரும்பிவருகின்ற நாளை உள்ளத்திலே வைத்து ஏக்கங்கொண்டு வருந்தியிருக்கு மாதருக்கு ஒருநாள் பலநாள்போலக் காட்டிச் செல்லும் என்பதாம். குறிப்பு-தன்னுடைய தலைவிக்கும்

இவ்வாறு ஒருநாள் பலநாளாகத் தோன்றுமென்றபடி. எழுநாளென்றதைப் பலநாளென்று பொருள் கூறியது "ஒருவர் கூறையை (ஆடையை) எழுவருடுத்து என்பதற்குப் பலருடுத்து" என்று கூறியதுபோல என்று கண்டுகொள்க. இதுவும் அது.

௩0. பெறிெனென்னும் பெற்றக்கா லென்னும் உறினென்னும்
உள்ள முடைந்துக்கக் கால்.
(1270)

(இ-ம்) நம்முடைய காதலியாகிய தலைவி நமது பிரிவினைச் சகியாமல் மன்மானது கெட்டு இறந்துபடுதலுற்ற விடத்து நம்மையடைய(சேர)க்கடவளானு லென்னபயன்? அதுவல்லாமல் நம்மைபடைந்தால் என்னபயன்? அது வல்லாமல் மெய்பொருந்தக் கட்டித்தழுவினும்ற்ருன் என்னபயன்? இம் மூன்றினும் ஒருபயனுமில்லை யென்பதாம். பயன்-பிரயோசனம். எப்படியானுலுமாகுக. இனி, விரைந்து தலைவியினிடத்துச் செல்லவேண்டுமென்று தலைவன் எண்ணினுனென்பது கருத்து. இதுவும் அது.

# 128-ஆம் அதி.—குறிப்பறிவுறுத்தல்.

அஃதாவது, தலைவன் தலைவி தோழியாகிய இம்மூவரும் பிறை யொருவர்க்கு வெளிப்படுத்தல். குறிப்பு—எண்ணம்.

ஒருவர் குறிப்

க. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க ணுரைக்க லுறுவதொன் றுண்டு.
(1271)



(இ-ம்) காதலியே! நீ யெனக்குச் சொல்லாமல் மறைத்து வைத்தா யானும் அதற்குடன்படாமல் உன்னுடைய எண்ணத்தைக் கடந்து உனது மையுண்ட கண்களே யெனக்குச் சொல்லுதலுற்றதாகிய காரியம் ஒன்று உண்டு, ஆதலால் இனி நீயேஅதனைத்தெளிவாகச் சொல்லுவாயாக என்பதாம். இதனால், கண்கள் கூறுவதெல்லாம் குறிப்பாற் கூறுமேயல்லாமல் தெளிவாக விளங்கக் கூறமாட்டா என்பதாயிற்று. இது, பிரிந்து வந்து கூடிய தலைவன் ஆசை மிகுதியால் புதிது புதிதாய கலவியின்பம் பலநாளும் பாராட்டுதலால் அவனறைத் தலைவிகண்டு ஏதோ ஒருகாரியம் பின் உண்டாக

இருக்கின்றதென்று பயந்த இடத்து அப்பயத்தை அவள் குறிப்பாலறிந்து தலைவன் அவளுக்குச் சொல்லியது. காரியம்—தலைவன் திரும்பவும் பிரிதல்.

உ. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
பெண்ணிறைந்த நீர்மை பெரிது.
(1272)

(இ-ம்) என்கண்கள் நிறைந்த அழகையும் மூங்கில்போன்ற அழகினை யுடைய தோளையுமுடையாளாகிய நினதுதோழிக்குப் பெண் பாலாரிடத்து உண்டாகும் அறியாமை எவ்வளவோ அவ்வளவுக்குமிஞ்சிய அறியாமை யுடையது என்பதாம். அஃதாவது, பிரிந்துசெல்ல வேண்டுமென்ற எண்ணம் தலைவனுக்கில்லாதிருக்கவும் இருக்கிறதாக எண்ணி அவள் பயமடைந்தது என்க. பயமடைந்ததை இதின் முந்திய திருக்குறளிற் காண்க. தலைவனுக்குத் தோழியானவள் தலைவியைத் தோழியென்று கொள்ளலாமோ என்றால் கொள்ளலாம். எப்படியென்றால், தோழமை இருவர்க்கும் பொதுவாதலாலென்க. தோழமை - நட்பு. இக்கருத்துப்பற்றியே தலைவியாகிய கைகேசியைத் தோழியாகிய கூனி "தோழி வல்லளென்றுணை வல்லள்" என் றடிதொழுதாள் என்று கூறியதும் என்க. (கம்பராமாயணம் அயோத்தியாகாண்டம்

மந்தரை சூழ்ச்சிப்படலம் பாட்டு 80.) இது, தலைவி வெட்கத்தால் தன் கருத்தைச் சொல்லாத இடத்துத் தலைவன் அவள் கருத்தைத் தோழிக்குச் சொல்லியது.

௩. மணியுட் டிகழ்தரு நூல்போல் மடந்தை

யணியுட் டிகழ்வதொன் றுண்டு.

(1273)

(இ-ம்) பளிங்குமணியினுள்ளே கோக்கப்பட்டுக் கிடந்து வெளியே விளங்கித் தோன்றும் நூல்போல இப்பெண்ணினது புணர்ச்சியினாலாகிய அழகினுள்ளே கிடந்து வெளியே விளங்கித் தோன்றுவதோர் குறிப்புள்ளது; அது எனக்குத் தோன்றவில்லை. தோழியே! நீ அவளைக்கேட்டுத் தெரிந்து எனக்குச் சொல்லவேண்டும் என்பதாம். குறிப்பாவது, இப்பொழுது கூடிய

கஉ௬-ஆம் அதி.—குறிப்பறிவுறுத்தல்.

௯௦௩

தலைவன் இன்னும் பிரிந்து வேறிடத்துக்குச் செல்லுவானோ என்ற எண்ணம். இதுவும் அது.

௪. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை

நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

(1274)

(இ-ம்) மலரும் பருவத்து அரும்பினது மொக்குளினிடத்து (புடைப்பி னிடத்து) உள்ளதாய் வெளிப்படாத மணம்போல நின்னுடைய பேதையாகிய என் தலைவி என்னோடு நகைக்க (சிரிக்க) நினைக்கும் சிரிப்பினது மொக் குளினிடத்து (முதிர்ச்சியினிடத்து) உள்ளதாய் வெளியே தோன்றாததோர் குறிப்பு இருக்கிறது. அது எனக்குத் தெரியவில்லை. தோழியே நீ யவளைக் கேட்டுத் தெரிந்து எனக்குச் சொல்வாயாக என்பதாம். குறிப்பாவது, மேலே வசனத்திற் காண்க. இதுவும் அது.

ரு. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

(1275)

(இ-ம்) நெருங்கிய வளையல்களணிந்த கையையுடைய தலைவி என் னிடத்திலில்லாததொன்றை யிருந்ததாகத் தன் மனத்திலெண்ணி அக் காரணத்தால் எனக்குத் தெரியாமல் மறைத்து வைத்துக்கொண்டு சென்ற கள்ளம் (குறிப்பு) என்னிடத்து மிகுந்த வருத்தத்தை யுண்டுபண்ணியது. அவ்வருத்தமாகிய நோயைத் தீர்க்கும் மருந்தாவதொன்று தோழியே உன் னிடத்திலுள்ளது என்பதாம். இல்லாததொன்று—தலைவியைத் தலைவன் பிரிய நினையாதிருத்தல். குறிப்பு—தலைவன் பிரிந்தால்

தானுமவன்கூடச் செல்லத் தலைவி நினைத்தல்.
வருத்தம்—தலைவன் தன்னிடத்திலில்லாத குற்றத்தை யிருக்கிறதாகத் தலைவி நினைத்தாளே யென்னுந் துன்பம்.
மருள் தாவது—தோழியானவள் தலைவனீங்கமாட்டானென்று தலைவியைத் தேற்றி மகிழ்வித்தல். இதுவும் அது.

ச. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.
(1276)

(இ-ம்) காதலர் வந்து தாம் நெடுநாட் பிரிந்திருந்ததனால் உண்டாகிய நம் துன்பத்தினை நீங்கும்படி உபசரித்து, நாம் சந்தோஷிக்கும் வண்ணம் கூடிய கலவியானது நம்மைப் பிரியாமலிருந்தபடியே அத்துன்பத்தினை அரிது (பெரிது) மிகச்செய்து, அவரன்பில்லாமையை நாம் நினைக்கப்படுந் தன்மையையுடையது என்பதாம். இருந்தபடியே துன்பத்தினை மிகச் செய்த

லாவது, இப்படி இருப்பவர் இன்னும் பிரிந்து விடுவாரோ என்று நினைத்த லால் வரும் வருத்தம். அன்பி ல்லாமையாவது—விட்டுப் பிரிதல். காதலர் மு ன் போலக் காமமநுபவியாமல் அளவுக்கு மிஞ்சி யநுபவித்தலால் அதுபற்றித் தலைவி பிரிந்து போவாரோ என்று நினைத்தற்கிடமாயிற்று என்று தெளிவாகக் கண்டுகொள்க. இது, தலைவனது எண்ணத்தை யறிந்த தலைவி அவ்வெண் ணத்தைச் தெளிவிக்கச் சென்ற தோழிக்குச் சொல்லியது.

எ. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
முன்ன முணர்ந்த வளை.

(1277)

(இ-ம்) குளிர்ந்த நீர்த்துறைகளையுடைய மருத நிலத்தலைவன் எம்மை மெய்யாற் கூடியிருந்தே மனத்தாற் பிரிந்ததை நாமறியுமுன்னமே நம்மைப் பார்க்கினும் அதிகமாக அறிந்தன, கைகளிலணிந்த வளையல்கள் என்பதாம். வளையல் கள் உணர்ந்தன என் பதற்குக் கைகள் மெலிந்தன வென்பது பொருள் . எப்படியென்றால், தலைவனைப்பிரிந்த மாதர்க்குச் சரீரமெலிதல் இயற்கையாதலால் சரீர சம்பந்தமாகிய கைகள் மெலிந்தவுடன் இறுகியிருந்த வளையல்கள் கழன்றன. அதுவே மெலிவு என்று கண்டுகொள்க. இதுவும் அது.

அ. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமும்
எழுநாளே மேனி பசந்து.

(1278)

(இ-ம்) நேற்றைத்தினமே எம்முடைய காதலர் பிரிந்துபோயினார். அதனையவர் செய்கையால் முன்னமேயறிந்து நம்மேனி பசலையடைந்த நாள் களை எண்ணினால் எழு நாளென்று சொல்லும்படி நாம் இருக்கின்றோ மென்பதாம். எப்படியென்றால், நேற்றைத்தினம் அவர் பேரன்புகாட்டி மிக்க காமம் அநுபவித்தலால் பிரிவு துணியப்பட்டது. அப்பிரிவுவருவது சந்தேகப் படக்கழிந்த நாள்கள் இதன் முன்னுள்ள எழு நாள்களென்பது கண்டு கொள்க. இதனால், செய்யவேண்டி ய அளவுக்கு மிஞ்சியதெல்லாம் ஏதாவ தொரு சந்தேகத்துக்கு இடமுண்டாமென்பது கருத்து. இதுவும் அது.

௯. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
அஃதாண் டவள்செய் தது .

(1279)

(இ-ம்) தலைவனே! நீ பிரியமாட்டாயென்று தலைவியைத் தேற்றிய இடத்து அவள் என் சொல்லால் தெளிவடையாமல் தலைவன் பிரிய நாணிவ் விடத்திருந்தால் இவைகள் கழலுமென்று தன்னுடைய வளையல்களைப்

பார்த்து அதன்மேல் வளையல் கழலுகற்குக் காரணமாக இவை மெலியுமென்று

## கஉ௲ஆம் அதி.—புணர்ச்சி விதும்பல்.

ருகூ௫

அவ்வளையல்களணிந்த தோள்களையும் பார்த்து, இவ்விரண்டும் உண்டாகாமல் அத்தலைவனோடு கூட நடந்து நீங்கள் காத்தல் வேண்டுமென்று தன்னிரண்டு கால்களையும் பார்த்து அவ்விடத்து அவள் செய்த குறிப்பானது உன்னுடன் அவள் வருதலாயிருந்தது என்பதாம். இது, தலைவி குறிப்பினை யறிந்த தோழி அக்குறிப்பினைத் தலைவனுக்குச் சொல்லியது.

கO. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
காமநோய் சொல்லி யிரவு,
(1260)

(இ-ம்) மாதர்கள் தாம் கொண்ட காம நோயினைப் பிறருக்குத் தெரிவித்தால் இழிவென்று கருதியிருப்பதோடு தம்மோடு அபேதமில்லாதிருக்கும் தோழியர்க்கும் வாயினாற் சொல்லாமல் கண்ணின் குறிப்பாற் சொல்லுதலல்லாமலும் அக்காமநோயைத் தீர்க்கவேண்டுமென்று

அத்தோழியரை யாசித்து வேண்டிக்கொள்ளாமலும் தம் காதலருடன் தாம் கூடச் செல்லுதற்காகத் தம்முடைய கால்களை யாசித்து வேண்டிக்கொள்ளுதலானது பெண்களுக்கு வரையறுத்துச் சொல்லப்பட்ட எல்லாக்குணங்களினும் அதிக விசேடமாகிய குணமென்று கற்றறிந்தார் சொல்லுவர் என்பதாம். எனவே, தலைவன் பிரியாதிருக்குங் குறிப்பினைச் சொல்லுவான் அவள் பெண்மைக் குணத்தைப் பிறர் மேலிட்டு வியந்து கூறியவாறு கண்டுகொள்க. பெண்மைக் குணமிருந்த மாதர் தாம் கொண்ட காமநோயைத் தாங்கள் வாயாற் சொல்ல மாட்டாரென்பதற்கு உதாரணமாக "தாமுறு காமத் தன்மை தாங்களே யுரைப்ப தென்ப, தாமென லாவ தன்றோ லருங்குல மகளிர்க்கு" என்று கவிச் சக்ரவர்த்தியாகிய கம்பர் கூறிய திருவாக்காலுங் காண்க. (இராமாயணம், ஆரணியகாண்டம் சூர்ப்பநகைப் படலம்-45) இது, தலைவன் தலைவியை இனிப் பிரியாதிருப்பதைத் தோழிக்குக் குறிப்பாற் சொல்லியது.

---

## 129-ஆம் அதி.—புணர்ச்சி விதும்பல்.

அஃதாவது, தலைவனுந் தலைவியும் புணர்ச்சியினிடத்து விரைதல்; அவ சரப்படுதல்.

க. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு
(1281)

(இ-ம்) நினைத்த மாத்திரத்திலே களிப்படைதலும், கண்ட மாத்திரத திலே மகிழ்ச்சியடைதலும் கள்ளுண்டவருக்கு இல்லை. காம மநுபவிப் [illegible]



பவருக்கு உண்டு என்பதாம். களிப்பாவது—அறிவழியாத நிலை. மகிழ்ச்சி யாவது—அறிவழிந்தநிலை; அஃதாவது, மனம் தன்வசப்படாமற் பாவசப் படுதல். இது, பிரிதற் குறிப்புடையவனாகிய தலைவனோடு ஊடல் செய்யாததற்குக் காரணமென்ன வென்று கேட்டுச் சிரித்த தோழிக்குத் தலைவி சொல்லியது.

உ. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
காமம் நிறைய வரின்.
(1282)

(இ-ம்) பெண்களுக்குக் காமம் பனையினது அளவினும் அதிகப்படு மானால் அப்பெண்கள் தினையளவினுஞ் சிறிதாவது தங் காதலரோடு ஊடல் செய்யாதிருக்க வேண்டும். செய்தால் துன்பம்

அதிகப்படுமென்பதாம். இதனால், இவ்வாறு பிறருக்கு அறிவிப்பாள் போலத் தன்னுடைய புணர்ச்சி அவசரத்தைத் தலைவி காட்டினாளென்று கண்டுகொள்க. இதுவும் அது.

ந, பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
காணா தமையல கண். (1283)

(இ-ம்) நம்மை அவமதித்து விரும்பாமல் நம் தலைவன் அவன் மனம் போனபடி யென்ன செய்தாலும் அவனைக்காணமல் என் கண்கள் இருக்கின் றன வில்லை என்பதாம். இதனால், இத்தன்மையுடைய யான் அவனோடு ஊடல் செய்வது எவ்விதமென்று தலைவி கூறினாளென்பது கருத்து. இதுவும் அது.

ச, ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
கூடற்கட் சென்றதென் னெஞ்சு. (1284)

(இ-ம்) தோழியே! காதலரைக் காணுதற்கு முன் அவர் செய்த குற் றத்தையெண்ணி அவரோடு ஊடல் செய்யவேண்டுமென்று நினைத்துச் சென்றேன். அந்நினைப்பை மறந்து அவரைக் கண்டபின்னர் என்னெஞ்சு கூடுதலினிடத்தே சென்றது என்பதாம்.

இதனால், எவ்வளவு நுண்ணறி வுடைய மாதரும் காமமநுபவிக்கப்படுங் காதலரைக் கண்டால் தம் நிலை கலங் குவரென்பது கருத்து. இதுவும் அது.

ரு. எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட இடத்து.
(1285)

(இ-ம்) மையெழுதுங் கோலினியல்பை (கருமையை) எழுதுதற்கு முன்னெல்லாங் கண்டிருந்தும் எழுதும்போது காணமாட்டாத கண்களைப்

## கஉகூ-ஆம் அதி.—புணர்ச்சி விதும்பல்.

நூல்களி

போல் தலைவனைக் காணாத விடத்து அவன் குற்றங்களையெல்லாங் கண்டிருந் தும் கண்ட இடத்து ஒரு சிறிதுங் காணுதல் அறியேனென்பதாம் இதற்குக் காரணம் ஆசை மிகுதியென்று கண்டுகொள்க. இதுவும் அது.

சா. காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
காணேன் றவறல் லவை.
(1286)

(இ-ம்) பிரிந்து வந்த தலைவனை யான் காணும்போது அவன் முன் செய்த குற்றங்களில் ஒன்றேனுமெனக்குத் தோன்றவில்லை. அவனைக் காணாத விடத்து அவன் செய்த குற்றங்களல்லாமல் வேறொன்றுந் தோன்றவில்லை என்பதாம். எனவே,தோழியே! அவன் வருமுன் யான் அவன்மேற் சொல்லிய குற்றங்கள் அவன் வந்தபின் தோன்றாமையால் இப்பொழுது ஊடல் செய்திலேன் என்றாளாயிற்று. இதுவும் அது.

அவனோடு

எ. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
பொய்த்த லறிந்தென் புலந்து.

(1287)

(இ-ம்) ஓடுகின்ற பெரு வெள்ளத்தில் வீழ்ந்தால் நம்மை யிழுத்துக் கொண்டு போமென்று அறிந்திருந்தும் அவ்வெள்ளத்திற் பாய்ந்து வீழ்வார் செய்கையைப்போல இந்தச் சமையம் நாம் தலைவனோடு ஊடல் செய்தால் அந்த ஊடல் ஆசை மிகுதியால் நிலைக்கமாட்டாதென்றறிந்திருந்தும் அவ் வூடலைச் செய்ததினால் என்ன பிரயோசனமுண்டாகும். ஆதலால் தோழியே! நான் ஊடலைச் செய்யவில்லை என்பதாம். இதுவும் அது.

அ. இளித்தக்க இன்னா செயினுங் களித்தார்க்குக்
கள்ளற்றே கள்வநின் மார்பு.

(1288)

(இ-ம்) தன்னையுண்டு களிப்படைந்தார்க்கு (இருமாப்படைந்தவர்க்கு) தான் துன்பங்கள் பலவற்றைச் செய்தாலும் அவரால் வெறுக்கப்படாமல்

மேன்மேலும்
தலைவனே! நீ

விரும்பப்படுங் கள்ளுக்குச் சமானமாகும் வஞ்சகத்தையுடைய எங்களைப் பலவாறு துன்பப்படுத்தினாலும் யாங்கள் வெறுக்கப் படாமல் விரும்பப்படும் உன்னுடைய மார்பானது

என்பதாம். துன்பங்கள்
பலவாவன—நாணம் கெடுதல், அறிவழிதல், பிறர் மதிப்பழிதல் முதலாயின வைகள். இவற்றைக் காமமுடையாரிடத்துக் காணலாம். இது, தலைவி புணர்ச்சிக்கு அவசரப்படுதலை யறிந்த தோழி தலைவனுக்குச் சொல்லியது.

கூ. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
செவ்வி தலைப்படு வார்.
(1289) ருகூஅ திருக்குறள் மூலமும்,
தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) தொட்ட அளவிலே மணத்தின் பருவம் அழிவதாகிய மலரைப் போலக் காம இன்பமானது மெல்லிது (மிருது) ஆயிருக்கும். அத்தன்மை யாகிய காம இன்பத்தின் குறிப்பறிந்து அநுபவிப்பார் இவ்வுலகத்திற் சிலர். அக்குறிப்பறிந்தநுபவிப்பாரை யான் பெற்றிலேன்

என்பதாம். எப்படியென் றூல்,

குறிப்பறிந்தனுபவித்தலாவது-காமக்குறிப்பும், ஆசையும், அநுபவித்த லின் வகையும் , இன்பமும் ஒருகாலத்திலே இருவர்க்கும் ஒத்து அநுபவித்தற் கேற்ற இடமும் காலமும் உபகரணங்களும் (உதவிப்பொருள்களும்) பெற்றுக் கூடி அநுபவித்தல். என வே, இப்படியல்லாமல் நினைத்தபடியே அநுபவிக்கும் இன்பமானது மனித இன்பமாகாமல் பறவை மிருகங்களின் இன்பமே ஆமென்றவாறுயிற்று. இது, எவ்வளவு சமாதானஞ் சொல்லியுந் திருந்தாத ஆடலினிடத்துத் தலைவன் கூறியது.

கo. கண்ணிற் றுனித்தே கலங்கினாள் புல்லுதல்
என்னினுந் தான்விதுப் புற்று. (1290)

(இ-ம்) காதலியாகிய தலைவி இதன்முன் ஞெருநாளில் புணர்ச்சி அவசரத்தால் நெருங்கிச்சென்ற என்னோடு கண் மாத்திரத்தால் ஊடல் செய்து புணர்ச்சிக்கு என்னைப்பார்க்கினும் அவசரப்பட்டுக் கண் மாத்திரத் தால்ஊடல் செய்ததையும் அப் பொழுது மறந்துவிட்டுக் கூடினாள். இற்றை நாளில் யான் புணர்ச்சிக்கு அவ சரப்பட் டிருக்கின்றேனாகவும் அப்புணர்ச்சிக்கு அவசாமில்லாமல் ஊடல்செய்து நிற்கின்றாளாதலால் இவள் அவளில்லை, வேறொருத்தியே என்பதாம். அவளானால் இவ்விதம் ஊடல் செய்யமாட்டா ளென்பது கருத்து. கண்மாத்திரம் ஊடல்—வாயொன்றும்

பேசாமல் கண் சிவந்து ஊடற்குறிப்பைக் காட்டல். இதுவும் அது.

---

# 130-ஆம். அதி.—நெஞ்சொடு புலத்தல்.

அஃதாவது, காரணமுண்டாய இடத்தும் ஊடல் செய்ய நினையாமல் புணர்ச்சிக்கு அவசரப்படுகின்ற மனத்துடனே தலைவி யூடல் செய்தலும் தலைவனூடல் செய்தலுமாம்.

க. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு
மெவனெஞ்சே
நீயெமக் காகா தது.
(1291)

(இ-ம்) தலைவருடைய மனம் நம்மை நினையாமல் அவர் வசப்பட்டு நிற்கின்றதைக் கண்டிருந்தும் என் மனமே! நீ யென்வசப்பட்டு நில்லாமல்



 அவரை நினைத்து நிற்பதற்குக் காரணம் என்ன? அதைச்சொல்லுவாயாக என்பதாம். எனவே, தாமாக ஒன்று செய்யத்தெரியாதவர் செய்வாரைக்

கண்டாயினும் செய்வர். மனமே! நீ அதுவும் செய்கின்றிலையென்பது கருத்து. வசப்பட்டு நில்லாமையாவது, தலைவரோடு ஊடல்செய்தற்கு ஒத்துவாராமற் போதல். இது, தலைவனிடத்துக் குற்றமுண்டாகிய இடத்தும் அவனோடு ஊடல் செய்யாத மனத்துக்குத் தலைவி சொல்லியது.

உ. உரூஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
செறாரெனச் சேறியென் னெஞ்சு.

(1292)

(இ-ம்) என் மனமே! இனிமேலும் நம்மிடத்

தன்புடையவராகமாட்

டாத தலைவரது செய்கையை யுள்ளபடி யறிந்த இடத்தும், நாம் போனால் கோபிக்கமாட்டாரென்று நினைத்து நீயவரிடத்துச் செல்கின்றாய். இதற்கு மேலும் ஒரு அறியாமைக்குணம் உனக்கு உண்டோ என்பதாம். பழமையாகிய தாக்ஷிணியத்தால் கோபிக்கமாட்டாரென்பது ஆதாரமாகப்பற்றிச் சென்றால் நீகருதிய கருமம் முடியாதென்பது கருத்து. இதுவும் அது.

௩. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
பெட்டாங் கவர்பின் செலல்.

(1293)

(இ-ம்) மனமே! நீ என்னிடத்து நிற்கமாட்டாமல் பண்டே பழகிய பழக்கத்தை யுத்தேசித்து நீ விரும்பியபடியே காதலரிடத்துச் செல்லுங் காரணம் யாதென்றால், முன்னெல்லாம் வளம்பெற வாழ்ந்து பின் அவ்வளங் கெட்டுப்போனவர்க்குச் சிநேகர் உலகத்தில் இல்லையென்னுந் தன்மையோ? நின்னுடைய சுபாவகுணமோ? இவவிரண்டில் இன்னதென்று சொல்லுவாயாக என்பதாம். தலைவிக்குக்கெடுதலாவது, மானங்கெடப் பிறர் பழிச்சொற் சொல்ல நிற்றல். வளம்—செல்வம். இதுவும் அது.

ச. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
துனிசெய்து துவ்வாய்காண் மற்று. (1294)

(இ-ம்) மனமே! நீ காதலரைக்கண்டால் இன்பம் அநுபவிக்க எண்ணு வாயல்லாமல் அவர்செய்த குற்றத்தைச்சொல்லி முன்னர் ஊடலைச்செய்து, அவ்வூடலை அளவறிந்து நிறுத்திக்கொண்டு, பின்னர் இன்பமநுபவிக்க எண்ணமாட்டாய். இனிமேல் அத்தன்மையுடைய நின்னோடு ஊடல் கூட லென்னும் விஷயங்களை ஆலோசிப்பவர் யாவர்? என்பதாம். இதனால் இனிச் செய்யவேண்டிய காரியங்களை நின்னோடு ஆலோசிக்க மாட்டேனென்ப



தாயிற்று. அளவறிதலாவது— ஊடல் குறைதலும், மிகுதலும் இல்லாமையை யுணர்தல். ஏனென்றால், ஊடல் குறைந்தாலும் மிகுந்தாலும் கூடலானது இன்பமாகாது ஆதலாலென்க. இதுவும் அது.

௫. பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சும்
அறாஅ இடும்பைத்தென் னெஞ்சு.

(1295)

(இ-ம்) காதலரைச் சேரப்பெறாத நாளில் இன்பம் பெறாததற்காக என் மனம் வருந்துகின்றது. அவரை யடையப்பெற்று இன்பத்தை யநுபவிக்கு நாளில் இவ்வின்பத்தைவிட்டு இன்னமும் பிரிந்துபோவாரென்றெண்ணி அப்பிரிவுக்காகத் துன்பமடைகின்றது. ஆதலால் (என் மனம்) எந்நாளும் துன்பத்தையுடையதாயிருக்கின்றது என்பதாம். இதனால், பெற்றதுகொண்டு திருப்தியடையாமல் பேராசைப்படுபவர் தீராத்துன்பம் அடைவரென்பது கண்டுகொள்க. இது, தூதாகவந்த தோழி கேட்பத் தலைவி சொல்லியது.

௬. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
தினிய இருந்ததென் னெஞ்சு.

(1296)

(இ-ம்) என்மனம் என்னிடத்திலிருந்தது எதற்காக என்றால், காதலரைப் பிரிந்து தனியே யிருந்து அவர் செய்த கொடுமைகளை நினைத்தால் நினைத்த அவ்வளவறிந்து என்னைக் கொல்லுதல் போலத் துன்பஞ் செய்வதற்கே, வேறொன்றிற்கும் இல்லை என்பதாம். எனவே,அத்துன்பம் பொறுக்க முடியாமையால் இன்று நான் அவரோடு ஊடல் செய்திலேனென்று அவரோடு சேருங்

குறிப்பை வெளிப்படுத்தினளென்பது காண்க. அளவறிதலாவது—சிறிது நேரமாவது மறவாமல் இடைவிடாது நினைத்தலை அறிதல். இதுவும் அது.

எ. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
மாணா மடநெஞ்சிற் பட்டு.
(1297)

(இ-ம்) தன்னை மறந்த காதலரைத் தான் மறக்கமாட்டாத என்னுடைய மாட்சிமையில்லாத மடநெஞ்சோடு கூடி அறிவு கெட்டு உயிரினுஞ் சிறந்த வெட்கத்தையு மறந்துவிட்டேன் என்பதாம். எனவே, தலைவி தன் காதலரைப்போலத் தானும் புணர்ச்சிக்கு அவசரப் பட்டாளென்பது குறிப்பு. மாட்சிமையில்லாத மடநெஞ்சு—மிகவு மறியாமையுடைய மனம். மிகவு மறியாமையாவது—தலைவனைக் கண்டவிடத்து நினைக்கவேண்டுங் குற்றத்தை அவனைக் காணாத இடத்து நினைத்துக் கண்ட இடத்து மறத்தல். இதுவும் அது.

கருO-ஆம் அதி.—நெஞ்சோடு புலத்தல்.
சOக்

அ . எள்ளி னிழிவாமென் றெண்ணி

யவர்திறம்
உள்ளும் உயிர்க்காதல் நெஞ்சு.
(1298)

(இ-ம்) காதலர் பிரிந்ததனாலுண்டாகிய துன்பத்தா லிறந்துபோகாமல் உயிர்க்கு ஆசை வைத்திருக்கும் என்னெஞ்சானது நம்மையிகழ்ந்து பிரிந்தா ரென்றெண்ணி நாமும் அக்காதலரை யிகழுவோமானால் பின்னர் நமக்கு இழிவுவருமென்று நினைத்து, அவரனுப்பிய தூதிற்கும், அவர் வருதற்கும் அவரோடு கூடுதற்குமே உடன்பட நினைக்கின்றது என்பதாம். இழிவு வருத லாவது—பிரிவாற்றாமையால் நாணும் நிறையுமிழத்தல். நிறை—பி[illegible]யாமல் தன் காமத்தையடக்கல். இதுவும் அது.

கூ. துன்பத்திற் கியாரே துணையாவார் தாமுடைய
நெஞ்சம் துணையல் வழி.
(1299)

(இ-ம்) ஒருவர்க்குத் துன்பம் வந்த இடத்து, அத்துன்பத்தை நீக்குதற்குத்தாம் தமக்குரியதாகப்பெற்ற தம்முடைய நெஞ்சம் துணையாகாத இடத்து வேறு துணையாவார் எவர்? ஒருவருமில்லை என்பதாம். துன்ப மாவது—உணர்ப்பினிடத்துத் தலைவி யுடன்படாதிருப்பதற்கு ஊடல் வாரா திருத்தல். நெஞ்சம் துணையாகாதிருத்தலாவது—தலைவியை அன்பில்லாதவ ளென்று கைவிடாமல் அவளோடு புணர்ச்சிக்கு

அவசரப்படுதல். உணர்ப்பு— சமாதானம். நெஞ்சம்—மனம். இது, எவ்வளவு சமாதானம் சொல்லியுந் திருந்தாத தலைவி உணர்ப்பு வயின்வாரா ஊடலினிடத்துத் தலைவன் சொல்லியது. உணர்ப்பு வயின் வாரா ஊடலாவது—சமாதானத்தினிடத்து உடன்படாத ஊடல்.

கO. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய

நெஞ்சந் தமரல் வழி.

(1300)

(இ-ம்) தாம் தமக்கு உரித்தாகவுடைய நெஞ்சம் ஒருவர்க்குத் துன்பம் வந்த காலத்துத் தம் சுற்றத்தார்போலத் துணையாகாத இடத்து அயலாரான வர் சுற்றத்தார்போலத் துணையாகமாட்டாரென்று சொல்லுதல் எளியதென்ப தாம். இதனால், வேறொருத்தியைக் காதலியென்று நினைத்து என்னை வருத்து கின்ற என்மனமே என்னை வருத்தஞ்செய்யுமானால் அவ்வேறொருத்தி புணர்ச்சிக்கு இணங்காமல் என்னோடு ஊடல்செய்வது எளிதென்று தலைவன் கூறினானென்பது காண்க. என் காதலியானால் என்னுடைய புணர்ச்சி அவசரங் கண்டால் இவ்விதம் ஊடல் செய்யாளென்பது கருத்து. ஊடலானது கூடலுக்குவேண்டிய அளவுக்கு அதிகப்பட்டதால் தன் காதலியை வேறொருத்தியென்றான். இதுவும் அது.

சoஉ திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

## 131-ஆம் அதி.—புலவி.

அஃதாவது, தலைவன் தலைவியாகிய இருவர் மனமும் புணர்ச்சிக்கு அவசரப்படாமல் ஊடல்செய்ய எண்ணிய இடத்து ஒருவரோடொருவர் ஊடுதல்.

க. புல்லா திராஅப் புலத்தை யவருறும்
அல்லல்நோய் காண்கஞ் சிறிது.
(1301)

(இ-ம்) தலைவியே! நீ இவ்வாறு ஊடல் செய்தால் அக்காதலரெய்தும் காமநோயின் துன்பத்தை நாம் சிறிது காண்போம். நீ அவரை விரைந்து சென்று தழுவாமல் இவ்வருத்தத்தையே பாவனையாகக் கொண்டிருந்து ஊடல் செய்வாயாக என்பதாம். பாவனையாகக் கொள்ளல்—இல்லாததை யிருப்பதாகக் கொள்ளுதல். தம் செயல்வழி நில்லாதவரை அவர் செயல்வழியே தாம் நின்று தம் செயல்வழிப் பின்பு நிற்கச் செய்வதாகிய உபாயத்தால், ஊடலை நீக்கமாட்டாத தலைவியோடு தோழி இணங்கி

நகையாடி (சிரித்து)த் தூதுவந்த காரிய முடியச் செய்தாளென்பது கருத்து. இக்கருத்துப்பற்றியே "குணனழி நடவார் குணவழி நடந்து குணத்தினைத் திருப்புமா போல" என்றார் பிறரும். தூது வந்த காரியமாவது—தலைவியைத் தலைவனோடு கூடச் செய்தல். இது, தூதாகச் சென்ற தோழி தலைவி யூடல் நீங்கிக் கூடுதற்குச் சம்மதிக்கும் பொருட்டு அவளோடு நகையாடிச் சொல்லியது.

உ. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றால் நீள விடல்.

(1302)

(இ-ம்) ஊடலானது, கலவியின்பஞ் செய்தற்குவேண்டும் அளவினை யுடையது. அது எதுபோலுமென்றால், உப்பானது உண்ணுங் கறிகளை இனிய சுவையாக்குதற்கு வேண்டுமளவுமாதல் போலும். அப்படியல்லாமல் வேண்டு மளவுக்குச் சிறிது அதிகமாக ஊடல் செய்தால், வேண்டுமளவுக்குச் சிறிது அதிகமாக உப்பைச் சேர்த்தால் கறிகள் சுவையாகாதவாறுபோலக் கலவி யானது இன்பமாகாதென்பதாம். இந்தமட்டிலே யூடலை நிறுத்திவிட்டுத் தலைவனைக் கூடவேண்டுமென்று தலைவிக்குத் தோழி சொல்லினளென்பது கருத்து. இது, ஊடலை விட்டுக் கூடலுக்குச் சம்மதிக்கும்படி தலைவிக்குத் தோழி சொல்லியது.

௩. அலந்தாரை யல்லல்நோய் செய்தற்றாற் றம்மைப்
புலந்தாரைப் புல்லா விடல். (1303)

(இ-ம்) காதலரையடையாமல் ஊடல் செய்து நிற்கின்ற மகளிரை அவ்வூடலை நீக்கிக் *கலவாமல் அம்மகளிரைவிட்டு அக்காதலர் பரத்தைய



ரிடத்துச் செல்லுதலானது முன்னமே துன்பமுற்று நொந்தவரைப் பின்னும் துன்பத்தைச் செய்து நோகச் செய்தாற் போலுமென்பதாம். தனக்குச் செய்த துன்பத்தைப் பிறர்மேல் வைத்துத் தலைவி தலைவனோடு சொல்வினு ளென்பது குறிப்பு. இது, பரத்தையரிடத்திலிருந்து வந்த தலைவனோடு தலைவி புலந்து சொல்லியது. புலந்து—ஊடி.

௪. ஊடி யவரை யுணராமை வாடிய
வள்ளி முதலரிந் தற்று. (1304)

(இ-ம்) உமது பிரிவைச் சகியாமல் வருந்தியிருந்து உம்மோடு ஊடல் செய்திருக்கும் பரத்தையரை அவ்வூடலைத் திருத்திக் கூடாது நீங்குதலானது முன்னமே நீரில்லாமல்

வாடிய பூங்கொடியைத் தூரிலே அறுத்தாற்போலு மென்பதாம். இதனால், நீவிர் எம்மைப்பிரிந்து பரத்தையரிடத்துச் சேர்ந்த போது எம் புதல்வரைக்கண்டு உமது பிரிவைச் சகித்திருக்கின்ற யாம் உம்மோடு ஊடல் செய்தற்கிடமில்லை யாதலால் எம்மை நீர் சமாதானஞ் செய்யவேண்டாம். உமக்குரியராயிருக்கின்ற பரத்தையரையே ஊடலைத் திருத்திக் கூடல்வேண்டும். அதனால் , அவரிடத்துச் செல்வீராக என்றாள் என்பது குறிப்பு. இதுவும் அது.

ரு. நலத்தகை நல்லவர்க் கேளர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.
(1305)

(இ-ம்) நற்குண நற்செய்கைகளாற் சிறந்த தகுதியுடைய தலைவர்க்கும் அழகாவது, தமது பூவன்ன கண்ணாராகிய தலைவியருடைய மனத்தினிடத்து உண்டாகும் ஊடல் மிகுதியல்லவா என்பதாம்.
அழகாவது—இன்பச்சுவை யை மிகவும் இனிதாக்கல். இதில் தலைவன் தலைவியினிடத்தநுபவித்த இன் பத்திற்கு ஏதுவாகிய ஊடலை வியந்து கூறியவாறு கண்டுகொள்க. பூ-நீலோற் பலமலர். இது, தலைவியை யூடல் நீக்கிக் கூடிய தலைவன் தன்னுள்ளே சொல்லியது.

சு துனியும் புலவியு மில்லாயிற் காமங்
கனியுங் கருக்காயு மற்று.
(1306)

(இ-ம்) துனியென்று சொல்லப்படும் முதிர்ந்த ஊடலும் புலவியென்று சொல்லப்படும் இளைய (சிறிய) ஊடலும் இல்லையானால், காமமானது கொம் பிலே பழுத்து முதிர்ந்து உதிரும் பருவத்தையுடைய கனியைப்போல இனிதாவும், மிகவும் இளம்பருவக் காயைப்போல இனிமை இல்லாததாகவும் இருக்கும் என்பதாம், எனவே, காமமநுபவிப்பார்க்கு அளவுக்குமிஞ்சிய ௬௦௪

திருக்குறள் மூலமும், தெளிபொருள் வசனமும்.

ஊடலிருந்தாலும் வேண்டிய அளவு ஊடலில்லாதிருந்தாலும் காமம் இனிய தாகாதென்றவாறு கண்டுகொள் க. இவ்விரண்டும் அவசியம் வேண்டு மென்பது கருத்து. இவ்விரண்டாவன — முதிர்ந்த ஊடலில்லாமையும் , இளைய (சிறிய) ஊடல் இருத்தலுமாம். கருக்காய்—இளம்புசங்காய். இதுவும் அது.

எ. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
நீடுவ தன்றுகொ லென்று.
(1307)

(இ-ம்) புணர்ச்சிக்குத் தாமதமாகுமோ ஆகாதோவென்று எண்ணுத லால் கூடுதற்கு அவசியம்வேண்டிய, மேற்குறித்த சிறிய ஊடலினிடத்தும்

ஓர் துன்பமுண்டாகுமென்பதாம். ஊடலானது புணர்ச்சியினிடத்து அவ சரப்படுத்தியதாயிற்று. இதுவும் அது.

அ. நோத லெவன்மற்று நொந்தாரென் றஃதறியுங்
காதல ரில்லா வழி.
(1308)

(இ-ம்) இவர் நம்பொருட்டாக நொந்து வருந்தினரென்று நினைத்து அவ்வருத்தத்தை யறியும் அன்புடைய தலைவியர் இல்லாத இடத்து ஒருவர் வருத்தப்படுதலாலென்ன பிரயோசனம் ? என்பதாம். இதனால் இவள் நம் தலைவியானால் நாம் வருந்துகின்றதை யறிவாள். அறியாதிருத்தலால் இவள் அவளல்லள், வேறொருத்தியேயென்று தலைவன் தன் வருத்த மிகுதியை யுரைத்தானென்பது கண்டுகொள்க. இது சமாதானத்துக்கு உடன்படாத ஊடலினிடத்துத் தலைவன் தலைவியோடு ஊடிச்சொல்லியது.

கூ. நீரு நிழல தினிதே புலவியும்
வீழுநர் கண்ணே யினிது.
(1309)

(இ-ம்) உண்பார்க்கு நீரும் நீழலினிடத்தே யுள்ளதானல் இனிமை யுடையதாம். மற்றை வெயிலினிடத்து உள்ளதானல் இனிமை யுடைய தாகாது. அதுபோலக் கலவிக்கு (புணர்ச்சிக்கு) ஊடலும் தம்மை விரும்பும் அன்புடையாரிடத்தானல் இனிமையுடையதாம்.

அவ்வன்பில்லாரிடத்தாஞல் இனிமையாகமாட்டாதென்பதாம். எனவே, நம் வருத்தங்கண்டு தான் வருந் தலும் கூடலினிடத்து ஆசையும் இவளிடத்து இல்லையாதலால் இவளிடத்து ஊடலானது பயனற்றதென்பது கருத்து; நீரினிடத்து இனிமையாவது- தாகந்தணித்தற்கு அதிகக்குளிர்ச்சி. ஊடல் இனிமையாவது— ஊடல் செய் வார் நோதல்கண்டு ஊடல் செய்யப்பட்டார் வருந்துதலும் கலவிக்கு ஆசைப் படுதலுமாம். இதுவும் அது.

கங்க-ஆம் அதி.—புலவி நுணுக்கம்.

சOரு

கO. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
கூடுவே மென்ப தவா.

(1310)

(இ-ம்) என்மனமானது ஊடலினிடத்தே துன்பமுற்றிருக்கவும் அன்பையும் அருளையும் விட்டிருப்பவரோடு அவ்விரண்டையும் உடையா ரென்றும், அவரோடு யாம் கூடுவோமென்றும் நினைத்து முயற்சி செய்தற்குக் காரணம் யாதென்ருல், அவர்மேல் வைத்த ஆசையே அல்லாமல் வேறில்லை யென்பதாம். இதுவும் அது.

1 32-ஆம் அதி.—புலவி நுணுக்கம்.

அஃதாவது, தலைவனுந் தலைவியும் ஒரு படுக்கையிற் கூடியிருந்த இடத்து தலைவனிடத்து ஊடுதற்குக் காரணமில்லையாகவும் நுட்பமாகக் காரணமுள்ள தாக உட்கொண்டு, அதனை யவன்மேலேற்றித் தலைவி யூடுதல்.

க. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. (1311)

(இ-ம்) பரத்தத் தன்மையுடைய தலைவனே! நாணமுதலிய சிறப்புக் குணங்கள் இல்லாமல் பெண்ணியற்கையாகிய பொதுக்குணமாத்திரமேயுடைய பரத்தையரெல்லாரும் முறையில்லாமல் தம் கண்ணாற் பொதுவாகப் பார்த்து, உன்னுடைய மார்பினையநுபவிப்பர். ஆதலால் அவர்கள் அநுபவித்த எச்சி லாகிய அத்தன்மையுடைய உன் மார்பினை நான் தழுவியநுபவிக்கச் சம்மதியேன் என்பதாம். பரத்தத் தன்மை—சாதியும் முறையுங் கருதாமல் எல்லா ஆடவரையுந் தழுவியநுபவிக்கும் பரத்தையர் குணம். இது, உலாப் போய்வந்த தலைவன் படுக்கையிடத்தில் வந்திருந்தபோது தலைவி சொல்லியது.

உ. ஊடி யிருந்தேமாத் தும்மினர் யாம்தம்மை
நீடுவாழ் கென்பாக் கறிந்து.

(1312)

(இ-ம்) நாம் தலைவரோடு ஊடல் செய்து வாய் பேசாதிருந்தேமாக, அவர் தும்மினர். நாம் அவரை நீண்டகாலம் வாழ்வீராக வென்று சொல்லுதலை நினைத்து என்பதாம் . எப்படியென்றால் , ஒருவர் தும்மினல் பக்கத்திலிருக்கும் அன்புடையார் வயது நூறு என்று தும்மினவரை வாழ்த்துதல் காரணமாக நாம் பேசுதல் நேரிடுமென்று பொய்யாகத் தும்மினரென்று நுணுக்கமாகச் சொல்லினளென்றதாம். இதில் நுணுக்கமாவது—நிசமாகத் தும்மியதைப் பொய்யாகத் தும்மியதென்று காரணத்தோடு சொல்லியது. இது, தலைவனில்லாத சமையத்திற் சென்ற தோழிக்குத் தலைவி படுக்கையிடத்து நிகழ்ந்ததைச் சொல்லியது.



ங. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்
காட்டிய சூடினீ ரென்று.

(1313)

(இ-ம்) வளைதலையுடைய பூமாலையைக் கொண்டுவந்து சூடினேனாலும் உன் தோழியாகிய தலைவி, உம்மால் விரும்பப்பட்டவ ளொருத்திக்குக் காண்பிக்கும் பொருட்டு இவ்விதம் சூடினீரென்று என்னைக் கோபிக்கின்றாள். இத்தன்மையுடையாள் ஊடுதற்குக் காரணமும் வேண்டுமோ? என்பதாம். எனவே, இல்லாத காரணத்தைக் கற்பித்துக்கொண்டு வீணாக வூடல் செய்து கூடலுக்கு இசைகின்றாளில்லையென்று தன் வருத்தத்தைத் தலைவன் சொல்லினானென்பது கண்டுகொள்க. இது, தலைவியினது ஊடற் குறிப்பைக் கண்டு நீர் அவளைக் கூடியிருக்கவும் இத்தகைய வருத்தம் உண்டாதற்குக் காரணமென்னவென்று கேட்ட தோழிக்குத் தலைவன் சொல்லியது.

ச. யாரினுங் காதல மென்றேனா வூடினாள்
யாரினும் யாரினு மென்று.
(1314)

(இ-ம்) காமம் அநுபவித்தற்குரியரானார் எல்லாருள்ளும் நாமிருவரும் ஆசையுடையேமென்று சொன்னேனாக, அதற்குத் தோழியே! உன்னுடைய தலைவியானவள் உம்மால் விரும்பப்பட்ட பெண்கள் எவரைப் பார்க்கினும் என்பால் ஆசையுடையேமென்று சொன்னீரென்று ஊடலைச் செய்தாள் என்பதாம். இதுவும்

அது.

ரு. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனக்
கண்ணிறை நீர்கொண் டனள்.
(1315)

(இ-ம்) ஆசைமிகுதியால் உன் தலைவியை யாம் இம்மையாகிய இப் பிறவியினிடத்து நாமிருவரும் பிரியமாட்டோமென்று சொன்னேனாக, அது கேட்டு அவள் மறுமையாகிய பிறவியினிடத்துப் பிரிவேனென்னும் எண்ண முடையேனாக என்னைக் கருதித் தன் கண்கள் முழுதும் நீர் நிறைந்து பெருகி யொழுக அழுதாள் என்பதாம். மறுமையாகிய பிறவி—இனிவரும் அடுத்த ஜென்மம். எனவே, யான் சூதில்லாமல் வெளிப்படையாகச் சொன்னசொல்லை குறிப்புச் சொல்லாகக் கொண்டு ஊடல் செய்தாளேயன்றி என்மேற் குற்ற மில்லையென்று தலைவன் சொன்னானென்பது கண்டுகொள்க. இதுவும் அது,

## ௧௩௨-ஆம் அதி.—புலவி நுணுக்கம்.

சுOள

௬ உள்ளினே னென்றேன்மற் றென்மறந்தீ ரென்றென்னைப்

புல்லாள் புலத்தக் கனள் .

(1316)

(இ-ம்) பிரிந்த காலத்து உன்னை இடைவிடாமல் நினைத்தேனென்னுங் கருத்தால் நான் உன்னை நினைத்தேனென்று சொல்லினேனாக, அதற்கு உன் தலைவியானவள் நான் மறந்திருந்து நினைத்ததாகக்கருதி என் என்னை மறந்தீ ரென்று சொல்லி என்னைத்தழுவுதற்கு வந்த கருத்தைவிட்டு ஊடலைச் செய்வாளாயினள் என்பதாம். இதுவும் அது.

எ. வழுத்தினாள் தும்மினே னாக அழித்தழுதாள்
 யாருள்ளித் தும்மினீ ரென்று.

(1317)

(இ-ம்) யானும் உன் தலைவியுங் கூடியிருக்கும்போது யான் தும்மினேனாக, அதுகண்டு அவள் தன்னியற்கைக் குணம்பற்றி என்னை வாழ்த்தினாள். அவ்விதம் வாழ்த்திய அவள் தானே திரும்ப என்னைப்பார்த்து நும்மைப்பிரிந்திருக்கின்ற மாதருள் உமது பிரிவைச்சகியாமல் வருந்தி எந்த மாதர் உம்மை நினைத்தலால் தும்மினீரென்று சொல்லி ஊடல்செய்து அழுதாள் என்பதாம். தன்னியற்கைக் குணம்—1312 ஆவது வசனத்திற்காண்க. அன்புடையார் நினைந்தாராகில் நினைக்கப்பட்டார்க்குத் தும்மல் தோன்றுமென்பது பெண்கள் சொல்லும் வழக்கம்.

இதுவும் அது.

அ. தும்முச் செறுப்ப அழுதாள் நுமருள்ளல்
எம்மை மறைத்திரோ என்று .

(1318)

(இ-ம்) எனக்குத் தும்மல் தோன்றிய இடத்து எந்த மாதர் நினைத் தலால் தும்மினீரென்று உன் தலைவி கேட்பாளென்று பயந்து அத்தும்மலை யடக்கினேன். அவ்விதம் அடக்கவும் அவள் என்னைப்பார்த்து உம்மால் விரும்பப்பட்ட மாதர் உம்மை நினைத்தலை யாதொரு சம்பந்தமுமில்லாத

எனக்குத் தெரியாமல் அடக்கினீரோவென்று சொல்லி ஊடல்செய்து அழுதாள் என்பதாம். இதனால், தும்மினாலுங்குற்றம தும்மல் வரவொட்டாமல் அடக்கினாலுங்குற்றம் இனியென்ன்செய்வதென்று தலைவன் வருந்தினானென் பது கருத்து. இதுவும் அது.

சுஅ. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீர்
இந்நீர ராகுதி ரென்று.

(1319)

(இ-ம்) மேற்கூறியவாறு பொய்யாகக் காரணங்கற்பித்து ஊடல் செய்யும் தலைவியைப் பலவாறு வணங்கிச் சமாதானஞ் செய்து தெளிவித்தாலும்

வசனமும். அவள் ஊடல் தணியாதவளாய் மற்றைப் பெண்கள் ஊடல்செய்த காலத்து அவரையும் இவ்விதம் வணங்கித் தேற்றுவீர்போலுமென்று கோபஞ்செய்வாளென்பதாம். இதனால், காரணங்கற்பித்து ஊடல்செய்யும் பெண்களைச் சமாதானப்படுத்தல் அரிதென்பதாயிற்று. இதுவும் அது.

௰. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
யாருள்ளி நோக்கினீ ரென்று.
(1320)

(இ-ம்) என் சொற்களுஞ் செயல்களும் உன் தலைவி கோபஞ் செய்தற்குக் காரணமாயிருத்தலால் ஒன்றும் பேசாமல் மௌனமாயிருந்து அவளுடைய ஒப்பில்லாத அவயவங்களினழகை நினைத்துப்பார்த்துக்கொண் டிருந்தாலும் அவள் என்னுடைய அவயவ முழுவதும் எந்த மாதருடைய அவயவங்களுக்கு ஒப்பாயிருக்கின்றதென்று நினைத்துப்பார்த்தீரென்று கோபிக்கின்றாளென்பதாம்.

யான் சும்மா இருத்தலும் உன் தலைவிக்குக் குற்ற மானால் யானென்செய்வேனென்று தலைவன் கூறினானென்பது கருத்து. இதுவும் அது.

## 133-ஆம். அதி.—

**ஊடலுவகை.**

அஃதாவது, மேற்கூறிய தன்மையுடைய ஊடலால் தலைவன் தலைவி யாகிய இருவருக்குங் கூடலின்பஞ் சிறந்த இடத்து அச்சிறப்பிற்குக் காரண மாகிய அவ்வூடலைத் தலைவி மகிழ்தலுந் தலைவன் மகிழ்தலுமாம்.

க. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
வல்ல தவரளிக்கு மாறு. (1321)

(இ-ம்) தலைவரிடத்துக் குற்றமில்லையானாலும் யான் ஊடுதல் செய்வது எனக்குத்துன்பந்தாராமல் அளவில்லாத இன்பந்தருவதாம். அவர் கருணை செய்வதற்கு வலிமையுடையதாயிருக்கின்றது என்பதாம். அவ்வின்பத்தைப் பெறுதற்கு ஊடலுண்டாகின்றதென்பது கருத்து. இது, தலைவி காரணமில்லாமல் ஊடுதலைக்கேட்ட தோழி அவ்விதம் நீயூடுதல் செய்தது யாது காரணம் பற்றியென்று கேட்க அவளுக்குத் தலைவி சொல்லியது.

உ. ஊடலிற் றோன்றுஞ் சிறுதுனி நல்லளி

வாடினும் பாடு பெறும்.

(1322)

(இ-ம்) ஊடுதல் செய்யவேண்டுமென்று நினைத்த ஞும் சிறிய துனியால் (ஊடலால்) தலைவாது போன்பு

இடத்து உண்டா
சிறிது முன்னர்க்

கங்ஙு-ஆம் அதி.—ஊடலுவகை.
சாOகூ

குறைந்தாலும் பின்னர்ப் பேரின்பந்தரும் என்பதாம். ஆதலால் சிறிது குறைதலால் உண்டாகும் வருத்தம் வருத்தமாகாதென்பது கருத்து. இது, ஊடல் செய்கின்றபொழுதும் தலைவரது பேரன்பு பெறுதலாயிருக்க அதை யிழந்து ஊடுதலால் நீ வருந்துவதென்னவென்று கேட்ட தோழிக்குத் தலைவி சொல்லியது.

ரு. புலத்தலிற் புத்தேள்நா டுண்டோ நிலத்தொடு நீரியைந் தன்னா ரகத்து.

(1323)

(இ-ம்) நிலத்தின் குணத்தோடு நீர் ஒற்றுமைப்பட்டுக் கலந்தாற் போல நம் குணத்தோடு ஒற்றுமைப்பட்டுக் கலந்த தலைவரோடு ஊடுதலைப் போலும் இன்பந்தரத்தக்க தேவருலகம் (சொர்க்கலோகம்) ஒன்றிருக்கிற ... தோ? இல்லை என்பதாம். இதுவும் அது.

ச. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
  னுள்ள முடைக்கும் படை.

(1324)

(இ-ம்) தலைவரைத் தழுவிக்கொண்டு பின்னர் விடாதிருப்பதற்குக் காரணமாகிய அவவூடலினிடத்தே யுள்ளது, அவவூடலைச்செய்யச் சென்ற என் உள்ளத்தைக் (மனத்தைக்)கெடுக்கும் ஆயுதம் என்பதாம். ஆயுதமாவது- ஊடலைத் தீர்க்குபபொருட்டுத் தலைவன் செய்யும் வணக்கமும் தாழ்ந்த சொல்லுமாம். எனவே, தலைவன் வணக்கத்தாலும் யாசித்துக் கூறும் தாழ்ந்த சொல்லாலும் ஊடல் நீங்குமென்று தலைவி சொன்னாளாயிற்று. இது, மேற்கூறிய ஊடல் எதனால் நீங்குமென்று கேட்ட தோழிக்குத் தலைவி சொல்லியது.

ஞ. தவறில ராயினுந் தாம்வீழ்வார்
மென்றோள்
அகறலி னாங்கொன் றுடைத்து.
(1325)

(இ-ம்) ஆடவர் குற்றமில்லாதவராஞலும் குற்றமுடையவராகத் தம் மால் விரும்பப்பட்ட மகளிரால் ஊடல் செய்யப்பட்டு , அம்மகளிருடைய மெல்லிய தோள்களை யணைத்துச் சேராமல் நீங்கியிருக்கும் அவ்விடத்து அவ்வாடவர்க்கு அத்தன்மையதோர் இன்பம் உடையது என்பதாம். அத்
தன்மையதோரின்பம்-ஊடலாலுண்டாகும் அளவிறந்த இன்பம். குற்றமுள்ள காலத்தும் குற்றமில்லாத காலத்தும் ஊட ல் செய்தல் வேறுபாடில்லாமை யால் அவ்விரண்டு காலத்தும் ஊடுதலால் ஆகும் இன்பமும் வேறுபாடில்லை யென்பது கருத்து. இதில் ஊடலாலுண்டாகு மின்பத்தைக் கூடலினிடத்தி

52



அநுபவித்த தலைவன் தன் அநுபவத்தை யுலகியல்மேல் வைத்துக் கூறியது கண்டுகொள்க. இது, தலைவியை யூ

_ல் நீக்கிக்கூடிய தலைவன் மிகுந்த மகிழ்ச்சியுடையவனுய்த் தன்னுள்ளே சொல்லியது.

சு. உணவினும் உண்ட தறலினிது காமம்
புணர்தலி னூட லினிது.
(1326)

(இ-ம்) ஒருவனுக்கு இனி மேலுண்பதைப் பார்க்கினும் முன்னுண்ட
உணவு சமித்தல் இனிமையைத்தரும். அதுபோலக் காமத்திற்குப் புணர்
தலைப்பார்க்கினும் ஊடல் இன்பத்தைத்தரும் எப்படியென்ருல், முன்னுண்ட
உணவு அறவே, பின் மிகப்பசித்து உண்ணும்போது உண்ணுதல் அதிகமாக
சுவை மிகுதியாகவும் இருப்பதுபோலப் பிரிந்து கூடும்போது வெறுப்பில்லா
மையும் பேரின்பமுடைமையும் உண்டாகும் என்பதாம். இவ்விஷயங்கள் காமத்தை முறையாக அநுபவித்தாருடைய அநுபவம். காமம், விரகம், ஆசை,
இச்சையென்பன ஒரு பொருட்சொற்கள். இதுவும் அது.

எ. ஊடலிற் ரேற்றவர் வென்ரு ரதுமன்னுங்

கூடலிற் காணப் படும்.
(1327)

(இ-ம்) காமம் அநுபவித்தற்கு உரியவர் இருவருள் ஊடலினிடத்துத்
தோல்வியடைந்தவர் வென்றவராவர். அது ஊடற்காலத்து அறியக்கூடா
தாளுலும்
பின்னர்ப்புணர்ச்சியினிடத்துத்தோல்வியடைந்தவர் தாமே அறியப்
படுமென்பதாம். வெல்லுதலாவது - அளவிறந்த இன்பமநுபவித்தல். ஊடற் காலத்து யான் வாடுதலடைந்து புணர்ச்சிக் காலமாகிய இப்பொழுது சொல்
லக்கூடாத பேரின்பம் பெற்றேனென்று தலைவன் தன்னுள்ளே சொல்லினு
னென்பதாம். இதுவும் அநுபவத்தாலறியத்தக்கது. இத்துவும் அது.

அ. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வியர்ப்பக்
கூடலிற் றோன்றிய வுப்பு.
(1328)

(இ-ம்) செயல்வகையால் இவளுடைய நெற்றி வேர்வைபடைய இப் பொழுது கலவி செய்தலினிடத்து

உண்டாகிய இனிமையை இன்னும் ஒரு தரம் முன்போல இவளூடல் செய்யப்பெற்று யாம் பெறுதற்கு வல்லமையுடையோமோ? என்பதாம். இவ்வாறு தலைவன் தன்னுள்ளே சொன்னானென்றால் ஊடுதலின் சிறப்பை யாவரால் அளந்து சொல்ல கூடும் என்பது அறிவுடையார் யாவரும் ஊகிக்கத்தக்கது. இனிமையாவது—தன் னாற் காதலிக்கப்பட்ட தலைவியைக் கண்ணாற் காணுதலும் அவள் அமளிப்பேச்சைக் . கேட்டலும் அவளுடைய அமுதமிருக்குந் தானங்களைச் சுவைத்து உண்ணுதலும் அவ

## ௱௩௰-ஆம் அதி.—ஊடலுவகை.

௬௪௬

ளுடைய் சரீரவாசனையை மூக்கால் கவர்தலும் அவளைப் பரிசித்துத் தழுவுதலுமாம். இவ்வைந்தையும் 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும், ஒண்டொடி கண்ணே யுள' என்னுந் திருக்குறளாலறிக. அமளிப்பேச்சு. படுக்கை இடத்திற் காமத்தை விளைக்கும் பேச்சு. இப்பேச்சு புணர்ச்சிக் காலத்து இனிமையைத்தர வரம்புகடந்து உண்டாவது. எப்படி யென்றால்— . இன்னது தான் பேசவேண்டு மென்னு முறையில்லாமல் வாயில் வந்தனவெல்லாம் பேசுதல். இதுவும் அது.

கூ. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
நீடுக மன்னோ இரா.
(1329)

(இ-ம்) ஒளியினையுடைய ஆபரணத்தை யணிந்த தலைவி இன்னும் எம்மோடு ஊடுதலைச் செய்வாளாக. அவ்விடத்து அவள் ஊடலைச் செய்வதற்கும் அவ்வூடுதலைச் சமாதானப்படுத்துதற்கும் அவளை யாம் யாசித்து வேண்டும் நேரம் அதிகமாக வேண்டுதலால் இன்று இரவு நீட்டித்து விடியாதிருக்க வேண்டும் என்பதாம். நேரம்—நாழிகை. இரவு—இராக்காலம். இதனால் கூடலின்பத்தைப் பார்க்கினும் ஊடலின்பஞ் சிறந்ததென்று தலைவன் கூறினனென்பது கண்டுகொள்க. இதுவும் அது.

கO. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
கூடி முயங்கப் பெறின்.
(1330)

( இ-ம் ) காமம் அநுபவிப்பவருக்கு இன்பமாவது ஊடல்செய்வதாம். அந்த ஊடலுக்கு இன்பமாவது, ஊடலை நீளவிடாமல் அளவறிந்து நீங்கி ஒத்த அன்பினராகி இருவருங் கூடிக்கலந்து, ஒருவரை ஒருவர் தழுவப்பெற்

ரூல் அப்படித் தழுவுதல் என்பதாம். இந்த இரண்டின்பத்தையும் யானே பெற்றேனென்று தலைவன் தனது அநுபவங்கூறியது கண்டுகொள்க. அளவறிதலாவது—முதிர்ந்த ஊடல் துன்பத்தைத் தருதலாலும், சிறிய ஊடல் இன்பைத்தராமையாலும் இவ்விரண்டுமில்லாமல் இவ்விரண்டுக்கும் பொதுவாகிய சமயத்தையறிதல். இக்கருத்தை "துனியும் புலவியு மில்லாயின்" என்னுந் திருக்குறளிற் காண்க. இதுவும் அது.

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான் மு. ரா.
அருணசலக்கவிராய ரெழுதிய
திருக்குறள் வசனம் முற்றுப்பெற்றது.

திருவள்ளுவ நாயனர் திருவடி வாழ்க.

---

உ
கடவுள் துணை.

# திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.



அஃதாவது, மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் திருக்குறள் நூல் படிக்கும் போது கேட்ட சங்கப்புலவர்களொவ்வொருவரும் சாட்சியாகக் கூறிய வெண்பாக்களை ஒழுங்காகத் திரட்டிய தொகுதி.

## அசரீரி.

அஃதாவது, அருவமா யெங்கும் நிறைந்த பூரணப்பொருளாகிய முழு முதற்கடவுள், திருக்குறள் நூல்படிக்கத் தொடங்கும்போது தெய்வப் புலவராகிய திருவள்ளுவரோடு சமமாக இருந்து கேட்பதற்குத் தகுதியுடையவர் எவரென அங்கு நின்றோரெல்லாரும் எண்ணி நின்ற இடத்து அவர்கள் கருத்தெல்லாம் ஒற்றுமையாகிச் சம்மதிக்கும் பொருட்டு மேற்கூறிய கடவுள் ஆகாயத்தில் நின்றுகூறி யருளிய திருவாக்கை அங்கு நின்று கேட்ட புலவரொருவர் வெண்பாவாகப்பாடினர். அவ்வெண்பா வருமாறு:—

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—இருக்க
உருத்திர சன்ம ரெனவுரைத்து வானி
லொருக்கவோ என்றதோர் சொல்.

(1)

(இப்பாடலின் பொருளடங்கிய வசனம்) மதுரைச்

சங்கத்திலுள்ள வடி வத்தினாற் சிறந்த நல்ல சங்கப்பலகையினிடத்து, அருட்செல்வமும் தெய்வத் தன்மையும் நிறைந்த திருவள்ளுவருடன் சமமாக ஏறி *உருத்திரசன்மர் ஒருவரேயிருக்கலாமென்று ஆகாயத்தில் நின்றும் பெரு முழக்கத்தோடு ஒரு வாக்கியம் (சொல்) உண்டாயது என்பதாம். அச்சொல்லே மேற்கூறிய அசரீரியாகிய கடவுள் வாக்கென்று கண்டுகொள்க.

---

* உருத்திரசன்மர்-உருத்திரனாலடைந்த சன்மத்தை யுடையவர். சன்மம்-பிறப்பு. இவர்-முருகக்கடவுள் திருவவதாரமாய் மதுரை ரத்வணிகர் மரபிற் றோன்றிய ஊமைப்பிள்ளையார். இச்சரிதம் திருவிளையாடற் புராணம் சங்கத்தார் கலகம் தீர்த்த படலத்துட்காணலாம்.

## திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

௩௯௩

### நாமகள் (சரஸ்வதி.)

நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா இடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேல் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

(2)

(இ-ம்) பகைவரைப் போர்க்களத்தில் முதுகு காட்டி

யோடும்படி யுத்தஞ்
செய்து இகழ்ச்சி செய்த, வெற்றி பிரகாசிக்கின்ற, இலைபோலும் வேலா
யுதத்தை யேந்திய பாண்டியனே! உலகத்திலுள்ளவர் நன்மையாகிய விதியை
யும் தீமையாகிய விலக்குகளையுமறிந்து பிழைக்கும் வழியை ஆராய்ந்து படைப்
புக்காலத்தில் என் கணவராகிய பிரமதேவர் நாவிலிருந்து இருக்கு யசுர் சாமம்
அதர்வணம் என்னும் நான்கு வேதங்களையும் சொன்னேன். மத்திய காலத் தில் வியாச முனிவனது நாவிலிருந்து பாரதமாகிய வேதத்தைச் சொன்னேன்.
அதற்குப் பிற்பட்ட இக்காலத்திலே வள்ளுவனது நாவிலிருந்து திருக்குற
ளாகிய வேதத்தைச் சொன்னேன் என்பதாம். இதனால் இருக்கு முதலிய
நான்கும் பூர்வ வேதமென்றும், பாரதம் மத்திய வேதமென்றும், திருக்குறள்
உத்தர வேதமென்றும் முற்றக்கற்ற பெரியார் கூறுவாராயினர். இனி, பூர்வ
வேதத்தையும் மத்திய வேதத்தையும் ஆரிய பாஷையிலும் உத்தர வேதமாகிய
திருக்குறளைத் தமிழ்ப் பாஷையிலும் சகலகலா வல்லியாகிய சாசுவதியே

கூறினுளென்பது தெரிந்தவர் ஆரியம் பெரிது, தமிழ் பெரிது என்னும்
கலகஞ்செய்ய மாட்டாரென்க.

## இறையனார்.

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினு
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்.
(3)

(இ-ம்) புலவர்க்கரசனாகிய வள்ளுவன் வாயில் நின்று வந்த திருக்குற ளானது எந்தக் காலத்துந் தன்னுடைய அழகு கெடாமல் நெடுங்காலஞ் சென்றாலும் நிலைபெற்று மலர்ந்து தேனைச் சொரிகின்ற குணமுடையதாய் விளங்குமாதலால், குறைதலில்லாத சிவந்த தளிர்களையுடைய கற்பகத்தின் தெய்வத் தன்மை பொருந்திய உயர்ந்த மலரைப்போலும் என்பதாம். திருக் குறளுக்கு அழகாவது, சொல் முடியின் குணங்களும் பொருள் முடியின் ௭௪௯ திருவள்ளுவமாலையும்,

தெளிபொருள் வசனமும்,

குணங்களும். அலர்தல்-எங்கும் பரவுதல்.

மறுமைப் பயனும் விளைதல்.

தேன்பிலிற்றல்-இம்மைப் பயனும்

இறையனார் கடவுளாதலால் அவர் திருவாக்கால் திருக்குறள் எந்தக் காலத்தும் நின்று பயன் கொடுக்குங் குணமுடையதென்று அருளிச் செய்த லால் எந்த நூலழிந்தாலும் இந்த நூலழியாதென்பதும் கற்பார்க்கு வேண்டும் பயன்களைக் கொடுப்பதென்பதும் தெளிவாகக் கண்டுகொள்க.

* உக்கிரப் பெருவழுதியார்.

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா

நான்முகத்தோன்
றான்மறைந்து வள்ளுவனுய்த் தந்துரைத்த—நான்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி.

(4)

(இ-ம்) நான்கு முகங்களையுடைய பிரமதேவர் தமது தெய்வ வடிவத்தை மறைத்து மனித வடிவங்கொண்டு திருவள்ளுவராயவதாரஞ்செய்து இருக்கு யசுர் சாமம் அதர்வணமென்னும் நான்கு வேதங்களிற் கூறிய உண்மைப் பொருள்களை அறம் பொருள் இன்பமென்னும் மூன்று பகுப்பின் பொருளாகத் தமிழ்ப்பாஷையிலே தந்து

சொல்லிய திருக்குறளெழுதிய திருமுறையை (புத்தகத்தை) என்னுடைய தலை வணங்கவேண்டும். வாய் வாழ்த்தவேண் டும். நல்ல நெஞ்சம் தியானிக்கவேண்டும். காதுகள் கேட்கவேண்டுமென்ப தாம். இவற்றால், முருகக் கடவுளவதாரமாகிய உக்கிரப் பெருவழுதியார் திருக்குறள் படிக்க ஆரம்பிப்பார் செய்யவேண்டிய கிரமங்கள் இவையெனத் தெளிவாகக் கூறியதைக் கண்டுகொள்க.

## கபிலர்.

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

(5)

இது முதல் சங்கப்புலவர் கூறிய பாடல்கள்.

(இ-ம்) வீட்டில் வளர்க்கப்படுகிற பறவைப்பேடுகள் உலக்கைப்பாட் டால் நித்திரை செய்கின்ற வளர்தங்கிய

*உக்கிரப் பெருவழுதியார்—உக்கிர குமார பாண்டியர்.

திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும். சகரு

வள்ளுவராலருளிச்செய்யப்பட்ட குறள் வெண்பாவானது மிகப்பெரிய பொருளைத் தன்னுள்ளடக்கிவைத்துக்கொண்டுகாட்டுதலின் குணம் எதுபோலிருக்கிற தென்றால்,' தினையரிசியினளவு மில்லாத சிறிய புல் நுனியினிடத் துள்ள பனி நீரானது பனையினது அளவு நீண்ட நிழலைத் தன்னுள் ளடக்கிக்கொண்டு வைத்துக்காட்டுதலின் குணம்போலு மென்பதாம். பறவைப்பேடு-பெண் பறவை. அவையாவன:—கிளி, புறா, அன்னம், நாகண வாய்ப்புள் முதலியவைகள். உலக்கைப்பாட்டு-பெண்கள் வாசனைப்பொடியிடிக்கும்போது பாடும் பாட்டு.

பரணர்.

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாண டியால்
ஞால முழுது நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தா

ருள்ளு வமெவல் லாமளந்தா ரோர்ந் து.

(6)

(இ-ம்) தேவரிற் பெரியராகிய திருமாலும், குறள் (சிறிய) வடிவாய்ப் பிறந்து வளர்ந்து தமது இரண்டு பெரிய அடிகளால் (கால்களால்) உலகமுழு மையும் விரும்பி அளந்தனர். மெய்யறிவினையுடைய (மனிதரிற் பெரியராகிய) திருவள்ளுவரும் தம்மிடத்திற்றோன்றி அந்நிலையினிற்கின்ற குறள் வெண்பா வின் இரண்டு சிறிய அடிகளால் அவ்வுலகமனைத்தினுமுள்ளோரால் நி னைக்கப் பட்ட எல்லாப்பொருள்களையும் ஆராய்ந்து அளந்தனர் என்பதாம். இவ்விருவர் செய்கையையுஞ் சீர்தூக்கிப் பார்த்து ஏது அருமையும் பெருமையுமுடைய தென்று அறிவிற் சிறந்தார் கண்டுகொள்க.

நக்கீரர்.

தாமே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆமா அறமுதலா அந்நான்கும்—ஏமாருக்
கூறி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று.

(7)

(இ-ம்) வேதங்களிற் கூறிய அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருள்களையும் ஒருவர் சொல்லாமலே தெய்வத் தன்மையால் தாமே முழுவதுந்

தெரிந்து, குளிர்ந்த தமிழ்ச் சொல்லாலாகிய குறள் வெண்பாக்களால் விட்டு நீங்காத அந்நான்கு பொருள்களேயும் அறியாதவர்க்கு வரிசையாகக் கூறியருளிய திருவள்ளுவருக்கும் ஒளிதங்கிய நீரைத் தந்த மேகத்

௯௯௬ திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

துக்கும் இவ்வுலகம் என்ன கைம்மாறு செய்யும்? ஒன்றுமில்லை என்பதாம். இதனால் மேகம் நீர் பெய்து உலகத்தை வாழ்வித்தல்போலத் திருவள்ளுவர் திருக்குறள் நூலைத் தந்து அறிவுடையாரை வாழ்வித்தாரென்று கண்டு கொள்க. கைம்மாறு-பிரதியுபகாரம்.

மாமூலனர்.

அறம்பொருள் இன்பம்வீ டென்னுமந் நான்கின்
றிறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார்.
(8)

(இ-ம்) தருமார்த்த காம மோக்ஷம் என்று

சொல்லப்பட்ட வேதப் பொருள்களாகிய அந்த நான்கின் கூறுபாட்டையும் தெரிந்து உலகத்தார்க்கு விளங்கும்படி சொல்லியருளிய தெய்வத்தை மறந்தாலும் மனிதனாக எண்ணி வள்ளுவனென்று சொல்லுவான் அறிவில்லாதவனே. அவ்வறிவில்லாதவன் வாயில் நின்று வருஞ் சொல்லை அறிவுடையார் அங்கீகரிக்கமாட்டார் என்பதாம். மறந்தாலும் வள்ளுவனென்று சொல்லுவான் அறிவில்லாதவனென்றால் நினைப்போடு சொல்லுவான் அறிவில்லாதவர்க்குள் அறிவில்லாதவனென்பதாயிற்று. அஃதாவது, முழுமூடனென்று சொல்லியபடி. கூறுபாடாவன-தொகுத்தும் வகுத்தும் விரித்தும் சொல்லும் வகை. தருமார்த்த காம மோக்ஷம்-அறம் பொருள் இன்பம் வீடு என்பன.

## கல்லாடர்.

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப ஆறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பால் மொழிந்த மொழி.

(9)

(இ-ம்)

ஆறுவகைச் சமயத்தாரும் தாம் கைக்கொண்ட நூலிலே உலகமும் உயிரும் கடவுளுமாகிய பொருள்கள் ஒன்றென்று

நாட்டுவோரானால் மற்றொரு சமயத்தார் தாம் கொண்ட நூல்வழியால் அதனை மறுத்து அம்முப் பொருளும் வேறென்று சொல்லி நிலைநிறுத்துவர். அப்படி நிலை நிறுத்தினால் பின்னொரு சமயத்தார் அஃதல்லவென்று மறுப்பர். ஆதலால் சமய நூல்களெல்லாம் ஒன்றையொன்றொவ்வாமல் மறுக்கப்படுகின்றன. திருவள்ளுவனார் அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பாலென மூன்று பகுப்பாகச் சொல்லப்



பட்ட திருக்குறள் நூலை எவ்வகைப்பட்ட பகுதியுடையவரும் நல்லதென்று ஏற்றுக்கொண்டு சம்மதிப்பர் என்பதாம். எவ்வகைப்பட்ட பகுதியுடையவரும் என்றதனால் ஆறு சமயத்துக்கு வேறாகிய புறச்சமயத்தாரும் பல வகைப்பட்ட சாதியாரும் தேசத்தாரும் காலத்தாரும் பிறரும் நன்றென்று இந்நூலை யேற்றுக் கொள்வரென்பதாயிற்று. ஆகவே, இந்நூலே எல்லாருக்கும் பொது வேதமென்பது தெளிவாகப் புலப்பட்டது. ஆறு சமயமாவன:— சைவம், வைஷ்ணவம், சாத்தம், சௌரம், காணபத்தியம், கௌமாரம்.

* சீத்தலைச் சாத்தனார்.

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியு
மும்முரசு முத்தமிழு மு ங்கொடி
யும்—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றூன்றே
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால்.
(10)

(இ-ம்) பாட்டுக்களின் முன் பின் வைப்புமுறை தெரிதற்கிடனாய்த் திருவள்ளுவராலருளிச் செய்யப்பட்ட அறத்துப்பால் பொருட்பால் காமத்துப் பால்களையுடைய திருக்குறளானது கொல்லிமலையும் குடநாடும் தாம்பிரபருணி நதியும் கருவூரும் மங்கலமுரசும் இயற்றமிழும் விற்கொடியும் கனவட்டமென் னுங் குதிரையும் உடைய சேரனும், நேரிமலையும் புனல்நாடும் காவிரிநதியும் உறையூரும் வெற்றி முரசும் இயற்றமிழும் புலிக்கொடியும் பாடலமென்னுங் குதிரையுமுடைய சோழனும், பொதியமலையும் தென்னாடும் வையை நதியும் மதுரையும் கொடை முரசும் நாடகத்தமிழும் மீனக்கொடியும் கோரமென்னுங் குதிரையுமுடைய பாண்டியனுமாகிய மூன்றரசர்களுந் தங்கள் தங்கள் பெருமை பொருந்திய ம குடத்தின்மே லணிந்துகொள்ளப்பட்ட மாலையல்லவா என் பதாம். மாலையல்லவா என்றதன் பொருள் மாலை யே யென்றபடி. மகுடத்தின் மேலணிதலாவது எல்லா நூர்லுக்குந் தலைமையாக வைத்துத் திருக்குறளைப் போற்றிவருதல். மூன்றரசர்களுக்கும் சிறப்புரி மையாகத் தனித்தனி சொல்லப்பட்ட மலை

முதலிய எட்டுப்பொருள்களுள் முரசும் தமிழும் அம் மூன்றரசர்களுக்கும் பொதுவுரிமையாக வழங்கப்பட்டுவருதல் கண்டுகொள்க.

---

* இவர்-சங்கத்திற்கொண்டுவந்து அரங்கேற்றுவார் நூல்களிலெல்லாம் பிழைகண்டபோது இப்பிழைகளைக் கேட்கலாயிற்றே யென்று தமது தலையி லே குட்டிக்கொள்ளுதலால் சீ யொழுகுகின்ற தலையையுடைய சாத்தனு ரெனப்படுவார். திருக்குறளைக் கேட்டபோது ஒரு பிழையுங்கேளாதிருந்தனர். ஆதலால் குட்டுதல் செய்யாதிருந்தனர். இதை அடுத்த வெண்பாவாலறிந்து கொள்க.



ச்கஅ திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

மருத்துவன்றாமோதரனார்.

*சீந்திநீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்*
*மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—சாந்தி*
*மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்*
*தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.*

(11)

(இ-ம்) உருவத்தினாலே தன்னைப்போலத் தோன்றுதலால் மலையைத் தன்பகையெனக் கோபித்துக் கொம்பினாலே குத்தும் பெரிய யானைபோலும் பாண்டியனே! சீந்தி நீரிலெடுக்கப்பட்ட சருக்கரையும் சுக்குப்பொடியுந் தேனிலே கலந்து தலைக்குத்து (மண்டையிடி) உடையாரெல்லாரும் மோந்துபார்த்த பின் அம்மண்டையிடி யில்லையாதல்போலத் திருவள்ளுவரா லருளிச்செய்யப் பட்ட அறத்துப்பால் முதலிய மூன்று பாலினாலே சீத்தலைச்சாத்தனார்க்குத் தலைவலியில்லாமற்போயிற்று என்பதாம். தலைவலியாவது-திருக்குறளுக்கு முன் கேட்ட நூல்களிலெல்லாம் சொற்குற்றமும் பொருட்குற்றமுங்கண்டு இக்குற்றங்களைக் கேட்கலாயிற்றேயென்று சீத்தலைச்சாத்தனார் தமது தலையி லே யடித்துக்கொள்ளுதலால் வந்த மண்டைக்குத்து திருக்குறள் கேட்டு யாதொரு குற்றமுங் கேட்டவில்லாமையால் அக்குத்து நீங்கியது. இதனால் இந்த நூலே ஒரு குற்றமுமில்லாத நூலென்பது கண்டுகொள்க.

## நாகன்றேவனார்.

தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை
வேளா தொழிதல் வியப்பன்று—வாளர்தாம்
அப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்

முப்பால் மொழிமூழ்கு வார்.

(12).

(இ-ம்) நாளத்தோடு பொருந்திய தாமரை மலர்களையுடைய ஒரு பொய்கையின் மூழ்குவோர் வேறு தண்ணீரை விரும்பாதிருத்தல் ஆச்சரியமல்ல. ஏனென்றால் மிகுந்த குளிர்ச்சியும் இனிய சுவையும் நல்ல மணமும் தாமரைப் பொய்கை நீரி லொருமிக்க இருப்பதுபோல வேறு தண்ணீரிலில்லாமையால் அத்தண்ணீரை விரும்பாதிருத்தல் சகசமே ஆதலாலென்க. அதுபோல, திரு வள்ளுவரா லருளிச்செய்யப்பட்ட அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால் களையுடைய திருக்குறள் நூலையாராய்ந்து மனம் அழுந்தி நிற்பவர் அம்மூன்று பாலும் ஒருமிக்க இராத வேறு நூலை ஆராய்ந்துபார்க்க நினைப்பரோ? நினைக்க மாட்டாரென்பதாம். நாளம்-தாமரைத்தண்டு. பொய்கை-தடாகம். இதனால் இந்நூல் எல்லாப்பொருளும் அடங்கிய நூலென்று கண்டுகொள்க.

# திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

௬௪௯

அரிசில்கிழார்.

பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு
தெரிந்து திறந்தொறுஞ் சேரச்—சுருங்கிய
சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்
வல்லாரார் வள்ளுவரல் லால்.
(13)

(இ-ம்) வேதத்தில் ஒன்றோடொன்று மயங்கி (கலந்து) விரிந்துகிடந்த அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நால்வகைப்பொருள்களைத் தெளிவாகத் தெரிந்து அந்தந்தப்பொருள் களை அதனதனோடு சேரும்படி சேர்த்துச் சுருங்கியசொற்களாற் பொருள்விளங்கும்படி இவ்வுலகத்தாரெல்லாருமறியச்சொல்லுதல் வல்லவர் திருவள்ளுவரல்லாமல் வேறு யாரிருக்கின்றார்? ஒருவருமில்லை என்பதாம். அதனதனோடு சேரும்படி சேர்த்தலாவது:-அறத்தின் வகைகளை அறத்துப்பாலோடும் , பொருளின் வகைகளைப் பொருட்பாலோடும், இன்பத்தின் வகைகளைக் காமத்துப்பாலோடுஞ் சேர்த்தல். இதனால் திருக்குறளிற் கூறிய பொருள் களெல்லாம் வேதத்திற்சொல்லிய பொருள்களென்பதாயிற்று;

ஆகவே, திருக்குறள் தமிழ் வேதமென்பது சாமானியர்களுக்கும் நன்கு விளங்கும்.

பொன்முடியார்.

*காநின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்*
*கூநின் றளந்த குறளென்ப—நூன்முறையான்*
*வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்*
*தாநின் றளந்த குறள்.*

(14)

(இ-ம்) வாசனை தங்கிய பூமாலையணிந்த பாண்டியனே! காசிப முனிவ ராலே தரப்பட்ட குறளை மண்ணின் கண்ணே (பூமியினிடத்தே ) நின்று உலகத்தையளந்த குறளென்று சொல்லுவர். வள்ளுவனாரிவ்விடத் தெழுந்தருளி வந்து தந்த குறளை நூல்களாற் சொல்லப்பட்ட விதிவிலக்குகளோடு கூடி விண்ணிடத்தே நின்றும் மண்ணிடத்தே நின்றும் உலகத்தை யளந்த குறளென்று செர்ல்லுவர் என்பதாம். காசிப முனிவரால் தரப்பட்ட குறளாவது- திருமாலவதாரமாய்க் குறுகிய சிறுவடிவம் பெற்ற பிராமணன். வள்ளுவரால் தரப்பட்ட குறள்-திருக்குறளென்னு நூல்.

இவ்விரண்டு குறளுக்கும் வேற்றுமை யென்னவென்றால், காசிப முனிவர் தந்த குறள் நூல்

விதியோடு கூடாமல் மாபலிச்சக்கிரவர்த்தியினிடத்து யாசித்து வஞ்சகமாக உலகத்தையளந்தது. திருவள்ளுவர் தந்த குறள் நூல் விதியோடு கூடி வஞ்சகமில்லாமல் உலகத்தை யளந்தது. இவையே வேற்றுமையாம். திருவள்ளுவர் குறள் விண்ணிடத்து நின்றும் மண்ணிடத்து நின்றும் அளந்தது எப்படியென்றால், பாட்டுக்களெல்லாம் ஒலிவடிவமும் எழுத்து வடிவமுமாதலால் ஒலிவடிவால் விண்ணிடத்து நின்றும் எழுத்து வடிவால் மண்ணிடத்து நின்றும் அளந்ததென்று கண்டுகொள்க.

ஒலிக்கிடம்-ஆகாயம், எழுத்துக்கிடம்-பூமி.

கோதமனார்.

ஆற்ற லழியுமென் றந்தணர்கள் நான்மறையைப்
போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார்—ஏட்டெழுதி
வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்
சொல்லிடினும் ஆற்றல்சோர் வின்று, (15)

(இ-ம்) இருக்கு முதலிய வேதத்தை ஏட்டி லெழுதிவைத்தால் ஓது தற்கு வலிமையில்லாதவரும் ஓதுவர். அவரோதினல் அவ்வேதத்தின் வலிமை

கெட்டுவிடுமென்றெண்ணி அந்தணர்கள் ஏட்டினிடத்தெழுதாமல் வாய்ப் பாடமாக ஒருவர்க்கொருவர் சொல்லிப் படித்துக் காப்பாற்றி வந்தார். வள்ளுவ னார் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பாலென்று முப்பாலடங்கிய திருக்குறளை எவர் ஓதினலும் பொருள் கெடுதலில்லையென்று ஏட்டினிடத்தே எழுதிவைத்தார் என்பதாம். வேதமோதுதற்கு வலிமையாவது:—உதாத்தம், அநுதாத்தம் சுவரிதமென்னும் சுரங்களின் (ஓ சைகளின்)வேறுபாடு தெரிதல். வேதத்தின் வலிமை கெட்டு விடுதலாவது-மேற்கூறிய ஓசை வேறுபாடு தெரியாதவரோதினல் ஒரு பொருள் மற்றொரு பொருளாகக் காணப்படுதல், இவை யெல்லாமில்லாமல் எவரோதினலும் உள்ள பொருள் மாறுபடாமல் உள்ள படியே விளங்குதலால் இருக்கு முதலிய வேதத்தினுந் திருக்குறள் வேதம் சிறந்ததென்பது கண்டுகொள்க.

## நத்தத்தனார்.

ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்
பாயிரத்தி னோடு
பகர்ந்ததற்பின்—போயொருத்தர்
வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவ
ராய்க்கேட்க வீற்றிருக்க லாம்.
(16)

(இ-ம்) பாயிரத்தோடு சேர்த்தெண்ணப்பட்ட

அருமையுடைய ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண்பாக்களையும் ஓதி யுண்மைப் பொரு

## திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

சஉக

ளைக் கண்டறிந்தவர் அதன் பின்போய் ஒருத்தர் வாயில் நின்றுங் கேட்டறிய வேண்டிய நூல்களிருக்கின்றனவோ? இல்லை. அவர் நிலைபெற்ற தமிழிலே புலமை நிரம்பியவராகிப் பிறர் தம்மிடத்திலே வந்து எல்லாப் பொருளையுங் கேட்டறிந்துகொள்ளச் சபை நடுவே அக்கிராசனத்திலே யிருக்கலாமென்பதாம். ஆகவே, எல்லா நூற்பொருள்களும் இந்த நூலிலே யடங்கியிருக்கின்றன வென்பதும், இந்த நூலொன்று கற்றார், கற்றாரெல்லாரினும் உயர்ந்தவ ரென்பதும், புலமை நிரம்புதற்குத் திருக்குறளொன்றே போதுமென்பதுந் தெரியவந்தன. அவரென்றது, ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள் வெண் பாக்களையும் ஓதியுணர்ந்தவரை.

மூகையலூர்ச் சிறுகருந்தும்பியார்.

உள்ளுதொ றுள்ளு முருகுமா லென்னெஞ்சம்

உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்
தெள்ளுத லன்றே செயற்பால—வள்ளுவனார்
முப்பாலின் மிக்க மொழியுண் டெனப்பகர்வா
ரெப்பா லவரினு மில்.

(17)

(இ-ம்) திருவள்ளுவராற் சொல்லப்பட்ட அறமுதலிய மூன்று பால்களடங்கிய திருக்குறளுக்கு மேற்பட்ட நூலொன்றிருக்கிறதென்று எவ்வகைப்பட்ட புலவருள்ளும் சொல்லுவார் ஒருவருமில்லை. ஆதலால் நாம் இந்நூலைக்குறித்துச் செய்யக்கடவன எவையென்றால்,இந்நூற்பொருளைச் சிந்தித்தலும், சிந்தித்ததன்பின் பிறர்க்குச்சொல்லுதலும்,பிறர்சொல்லிய பொருளைத் தெளிந்தறிதலுமே என்பதாம். திருக்குறளுக்குச் சமானமான நூலொன்றில்லையென்று புலவர்களேன் சொல்லவில்லையென்றால், வேதமொன்றிருப்பதனாற் சொல்லவில்லை யென்க. எனவே வேதமும் திருக்குறளும் சமமென்பது கண்டுகொள்க.

ஆசிரியர் நல்லந்துவனார்.

சாற்றிய பல்கலையுந் தப்பா அருமறையும்
போற்றி யுரைத்த
பொருளெல்லாந்—தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பா வலரோப்பா
ரெப்பா வலரினு மில்.

(18)

(இ-ம்). அறிவுடையோராற் சொல்லப்பட்ட பலநூல்களாலும் விதி விலக்குகள் தவறாத அருமையுடைய வேதத்தினாலுங் காப்பாற்றிவைத்திருந்து உலகத்தார்க்குச் சொல்லப்பட்ட எல்லா விஷயங்களையுந் தன்னுள்ளடக்கித் தெளிவாகக்காட்டும்படி அறமுதலிய மூன்று

பகுப்பாகிய திருக்குறளைப்

## சஉஉ திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

பாடிய தலைமைப்புலவராகிய திருவள்ளுவருக்குச் சமானமான புலவர் எவ் வகைப்பட்ட பாடல்களையும் பாடுந்திறமையுடைய புலவருக்கு ளொருவரு மில்லை என்பதாம். ஆகவே முதல் நூலாகிய வேதத்தினும் அதன் வழி நூல் களும் சார்பு நூல்களுமாகிய மற்றெல்லா நூல்களினும் உள்ள விஷயங்களெல் லாம் திருக்குறளிலுள்ளனவென்று கண்டுகொள்க.

### கீரந்தையார்.

தப்பா முதற்பாவாற் றமாண்ட பாடலினான்
முப்பாலில் நாற்பால் மொழிந்தவர்—எப்பாலும்
வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்
தெய்வத் திருவள் ளுவர்.
(19)

(இ-ள்) மிகுந்த கூர்மைவைத்த வேலாயுதத்தைத்தாங்கிய பாண்டிய ராசன் மனமகிழும்படி

எந்த இடத்தும் குற்றமில்லாமல் தம்முடைய மாட்சி மை தங்கிய பாடற்றொழிலால் அறம் பொருள் இன்பமென்னு மூன் று பாலுள் ளே நான்காவது பாலாகிய வீட்டுப் பாலையும் அடக்கிப் பாக்களுக்குள் ளே தலை மை பெற்ற குறள் வெண்பாவாற் சொன்னவர் தெய்வத்தன்மை பொருந்திய திருவள்ளுவரென்பதாம். எந்த இடத்தும்-பொருளிடத்துஞ் சொல்லிடத்தும், மாட்சிமைதங்கிய பாடற்றொழிலென்றதனால் திருவள்ளுவருக்குப் பாடுதற் றொழிலே சிறந்தொழிலென்பதாம். மூன் று பாலுள்ளே வீட்டுப்பாலை அடக்கியது எப்படியென்றால், மூன்று பாலுள்ளும் முறை தவறுதொழுகியவர் வீட்டுப்பாலை யடைவது திண்ணம். ஆதலாலென்க. வீடு-மோக்ஷம்.

## சிறுமேதாவியார்.

வீடொன்று பாயிர நான்கு விளங்கறம்
நாடிய முப்பத்து மூன்றொன் றூழ்—கூடுபொரு
ளெள்ளி லெழுப திருபதிற் றைந்தின்பம்
வள்ளுவர் சொன் ன வகை .

(20)

( இ-ம்) திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளின் அதிகார வகையாவன:—அறத்துப்பாலுளடங்காமல் அதனைவிட்டுத் தனியே முதற்க ணின்ற பாயிரம் நான்கதிகாரங்களையுடையது. இம்மை மறுமை வீடு என்னு மூன்றுங் கொடுத்தற் சிறப்புடையதாய அறத்துப்பால்

முப்பத்து மூன்றதி காரங்களையுடையது. பொருள் இன்பங்களுக்குப் பொதுவாய் அவ்விரண்டிலுஞ் சேர்க்கப்படாமல் அறத்தோடு சம்பந்தப்பட்டு நிற்றலால் அறத்துப்

திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும். சுஉரு

பாலினிறுதியில் சேர்க்கப்பட்ட ஊழ் ஓரதிகாரத்தையுடையது. அறமும் இன்பமுங் கைகூடுதற்குத் துணையாகிய பொருட்பால் எழுபதிகாரங்களை யுடையது. காமத்துப்பால் இருபத் தைந்ததிகாரங்களையுடையதென்பதாம். முற்காலத்துப் பழைய சில நூல்களிலே சாதியாரும் சமையத்தாருந் தங்கள் தங்கள் கருத்துக்கிசைந்தபடி சிலவற்றைக் கூட்டியுங் குறைத்தும் வேறுபாடு செய்தலால் இந்த நூலுக்கும் அவ் வேறுபாடு வாராமலிருக்கும் பொருட்டு அதிகாரங்களைத் தொகைப்படுத்திச் சிறுமேதாவியர் கூறினரென்பது கண்டு கொள்க. மேலே தொகைப்பட வருவனவெல்லாம் இக்கருத்துப்பற்றி வந்தன வென்று தெரிந்துகொள்க.

நல்கூர் வேள்வியார்.

உப்பக்க நோக்கி யுபகேசி தோள்மணந்தான்
உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்
மாதாநு பங்கி *மறுவில் புலச்செந்நாப்
போதார் புனற்கூடற் கச்சு.

(21)

(இ-ம்) அழகுடையவளாகிய உபகேசியென்னும் பின்னைப்பிராட்டி யின்து தோளைத்தழுவிய கண்ணபிரானை அந்தப்பக்கமிருக்கிற பெருமை தங்கிய வடமதுரைக்கு ஆதாரமென்று சொல்லுவர். இந்தப்பக்கமிருக்கிற நீர்வளஞ் சூழ்ந்த தென்மதுரைக்குக் கருவமில்லாதவராகிய குற்றமற்ற அறிவுடைய செந்நாப்போதாரென்னும் பெயர்பெற்ற திருவள்ளுவரை ஆதாரமென்று சொல்லுவரென்பதாம்.

இனி, இப்பாடலின் பின்னிரண்டடிக்கும் மதுரைத் தமிழ்ச்சங்கம் 53-ம் பிரசுரமாக வெளிவந்த திருவள்ளுவரென்னும் புத்தகத்தில் வாதத்துக்கிடமில்லாமல் ஸ்ரீ சோமசுந்தர பாரதியவர்கள் கூறிய பொருளாவது—மாதாநுபங்கி யென்னும் பெயரையுடைய மனைவியைப்பெற்ற அறிவினையுடைய செந்நாப் போதாராகிய திருவள்ளுவர் தென்மதுரைக்கு ஆதாரம் என்பதாம். இப் பொருளே பொருத்தமுடையதென்பது மேற்குறித்த புத்தகத்தை நீளப்படித்துப் பார்ப்பவருக்கு நன்கு புலப்படும்.

தொடித்தலை விழுத்தண்டினார்.

அறநான் கறிபொரு ளேழொன்று காமத்
திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய

நாலு மொழிந்தபெரு நாவலரே நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள். (௨௨)

* மருவு புல்செந்நாப் போதாரென்னும் பாடமுமுண்டு.

௩௨௪ திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) அறத்துப்பா லினுட் பிரிவுகளாகிய பாயிரம் இல்லறம் துறவறம் ஊழ் என நான்கும், அறியப்பட்ட பொருட்பாலினுட் பிரிவுகளாகிய அரசு அமைச்சு அரண் கூழ் (பொன்) படை நட்பு ஒழிபு என்னும் ஏழும், காமத்துப் பாலினுட் பிரிவுகளாகிய ஆண்பாற் கூற்று பெண்பாற் கூற்று அவ்விருவர்பாற் கூற்று என்னு மூன்றும் எனப்பகுத்துப் பெறுதற்கரிய அறம் பொருள் இன்பம் வீடு என்று சொல்லப்பட்ட புருஷார்த்தம் நான்கையுஞ் சொல்லிய பெரு நாவலராகிய திருவள்ளுவரே மேலே சொல்லப்பட்டவற்றுளடங்காத பொருளுளதானால் அதனை யறிய வல்லவரென்பதாம். அடங்காத பொருள் உளதானலென்றதனல் இல்லையென்பதே தேற்றமாம். ஆகவே, எல்லாப் பொருள்களுந் திருக்குறளுள்ளடங்கியன என்பது கருத்து. கூற்று-சொல்.

வெள்ளி வீதியார்.

செய்பா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும்
பொருளொன்றே—செய்யா
அதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
யிதற்குரிய ரல்லாதா ரில்.

(23)

(இ-ம்) ஒருவராலே செய்யப்படாத ஆரிய வேதத்துக்கும் திருவள்ளுவ ராலே செய்யப்பட்ட நன்மார்க்கத்தில் நடப்போர்க்கு அதனுல் உண்டாகும் பயன் பொய்யாகாத தமிழ் வேதமாகிய திருக்குறளுக்கும் வேறுபாடில்லாமல் பொருளொன்றேயாம். ஆராய்ந்து பார்க்கில் ஆரிய வேதம் ஓதுதற்குரிமை யுடையவர் அந்தணரே யாவர். திருக்குறளாகிய தமிழ்வேதம் ஓதுதற்கு உரிமை யில்லாதவரில்லை. எல்லாரும் ஓ தலாம் என்பதாம். ஆரியவேதம் அநாதி யென் பார் மதம்பற்றி ஒருவராலே செய்யப்படாத என்று கூறினர். ஆரிய வேதம் ஓதுதற்கு அந்தணரே யுரியாரென்றது—அவர்க்கது தொழிலாதலால் என்க. எனவே, திருக்குறள் வேதம் எல்லாச்சாதியாருக்கும் எல்லா மதத்தாருக்கும் பொதுவேதம் என்பது கண்டுகொள்க.

மாங்குடி மருதனுர்.

ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி

வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதோ றுள்ளுதோ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு.

(24)

(இ-ம்) திருவள்ளுவர் வாயில் நின்று தோன்றிய திருக்குறளானது அதன் குணத்தைச்சொல்லுமிடத்து ஓதப்படுதற்கு இனிய எளிய சொற்களை



யுடையதாகியும் அறியப்படுதற்கு ஆழ்ந்த கருத்துக்களடங்கிய பொருள்களை யுடையதாகியும் வேதப்பொருளாகியும் அவ்வேதத்தைப் பார்க்கினும் மிகப் பிரகாசித்து, பொருளாராய்ச்சிக்கேற்ற குற்றமற்ற நுண்ணறிவுடையோர் நினைக்குந்தோறும் நினைக்குந்தோறும் முன் காணப்பட்ட பொருளினும் பின் காணப்பட்டபொருள் சிறந்து அவர்கள் மனத்தை யுருகச்செய்யும் என்பதாம். இக்கருத்துப்பற்றியே ஆயுந்தொறுந் தொறு மின்பந் தருங்கல்வி யென்றார் கச்சியப்பமுனிவர். (திருத்தணிகைப் புராணம்.)

எறிச்சலூர் மலாடனார்.

பாயிரம் நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய
அறத்துப்பால் நால்வகையா ஆய்ந்துரைத்தார் நூலின்
றிறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து.

(25)

(இ-ம்) திருவள்ளுவ நாயனார் ஆரிய வேதத்துட் கூறப்பட்ட கருத்துக்களை நன்றாக ஆராய்ந்து, தம்மாலே செய்யப்பட்ட தமிழ் வேதமாகிய திருக்குறளின் பாகுபாட்டுக்குத் தகுந்த நன்மையுடைமையால் இவையே யுரியவை யென்று அக்கருத்துக்களைத் தெரிந்து பாயிரம் நான்கதிகாரமும் இல்லறவியல் இருபததிகாரமும், துறவறவியல் பதின்மூன்றதிகாரமும், ஊழ் ஓரதிகாரமும் உடையனவாக அறத்துப்பாலை நான்குவகையாக வகுத்துக் கூறினர் என்பதாம். செய்யுளில் தூயதுறவறமென்றது எதனாலென்றால், அறத்துப்பால் முதலிய மூன்று பால்களுள்ளும் அறத்துப்பாலுட் கூறிய பொருள்களெல்லாம் முத்திக்குக் காரணமாதலால் என்க.

போக்கியார்.

அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
தருவல் லரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை.

(26)

(இ-ம்) திருக்குறளிலே சொல்லப்பட்ட பொருட்பால் எத்தனை யிய லுடையதென்றால், எழியலையுடையது. ஒவ்வோரியலும் எத்தனை அதிகா ரமுடையதென்றால், அரசியல் இருபத்தைந்ததிகாரமுடையது. அமைச்சியல் பத்ததிகாரத்தையுடையது. வடிவத்தால் வலிமையுடைய அரணியல் இரண் டதிகாரத்தையுடையது. ஒளிபொருந்திய பொருளியல் ஓரதிகாரத்தையுடை
54

சூ௬ திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

யது. பலந்தங்கிய படையியல்

இரண்டதிகாரத்தையுடையது. நட்பியல் பதி னேழதிகாரத்தையுடையது. ஒழிபியல் (குடியியல்) பதின்மூன்றதிகாரத்தை யுடையது என்பதாம்.

மோசிகீரனார்.

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா லிருபாலோ ராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக்
கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு.
(27)

(இ-ம்) ஆண்பாற் கூற்று எழதிகாரமும், பெண்பாற் கூற்றுப் பன்னிரண்டதிகாரமும், ஒருவரை

யொருவரடுத்து, அன்பைப் பொருந்துதற்குரிய அவ்விருபாற்
கூற்று ஆறதிகாரமுமாக மாண்பாய (ஒத்த அன்புடைய)
காமத்துப் பாலின் இயல்கள் மூன்றென்று எண்ணி
திருவள்ளுவரென்னும் பெயரையுடைய பெரியார்
உறுதியாகச் சொல்லினர் என்பதாம். மூன்று ஆண்பாற்
கூற்று, பெண்பாற் கூற்று, அவ்விருபாற் கூற்று என்க.

கூற்று—சொல்.

காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக்

கண்ணனார்.

ஐயாறு நூறு மதிகார மூன்றுமா
மெய்யாய வேதப்
பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
யந்தா மரைமே லயன்.

(28)

(இ-ம்) வடமொழியிலிருந்த மெய்யாகிய வேதப்பொருள் காலாந்தரத்தில் பொய்த்துப் போகாமல் உள்ளது உள்ளவாறு உலகத்தார்க்கு விளங்கும் பொருட்டு அழகிய தாமரைப்பூ மேலிருக்கின்ற பிரமதேவர் தாமே திருவள்ளுவராக வந்து நூற்றுமுப்பத்து மூன்றதிகாரமாகப் பகுத்துத் தமிழிலே பாடித் திருக்குறளென்னப் பெயரிட்டுத் தந்தனர் என்பதாம். இதனால் வடமொழி வேதப்பொருளே தென்மொழி வேதமாகிய திருக்குறளிலுள்ளதென்று கண்டுகொள்க.

மதுரைத் தமிழ் நாகனார்.

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பால்
இல்லாத எப்பொருளு மில்லையால்—சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை,
(29)

திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும். சஉள

(இ-ம்) முதல்நூல் வழிநூல் சார்பு நூலென மூவகைப்பட்ட அறநூல் பொருள்நூல் இன்பநூல் வீட்டு நூல்களில் செம்பொருள் ஆக்கப்பொருள் குறிப்புப்பொருளென இம்மூவகையாலறியக்கிடந்த காட்சிப்பொருளுங் கருத் துப்பொருளுமாகிய எல்லாப் பொருள்களு ந் திருக்குறளினிடத்தடங்கியிருக் கின்றன. இந்த நூலினிடத்தில்லாத யாதொரு பொருளும் எந்த நூலினிடத்துமில்லை. ஆதலால் பொருளளவையாற் சுருங்கிச் சொல்லளவை யால் விரிந்துகிடக்கின்ற மற்றை நூல்களாலென்னபயன்? திருவள்ளுவராலே சொல்லப்பட்ட திருக்குறளொன்றே மண்ணுலகத்தார்க்குப் போதுமான துணையாகுமென்பதாம்.

## பாரதம் பாடிய பெருந்தேவனார்.

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளு வர்தா ஞ்
செப்பவரு—முப்பாற்குப்
பாரதஞ்சீ ராம கதைமநுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நி கர்.
(30)

(இ-ம்) கதை ரூபமாயிருக்கிற பாரதம் ராமாயணத்தையும் விதிரூபமா யிருக்கிற மநுதரும சாத்திரம் பழமையான வேதத்தையும் ஒப்பனவாகும். எல்லாப்பொருள்களையும் சந்தேகமில்லாமலும் மாறுபாடில்லாமலும் அந்தந்தப் பொருளினுண்மைத் தன்மையோடு எல்லாரும் இலேசாகத் தெரியும்படி சொல்லத் திருவள்ளுவர் சொல்லால்வந்த அறத்துப்பால் முத லிய மூன்று பாலோடு கூடிய திருக்குறளுக்குச் சமானமான நூலில்லையென் பதாம். ஆக வே, தனக்குத்தானே சமானமான நூல் திருக்குறளென்பது கண்டுகொள்க.

## உருத்திரசன்ம கண்ணர்.

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை
யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளு வர் மு ப்பால்
மதிப்புலவோர்க்

காய்தொறு மூறு மறிவு.

(31)

(இ-ம்) "தொட்டனைத்தூறு மணற்கேணி" என்று திருவள்ளுவர் கூறியபடி மணலைத் தோண்டுந்தோறும் நீர் பெருகும். பிள்ளைகள் வாய் வைத்துச் சுவையுந்தோறும் தாய் முலையினிடத்து நல்ல பால் பெருகும். தேசத்தாரும், சாதியாரும், சமயத்தாரும் இது பொருள் அது பொருளென்று கலகஞ்செய்தற் கிடமில்லாத உண்மைச் சொல்லையுடைய திருவள்



ளுவரால் செய்யப்பட்ட திருக்குறளை ஆராயுந்தோறும் அறிவுடைய புலவருக்கு அறிவு வளரும் என்பதாம். ஆய்தொறும் ஊறும் அறிவென்றதனால் இந்நூலைப் புலவரும் படிக்கவேண்டுமென்பதாயிற்று.

பெருஞ்சித்திரனார்,

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினால்
ஓதிய வொண்பொரு ளெல்லாம்—உரைத்ததனால்
தாதவிழ் தார்மாற தாமே தமைப்பயந்த
வேதமே மேதக் கன.

(இ-ம்) மகரந்தப்பொடியொடு மலர்ந்த பூமாலை புனைந்த பாண்டியனே! வேறு நூலாசிரியர்க்கெல்லாம் அவர் செய்த நூல்களால் எதிரிகளால் மறுக் கப்பட்டு வருங் குற்றம்போலத் தமக்குத் தாம் செய்த நூல்களை மறுக்கப் படுதலால் வருங்குற்றமில்லாத திருவள்ளுவர் படிப்பவர்க்கு வருத்தமுண் டாகாதிருக்கும்படி இனிய குறள் வெண்பாக்களாலே நான்கு வேதங்களாற் சொல்லப்பட்ட அற முதலிய நான்கு பொருள்களையும் தெளிவாகச் சொன்ன தனால் அக்குறள் வெண்பாக்களோ? முதல் நூலாய் நின்று மேலே சொல்லப் பட்ட அறமுதலிய நான்கு பொருள்களையுஞ் சொல்லிய வேதங்களோ மேன்மையுடையன? நீ சொல்லுவாயாக என்பதாம்.

நரிவெரூஉத்தலையார்.

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கு
முன்பறியச் சொன்ன முது
மொழி நூல்—மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகங்
கொள்ள மொழிந்தார் குறள்.

(இ-ம்) அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இந்நான்கு பொருளையும் மூற்காலத்தில் அறியும்படியாக மனிதர் கூட்டங்களுக்குச் சொல்லிய பழைய வேதமானது தற்காலத்தில் ஓதியுணரப்படுதல் அரியதென்று அந் நாற்பொருள்களையும் உலகத்தார் எளிதிலுணரும்படியாகத் திருவள்ளுவர் திருக்குறளைச் சொல்லியருளினர் என்பதாம். இதனால், வேதஞ்சொன்ன அக்காலத்திலுள்ளார்க்கு அவ்வேதப்பொருளை யறிதற்கேற்ற அறிவு வளர்ச்சியும் ஆயுள் வளர்ச்சியும் இக்காலத்திலுள்ளார்க்கில்லை யாதலால் இக்காலத்திலுள்ளார் வருத்தப்படாமல் இந்நான்குபொருளும் ஒழுங்காக இலேசில் விளங்கும்படி திருவள்ளுவர் திருக்குறளைப் பாடித் தந்தருளினரென்பது கண்டு கொள்க.

**திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.**

சு-உகூ

மதுரைத்தமிழாசிரியர்,

செங்குன்றூர்க்கிழார்,

புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்
சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு
பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்
கறங்கிருள்மா லைக்கும் பெயர்.

(34)

(இ-ம்) மண்ணுலகத்தில் பலவகைப்பட்ட நூலுணர்ச்சிகளை முழுதுந் தெரிந்த பேரறிவுடைமையால் புலவரென்னும் பெயர் திருவள்ளுவருக்கே யாம். அதுபோல வேறு சிலருக்கும் புலவரென்னும் பெயர்

சொல்லுதல் எதுபோலுமென்றால், நிலவு ால் விளங்குகின்ற அந்தி நேரத்துக்கு மாலை யென் பது பெயராயிருக்க, உலகத்தைச் சூழ்கின்ற இருளையுடைய அந்தி நேரத்துக் கும் மாலையென்று பெயர் கூறுதல்போலுமென்பதாம். ஆகவே, திருவள்ளு வர் புலமையைக் குறிக்கும்போது மற்றவர் புலமை புலமையாகாதென்பது கருத்து.

மதுரை அறுவைவாணிகன்
இளவேட்டனார்.

இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டும்
மன்பதைக் கெல்லா மனமகிழ—அன்பொழியா
துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்
வள்ளுவர் வாயுறை வாழ்த்து .
(35)

(இ-ம்) பின் வரக்கடவனவாகிய சுகமுந் துக்கமு மென்னப்பட்ட வைகளாகிய இரண்டு வகையின் காரணங்களையும் ஆராய்ந்தறியவும், இவை களைத் தெரியும்படி சொல்லினாரேயென்று தம்மே லன்பு நீங்காமல் மன மகிழ்ச்சி யடையவும் மக்கட்கூட்டங்களுக் கெல்லாம் புகழப்படுஞ் சீர்த்தி யுடைய திருவள்ளுவர் வாயுறைவாழ்த்தாகத் திருக்குறளைப் பாடியருளின ரென்பதாம். இன்பத்தின் காரணம் — விதித்த காரியங்களைச் செய்தல். துன்பத்தின் காரணம்—விலக்கிய காரியங்களைச் செய்தல். வாயுறைவாழ்த் தென்பது —

வெறுக்கப்படுஞ் சொற்களில்லாமல் கேட்பவர்களுக்குப் பயன் விளைப்பனவாகிய சொற்களையுடையது.

கவிசாகரப்பெருந்தேவனார்.

பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புநதம்
ஆவிற் கருமுனியா யானைக்—கமரரும்பல்
தேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே
பாவிற்கு வள்ளுவர்வெண் பா.

(36)

௩௩௰ திருவள்ளுவமாலையும், தெளிபொருள் வசனமும்.

(இ-ம்) மலர்களுக்குள்ளே தாமரை மலரும், பொன்களுக்குள்ளே சாம்பூநதப் பொன்னும், பசுக்களுக்குள்ளே வசிட்ட முனிவரிடத்திலிருக்கிற காமதேனுவும், யானைகளுக்குள்ளே இந்திரனிடத்திலிருக்கிற ஐராவதமாகிய வெள்ளையானையும், தேவர்களுக்குள்ளே மகாவிஷ்ணுவும் போல நூல்களுக் குள்ளே திருவள்ளுவர் சொல்லிய திருக்குறள் வெண்பாச் சிறந்தது என்பதாம். பல உவமானங்களாலே பல நூல்களினுந் திருக்குறள் சிறந்த நூலென்பதாயிற்று. பொன்களென்றது—ஆடகம்,

கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் என்னும் நால்வகைப் பொன்களை. இவைகளினிலக்கணங்களைப் பொருள் நூலிற் கண்டுகொள்க.

மதுரைப் பெருமருதனார்.

*அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்*
*திறமிருபத் தைந்தாற் றெரிய—முறைமையால்*
*வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்*
*ஓதவழுக் கற்ற துலகு.* (37)

(இ-ம்) அறத்தின் பகுப்புக்கள் முப்பத்தெட்டதிகாரங்களாலும், பொருளின் பகுப்புக்கள் எழுபததிகாரங்களாலும், இன்பத்தின் பகுப்புக்கள் இருபத்தைந்ததிகாரங்களாலும் தெரியும் பொருட்டு வேதத்திற் சிதறிக்கிடந்த சிறந்த பொருள்களைக் காரண காரிய முறையால் ஒழுங்குபடுத்தித் திருவள்ளுவர் திருக்குறளிற் சொல்லுதலால் உலகத்திலுள்ளார் படித்துக் குற்றத்தினின்று நீங்கினர் என்பதாம். குற்றமாவது-விதியை விலக்கென்றும் விலக்கை விதியென்றுங் கொண்டிருத்தல்.

## கோவூர்க்கிழார்.

அறமுதல் நான்கும் அகலிடத்தோ ரெல்லாந்
திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்
பன்னிய வள்ளு வனார் பால்முறைநே
ரொவ்வாதே
முன்னை முதுவோர் மொழி.
(38)

(இ-ம்) அறம்பொருள் இன்பம் வீடென்னு நான்கு பொருளையும் இவ் வுலகத்தாரெல்லாம் வகையாக ஆராய்ந்து தெரியும் பொருட்டுக் குறள் வெண் பாக்களாலே சொல்லிய திருவள்ளுவனாயனாது அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பால்களென்னு மூன்றுபால்களையுடைய திருக்குறட் புத்தகத்தினி டத்து, புண்டைக்காலத்துள்ள வடமொழியிலுந் தென்மொழியிலும் வேறு

திருவள்ளுவமாலையும், தெளிபொருள்

வசனமும். சு௩௩

பாஷை மொழிகளிலும் நூல்செய்த முனிவரும் புலவரும் மறுமுதலியவரு மாகிய பெரியோர் எழுதிய நூல்களிலொன்றேனுஞ் சேர்க்கப்படுதற்குத் தகுதியுடையதல்ல என்பதாம். எனவே, திருக்குறளுக்குச் சமானமான நூலொன்றுமில்லையென்பது

கருத்து.

உறையூர் முதுகூற்றனார், முதுகூத்தனார் என்றுஞ் சொல்லுவர். தேவிற் சிறந்த திருவள்

ளுவர்குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்
குயிலில்லை சொற்சுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை யென்னுந் திரு.
(39)

(இ-ம்) தெய்வத்தன்மையாலுயர்ந்த திருவள்ளுவரது திருக்குறள் வெண்பாக்களோடு சேர்ந்து சிறப்புற்ற அறத்துப்பால் பொருட்பால் காமத்துப்பாலென்னு முப்பால்களையும் படியாதவர் நாவினுக்கு (வாக்குக்கு) இன்சொற் சொல்லி வாழ்தல் உண்டாகாது. மனத்திற்குச் சொற்களின் பொருட்சுவைகளை அறிதல் உண்டாகாது. காயத்துக்கு (சரீரத்துக்கு) நல்ல செயல் உண்டாகாது என்று நினைத்து இலக்குமி அவரிடத்துச் சேரமாட் டாள் என்பதாம். நல்லசெயல்-அறத்தின் பாகுபாடுகளைச் செய்தல். இதனால் முற்காலத்திலாவது தற்காலத்திலாவது அறவினைகளைச் செய்தவரிடத்தே இலக்குமிவந்து குடியிருப்பளென்பது எதிர்மறை முகத்தாற் கண்டுகொள்க.

